


உ

சிவமயம்

# ஸகல காரிய சித்தியும் சைவத் திருமுறைகளும்

"சித்தாந்த வித்தகர்"
கயப்பாக்கம் திரு. சோமசுந்தரம் செட்டியார்
அவர்களும்

"சிவபுராண ஞானபூசகர்"
ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
அவர்களும்
தொகுத்து இயற்றிய உரையுடன் கூடியது.

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசார்யாள், ஸ்ரீலஸ்ரீ தருமபுரம், மதுரை ஆதீன கர்த்தாக்கள், மற்றும் சைவ சமயப் பிரமுகர்களான பெரியோர்கள் முதலியவர்களுடைய ஆசியுரைகளுடனும், முருகன் அருள் பெற்ற முனிவர் ப்ரஹ்மஸ்ரீ கி. வா. ஜ. அவர்களுடைய முன்னுரையுடனும் கூடியது.

பதிப்பகத்தார்




தி லிட்டில் ப்ளவர் கம்பெனி

சென்னை-17

1969]

விலை ரூ. 4

"எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
யல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே."

சென்னையில் விப்கோ ஸ்டாகிஸ்டுகள்:
எம். தாமோதரம் அண்டு கம்பெனி,
108, கார்ப்பொரேஷன் பழக் கடை, சென்னை-1.

# பொருளடக்கம்

# அனுபந்தம்

உ

சிவமயம்



திருச்சிற்றம்பலம்

பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்த சுவாமிகள்



ஓம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே நம:

"ஆலமர நீழலிலறஞ் சொன்ணய் போற்றி"

— அப்பர் சுவாமிகள்

திருச்சி ஜில்லா முத்தரசநல்லூர் ரயில்வே ஸ்டேஷன் அருகிலுள்ள பளூவூர் சிவன் கோவிலில் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட நவக்ரஹங்கள்



ஞாயிறு (சூரியன்)



திங்கள் (சந்திரன்)



செவ்வாய்



புதன்



வியாழன் (குரு)



சுக்கிரன்



சனி



ராகு



கேது

சிவமயம்



தில்லைப் பொன்னம்பலக் கூத்தர்

திருச்சிற்றம்பலம்

1. கருமானின் உரியாடைச் செஞ்சடைமேல்
வெண்மதியக் கண்ணியானை
உருமன்ன கூற்றத்தை உருண்டோட
உதைத்துகந்து உலவாஇன்பம்
தருவானைத் தருமனூர் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட்கொள்வான்
பெருமானூர் புலியூர்ச்சிற் றம்பலத்துஎம்
பெருமானைப் பெற்றுமன்றே. (சுந்தரர் தேவாரம்)

2. சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்
திரண்டுதிரண்டுன் திருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார்
வெவ்வேறு இருந்துன்திருநாமம்
தரிப்பார் பொன்னம் பலத்தாடும்
தலைவாஎன்பார் அவர்முன்னே
நரிப்பாய் நாயேன் இருப்பேனோ
நம்பிஇனித்தான் நல்காயே.

(மாணிக்கவாசகர்—கோயில் மூத்த திருப்பதிகம்)

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

தெய்வத் திருநெறித் தமிழ்வேத 12 திருமுறைகளருளிச்செய்த மூர்த்திகள்









## பன்னிரு திருமுறை

## ஆசிரியர் இருபத்தெழுவர்






''வம்பருவரிவண்டு மண நாறமலரும் மதுமலர் நற்கொன்றையான்
அடியலாற்பேணு எம்பிரான் **சம்பந்தன்**''

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.

—சேக்கிழார் சுவாமிகள்: திருத்தொண்டர் புராணம்



சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம்



"திருநின்றசெம்மையே செம்மையாக்கொண்ட
திருநாவுக்கரையன்" எனும் அப்பர்

இடையறாப்பேரன்பும் மழைவாரும் இணைவிழியும்
உழவாரத்தின்
படையறாத் திருக்கரமும் சிவபெருமான் திருவடிக்கே
பதித்தநெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன்
ஞானப்பாடல்
தொடையறாச் செவ்வாயும் சிவவேடப் பொலிவழகும்
துதித்துவாழ்வாம்.

— காஞ்சிப்புராணம்






"தம்பிரான்தோழர், நம்பிஆரூரர், வன்றொண்டர்,
அடியவர்க்கடியவர்"—சுந்தரர்

நேசநிறைந்த உள்ளத்தால் நீலநிறைந்த மணிகண்டத்து
ஈசனடியார் பெருமையினை எல்லாஉயிரும் தொழஎடுத்துத்
தேசமுய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன்
வாசமலர்மென் கழல்வணங்க வந்தபிறப்பை வணங்குவாம்.

—சேக்கிழார் சுவாமிகள் : பெரிய புராணம



சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம்.



"தேனூறும் வாசகங்கள் அறுநூறும் திருக்கோவை
நானூறும் அமுதூற'' மொழிந்தருளிய மாணிக்கவாசகர்

எழுதரு மறைகள் தேரு இறைவனை எல்லில் கங்குல்
பொழுதரு காலத் தென்றும் பூசனைவிடாது செய்து
தொழுதகை தலைமே லேறத் துளும்புகண்ணீருண் மூழ்கி
அழுதடி யடைந்த அன்பன் அடியவர்க் கடிமை செய்வாம்.

—பரஞ்சோதி முனிவர்

ஃ—★—ஃ—★—ஃ—★—ஃ—★—ஃ—★—ஃ—★—ஃ








சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம்.

ஃ

ஸ்ரீ குருப்யோ நம :




# வாய்த்த பிறவியினை வாழ்த்தி வணங்குகிறோம்

முன்னோர் மொழிபொருளே அன்றி அவர் மொழியும் பொன்னேபோல் போற்றும் முயற்சியே இந்நூல். இது நல்ல முறையில் அமையவேண்டும் என விரும்பினோம். எங்கள் விருப்பம் திருவருள் துணையால் ஈடேறிவிட்டதாகவே எண்ணுகின்றோம். அங்ஙனமாயின் யாருடைய அனுக்ரஹத்தினால் இந்நூல் நன்கு அமைந்தது? யாமறிந்த வரை, நடமாடும் தெய்வங்களாக, பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யர்களாகத் திகழும் இரண்டு மஹான்களே இதற்குக் காரணம். அவர்கள் ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி பெரியவாள் ஸ்ரீ ஜகத்குரு சங்கராசாரிய ஸ்வாமிகளும், புதுப்பெரியவாள் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளுமே ஆவர்.

ஸ்ரீபெரியவாளின் பாததூளி எங்கள் கார்யாலயத்தில் படுகின்ற பெரும்பாக்கியத்தை நாங்கள் 30—3—1958 அன்று பெற்றோம். ஆம், ஸ்ரீ பெரியவாள் அன்றைய தினம் எங்கள் கார்யாலயத்திற்கு விஜயம் செய்து எங்களை அனுக்ரஹித்தார்கள். தெய்வீகப் புத்தகங்களைப் பிரசுரிக்கவேண்டுமென ஆக்ஞாபித்தார்கள். அந்த ஆக்ஞாரூபமான அனுக்ரஹ விசேஷமே அன்றுமுதல் இன்றுவரை நாங்கள் பல தெய்வீக நூல்களை வெளியிடுவதற்கு உறுதுணையாக இருந்துவருகிறது என்பதை மிக்க பயபக்தியுடன் கூறிக்கொள்ள விரும்புகிறோம்.

ஸ்ரீ பெரியவாளின் பேரருள் அன்று போலவே இன்றும், இன்று போலவே என்றும் எங்கட்குத் துணையாக நிற்கும் என்பதை நன்றிப்பெருக்குடன் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

இப்படிப்பட்ட யதீந்திரர்களுடைய காலத்திலே பிறந்து அவர்கள் பேரருள் பெற்றுப் பணி செய்ய வாய்த்த இப்பிறவியினை வாழ்த்தி வணங்குகின்றோம்.

இங்ஙனம்,

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,**
சென்னை—17.

சென்னை,
10—3—1969.






ஸ்ரீ:



ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய
ஸ்ரீமச்சங்கர பகவத்பாதப்ரதிஷ்டித
ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிப ஜகத்குரு
ஸ்ரீமச்சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ
ஸ்ரீபாதாதேசாநுஸாரேண
ஸ்ரீமஜ்ஜயேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதை: க்ரியதே
நாராயண ஸ்ம்ருதி:

தைவபக்தியைப் பரப்பிவரும் கயப்பாக்கம் ஸ்ரீ ஸோமஸுந்தரம் செட்டியார், ஆங்கீரஸ ஸ்ரீ வேங்கடேச சர்மா இவர்களால் தொகுக்கப்பட்டுள்ளதும், லிப்கோ கம்பெனியால் வெளியிடப்படுவதுமான 'ஸகல கார்யஸித்தியும் சைவத் திருமுறைகளும்' என்னும் இந்நூலில் திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி, திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர் முதலிய நாயன்மார்கள் பல்வேறு ஸ்தலங்களைப்பற்றி அருளியுள்ள திருமுறைகளிலிருந்து பொறுக்கப்பட்டவையும், தொல்வினைகள் தொலைந்துபோதல், இடர்கள் நீங்கல், எடுத்த காரியம் எளிதில் நிறைவேறல், தனமுடன் வாழ்தல், கன்னிப்பெண்களுக்குக் கடிமணம் நிகழுதல், சிவஞானப்பெருக்கம், சத்துருஜயம், வாக்குவன்மை, அகால மரணம் நீங்கல், நன்மக்கட்பேறு பெறல், நாளும் கோளும் நலியாதிருத்தல், பஞ்சக்கொடுமை பீடிக்காமலிருத்தல் முதலிய நற்பயன்களைப் பக்தியுடன் பாராயணம் செய்பவர்களுக்கு அளிக்கக் கூடியவையுமான சில பதிகங்கள் அடங்கியிருக்கின்றன. மற்றும் இப்பதிகங்களால் போற்றப்படும் ஸ்தலங்களின் விவரங்கள்,




பதிகங்களின் பொழிப்புரைகள், பண்கள், வரலாறுகள், திருமுறைகளின் எண்கள் முதலிய விசேஷங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

தமிழறிந்த சைவபக்தர்கள் இப்பாடல்களால் சிவபிரானைப் பக்தியுடன் துதித்து நற்பயன்களை அடைவார்களாக.

யாத்ராஸ்தானம்
பத்மாநகர்
(ஸெகிந்தராபாத்)
கீலக ஆஷாட பஹுள ஏகாதசி

**நாராயணஸ்ம்ருதி:**

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்:
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்,
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே.

—திருமூலர் மந்திரம்.




திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
சென்னை சமயப் பிரசார நிலயத் தலைவர்

வித்துவான் தவத்திரு.
சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள்

# அன்புடனளித்த ஆசியுரை

---

குருபாதம்

உலகில் நிலவும் இருள் இரண்டு. ஒன்று புறவிருள். மற்றது அகவிருளாகிய அறியாமை. புறவிருளைப் போக்கி ஒளிதரும் விளக்குகளுள் சூரியன் தலையாயது. அங்ஙனமே அகவிருளை அகற்றும் விளக்குகளுள் தலைசிறந்தவை ஞானநூல்களாகும்.

மேடம் முதலான பன்னிரண்டு ராசிகளும் சூரியனின் சக்திகளைப் பிரதிபலிப்பதைப்போலப் பன்னிரு திருமுறைகளும் இறைவனது சக்திகளையெடுத்து விளக்குவனவாம்.

உலக மாந்தர் பலரும் பின்னர் தமக்கு வரும் பேரின்பத்தைக் காட்டிலும் முன்னர் வரும் சிறு இன்பங்களையே பெரிதும் விரும்புகின்றனர். திருமுறைகள் அவ்வண்ணமே மக்களின் தகுதிக்கு ஏற்பச் சிறு சிறு இன்பங்களையும் நல்கி முடிவில் பேரின்பத்தையும் அடைவதற்கு வழிவகுத்து வளப்படுத்துவன. அவை மக்களின் இடர்களை நீக்குவதுடன் உலக நன்மைகளையும் பயப்பனவாம்.

புத்தக வெளியீட்டாளருள் சிறந்த "லிப்கோ" எனப் பிரசித்தி பெற்ற சென்னை லிட்டில் ப்ளவர் நிறுவனத்தினர், அல்லும் பகலும் அயராது அரன் புகழ் பரப்பிவரும் சித்தாந்தவித்தகர், கயப்பாக்கம் திரு. சோமசுந்தரம் செட்டியார் அவர்களையும், 108



சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம்

முறை சிவபுராண விரிவுரையாம் ஞான பூஜைகளை நடத்துவதாக உறுதிகொண்டு இதுவரை பதினைந்து முறை பூர்த்திசெய்துள்ள திரு. S. ஆங்கீரஸ வேங்கடேச சர்மா அவர்களையுங் கொண்டு பன்னிரு திருமுறைகளிலிருந்தும் பாடல்களைத் தொகுத்துப் பதிக வரலாறு, பொழிப்புரை ஆகியவற்றுடன் வெளியிடுவது குறித்துப் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

இம்மை, மறுமை ஆகிய இருமைக்கும் உறுதி பயக்கும் இத்தகைய நூல்களை ஒவ்வொருவரும் வாங்கிப் பக்தியுடன் படித்துப் பெரும்பயன்பெறச் செந்தமிழ்ச் சொக்கர் திருவருளைப் பிரார்த்திக்கிறேன்.

20–4–68,
சென்னை-17.

இங்ஙனம்,
**சோமசுந்தரத் தம்பிரான்.**







HIS HOLINESS THIRUVARUL THAVAYOGA

**Sri-la-Sri Somasundara Sri Gnanasambanda Desika Paramachariya Swamigal**

## MADURAI AADHEENAM

70, South Avani Moola Street,
MADURAI (S. India),


6—4—1968.

எல்லாம் வல்ல எம்பெருமானது இன்னருளால் எல்லா நலங்களும் எய்துக.

தங்களுடைய 1-ஆம் தேதி கடிதமும், 'சகலகாரியசித்தியும் திருமுறைகளும்' என்ற நூலில் 5 பாரங்களும் கிடைத்து மகிழ்ந்தோம். தங்களுடைய நன்முயற்சி வெற்றிபெறவும், அதனால் மக்கள் எல்லா நலங்களும் பெற்றுத் திக்ழவும் திருவருள் பாலிக்குமாறு எல்லாம் வல்ல அங்கயற்கண்ணிபங்களும் ஆலவாய் அண்ணலைப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கிறோம்.

ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்.



சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம்

உ

''அண்ணல் ஆலவாய் நண்ணி னுன்றனை
எண்ணியே தொழத் திண்ணம்
இன்பமே''

''சிவநெறிக் காவலர்''
''சிவதர்ம பாஸ்கர''

**ம. க. சுந்தரேச பட்டர்**
முதல் நிர்வாக ஸ்தானிகம்
**ஸ்ரீ மீனுட்சி சுந்தரேசுவரர் கோயில்**

38, 48, வடக்காவணிமூல வீதி,
**மதுரை,**
4—4—1968.

திருமுறைகள் சிவசொரூபம் எனத் துணிவது நம் கடமை ஆகும். அழகியதான வாழ்க்கை முறையைக் காட்டும் ஞான நூல்களே அவை. பன்னிரு திருமுறைகளும் பரம்பொருளாகிய சிவபெருமானின் அருளால் அடியார்கள் மூலம் நமக்குக் கிடைக்கப்பெற்றுள்ளன. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய பெருமக்கள் சிவனருளில் தோய்ந்து, சிந்தை சிவமாகிய நிலையில் உலகம் உய்யப் பாடியவையே இத்திருமுறைகள்.

அதனுல்தான் திருமுறைகளை வழிபடுகின்ற மரபு நமக்கு உண்டு. திருமுறைகள் நம் வாழ்வை வளப்படுத்தி, வாழ்வாங்கு வையகத்தில் வாழச்செய்து முத்தியின்பமும் தரவல்லன. இம்மைக்கு வேண்டும் சோறும் கூறையும் தந்து அம்மையே சிவலோகம் ஆள்விக்கச் செய்வனவாகும்.

வாழ்க்கையில் எல்லாச் செயல்களிலும் வெற்றிபெறவேண்டு மானுல் திருமுறைகளை நாடோறும் நியதியாக ஓதிவரவேண்டும்.




அதனுல் வல்வினைகள் நீங்கலாம், நல்லன எல்லாம் பெறலாம். "திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே" என்றும் "நல்லவாயின நம்மை அடையுமே" என்றும் அருளாளர்கள் கூறியுள்ளார்கள்.

வாழ்வில் சகல காரியங்களிலும் வெற்றியடைய எண்ணுவோர் சைவத்திருமுறைகளை ஓதவேண்டும். அதற்கு உதவியாக "தி லிட்டில் ப்ளவர் கம்பெனியார்" கயப்பாக்கம் ஸ்ரீ சோமசுந்தரம் செட்டியார், ஆங்கீரஸ ஸ்ரீ S. வேங்கடேச சர்மா ஆகியோரைக் கொண்டு "ஸகல காரிய சித்தியும் சைவத்திருமுறைகளும்" என்ற வெளியீட்டைப் பக்தியுலகிற்கு வழங்குகின்ருர்கள். இப்பதிப்பில் சைவத் திருமுறைப் பாடல்களுக்குப் பொழிப்புரை, விளக்கம் ஆகியவற்றுடன் படங்களும் அச்சிடப்பெற்றிருப்பது பாராட்டக் கூடியதாகும்.

திருமுறைகளை மக்கள் ஓதிப் பயனுற வேண்டும் என்னும் பெருநோக்கத்துடன் இதனை வெளியிட்டுள்ள பதிப்பகத்தார்க்கும் சைவப்பணியில் சிறந்து நிற்பவரான ஸ்ரீசோமசுந்தரம் செட்டியார் அவர்கட்கும், 108 முறை சிவபுராணப் பிரவசனம் செய்வது என்னும் குறிக்கோளைக்கொண்டு மெய்த்தொண்டு புரிந்துவரும் ஆங்கீரஸ ஸ்ரீ வேங்கடேச சர்மா அவர்கட்கும் ஆலவாயில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ மீனுட்சி சுந்தரேஸ்வரர் திருவருளால் எல்லா நலன்களும் பெருகவும் மேன்மேலும் இவ்வாருன பணிகளில் ஈடுபடவும் பிரார்த்திக்கின்றேன்.

**ஆசையறுய்; பாசம்விடாய்; ஆனசிவ பூசைபண்ணுய்!**
**நேசமுடன் ஐந்தெழுத்தை நீ நினையாய்,—சீசீ**
**சினமே தவிராய்; திருமுறைகள் ஓதாய்!**
**மனமே! உனக்கென்ன வாய் ?** —குருஞான சம்பந்தர்

வளர்க திருமுறை நெறி! வாழ்க வையகம்!




உ

முருகா

வேலை வணங்குவதே வேலை

ஸரஸ்வதீ கடாக்ஷாம்ருத அருள்மொழி அரசு

திருமுருக

# கிருபானந்தவாரி

ஆசிரியர்,

## திருப்புகழமிர்தம்

காலம் : 6—12—1968 இடம் : கோபி

### நேரிசை வெண்பா

வாழி திருமுறைகள் வாழியுயர் சிவ்கோவும்
வாழி அறநெறிகள் மக்களெலாம் — வாழியவே
நன்று புரிந்தோங்கு நல்லபண் பாட்டுடனே
நின்று வளர்க நிலத்து.

உலக மக்கள் உய்யும் பொருட்டு அலகில் சோதியனும் அம்பலவாணர் அருமறைகளை அருளிச்செய்தார். அவ் வேதங்கள் அதிகாரம் உள்ள ஒரு சிலரே ஓதத் தக்கவை. ஆதலால் ஏனேரும் ஓதியுய்யும் பொருட்டு சமய குரவர்களாகிய நால்வரை இறைவன் அதிஷ்டித்துத் தமிழ்த் திருமுறைகளை அருளுமாறு கருணை புரிந்தார்.

ஆதலால் அருமறைபோன்று திருமுறைகளும் இறைவன் வாக்கேயாகும். "எனதுரை தனதுரையாக" என்கிருர் திருஞான சம்பந்தர்.

திருமுறைகள் அளவற்ற ஆற்றலுடையவை. அருமறைகள் மூலஸ்தானத்தில் உள்ள மூர்த்தி போன்றவை. திருமுறைகள்








உத்சவ மூர்த்தி போன்றவை. மூல மூர்த்தியை நீராடி சட்டையின்றி ஆசார அனுஷ்டானத்துடன் மட்டும் தரிசிக்க வேணும். வெளியே எழுந்தருளிவரும் உத்சவ மூர்த்தியை எந்த நிலையிலும் தரிசிக்கலாம். திருமுறை எலும்பைப் பெண்ணாக்கியது. கல், தெப்பமாக மிதக்கச் செய்தது. முதலையுண்ட மதலை உயிர்பெறச் செய்தது. இன்னணம் எண்ணிறந்த அற்புதங்களைச் செய்த திருமுறைகளை நாள்தோறும் அன்புடன் ஓதுவார் வினைகள் விலகப் பெற்று இகபர நலன்களை எளிதிற் பெறுவார்கள்.

ஆதலால் இதனை அழகிய வடிவில் உரையுடன் சென்னை 'லிப்கோ' கம்பெனியார் வெளியிடுகின்றார்கள். இது மிகவும் புனிதமான அரும் பணி.

லிப்கோ கம்பெனியார் இதுபோல் பல அரிய நூல்களை மிக அழகாக வெளியிட்டு உலகுக்கு உபகரித்துள்ளார்கள். இவர்களது இனிய தொண்டு மிகவும் சிறந்தது.

இந்தத் திருமுறை நூலை எல்லோரும் ஓதி எல்லா நலன்களும் பெறுவார்களாக. லிப்கோ கம்பெனி இறையருளால் குறைவற வாழ்க.

அன்பன்,
**கிருபானந்தவாரி.**




சென்னை பச்சையப்பன் கல்லூரித்
தலைமைத் தமிழ்ப் பேராசிரியர்

திரு. அ. மு. பரமசிவானந்தம்,
M.A., M.LITT.

அவர்கள் மனமுவந்து அளித்த

# வாழ்த்துரை

"நினைந்துருகும் அடியாரை நையவைத்தார்" என்பது அப்பர் வாக்கு. ஆண்டவன் மெய்யடியவர், அல்லல் என்னும் நெருப்பில் புடமிட்ட பொன்னென விளங்குவர். இது எச்சமயத் தோரும் கண்ட உண்மை. அத்தகைய துன்ப வேளைகளில் உளந் தளராது வாழ்பவரே மெய்யடியார். 'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே' என்ற மணிமொழியார் வாக்குப்படி அனைத்தும் அவன் செயல் என வருவதை ஏற்று அந்த வேளைகளில் அவனடி மறவாது நிற்றலே மெய்ஞ்ஞான நல் வாழ்வு. இவ்வாழ்வினைப் பெற்றவர் சிலர்-பெற நினைப்பவர் சிலர்-மற்றவர் பலர். அருள் நலம் பெற்ற-நல்வாழ்வுற்ற அடியவர் 'தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற அடிப்படையில் தம் அனுபவங்களைப் பாடல்களாக வடித்துச் சென்றுள்ளனர்; அவை காலத்தை வென்று கடவுளைப்போன்று வாழ்கின்றன. எல்லாச் சமயங்களிலும் இந்த அருள்வாக்கு அருளும் உண்மைகள் பல.

சைவத்திருமுறைகளில் சிவனடியார் பலர்-நாயன்மார் பலர் தாம் பெற்ற இறையருள் திறனைப் பாடிப்பரவியுள்ளனர். அவற்றால் அவர்கள் பவநீக்கமும் வினைநீக்கமும் அருளாக்கமும்பெற்று, வாழ்ந்துள்ளனர். வையத்து வாழ்வார் அவற்றைப்பயின்று, தத்தம்




ஆக்கநெறிக்கு வழிகோலிக்கொள்ளல் மரபாகும். அவ்வாறு அவ்வருட் பாடல்களைப் பாடிப் பயன் பெறுவார் பலராவர் எனினும், அவற்றுள் சிறந்தவற்றைத் தொகுத்து-உயிர்கள் துன்பநீக்கமும் இன்ப ஆக்கமும் பெற வழிவகுத்துத் தருபவர் மிகச் சிலரே. இத்தகைய அருள்நலத் தொண்டை ஏற்றுக் கொள்பவர் யாவராயினும் சிறந்தவரே!

சென்னை, தியாகராயநகரிலுள்ள 'லிப்கோ' பதிப்பகத்தாரின் தொண்டு நாடறிந்தது. மாணவர் மட்டுமன்றி மற்றவர் அனைவரும் அவர் தம் ஆக்கப்பணியால் நன்கு பயன் பெறுகின்றனர். அவர்கள் திருமுறைகளிலிருந்து பல அருட்பாடல்களைத் தொகுத்து, பொழிப்புரை, விளக்கம், வரலாறு முதலியவற்றையும் உடன் அமைத்து இந்நூலை வெளியிடுகின்றனர். அவற்றைத் தொகுத்தளிக்கும் அன்பர் இருவரும் எனக்கு நன்கு அறிமுக மானவர். ஒருவர் வாழ்நாள் முழுவதும் சைவத்தொண்டு செய்து அதுவே வாழ்வாக வாழும் மெய்யடியார் திரு. கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார் அவர்களாவர். மற்றவராகிய மெய் யன்பர்-தொண்டர்-திரு. ஆங்கீரஸ வேங்கடேச சர்மா அவர்கள் நெடுநாட்களுக்குமுன் — சுமார் கால் நூற்றுண்டிற்கு முன் — காஞ்சி நகரத்தில் என்னிடம் உயர்நிலைப்பள்ளியில் பயின்ற மாணவர். இளமையிலே அவர்தம் தெய்வப்பொலிவையும் செம்மை உளத்தையும் கண்ட நான் வருங்காலத்தில் இறையருள் நலம் பரப்பும் பணியில் இவர் சிறப்பார் என நம்பினேன். என் நம்பிக்கை வழியே இன்று இவர் 'அவன்' புகழ்பாடும் அன்புப் பணியே வாழ்வுப் பணியாகக் கொண்டுள்ளார். இவர்கள் இருவரும் இத் தொகுப்பினை உலகுக்கு எழுதி அளிக்க, 'லிப்கோ' பதிப்பகத்தார்




தம் நூலாக இதை வெளியிடுகின்றனர். நல்ல மாணவர் செயல் சிறக்க என வாழ்த்துகிறேன். மற்றவர் செயல் சிறக்க எனப் பாராட்டுகின்றேன்.

உள்ளத்தால் இறைவனை எண்ணுபவர் என்றும் குறைவிலர். 'எது வரினும் அவன் செயல்' என்ற உணர்வில் அவர்தம் நல்வாழ்வு செம்மையாகவே அமையும். அத்தகைய வாழ்வுப் பாதையில் எதிர்பாராத வேளைகளில் சில இன்னல்கள் குறுக்கிடுவதும் உண்டு. அவற்றைப் போக்கும் வகையில் அமைவன இந்நூலில் உள்ள பாடல்கள். இவற்றைப் பாடிய அடியவர்கள் அவ்வாறே தத்தம் வினை நீங்கப்பெற்றவர் என்பது வரலாறு காட்டுவதாகும். எனவே இன்றும் என்றும் இவற்றைப் பயில்பவர் தத்தம் வினை நீங்கப்பெற்று விளக்கமுறுவர் என்பது உறுதி. இத்தகைய உறுதியும் அசையா நம்பிக்கையுமே அடிப்படையாகக் கொண்டு இந்நூல் இன்று வெளிவருகின்றது. அன்பர்கள் இவற்றைப் பயின்று பயன்பெற்று இறைநலம் உறுவர் என்பது உறுதி. 'வையகம் துயர் தீர்க' என்ற வாழ்த்தொடு அமைகின்றேன்.

தமிழ்க்கலை இல்லம்,
சென்னை-30.

அ. மு. பரமசிவானந்தம்
5—4—68




"கலைமகள்" ஆசிரியர், வித்துவான்
திருமுருகாற்றுப்படை அரசு, வாகீச கலாநிதி
தமிழ்க் கவி பூஷணம், செந்தமிழ்ச் செல்வர்
திருநீற்றுத் தவமணி, உபன்யாசகேசரி
சைவபூஷணம்

முருகன் அருள்பெற்ற முனிவர்
## ப்ரஹ்மஸ்ரீ கி. வா. ஜகந்நாத அய்யர்
அவர்கள் அன்புடன் அளித்த

# முன்னுரை

மனிதன் தன் வாழ்நாளில் இன்பத்தையும் துன்பத்தையும் அநுபவிக்கிறான். துன்பமே மிகுதியாக இருப்பதாக உணர்கிறான். உடம்புக்கு நோயும் பசியும் வறுமையும் துன்பத்தைத் தருவன; உள்ளத்துக்கு அறியாமையும் கவலைகளும் தீய குணங்களும் துன்பத்தைத் தருவன. உயிருக்குப் பிறப்பும் இறப்பும் இன்னலைத் தருவன. நோயை மருத்துவர் நீக்குவார் என்றும், பசியையும் வறுமையையும் வள்ளல்கள் நீக்குவார்கள் என்றும், அறியாமையை அறிவுடையோர் நீக்குவர் என்றும், கவலைகளையும், தீயகுணங்களையும் சாந்தமும், நற்குணமும் உள்ள பெரியோர்கள் நீக்குவார்கள் என்றும், பிறப்பு இறப்பை இறைவன் நீக்குவானென்றும் கூறுவர். மருத்துவர் முதல் நற்குணம் படைத்த பெரியோர் வரையிலுள்ள நன்மக்களால் நம்முடைய துன்பம் நீங்குவதற்கும் இறைவன் திருவருளே துணை செய்யவேண்டும். அந்த மக்களைக் கருவியாக வைத்து இறைவன் நலம் செய்கிறான். பிறப்பு இறப்புக்களைத் தானே போக்குகிறான்.

ஆகையால் இறைவனுடைய அருளைப் பெற்றால் எல்லா வகையான இடர்களும் நீங்கும்; மனம் திண்மை பெறும்; அதனால் எடுத்த காரியம் இனிது நிறைவேறும். "முன்னவனே முன்னின்றால் முடியாத பொருள் உளதோ?" என்பது சேக்கிழார் திரு




வாக்கு. இறைவன் திருவருளால் இன்னல் நீங்கி நன்மை உண்டாக வேண்டுமானால் அவ்வருளினிடம் நம்பிக்கையும் பின்பு அதைப் பெறும் முயற்சியும் தலைப்பட வேண்டும். நம்பிக்கை இல்லாவிட்டால் எதனையும் எய்த முடியாது. நம்பிக்கை எழ வேண்டுமானால் இறைவன் அருளால் பலருக்கு உண்டான நன்மைகளைத் தெரிந்துகொள்ளவேண்டும். அவர்கள் பெற்ற பேற்றை நாமும் பெறலாம் என்ற நம்பிக்கை அப்போது உண்டாகும்.

இறைவனுடைய திருவருளால் உயர்நிலை பெற்று எல்லா வகையிலும் தமக்கு வரும் இன்னல்களைப் போக்கி இவ்வுலக வாழ்வை இன்ப வாழ்வாக ஆக்கிக் கொண்ட அருளாளர்கள் பலர் வாழ்ந்த நாடு பாரத நாடு; இன்னும் பல அருளாளர்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அத்தகையவர்களுடைய வாழ்க்கை நமக்கு வழிகாட்டும் தன்மையுடையவை.

தமிழ் நாட்டில் ஆழ்வார்களும் நாயன்மார்களும் இறைவன் திருவருளைப் பெற்ற செல்வர்கள். சிவபிரானுடைய அருளால் இன்புற்று வாழ்ந்தவர்கள் பலர். அவர்களுடைய பெருமையைப் பெரிய புராணமும் பிற நூல்களும் கூறுகின்றன. அவர்களில் நால்வரைச் சைவ சமய ஆசாரியர்கள் என்று போற்றி வணங்குகிறோம். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற நால்வரும் தம்முடைய வாழ்வில் இறைவன் அருள் வலிமையினால் பல அற்புதங்களை நிகழ்த்தினவர்கள். அவர்கள் திருவாக்குகள் தேவார திருவாசகங்களாகப் பெயர் பெற்று நிலவுகின்றன.

சைவர்கள் மறையெனப் போற்றும் தகைமையை உடைய நூல்கள் பன்னிரண்டு. அவற்றைத் திருமுறைகள் என்று கூறு




வார்கள். முறை என்பது நூலுக்குப் பெயர். தெய்வத் தன்மை வாய்ந்த சிறந்த நூல்களாதலின் அவற்றைத் திருமுறைகள் என்ருர்கள். ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் என்னும் மூவரும் பாடிய தேவாரப் பதிகங்கள் முதல் ஏழு திருமுறைகளாக அமைந்துள்ளன. மாணிக்கவாசகர் திருவாக்காகிய திருவாசகமும் திருக்கோவையாரும் எட்டாந்திருமுறை. திருமாளிகைத் தேவர் முதலிய பெரியோர்கள் பாடிய பதிகங்களையுடைய திருவிசைப்பா ஒன்பதாந்திருமுறை. திருமூலர் பாடிய திருமந்திரம் பத்தாந்திருமுறை. ஆலவாய் இறைவன் திருவாய்மலர்ந்தருளிய திருமுகப் பாசுரம் முதலியவை பதிேேனாரந் திருமுறை. சேக்கிழார் அருளிய பெரிய புராணம் பன்னிரண்டாந் திருமுறை.

இந்தத் திருமுறைகளிலுள்ள அருட் பாடல்கள் பல இன்னல்களையும் போக்கி மனத்துக்கு அமைதியையும் திண்மையையும் நல்குவன. இவற்றை முழுவதும் பாராயணம் செய்வதற்கு இந்தக் காலமக்களுக்கு நேரம் இராது. ஆகவே இவற்றிலிருந்து பல அருமையான பாடல்களைத் தொகுத்து அவற்றின் பொருளை எண்ணி இன்ன இன்ன நலம் பெறச் செய்பவை இவை என வகைப்படுத்தி அமைத்த நூல் இது. பாடல்களுக்கெல்லாம் தெளிவான உரையும் இருப்பதனுல் பொருளுணர்ந்து ஓதுவதற்கு இப்புத்தகம் துணையாக இருக்கும். பதிகங்கள் எழுந்த வரலாறும் தலக் குறிப்புக்களும் அங்கங்கே உள்ளன. சில பதிகங்களை இக்காலத்திலும் சிலர் ஓதிப் பயன் பெற்ருர் என்ற குறிப்புக்கள் சில இடங்களில் இருக்கின்றன. அவை நம்முடைய நம்பிக்கை உறுதியாவதற்குத் துணை செய்யும். தலம், மூர்த்திகளின் படங்கள் அங்கங்கே இருக்கின்றன.



சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம்.

இவற்றையன்றிச் சிவாலய தரிசன முறை முதலியவற்றை விளக்கும் கட்டுரைகளும் சிவாஷ்டோத்தரமும் வடமொழித் துதி நூல்களும் இந்த அழகிய தொகுதியில் இணைக்கப்பெற்றுள்ளன. 'ஸகல காரிய ஸித்தியும் சைவத் திருமுறைகளும்' என்ற இந்தத் தொகுப்பு நூலை லிட்டில் ப்ளவர் கம்பெனியார் மிகவும் சிரத்தையோடு வெளியிட்டிருக்கிறார்கள். அவர்கள் வெளியிடும் எந்த நூலும் பலவகையான செய்திகளின் கருவூலமாக இருப்பதைக் காணலாம். தேனடை போலத் தொகுத்த நூல்கள் பலவற்றை அவர்கள் வெளியிட்டிருக்கிறார்கள்.

இந்த நூலும் அத்தகைய தேனடைகளில் ஒன்று. இதைத் தொகுத்து உரை எழுதிய பெரியவர்களுக்கும் இந்தத் தொகுப்பு நூலை அழகாக அச்சிட்டு உதவிய லிட்டில் ப்ளவர் கம்பெனியாருக்கும் ஆஸ்திக உலகம் நன்றி பாராட்டும் கடப்பாடுடையது.

'காந்தமலை',
சென்னை-28,
11—12—1968.

கி. வா. ஜகந்நாதன்.






உ

சிவமயம்

# பதிப்பகத்தாரின் பணிவுரை



" வேண்டத் தக்க தறிவோய்நீ
வேண்ட முழுதுந் தருவோய்நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ
வேண்டி யென்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயாதருள் செய்தாய்
யானும் அதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னில்
அதுவும் உன்றன் விருப்பன்றே. "

என்பது மாணிக்கவாசகரின் திருவாசகம்.

இதன்படி அன்பர்களுக்கு வேண்டுவனவற்றையெல்லாம் இறைவன் முற்றுமுணர்ந்தவனுகையால் அவனே நல்குகின்றுன். ஆயினும், சிற்றறிவுடையோராகிய நாம் நமக்கு வேண்டுவனவற்றை இறைவனிடம் கேட்டுப் பெறுவதும் அவன் திருவருளாலேயாகும். அங்ஙனம் வேண்டுவார்க்கு வேண்டுவன ஈயும் எம்பெருமானைப் பாடிப்பரவி ஸகல காரிய சித்திகளையும் அடைவதற்கு உறுதுணையாகச் சமயாசாரியர்களும் மற்றும் அருளாளர்களும் பாடிய பன்னிரு திருமுறைகளினின்றும் பல பதிகங்களைத் தொகுத்துப் பதிக வரலாறு, பொழிப்புரை ஆகியவற்றுடன்

---

பார்த்த இடமெல்லாம் பரவெளியாய்த் தோன்றவொரு
வார்த்தைசொல்ல வந்த மனுவே பராபரமே.




'ஸகல காரியசித்தியும் சைவத் திருமுறைகளும்' என்னும் பெயரினையுடைய இந்நூலினைத் திருவருள் துணையால் வெளியிட்டுள்ளோம். திருமுறைகளின் பெருமைகளை ஆசியுரை வழங்கிய அருளாளர்கள் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்கி இருத்தலால் யாம் அதுபற்றிக் கூறுது விடுத்தோம்.

இத்தகைய நூலினை யாங்கள் வெளியிடவேண்டுமென்று விரும்பியதும் அவனருளே. இதனைப் பதிப்பித்தற்குரிய நல்லாசிரியர்களைத் தேடினேம். கண்ணுதலோன் காட்டியருள இருவர் இப்பணியை மேற்கொள்ள இசைந்தனர். அவர்களில் ஒருவர் மதுரை ஆதீன கர்த்தர்களால் சித்தாந்த வித்தகர் என்று பட்டமளிக்கப்பட்டுத் "தானலால் உலகமில்லை, சகமலாதடிமையில்லை ஐயன் ஐயாறனுர்க்கே" என்கின்ற கொள்கையில் நிறைந்த உறைப்புக் கொண்டவரும், அல்லும் பகலும் சிறிதும் அயர்ப்பிலாது அரனுர் திருப்புகழ் பரப்புவோருமான கயப்பாக்கம் திரு. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள். மற்ருெருவர் ஷண்மத ஸ்தாபனுசார்யரான ஆதிசங்கர பகவத்பாதர்களால் சிவபுராண ஞான பூஜையில் செலுத்தப்பட்டு அச்சங்கரரின் அபராவதாரமான நடமாடுந் தெய்வம் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் அனுக்கிரகத்துக்குப் பாத்திரரானவரும், 108 முறை சிவபுராணப் பிரவசன ஞான பூஜை நிகழ்த்துவதாகச் சங்கற்பம் செய்து கொண்டு சிவபரத்வத்தைப் பரப்பிவருபவருமான ஆங்கீரஸ ஸ்ரீ S. வேங்கடேச சர்மா அவர்கள். இவ்விருவரும் இப்புத்தகத்தினைத் தொகுத்து விசேஷ அனுபந்தங்களுடன் அளிக்க, பயபக்தியுடன்

---

அன்பைப் பெருக்கியெனை தாருயிரைக் காக்கவந்த
இன்பப் பெருக்கே இறையே பராபரமே.




யாங்கள் அதனைப் பிரசுரித்து சிவ பக்தர்களுக்கு ஸமர்ப்பிக்கிறோம்.

இப்புத்தகம் படிப்பவர்களுக்கு ஸகல நன்மைகளையும் அருளவேண்டும் என்று இறைவனருள் பெற விரும்பினோம். அதற்காகப் பதிப்பாசிரியர்களில் ஒருவரான ஆங்கீரஸ ஸ்ரீ வேங்கடேச சர்மா அவர்களைச் சில தேவாலயங்களில் பிரார்த்தனை செய்யுமாறு கேட்டுக்கொண்டோம். அதன்படி அவர் முதலில் 16—5—68 குருவாரத்தன்று கோவூர் (திருமேனீச்சரம்) சென்று சௌந்தராம்பிகா சமேத சுந்தரேசப் பெருமானைத் தரிசித்தார். அங்கு இறைவன் ஸந்நிதியில் இடர் களையும் திருப்பதிகம் படிக்கப் பட்டது. சிவாலய வழிபாட்டில் கொடுக்கப்பட்ட துதிகள் யாவும் அவ்வத் தெய்வங்கள்முன் படிக்கப்பட்டன. அர்ச்சகர் ஸ்ரீ நடராஜ சிவாசாரியாரின் தண்ணளியால் அச்சிட்ட பாரங்களும், கையெழுத்துப் பிரதிகளும் சுந்தரேசப் பெருமானின் திருவடிகளில் வைக்கப்பெற்று இறையருளைப் பரிபூரணமாகப் பெற்றன. (இவ்வாலயம் பற்றிய விவரங்களையும் பஞ்ச ரத்னக் கீர்த்தனங்களையும் பிற்சேர்க்கையில் காண்க.)

அடுத்தபடி வேதங்களே மாமரவடிவாய் நிற்க, அதன் கீழ்த் தன்னை வழிபட்ட காமாக்ஷி அம்மைக்குக் காக்ஷி அளித்த கண்ணுதலோன் மேவியிருக்கும் திருக்கச்சியேகம்பத்தை 2—6—68 ஞாயிறு தினத்தன்று சென்று வழிபட்டார். அங்குத் திருவருள் தூண்ட சிவாசார்யர்களின் பேரருட் பெருக்கினால் இந் நூலின் அச்சடித்த பாரங்களும் கையெழுத்துப் பிரதிகளும்

---

ஈனந் தருமுடலம் என்னதுயான் என்பதற
ஆனந்தம் வேண்டி அலைந்தேன் பராபரமே.






ஸ்ரீ ஏகாம்பரேச்வரர் கோவில் (காஞ்சீபுரம்)

ஓயாதோ என்கவலை உள்ளே ஆனந்தவெள்ளம்
பாயாதோ ஐயா பகராய் பராபரமே.




ஒவ்வொரு சந்நிதியிலும் திருவடிகளில் வைக்கப்பட்டன. "கருவார்கச்சித் திருவேகம்பத்தொருவனே! உன் கருணை நோக்கினை இந்நூலினை வெளியிடும் எங்கள்மீதும் இதனை அன்புடன் பெற்றுப் பயில்வோர் மீதும் செலுத்திக் காத்தருள்வாய்" என்று பிரார்த்தனை செய்துகொள்ளப்பட்டது. இந்நூலில் சேர்த்துள்ள சுந்தரமூர்த்திகள் பாடிய "ஆலந்தானுகந்து" என்று தொடங்கும்



**ஸ்ரீ காமாக்ஷி அம்மன் கோவில் (காஞ்சீபுரம்)**

---

பாராயோ என்னைமுகம் பார்த்தொருகால் என்கவலை
தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே.




திருப்பதிகம் இறைவன் முன்னுல் வாசிக்கப்பட்டது. இத்திருப்பதிகம் மூலவர் கோயில் சுவரில் பொறித்து வைக்கப் பெற்றுள்ளது. இத்திருக்கோயிலில் ஆயிரம் லிங்கங்கள் ஒரே சிவலிங்கத்தில் அமைந்துள்ள ஸஹஸ்ரலிங்கம் மிக்க விசேஷமானது. ஸஹஸ்ரலிங்கேசர் ஸந்நிதியிலும் இந்நூல் வைக்கப் பெற்று ஆயிரம் லிங்கங்களின் பேரருட்பெருக்கும் ஏககாலத்தில் இந்நூலுக்குக் கிடைத்தது. "அஷ்டதரித்ர விநாசகலிங்கம்", "ஜன்மஜ துக்க விநாசகலிங்கம்" என்றெல்லாம் ஆதிசங்கரர் ஒரு சிவலிங்கத்தின் மகிமையைப் பாடுகின்ருர் என்ருல் ஆயிரம் சிவலிங்கத்தின் திருவருளைப் பெற்றதின் மகிமையை உய்த்துணரலாம். திருக்கச்சியேகம்பனிடம் விடைபெற்று மற்ரெரு பாடல் பெற்ற தலமான திருஓணகாந்தன்தளிக்குச் சென்ருர் நமது ஆசிரியர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடிப் பெரும் பொன் பெற்றதும் இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளதுமான "நெய்யும்பாலும்" என்று தொடங்கும் திருப்பதிகத்தை உள்ளமுருக, கண்களில் நீர்மல்க, நாத்தழுதழுக்க அங்குப் பாடி "சுந்தரருக்குச் செய்த பேரருளை அடியேங்கட்கும் இந்நூலினைப் பயிலும் திருநீற்றுச் செந்நெறியாளர்க்கும் செய்திடுவாய்" என்று வேண்டிக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டுக் கச்சிக்காமகோட்டம் வந்தடைந்து அறம் வளர்த்த அம்பிகையை வணங்கினுர் திரு. ஆங்கீரஸன் அவர்கள்.

" ராகா சந்த்ர ஸமானகாந்தி வதனு நாகாதி ராஜஸ்துதா
மூகாநர்மபி குர்வதீ ஸுரதுநீ நீகாஸ வாக்வைபவம்
ஸ்ரீகாஞ்சீ நகரீ விஹாரரஸிகா சோகாபஹந்த்ரீ ஸதாம்
ஏகா புண்ய பரம்பரா பசுபதே: ஆகாரிணீ ராஜதே" ||

---

சொல்லும் பொருளுமற்றுச் சும்மா இருப்பதற்கே
அல்லும் பகலுமெனக் காசை பராபரமே.




என்கிற மூகபஞ்சசதீ ஸ்லோகத்தினைப் பாடிப் பரவசமானுர். ஸ்ரீகாமாக்ஷி அம்பிகையின் ஸந்நிதியிலும் அவ்வாலயத்துள்ள மஹாலக்ஷ்மி ஸந்நிதியிலும் ஆதிசங்கரர் ஸந்நிதியிலும் இந்நூல் வைக்கப்பெற்றுத் திருவருள் பெற்றது. சிவனருள் பெற்றுச் சீவர்களின் நல்வினை தீவினைகளைக் கணக்கெழுதும் சித்திரகுப்தன் ஆலயத்திலும் நமது அச்சிட்ட பாரங்கள் வைத்து வழிபாடு செய்யப்பட்டது. விவரம் அனுபந்தம் 10ல் காண்க. குமரகோட்டத்து



குமரகோட்டம் (காஞ்சீபுரம்)

கண்ணுவா ரேனும் உனைக்கைகுவியா ராயினந்த
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே.



சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம்

ஒரு தனிக் குமரனையும் சக்தி மிக்க சங்குபாணிப் பிள்ளையாரையும் வணங்கி இறையருள் பெற்ற நிறைவுடன் நமதாசிரியர் சென்னை திரும்பினார்.

சென்னையிலே உள்ள திருக்கோயில்களிலும் இம்முறையில் இறையருள் வேட்கும் பணியில் ஈடுபட்டு 5—6—68 சென்னை அரண்மனைக்காரன்தெரு கச்சபேச்வரஸ்வாமி ஆலயத்துக்குச் சென்று வழி



ஸ்ரீ கச்சபேச்வரஸ்வாமி ஆலயம் (சென்னை அரண்மனைக்காரன் தெரு)

---

கொல்லா விரதங் குவலயமெல் லாம்ஓங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் இச்சை பராபரமே.





பட்டார். அப்போது வஸந்தோற்சவ சமயம் ரிஷபாரூடமூர்த்தியாகப் பெருமான் எழுந்தருளும்போது நமது நூல் பிரதியுடன் நமது ஆசிரியர் சென்று பெருமானை வணங்கியது நமக்கு இறையருள்கிட்டியது என்னும் நிறைவைத் தந்தது. அங்கு ஸ்ரீ கணேச சிவாசார்யர் மிக்க சிரத்தையுடன் விபூதிப் பிரசர்தம் அளித்து ஆசீர்வதித்தார். 6—7—68 அன்று மேல மாம்பலம் ஸ்ரீ காசிவிச்வநாத சுவாமியின் திருவடிகளிலும் புத்தகம் வைத்து



ஸ்ரீ காசி விச்வநாதர் ஆலயம் (சென்னை—மேலமாம்பலம்)

எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி யிரங்கவும்நின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே.




வணங்கப்பட்டது. மேல மாம்பலத்தில் உள்ள பழமையான இவ்வாலயம் தலைமை அர்ச்சகர் சிவ ஸ்ரீ T. S. மணி குருக்களுடைய இடைவிடாத முயற்சியாலும் சிரத்தையாலும் அருச்சனை, ஆராதனை, திருவிழாக்கள் முதலிய சிறப்புக்களுடன் சிறந்து விளங்குகிறது. உதவி அர்ச்சகர் சிவ ஸ்ரீ S. ராமசேஷ குருக்களுடைய உருக்கமான அர்ச்சனை பக்தர்களைப் புல்லரிக்கச்



சிவவிஷ்ணு ஆலயம் (சென்னை -மாம்பலம்)

---

தன்னைத்தந் தென்னைத் தடுத்தாண்ட நின்கருணைக்
கென்னைக்கொண்டென்னபலன் எந்துயர் பராபரமே.




செய்கிறது. இதனைப் பிரத்தியட்சமாக இக் காரியாலயத்தைச் சேர்ந்தவர்களே அனுபவித்தனர். இவர்களைப் போன்றவர்களின் சிரத்தையினாலேதான் ஆஸ்திகமும் பக்தியும் இடையருது மேன்மேலும் பெருகி வருகின்றன என்பதில் ஐயமும் உண்டோ? இவ்வாலயத்தில் தொண்டுகள் செய்ய பல வாய்ப்புகள் உள்ளன. மேலும் அதே தினத்தில் மாம்பலம் சிவ-விஷ்ணு ஆலயம், லிங்கிச் செட்டித்தெரு மல்லிகேச்வரர் ஆலயம், தம்புச்செட்டித் தெருவில்



ஸ்ரீ மல்லிகேச்வரர் ஆலயம் (சென்னை—லிங்கி செட்டித் தெரு)

மார்க்கண்டர்க்காக மறலிபட்ட பாட்டை யுன்னிப்
பார்க்கினன் பர்க்கென்ன பயங்காண் பராபரமே.




உள்ள செல்வ விநாயகர் ஆலயம், காளி காம்பாள் என்று சொல்லப்படுகிற காமாக்ஷி கமடேசுவரர் ஆலயம், தங்க சாலைத் தெரு ஏகாம்பரேச்வரர் கோயில் ஆகிய தெய்வத்தானங்களிலும் நமது நூல் பிரதியுடன் நமது ஆசிரியர் சென்று ஆங் காங்கு கோயில் கொண்டுள்ள இறைவன் திருவருளைப் பெற்றார். செல்வவிநாயகர் கோயில் ஸ்ரீ ஏகாம்பர சிவாசாரியார் அவர்கள்



**ஸ்ரீ செல்வவிநாயகர் ஆலயம் (சென்னை—தம்பு செட்டித் தெரு)**

ஆடுவதும் பாடுவதும் ஆனந்த மாகிநின்னைத்
தேடுவதும் நின்னடியார் செய்கை பராபரமே.




இந்நூலினை மிக்க வரப் பிரசாதியான செல்வவிநாயகனின் திருவடித் தாமரைகளிலும் மற்றும் அவ்வாலயத்தே கோயில் கொண்டுள்ள நடராஜப்பெருமான், வல்லி-தேவசேனு சமேத சுப்பிரமணியப் பெருமான் சந்நிதிகளிலும் வைத்து இனி எவ்விதத் தர்மதமும் இன்றிப் புத்தகம் இனிது முடிவுற்று அன்பர்கள் உலகத்துக்குச் சீக்கிரத்தில் கிடைக்கத் திருவருள் புரிந்தார்.



ஸ்ரீ காளிகாம்பாள்-கமடேச்வரர் ஆலயம் சென்னை-தம்புசெட்டித் தெரு

அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே.




பல்லாயிரக்கணக்கான பக்தர்களும் எல்லா நலன்களையும் பெற நாடும், தம்பு செட்டித் தெரு, காளிகாம்பாள் என வழங்கும் ஸ்ரீ காமாக்ஷி தேவியின் திருவடிகளிலும் இந்நூல் பிரதி சமர்ப்பிக்கப்பட்டது. அருச்சனை செய்த குங்கும பிரசாதமும் கிடைத்தது. அம்பிகையின் இத்தகைய விசேஷத் திருவருள் கிடைத்தது அவ்வாலய அர்ச்சகர் சிவாகமசாஸ்திர நிபுண



ஸ்ரீ ஏகாம்பரேச்வரர் ஆலயம் (சென்னை—தங்கசாலைத் தெரு)

---

மூர்த்திதலந் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே.




ஸ்ரீ சாம்பமூர்த்தி சிவாசாரியார் அவர்களாலேயாகும். இங்ஙனம் இந்நூலைப் பதிப்பித்தயாங்களும் பயிலும் பக்தர்களும் பெரும்பயன் பெறவேண்டுமென்று ஆங்காங்கு கோயில் கொண்டுள்ள மூர்த்திகளை வணங்கிப் பிரார்த்தித்துக் கொண்டோம்.

இனி, இந்நூல் பற்றிய ஒரு சில விஷயங்களைக் கூற விரும்புகிறோம். திருமுறைகளேயன்றி மற்றும் நலன்கள் நல்கும் சில தோத்திரங்களையும் சிவாலய வழிபாட்டுமுறை, சிவவிரதங்கள், சிவபக்தி பற்றி காஞ்சி ஜகத்குரு பரமாசாரியர்களின் அருளுரைகள், மற்றும் பல அரிய விஷயங்களையும் அனுபந்தமாகக் கொடுத்துள்ளோம். ஆங்காங்கு உரிய படங்களையும் கொடுத்துள்ளோம். சிவநேசச் செல்வர்கள் இந்நூலினை வாங்கிப் படித்து அதன்மூலம் தாங்கள் பயனடைவதுடன் இம்மாதிரி நற்பணிகளில் எங்களை மேலும் மேலும் ஊக்குவிக்கவேண்டும் என்பதே எமது வேண்டுகோள்.

இந்நூலுக்கு ஸ்ரீமுகம் அருளிச்செய்த ஸ்ரீ **காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீசங்கராசாரிய ஸ்வாமிகளின்** திருவருள் துணையே எங்களை இத்தகைய பணிகளில் ஆர்வத்துடன் ஈடுபடச் செய்கிறது. அவர்கள் தற்பொழுது எழுந்தருளியிருக்கும் ஆந்திரப் பிரதேசத்திலிருக்கும் ஏலூரு (Eluru) திசை நோக்கித் தண்டம் சமர்ப்பிக்கிறோம். தமிழ் நாட்டில் சைவத்தை மட்டுமேயல்லாமல் ஹிந்துமதப் பிரசாரமே புரிந்து வருபனவர்களான மதுரை ஆதீனகர்த்தர் திருவருள் தவயோக ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய ஸ்வாமிகள் குரு மஹா

---

அட்ட மூர்த்தியண் ணாமலை கைதொழக்
கெட்டுப் போம்வினை கேடில்லை காண்மினே.




சந்நிதானங்களும் எமது இந்த முயற்சியை ஆசீர்வதித்து அருளுரை வழங்கியுள்ளார்கள். அவர்களுக்கும் எமது வணக்கங்களைச் செலுத்துகிறோம். மதுரை சுந்தரேச்வரப் பெருமானின் திருவருளே எமக்குக் கிடைத்ததற்கொப்ப அவ்வாலய முதல் ஸ்தானிக நிர்வாகம் சிவதர்மபாஸ்கர **சிவஸ்ரீ ம.க. சுந்தரேசபட்டர்** அவர்களும், தமிழ்த் தெய்வத்தின் தண்ணருள்போலத் தண்டமிழில் சென்னை பச்சையப்பன் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் திரு. அ. மு. பரமசிவானந்தம் அவர்களும் வாழ்த்துரை வழங்கியுள்ளனர். அவர்களுக்கும் எங்கள் வணக்கங்கள் உரித்தாகுக. சமயமும் தமிழும் ஒருங்கு தழைக்கப் பாடுபடுவது திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர ஆதீனம் என்பதை யாவரும் அறிவர். அவ்வாதீனத்தின் சென்னைப் பிரசார நிலயத் தலைவர் வித்துவான் **ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்**. இவர்கள் அப்பர் சுவாமிகளின் அழகிய புகைப்படம் இப்பதிப்புக்கு 'பிளாக்' எடுத்துப் பிரசுரிக்க அன்புடன் அளித்து இந்நூலுக்கு ஆசியுரை வழங்கியும், எங்கட்கு உதவியுள்ளார்கள். இது மட்டுமா? எங்களது முந்தைய தெய்வீகப் பிரசுரங்கள்சிலவற்றிற்கும் உதவியுள்ளார்கள். அவர்களுக்கும் எங்கள் வணக்கத்தினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பிரவசனத் துறையில் முன்னணியில் இருப்பவர்களும்,சிறந்த சிவபக்தருமான பிரவசனரத்னாகரம் **மஞ்சக்குடி ஸ்ரீ K. ராஜகோபால சாஸ்திரிகள்** இந்நூலின் அச்சான வரையில் உள்ள பகுதிகளையும் அனுபந்தத்திற்காகத் தயார் செய்யப்பட்ட கையெழுத்துப் பிரதி

---

ஆடிப் பாடியண் ணாமலை கைதொழ
ஓடிப் போம்நம துள்ள வினைகளே.

களையும் பரம கருணையுடன் பார்வையிட்டு எமது இம்முயற்சியை "சிறந்த முயற்சி" யென ஆமோதித்து அருள் புரிந்தார்கள். அவர்களுக்கும் எங்கள் வணக்கம் உரித்தாகுக. அட்டைப் படத்துக்கென வரையப்பட்ட அம்மையப்பனின் அழகியவண்ணப் படத்தைப் பார்வையிட்டுத் தக்க ஆலோசனைகள் கூறிய சிவாசாரியமணிகளான ஸ்ரீ கணேச குருக்கள் (சென்னை கச்சபேச்வரர் ஆலய அர்ச்சகர்), சிவாகம சாஸ்திர நிபுண ஸ்ரீ சாம்பமூர்த்தி குருக்கள் (சென்னை காளிகாம்பாள்—கமடேச்வரஸ்வாமி ஆலய அர்ச்சகர்) ஸ்ரீஏகாம்பர குருக்கள் (பிரசித்தி பெற்ற மண்ணடிப் பிள்ளையார் கோயில் அர்ச்சகர்) ஆகியோருக்கும் எங்கள் வணக்கங்கள். அவர்கள் கூறிய ஆலோசனைப்படி திருத்தங்கள் செய்தே இந்நூலின் அட்டைப் படம் திகழ்கிறது.

போகியாய் இருந்து உயிர்களுக்குப் போகத்தையளிக்கும் பரமனே யோகியாய் இருந்து யோகத்தையும் காட்டுகிறான். அங்ஙனம் யோகு செய்வாரைப்போல நால்வர்களுக்குக் கல்லால மர நீழலில் காட்டிய திருக்கோலமே ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபமாகும். கண்ணையும் கருத்தையும் கவரத்தக்க முறையில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் படத்தை, **மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்போரேஷன் லிமிடெட்** ஸ்தாபனத்தார் தமது "காலண்டரில்" பிரசுரித்தார்கள். அதை நமது இந்த நூலில் பிரசுரிக்க அனுமதித்த அவர்கட்கும் எமது நன்றி.

ஸரஸ்வதியின் கடாக்ஷத்தைப் பரிபூரணமாகப் பெற்றுள்ள ஸ்வாநுபூதிச் செல்வர் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களை

---

ஆசைப் படப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாமே.




அறியாதார் இருக்கமுடியாது. எங்களுடைய தெய்வீகப் பிரசுரங்கள் எல்லாவற்றிற்கும் அவர்களது நல்வாழ்த்துக்களும் ஆதரவும் எங்கட்கு உண்டு. அவர்களுக்கும் எங்கள் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

'கலைமகள்' ஆசிரியர் ''வாகீச கலாநிதி' திரு. கி. வா. ஜகந்நாத ஐயர், M.A. அவர்கள் எங்கட்கு எல்லா நூல்களுக்கும் உறுதுணையாயிருந்து ஊக்கம் தருபவர். அவர்களுக்கும், எங்கள் தொண்டினைப் பாராட்டி தங்கள் வாழ்த்துக்களையும் நல்லெண்ணங்களையும் அவ்வப்போது தெரிவிக்கும் திருவாளர்கள் அய்யா சுப்பிரமணிய முதலியார் (திருமயிலை கபாலீச்சரம் அறங்காவலர் குழுத்தலைவர்), V. சின்னஸ்வாமி ஐயர் (சென்னை மாம்பலம் சிவ-விஷ்ணு ஆலய நிர்வாகக் குழுத் தலைவர்), A. சுப்பிரமணிய ஐயர் M.A.B.L. (சென்னை கச்சபேச்வரஸ்வாமி ஆலய அறங்காவலர் குழுத் தலைவர்) ஆகியோர்களுக்கும் பக்தி வெளியீட்டுப் புத்தகங்களில் எங்களுக்குப் பலவிதங்களில் உற்சாகமூட்டிவரும் ஸ்ரீ பரணீதரன் அவர்களுக்கும் எங்கள் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூல் நல்ல முறையில் அழகுடன் அமையப் பலவகைப் படங்களைத் தந்துதவிய திருவாளர்கள் மாயூரம் N. ராமகிருஷ்ண, திருச்சி J. சடகோபன், சென்னை N. கிருஷ்ணன் அவர்களுக்கும், சித்திரகுப்தன் புகைப்படம் அளித்த அவ்வாலய அறங்காவலர் அவர்களுக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக.

---

தொண்ட ராகித் தொடர்ந்து விடாதவர்க்
கண்டம் ஆளவும் வைப்பார் நரரே.



சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம்

மற்றும் இந்நூல் ஸகல விதத்திலும் அருமையாய் அமையப் பல பார்வை நூல்கள் தந்து ஆதரவு கொடுத்த ஆஸ்திகர்கள் திருவாளர்கள் சென்னை மேலமாம்பலம் R. ராஜாராமன், க. ந. அருணசலம் பிள்ளை ஆகியோர்க்கும் இந்நூலைத் தொகுக்க ஆரம்பிக்கும் நல்ல சமயத்தில் பழநியாண்டவன் சந்நிதியில் எங்களுக்காகப் பிரார்த்தனை செய்து விபூதி பிரஸாதம் அனுப்பிய ஸ்ரீ B. கோபால ஐயர் என்கிற கோபாலகிருஷ்ண கனபாடிகளுக்கும், மற்றும் தெரிந்தோ தெரியாமலோ எங்ஙனமேனும் எங்கட்கு உதவி செய்துள்ள உத்தமர்கள் அனைவருக்கும் எமது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூல் எழுமைக்கும் துணையாய அம்மையப்பனின் திருவருளால் அனைவருக்கும் ஸகல நலன்களையும் இம்மையிலேயே அருளவேண்டுமென அவன் இணையடித் தாமரைகளை வழுத்துகின்றனம்.

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே".

இங்ஙனம்,

சென்னை–17,
9—2—1939.

தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,
பதிப்பகத்தார்.

---

எம்மை யாளு மிடைமரு தன்கழல்
செம்மை யேதொழு வார்வினை சிந்துமே.




உ
சிவமயம்

# முகவுரை

"எப்போ தகத்து நினைவார்க் கிடரில்லை
கைப்போ் தகத்தின் கழல்"

எல்லாம் வல்ல இறைவன் சிவபெருமான் ஒருவனே. அவன் பேதம் அனந்தம் என்பர் ஆன்றோர். அம்மூர்த்தங்கள் 25 என்றும் 64 என்றும் கூறுவர் பெரியோர்கள். அவனே **பசுபதி** எனப்படுபவன். அவன் அடிமைகள் பசுக்கள் (இரண்டு கால் பசுக்களாகிய மக்களும் நான்கு கால் பசுக்களாகிய பிராணிகளும்). பசுக்கள் என ஏன் உயிர்கட்குப் பெயர் வந்தது எனின், பாசத்தால் (மாயையால்) கட்டுண்ட காரணத்தாலே யாம். எனவே பதி (கடவுள்) பசு (உயிர்) பாசம் (மாயை) என மூன்று பொருள்களும் அநாதி நித்யமாக உள்ளன என்றும் பெற்றும். இம்முப்பொருள் உண்மையை மேனாட்டார் "Three things are eternal" என்றும் "Souls are immortal" என்றும் கூறுவர். கந்தபுராணத்தில்

"சான்றவ ராய்ந்திடத் தக்கவாம் பொருள்
மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன
ஆன்றதோர் தொல்பதி ஆருயிர்த் தொகை
வான்திகழ் தளையென வகுப்பர் அன்னவே"

என்ற திருப்பாடலில் "மறையெலாம் மொழிய நின்றன" என்ற கச்சியப்பசிவாசாரியாரின் கருத்து வேதத்திலுள்ளது. இதனை "அம்பிகாபதயே உமாபதயே பசுபதயே நமோ நம:" என்ற வசனம்

---

ஒற்றி யூர வொருசடை வைத்தவன்
ஒற்றி யூர்தொழ நம்வினை யோயுமே.




வலியுறுத்தும். ஆதலால் எல்லா மக்களும் (பசுக்களும்) ஆண்டவன் அருளைப் பெற அவன் திருவடியையடைய நம்மைச் செம்பிற் களிம்புபோல் அநாதியாய்ப் பந்தித்துக் கொண்டுள்ள பாசத்தை நீக்கிப் பதியின் திருவடியை அடைய அருள் நூல்கள் உதவுகின்றன.

புண்ணிய பூமியாகிய இப்பரதகண்டத்தில் எண்ணில்லாத சிவத்தலங்களும், புண்யதீர்த்தங்களும், மூர்த்தி பேதங்களும் உள்ளன என்பது கண்கூடு. அண்மையில் ஜெர்மனியிலிருந்து வந்த ஓர் அன்பர் நம் நாட்டுத் தெய்வீகத்தன்மையை நினைந்து "நான் ஏன் இந்நாட்டில் பிறந்திருக்கக்கூடாது" என்று சொல்லியும் எழுதியும் வைத்துப்போனார் என்றால் என்னே நம்பழம் பெரும்பாரதத்தின் பண்பு !

இத்தகைய புண்ய பூமியில் தோன்றியுள்ள ஆறறிவுடைய மக்கள் "தாங்கள் யார்? எப்படி இங்கு வந்தோம்? யார் நம்மை இவ்வுலகத்திற்கு அனுப்பியது? அவரைக் கடவுள் என்று கூறுவதால் அவர் எங்கு இருக்கிறார்? அவர் நமக்குச் செய்யும் உபகாரம் யாது? நாம் இவ்வுலகில் என்றும் நிலைபெற்றிருப்போமா? அல்லது சிலகாலம் வாழ்ந்து பின்னர் இறந்துவிடுவோமா? அப்படி இறந்தால் நம் உயிரின் கதி என்ன? அவைகள் என்றுமிருக்குமா? அல்லது வேறு தேகங்களை எடுத்துக்கொள்ளுமா?" என்ற இத்தகு கேள்விகளைத் தினமும் எழுப்பி விசாரணை செய்து அதற்கு ஒரு முடிவுகண்டு ஆண்டவன் அருளைப்பெற்றுப் பேரின்பத்தைப்பெற முயலவேண்டும். எவ்வளவு சிரமமான காரியம் இது? பேரின்பத்தை அடைதலே உயிர்களின் முடிவான பயன்;

---

தஞ்சும் போழ்துநின் ளுமத் திருவெழுத்
தஞ்சும் தோன்ற வருளுமை யாறரே.




ஆதலால் நமக்கு முன்னிருந்து ஆண்டவனருள் பெற்ற அருளாளர்கள் கூறியுள்ள அருள் நூல்களை ஓதி உய்யவேண்டு மென்பதாம்!

இத்தகைய பரமனருள் பெற்ற அடியார்கள் பலர். அவர்களுள் சிறப்பாகச் சைவசமயத்தை நடத்திக்காட்டவே பரமேசுவரன் அருளால் நிலவுலகத்தில் அவதரித்தவர் நான்கு சைவசமயாசாரிய மூர்த்திகளாவர்; இவர்களுடன் ஏனைய அருளாளர்கள் பலரும் சேர்ந்து இருபத்தெழுவர் அருளிச்செய்துள்ள தேவாரம் முதல் பெரிய புராணம் ஈருக உள்ள சைவத் தெய்வப் பன்னிரு திருமுறைகளும், சந்தானசார்யமூர்த்திகள் நால்வரும் அவருடன் வேறு சிலரும் சேர்ந்து ஆன்மகோடிகள் உய்யும் பொருட்டு அருளிய திருவுந்தியார் முதல் சங்கற்பநிராகரணம் ஈருகவுள்ள பதினன்கு சித்தாந்த சாத்திரங்களும் சைவர்களுக்குப் பிரமாண நூல்களாக விளங்கும் வேதசிவாகமாதி சாத்திரங்களின் கருத்துக்களைத் தெளிவுபட விளக்குபவையாகும். சைவர்களுக்கு இரண்டு கண்களாக விளங்குபவை இவை.

இவைகளுள் திருமுறைகள் என்ற சொல்லுக்குப்பொருள் "ஒழுங்காக வைக்கப்பெற்ற அருளாளர் (இறையனுபவம் பெற்றோர்கள்) அருளிய, உயிர்க்கு உறுதி பயக்கும் அருள் நூல்களின் வரிசை" என்பதாம். இவற்றின் பெருமையை ஸ்ரீ செந்தில்நாதய்யர், யாழ்ப்பாணம் ஸ்ரீ சுவாமிநாதபண்டிதர் முதலிய பெரியோர்கள் "தேவாரம் வேத சாரம்", "ஆரிய வேதமும் திராவிட வேதமும் தம்முள் ஒத்த

---

என்பொ னீசனி றைவனென் றுள்குவார்க்
கன்ப னாயிடு மாணைக்கா அண்ணலே.




கருத்தை உடையன'' என்ற சிறு நூல்களின் மூலம் நன்கு விளக்கியுள்ளார்கள். விரிவு அங்குக் கண்டுகொள்க.

**இனி இத்திருமுறைகள் பன்னிரண்டு ஆம்.** இவற்றை முறைபெற வகுத்தவர் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் அருள் பெற்ற நம்பியாண்டார் நம்பிகள் என்னும் அருளாளர். தேவாரப் பதிகங்களில் செல்லரித்து ஒழிந்தவை போக இறைவன் திருவருளால் "இனிவேண்டுவனவற்றை மட்டும் வைத்தோம்.'' என்று வைக்கப்பெற்றவைகளில் முதல் மூன்று திருமுறைகளாகத் திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரம் 384 பதிகங்கள் நமக்குக் கிடைத்தன. நான்கு ஐந்து ஆறும் திருமுறைகளாகத் திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பதிகங்கள் 313 கிடைத்தன. ஏழாம் திருமுறையாகச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியவைகளில் நமக்குத் தற்போது கிடைத்தவை 100 பதிகங்கள். இவ்வேழுதிருமுறைகளுடன் மாணிக்கவாசகப்பெருமான் அருளிய திருவாசகமும் திருக்கோவையாரும் சேர்ந்து எட்டாந்திருமுறையாக வகுக்கப்பட்டது. இவை ஸ்ரீ நடராஜப்பெருமானே தமது திருக்கரத்தால் ஏடும் எழுத்தாணியுங்கொண்டு எழுதித் தம் கையொப்பமிட்டு வைத்துக் கொண்டமையால் அப்படியே கிடைத்துள்ளன. மற்றும் திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்திநம்பி காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தம நம்பி, சேதிராயர் ஆகிய அருளாளர் ஒன்பதின்மர் அருளிய இசைப்பாடல்களைத் திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்ற பெயருடன் ஒன்பதாந் திருமுறையாகவும், திருமூலதேவர் அருளிய மூவாயிரம் திருமந்திரங்களைப் பத்தாம் திருமுறையாகவும்

---

விருப்பன் மேவிய வேட்களங் கைதொழு
திருப்ப னாகில் எனக்கிட ரில்லையே.




திருவாலவாயுடையார், காரைக்கால் அம்மையார், ஐயடிகள் காடவர் கோன் நாயனர், சேரமான் பெருமாள் நாயனர், நக்கீர தேவர், கல்லாடனர், கபிலதேவர், பரணதேவர், இளம்பெருமான் அடிகள், அதிரா அடிகள், பட்டினத்துப் பிள்ளையார், நம்பியாண்டார் நம்பிகள் ஆகிய பன்னிருவர் அருளிய நாற்பது பிரபந்தங்களைப் பதினென்ருந்திருமுறையாகவும் அமைத்தார் நம்பியாண்டார் நம்பிகள். இது இராஜராஜ சோழனின் விருப்பப்படி நம்பியாண்டார் நம்பிகளால் பொல்லாப்பிள்ளையார் திருவருள் துணைகொண்டு வகுக்கப்பெற்ற தமிழ் வேதமாயிற்று. மந்திரங்கள் பதினென்ருகலின் (பஞ்சப்பிரம்ம, ஷடங்க) திருமுறைகளும் பதினென்ருயின.

பின்னர், பன்னிரண்டாம் நூற்ருண்டில் அநபாய சோழன் என்ற இரண்டாம் குலோத்துங்க சோழவரசன் வேண்டுகோட்கிணங்கி அவ்வரசனின் முதன் மந்திரியாக விளங்கிய தெய்வச் சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணம் என்று திருநாமம் சூட்டி அடியார் வரலாறுகளை ஒருதனித்தமிழ்க்காவியமாக அருளிச் செய்தார். 'தோடு செய்த திருநெறிய தமிழோடு இது ஒக்கும்' ஆதலால் இதனைப் பன்னிரண்டாந் திருமுறையாக அமைத்துத் திருமுறை வரிசையினைப் பூர்த்தி செய்தார் சுவாமிகள். அன்று முதல் திருமுறைகள் பன்னிரண்டாயின. இதன் பிறகு இவற்றிற்குப்பின் சேர்க்க ஏனைய நூல்கள் எவற்றுக்குமிடமில்லாமல் ஆண்டவனே அமைத்தாற்போல முதல் திருமுறை, முதல் திருப்பாட்டு, முதல் அடி, முதல் சீரில் முதல் எழுத்தாக "த்+ஓ" எனத் தொடங்கிக் கடைசி திருமுறை, கடைசிப்பாடல், கடைசி அடி, கடைசி சீரில்

---

குட்ட வல்வினை தீர்த்துக் குளிர்விக்கும்
சிட்டர் போற்றிரு நாகேச் சரவரே.




கடைசியாக "ம்" என்று மகர மெய்யுடன் முடிவதால் இத்திருமுறை பன்னிரண்டும் 'ஓம்' என்ற பிரணவத்தினுள் அடங்கியுள்ளன. திருமுறைகளின் தெய்வத்தன்மையை இது மேலும் நன்கு விளக்கும்.

சைவர்கள் தக்க ஆசாரியரையடுத்து விதிப்படி தீக்கை செய்துகொண்டு சித்தாந்த நூல்களை முறையாகப் பாடங்கேட்டுச் சிந்தித்துப் பின் தெளிதல் வேண்டும் என்பது மரபு. பின்னரே பன்னிரு திருமுறைகளை ஓதும் வழக்கம் இருந்தது. ஆயினும் இக்காலச் சூழ் நிலையில் இம்முறை மாறியுள்ளது சிறிது வருந்தத் தக்கது. எனினும், எங்ஙனமேனும் அன்பர்கள் நாடோறும் பன்னிரு திருமுறைத் திருப்பாடல்களைப் பக்தி சிரத்தையுடன் ஓதி உய்யவேண்டும்.

இத்திருமுறைப்பாடல்கள் மொத்தம் சுமார் 18,300. இவைகளை மாதம் ஒன்றுக்கு ஒரு திருமுறையாக பன்னிரு திருமுறைகளையும் ஓராண்டில் ஓதி (இவ்வாறாகவே தொடர்ந்து ஓதி)ப்பயன் பெற்றவர்கள் இருந்திருக்கிறார்கள்; இன்றும் அபூர்வமாகச் சிலர் இருக்கிறார்கள்; இனியும் அவனருளால் சிலர் இருப்பார்கள். அத்தகைய அன்பர்களை நாம் தலைவணங்கிப் போற்றுகிறோம். ஆனால் இந்த இருபதாவது நூற்றாண்டில் இறைவனை நினைக்கவும் பொழுதில்லாமல் மக்கள் "அன்னவிசாரம் அதுவே விசாரமாக"ப் பெரும் பொழுதை உடல் விருத்தியிலேயே செலவழித்தும்கூட நம் மூதாதையர் கண்ட இன்பவாழ்வில் ஒரு லேசமும் பெறாமல் துன்புற்றுப் பல இன்னல்களால் வருந்துகிறார்கள். இன்னல்கள்

காட்டின் மாநட மாடுவாய் காவெனில்
வாட்டந் தீர்க்கவும் வல்லர்மாற் பேறரே.




நீங்கி இன்பம் பெறுவது என்பது இறைவன் திருவருள் ஒன்றினால்மட்டுமே பெறப்படுவது; ஆகையால் எப்படியும் இறைவனை நினைத்துத்தான் ஆகவேண்டும். எனவே "ஸகல காரிய சித்தியும் சைவத்திருமுறைகளும்" என்ற இந் நூலில் பன்னிரு திருமுறைகளினின்றும் பொறுக்கியெடுத்த சில பாடல்களை மட்டும் பதிக வரலாறு, உரை முதலியவற்றுடன் கொடுத்துள்ளோம். பல அற்புதங்களை நிகழ்த்திய தெய்வீகப் பாடல்கள் இன்றும் பாடுவார்க்கு அவர்கள் பக்தி சிரத்தைக்குரிய பலன்களைக் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை. அவைகள் ஒவ்வொன்றும் உயிருள்ளவை. 18,300 திருப்பாடல்களையும் பாராயணஞ் செய்யப் பெருவிருப்பிருந்தும் அவகாசம் இல்லாத மெய்யன்பர்கள் இத்தொகுப்பிலுள்ள பதிகங்களை ஏதேனும் ஒரு நியமத்துடன் தினமும் தவருது பாராயணஞ்செய்து வருவார்களாயின் அவற்றில் கூறப்பட்ட பலன்களையெல்லாம் நிச்சயம் பெற்றுப் பின் பேரின்ப முத்தியும் பெறுவார்கள். காமியபக்தியானது கிரமமாக ஒருவனை நிஷ்காமிய பக்தியில் ஈடுபடுத்திவிடும் என்பது ஆன்றோர் கண்ட அனுபவ உண்மை.

இனி, இப்பதிகங்களுக்குரிய பலன்களையோ அல்லது பலன்களுக்குரிய திருப்பதிகங்களையோ தேர்ந்தெடுப்பது மிகச்சிரமமான காரியமே. ஏனெனில், பலனைக் கொடுக்காத ஒரு பாட்டும் திருமுறைகளில் இல்லை. எனவே ஒரு சிலவற்றை மட்டும் இங்குக் கொடுத்துள்ளதால் மற்றவைகளுக்குப் பலன் இல்லையென ஒருவரும் எண்ணவேண்டா. உள்ளத்திலிருந்து இறைவன் காட்டிய ஒளியினைக்கொண்டே சிலவற்றை மட்டும் இங்குக் கொடுத்

---

செய்ய பாதம் இரண்டும் நினையவே
வையம் ஆளவும் வைப்பர்மாற் பேறரே.




துள்ளோம். இறைவன் அருள் சிகரமாக நிற்க அவ்வருள் வழி நின்று இத் தொகுப்புக்கு உதவியன சேக்கிழார் பெருமான் அருளிய பெரியபுராணத்தில், பதிகப்பயனை அவர் காட்டிய குறிப்புகள், பதிகம் பாடிய வீரலாறுகள், அப்புராணத்திற்குப் பேருரை வழங்கிய சிவக்கவிமணி திரு. C K. சுப்பிரமணிய முதலியார் உரைக் குறிப்புகள் ஆகியவையாகும். ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடம் ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகளும், திருத்தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமஹாசந்நிதானம் அவர்களும் அஷ்டகிரகசேர்க்கையின்போது இடர்நீக்கும் பதிகங்களாக எடுத்துக் கொடுத்து அருளிய திருப்பதிகங்களும் இடம் பெற்றுள்ளன. மேலையூர் தவராஜ யோகமடம் தலைவர் தவத்திரு மாணிக்கவாசக ஞானதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அபிப்பிராயங்களும் சம்பிரதாயமாக வழங்கிவரும் சில அனுபவச் செய்திகள் முதலியவைகளும், மற்றும் பதிகத்திருக்கடைக் காப்புச்செய்யுளில் வைக்கப்பட்டுள்ள பதிகப்பலனும் கொள்ளப்பட்டன. சில தலமகிமை, தலவரலாறுகளுங் கருத்தில் கொள்ளப்பட்டன.

சிவபெருமானின் திருவருட்குறிப்பினாலேயே இந்நூல் வெளிவருகிறது. அவனுடைய சங்கற்பத்தாலேயே நம்மிடையே நடமாடும் தெய்வமாகத் திகழும் அருளின் அவதாரமான பெரியவாள் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி . ஜகத்குரு ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகள் அருளாசியுடன் ஆத்திகம் வளர்க்கும் அரும்பணியில் ஈடுபட்டுள்ள புகழ்பெற்ற 'லிப்கோ' பதிப்பகத்தினருடைய உள்ளத்தில் இவ்வெண்ணம் தோன்றியது. அப்பேரருளே அடியேங்களையும் இப்பெரும் பணியில் ஈடுபடுத்தியது. இத்தகைய ஆத்திகப்பணிகளை அவர்கள் மேலும்

---

பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர்
மருந்து மாகுவர் மன்னுயிர் பேறரே.



சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம் ★ சிவமயம்

ஊக்கத்துடன் ஆற்றிப் பெருமையுடன் திகழவேண்டும் என்றும் இந்நூலில் சொல்லப்பெற்ற பலன்கள் யாவும் அவர்களும் பெறவேண்டும் என்றும் எல்லாம் வல்ல மாதொரு பாகனாகிய பரமேச்வரனைப் பிரார்த்தித்துக்கொள்ளுகிறோம். **வேதநெறி வாழ்க ! சைவத்துறை விளங்குக !! ஓங்குக திருமுறைப்பணிகள் !!! வாழ்க சீரடியாரெல்லாம் !!!!**

இங்ஙனம் அடியார்கள்

சென்னை,
14-1-1968.

கயப்பாக்கம் சோமசுந்தரம்
ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா



---

தாழம் பூமணம் நாறிய தாழ்பொழில்
கோழம் பாவெனக் கூடிய செல்வமே.

சிவமயம்

# அன்பர்களுடைய கவனத்திற்கு

இந்நூலின் தொகுப்பிலுள்ள திருப்பதிகங்களைப் பக்தி சிரத்தையுடன் அன்பர்கள் ஓதிவந்தால் சகலகாரியங்களும் சித்தியாகும் என்பது உறுதி.

1. படனத்தைத் தொடங்குமுன் அன்பர்கள் நீராடி, விபூதி உருத்திராக்ஷம் அணிந்துகொண்டு, தோய்த்துலர்ந்த வஸ்திரம் இரண்டு உடுத்திப் பரிசுத்தமான இடத்தில் இருக்கவேண்டும். பிறகு ஒருமைப்பட்ட சிந்தையுடன் படனம் செய்தல் வேண்டும்.

2. பதிகப்பாடல்களைத் தொடங்கும்போதும், முடிக்கும் போதும் "திருச்சிற்றம்பலம்" என்று சொல்ல வேண்டும்.

3. சைவசம்பிரதாயமாகத் திருமுறைப்பாராயணம் செய்பவர்கள் முதலில் நால்வர் துதியைச் சொல்லிக்கொள்ளவேண்டும்.

### நால்வர் துதி

"பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிருநாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத ஊரர்திருத்தாள்போற்றி."

4. திருமுறைப்படனம் செய்யும்போது இடையிடையே எழுந்துசெல்வதும், வேறு வார்த்தைகள் பேசுவதும், ஆசாரக் குறைவாக நடந்துகொள்ளுதலும் கூடாது.

5. பன்னிருதிருமுறைகள் முழுமையும் படனஞ்செய்ய விழைபவர் கிரமமாக வரிசை தவறாமல் சொல்லவேண்டியது அவசியம். பன்னிரு திருமுறைகளாவன:-

| | திருமுறை |
|---|---|
| (1) திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய பாடல்கள் | 1—2—3 |

---

புனித னைபூவ னூரனைப் போற்றுவார்
மனித ரிற்றலை யான மனிதரே.

(2) திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய பாடல்கள் — திருமுறை 4—5—6

(3) சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய பாடல்கள் — 7

(4) மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம், திருக்கோவையார் இரண்டும் சேர்ந்தது — 8

(5) திருமாளிகைத்தேவர் முதல் சேந்தனார் ஈறுகவுள்ள ஒன்பது ஆசிரியர்கள் அருளிய பாடல்கள் திருவிசைப்பா, திருப்பல்லாண்டு இரண்டும் சேர்ந்தது — 9

(6) திருமூல தேவ நாயனார் அருளிய 3000 பாடல்கள் கொண்ட திருமந்திரம் — 10

(7) திருவாலவாயுடையார் திருமுகப்பாசுரம் முதல் நம்பியாண்டார் நம்பிகள் அருளிய திருநாவுக்கரசு தேவர் திருஏகாதசமாலை ஈறுகவுள்ள 40 பிரபந்தங்களின் தொகுதி — 11

(8) தெய்வச் சேக்கிழார் பெருமான் அருளிய தனித் தமிழ்க்காவியமான பெரிய புராணம் — 12

ஆகமொத்தம் சைவத்திருமுறைகள் 12; இவற்றையருளிச்செய்த ஆசிரியர்கள் 27; இவை தமிழ்வேதம் எனப்படும்.

6. பஞ்சபுராணம் :—

(1) முதல் மூன்று சமயாசாரிய மூர்த்திகளுள் ஒருவர் பாடிய பாடல் ஒன்று.

(2) நான்காவது சமயாசாரிய மூர்த்தியாகிய மாணிக்கவாசகர் அருளிய திருவாசகத்தில் 1 பாடல்

(3) ஒன்பதாந் திருமுறையிலுள்ள 9 ஆசிரியர்கள் பாடிய திருவிசைப்பாப்பாடல்களுள் 1 பாடல்

(4) சேந்தனார் அருளிச்செய்த திருப்பல்லாண்டுள் ஒரு பாடல்.

---

ஆண்ட வன்னடி யேநினைந் தாசையால்
காண்ட லேகருத் தாகியி ருப்பனே.

(5) சேக்கிழார் சுவாமிகள் அருளிய பெரிய புராணச் செய்யுள் ஒன்று.

கடைசியாகத் திருச்சிற்றம்பலம் எனச்சொல்லிப் படனத்தை முடித்துக் கொள்ளவேண்டும். இதுவும் செய்ய நேரமில்லை என்று சொல்பவர்களுக்கு இறையருளைப் பெற வேறு வழியேயில்லை என்பர் ஆன்றோர்.

7. பன்னிரு திருமுறைப்பாடல்களை ஓதுவதற்குப்போதுமான அவகாசமில்லாதவர்களும் உய்யவேண்டும், என எண்ணிய பெருந்தகையார் யாழ்ப்பாணம் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் ஐயா அவர்கள் பஞ்சபுராணத்தையேனும் ஓதிவாழுங்கள் எனக் கட்டளையிட்டார்கள்.

8. சைவர்கள், தங்கள் ஆன்மலாபத்திற்காக விரதங்களை யனுஷ்டித்து உடம்பையும் உயிரையும் காத்துக்கொள்ள வேண்டும். சிவ விரதங்களாவன: சிவராத்திரி, சோமவாரம், பிர தோஷம், விநாயகசதுர்த்தி, கந்தசஷ்டி, நவராத்திரி முதலி யனவாம்.

9. பரமேசுவரனது பிரபாவங்களைக் கூறும் புராணங்கள் பல வுண்டு. அவற்றுள் முக்கியமாக உள்ளவை "பெரிய புராணம்", "திருவிளையாடற்புராணம்", "கந்தபுராணம்" என்பன. இவை முக்கனி போன்றவை. இறைவனின் முக்கண்கள் போன்றவை. அவற்றையேனும் அன்பர்கள் படித்தல் வேண்டும். இவற்றின் பிரவசனங்கள் நடைபெறும் இடங்களுக்குச்சென்று பக்தி சிரத்தையுடனிருந்து கேட்டல்வேண்டும். இவை பெரிதும் ஆன்மலாபத்திற்குத் துணைசெய்யும்.

10. தினந்தோறும் சிவாலயம் சென்று விதிப்படி ஆலய வழிபாடுசெய்தல் வேண்டும். இயலாதவர்கள் வாரம் ஒரு முறை அல்லது மாதப்பிறப்பு, அமாவாசை, சோமவாரம், வெள்ளிக் கிழமை, பௌர்ணமி, பிரதோஷம் முதலிய நாட்களிலாவது அவசியம் சிவபூஜை செய்தல் வேண்டும்.

---

பொய்யி லாவரன் புள்ளிருக்கு வேளூர்
மையு லாவிய கண்டனை வாழ்த்துமே.

11. தேவாரம் முதலிய அருட்பாடல்களை ஓதுகின்றவர்களையும், சிவபுராணங்களை உபந்யாசம் செய்கின்றவர்களையும் மதித்துப்போற்றி அவர்களுக்கு இயன்ற உதவி செய்ய வேண்டும்.

12. அந்தணர்களுக்கும், அடியவர்களுக்கும். முக்கியமான நாட்களிலேனும் அன்னமிட்டு ஆடை முதலியன அளித்து உபசரித்தல் பிறவி எடுத்ததின் பயனாகும்.

## கவுணியர்கோன் கழலே சரணம்

நான்மறையின் உட்பொருளை நற்றமிழால் தெற்றெனத் தெரித்த சிவஞானச் செம்மலாகிய காழி சம்பந்தர் கவுண்டின்ய கோத்திரத்தில் தோன்றியவர்; கவுணியர்கோன் எனக் களிப்புடன் புகழப் பெற்றவர். இந்நூலைச் செவ்வனே அமைத்துச் சிறப்பாக அச்சேற்றிய அருங்கலை விநோதராகிய லிப்கோ பதிப்பக ஸ்தாபகரும் கவுண்டிய கோத்திரத்தில் தோன்றியவரே. தற்செயலாகத் தோன்றிய இத்தொடர்புறவை நோக்கும்போது தம் மரபில் தோன்றிய ஒருவர் உருவாக்கிய பதிப்பகமே தம் பதிப்பகத்தை முதலாகக் கொண்டு திகழும் பன்னிரு திருமுறைகளைப் பதிப்பிக்கவேண்டுமென்று சம்பந்தப் பெருமான் திருவுளம் பற்றினரோ எனத் தோன்றுகிறது. தோன்றாத் துணையாய் நின்று சீரிய இத்திருப்பணியில் எம்மை ஈடுபடுத்திக் கடைத்தேறச் செய்த கவுணியர் கோன் கழல் தலைமேற் கொள்வாம்.

—லிப்கோ பதிப்பகத்தார்.

நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே.

உ
சிவமயம்

T3835

# நெஞ்சுக்கு உபதேசம்
## (திருநாவுக்கரசு சுவாமிகள்)

திருச்சிற்றம்பலம்

1. இடர்கெடுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
ஈண்டொளிசேர் கங்கைச் சடையா யென்றும்
சுடரொளியா யுள்விளங்கு சோதீ யென்றுந்
தூநீறு சேர்ந்திலங்கு தோளா வென்றும்
கடல்விடம துண்குருண்ட கண்டா வென்றும்
கலைமான்மறி யேந்து கையா வென்றும்
அடல்விடையாய் ஆரமுதே ஆதி யென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே.

2. நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதி யென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே.

3. பற்றிநின்ற பாவங்கள் பாற்ற வேண்டில்
பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில்
சுற்றநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில்
சொல்லுகேன் கேள்நெஞ்சே துஞ்சா வண்ணம்
உற்றவரும் உறுதுணையும் நீயே யென்றும்
உன்னையல்லால் ஒருதெய்வம் உள்கே னென்றும்
புற்றரவக் கச்சார்த்த புனிதா வென்றும்
பொழிலாரூ ராவென்றே போற்றா நில்லே.

---

" அன்பெனும் பிடியுள் அகப்படு மலையே!
அன்பெனும் குடில்புகும் அரசே!"

## இந்நூலில் அடங்கியுள்ள பதிகங்களால் போற்றப்படும் ஸ்தலங்களைக் காட்டும் படம்



வ

20

சென்னை

40

32

11

2

செங்கல்பட்டு

3

1

விழுப்புரம்

39

8

9

15

ஈரோடு

27

23

6

34

25

4

10

1

37

19

7

மாயவரம்

33

28

30

31

கும்பகோணம்

28

திருச்சிராப்பள்ளி

35

14

13

தஞ்சாவூர்

22

26

12

41

42

18

திண்டுக்கல்

36

வங்காளக் குடாக் கடல்

21

29

மதுரை

16

24

திருநெல்வேலி

17

இலங்கை

## எதிரிலுள்ள படத்தில் எண்களால் குறிக்கப்பட்டுள்ள ஸ்தலங்களின் பெயர்

1. திருப்பிரமபுரம் (இப்போது சீகாழி என்று வழங்கப்படுகிறது)
2. திருமாகறல்
3. திருவண்ணுமலை
4. திருப்புன்கூர்
5. திருநெடுங்களம் (இப்பொழுது திருகட்டாங்குளம் என்று வழங்கப்படுகிறது)
6. திருப்பாண்டிக்கொடுமுடி (இப்போது கொடுமுடி என்று வழங்கப்படுகிறது)
7. திருந்துதேவன்குடி (இப்போது நண்டாங்கோயில் என்றும் வழங்கப்படுகிறது)
8. திருவதிகை வீரட்டானம்
9. திருப்பாதிரிப்புலியூர்
10. திருவாவடுதுறை
11. திருஓணகாந்தன்தளி
12. திருநாகைக்காரோணம் (இப்போது நாகப்பட்டினம் என்று வழங்கப்படுகிறது)
13. திருமருகல்
14. திருநல்லூர் (ஆண்டான்கோயில் என்றும் வழங்கப்படுகிறது)
15. திருமுதுகுன்றம் இப்போது (விருத்தாசலம் என்று வழங்கப்படுகிறது)
16. திருப்பரங்குன்றம்
17. திருச்சீரலைவாய் (இப்போது திருச்செந்தூர் என்று வழங்கப்படுகிறது)
18. திருஆவினன்குடி (இப்போது சுவாமிமலை என்று வழங்கப்படுகிறது)
19. திருவேரகம் (இப்போது சுவாமி மலை என்று வழங்கப்படுகிறது)

20. குன்றுதோருடல் (இப்போது திருத்தணிகை என்று வழங்கப் படுகிறது)
21. பழமுதிர்சோலை (இப்போது அழகர்கோயில் என்று வழங் கப்படுகிறது)
22. திருப்பூந்துருத்தி
23. திருப்புக்கொளியூர் அவிநாசி (இப்போது அவிநாசி என்று வழங்கப்படுகிறது)
24. திருப்பூவணம்
25. திருவெண்காடு
26. திருவாரூர்
27. கொடிமாடச்செங்குன்றூர் (இப்போது திருச்செங்கோடு என்று வழங்கப்படுகிறது)
28. திருப்பாச்சிலாச்சிராமம் (இப்போது திருவாசி என்றுவழங்கப் படுகிறது)
29. திருஆலவாய் (இப்போது மதுரை என்று வழங்கப்படு கிறது)
30. திருவேள்விக்குடி
31. திருத்துருத்தி
32. திருக்கச்கியேகம்பம்
33. திரு இம்பர்மாகாளம்
34. திருநல்லூர்ப்பெருமணம்
(இப்போது ஆச்சாள்புரம் என வழங்கப்படுகிறது)
35. திங்களூர்
36. திருமறைக்காடு
37. திருச்சேற்றுத்துறை
(இப்போது திருச்சத்துறை என வழங்கப்படுகிறது)
38. திருவீழிமழலை
39. திருவெண்ணெய்நல்லூர்
40. கோவூர்
41. திருவையாறு
42. திருக்கடிக்குளம் (இப்போது கற்பகநாதர் குளம்)

உ

சிவமயம்

# நறுமணம் பெற்ற பொன்மலர்

சீர்மல்கு செந்தமிழின் சாரமெலாம் உய்த்துணர்ந்து
செறிவு சான்ற
நீர்மல்கும் அகத்தியனே எனவிளங்கி நெறிமுறையின்
நிமல பாதப்
பேர்மல்கும் அம்பலத்துப் பிஞ்ஞகனை ஒருபோதும்
பிரியா தேத்தும்
பார்மல்கு புகழோர்க்கும் எந்தையிடம் பற்றினெடும்
பயின்றூர் பல்லோர்.

அன்ருருட் சிறந்தவரே; அவனியெலாம் தமிழ் மணத்தோடு
அரிய பத்தி
உன்ருரும் உளம்நெகிழத் தெய்வமணம் சைவமணம்
ஒன்றி வீசப்
பன்ருளும் உழைத்துழைத்துப் பலநூல்கள் அச்சேற்றிப்
பரந்து நிற்கும்
பொன்னன புகழ்படைத்த சிறுமலர்ப்பேர் நிறுவனத்தைத்
தாபித் தோரே.

அன்னவர்தாம் ஆண்டுபல வாகபுரி முயற்சியினுல்
அமுதம் என்ன
விண்ணவரும் வியப்புறுமா றிச்சைவத் திருமுறையின்
விரிவ னைத்தும்
மண்ணவர்கள் மகிழ்வெய்த ஒருகுளிகை எனவாக்கி
வகுத்த ளித்தார்
பொன்மலர்தான் நறுமணமும் பெற்றதுபோல் புவியின்மிசை
பொருந்தி வாழ்க

வித்துவான் ந. சுப்பிரமணியன், B A., B T.,
நகராட்சி உயர்நிலைப்பள்ளி,
9, மருதூர் அக்ரஹாரம்,
விழுப்புரம்.

# நவரத்ன ருத்ராக்ஷ கிரீடம்

அருளுருவாய் ஆதிசங்கரர் தொடங்கிய தொண்டு மேலும் மேலும் பெருகும் வண்ணம் கலியுக தெய்வமாய், நடமாடும் தெய்வமாய், பேசும் தெய்வமாய்க் காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் விளங்குகிறார்கள். ஆதிசங்கரரைப் போலவே ஹிமசேது பரியந்தம் திக்விஜயம் செய்து அன்பர்களுக்கு அருள் புரிந்து வருகிறார்கள். தற்சமயம் ஆந்திர தேசத்தில் யாத்திரை செய்து வருகிறார்கள். ஆந்திர தேசத்து ஏலூரு பக்தகோடிகள் ரூ. 15,000-க்குமேல் பெறுமான நவரத்ன ருத்ராக்ஷ கிரீடம் செய்து ஆசார்யமூர்த்திக்கு 10-1-1969-ல் சமர்ப்பித்தனர். பக்தர்களின் சார்பில் புதுப் பெரியவாள் அச்சிறந்த நவரத்ன ருத்ராக்ஷ கிரீடத்தை ஆசார்யாளுக்கு ஸமர்ப்பித்தருளினார்கள்.

கங்கையும் சடையும் மதியும் கரந்து மாநிலத்து வாழும் உயிர்கள் கடைத் தேற வேண்டித் தரணிமிசை முடிதரித்து அருள் கூறும் அமலனே போன்று காட்சி அளித்தார் ஸ்வாமிகள்.

இக்கோலாகல வைபவத்தை நேரில் தரிசிக்கும் பாக்கியம் பெற்றவர்கள் பெரும்பேறு எய்தியவர்கள். அந்த வைபவத்தைக் கண்ணாரக் கண்டு நேரில் அனுபவிக்க முடியாதவர்களும், கருணாகரமூர்த்தி ஸ்வரூபமாக விளங்கும் ஸ்வாமிகளைத் திருமகுடதாரியாக படத்திலேனும் காணும் பாக்கியம் பெறும் பொருட்டு நவரத்ன ருத்ராக்ஷ கிரீட ஸஹிதமாக ஆசார்ய ஸ்வாமிகளின் அழகிய புகைப்படத்தை எதிர்ப் பக்கத்தில் தந்திருக்கிறோம்.

சென்னை-17,
14—1—1969.

தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,
பதிப்பகத்தார்.

# திருவாமாத்தூர்

ஒரு காலத்தில் பசுக்களுக்குத் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளக் கொம்புகள் இல்லை. அவை இத்திருத்தலத்தில் பரமசிவனை நோக்கித் தவம் புரிந்து கொம்புகளைப் பெற்றன. அக்காரணத்தாலேயே இத்தலத்திற்கு **கோமாதுருபுரம்** என்ற பெயர் உண்டு. அதனையே தமிழில் திரு ஆமாத்தூர் என்பர்.

அரன் திருநாமம் **அபிராமேசுவரர்**; அம்பிகை திருநாமம் **முத்தாம்பிகை.**

ஒரு சமயம் தும்பூர் என்னும் கிராமத்தில் சகோதரர் இருவருக்குள் சொத்து பற்றிய வழக்குண்டாயிற்று. மூத்தவன் முன்னோர் சொத்துக்களை எல்லாம் பொற்காசுகளாக மாற்றி மூங்கில் குழாய் ஒன்றில் அடைத்து வைத்துக்கொண்டு விட்டான். தன் தம்பி அச்சொத்துக்களைப் பற்றிக்கேட்டபோது சொத்து ஏதும் இல்லை எனக் கூறிவிட்டான். தம்பியோ விடாமல் முத்தாம்பிகை எதிரில் ஸத்தியம் செய்ய வேண்டும் என்று வற்புறுத்தினான்.

இருவரும் திருவாமாத்தூர் சென்று முத்தாம்பிகையின் ஸந்நிதிக்கு அருகில் ஒரு வட்டப்பாறை எதிரில் நின்றனர். மூத்தவன் தன் கையில் இருந்த மூங்கில் குழலைத் தன் தம்பி கையில் கொடுத்துவிட்டுத் தன்னிடம் முன்னோர் சொத்து ஏதும் இல்லையெனச் ஸத்தியம் செய்தான். பிறகு மூங்கில் குழலை மீண்டும் பெற்றுக்கொண்டான். இருவரும் திரும்பிச் செல்லும்போது வழியில் தாங்கல் என்னும் கிராமத்துக்கு அருகில் மூத்தவன் தன் தம்பியை நோக்கி, ' முத்தாம்பிகை எதிரில் ஸத்தியம் செய்ய வேண்டும் என்றாயே? முத்தாம்பிகை கொத்தி விட்டாளோ?' என்றான். அக்கணமே பின்புறத்தில் பூமிவெடித்துக் கருநாகமொன்று சீறி எழுந்து அவனைக் கொத்தியது. விஷம் தலைக்கேறி அவன் கீழே விழ்ந்தான். அவன் கையில் இருந்த மூங்கில் குழல் கீழே விழ்ந்து மோதிப் பிளந்தது. பொற்காசுகள் சிதறின. முத்தாம்பிகையின் சக்திக்கு வேறென்ன சான்று வேண்டும்?

**தாங்கல்** என்னும் கிராமத்தில் இன்றும், வயல்களுக்கிடையே படம் எடுத்து நிற்கும் **"நாகாத்தாள்"** கோயில் விளங்குகிறது. நாகாத்தாளின் படமெடுத்த தலைப் பாகம் மாத்திரம் அங்கிருக்க மற்றை உடல் பாகம் பூமியுள் புதைந்துள்ளது. வால் பாகம் மாத்திரம் திருவாமாத்தூர் முத்தாம்பிகை அம்மனின் மார்பில் விளங்குவதை இன்றும் காணலாம்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த தலம் தென்ஆற்காடு மாவட்டத்தில் விழுப்புரத்திற்கு மேற்கே மூன்று மைல் தூரத்தில் உள்ளது. தேவாரம் பாடிய மூவராலும் பாடல் பெற்ற தலம் இப்புனித தலம்.

---

**Printed at (அ-1 to அ-72) Darwin Printing Works, Madras-8.**



# சிவமயம்





# 1
# தொல்வினைகள் தொலைந்துபோக



ஓம் லிங்கமூர்த்தயே நம:

ஓம் லிங்கோத்பவமூர்த்தயே நம:

## 1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### திருப்பிரமபுரம்

*(இது சீகாழி எனப் பிரசித்தமாய் வழங்கப்படும் தலம். சீர்காழி என்றும் வழங்கப்படுகிறது. விழுப்புரம்—மாயவரம் மார்க்கத்தில் சீர்காழி புகைவண்டி நிலையத்திலிருந்து ஆலயம் ½ மைல். தேசப்படத்தில் 1 என்ற எண்ணுல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)*

பண் - **நட்டபாடை]** [1–ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

தோடுடைய செவி யன்விடையேறியோர் தூவெண் மதிசூடிக்
காடுடைய சுட லைப்பொடிபூசியென் உள்ளங்கவர் கள்வன்
ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்த அருள்செய்த
பீடுடையபிர மாபுரம்மேவிய பெம்மா னிவ னன்றே. 1

முற்றலாமையிள நாகமோடேன முளைக்கொம்பவை பூண்டு
வற்றலோடுகல னுப்பலிதேர்ந்தென துள்ளங்கவர் கள்வன் [துப்
கற்றல்கேட்டலுடை யார் பெரியோர்கழல் கையால் தொழுதேத்
பெற்றமூர்ந்தபிர மாபுரம்மேவிய பெம்மா னிவ னன்றே. 2

நீர்பரந்தநிமிர் புன்சடை மேலோர் நிலாவெண் மதிசூடி
ஏர்பரந்தஇன வெள்வளை சோரஎன் உள்ளங்கவர் கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய ஓரூரி து வென்னப்
பேர்பரந்தபிர மாபுரம்மேவிய பெம்மா னிவ னன்றே. 3

விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலே யோட்டில்
உண்மகிழ்ந்துபலி தேரியவந்தென துள்ளங்கவர் கள்வன்
மண்மகிழ்ந்தஅர வம்மலர்க் கொன்றை மலிந்த வரைமார்பிற்
பெண்மகிழ்ந்தபிர மாபுரம்மேவிய பெம்மா னிவ னன்றே. 4

ஒருமைபெண்மையுடை யன்சடையன் விடையூரும் இவனென்ன
அருமையாகவுரை செய்ய அமர்ந்தென துள்ளங்கவர் கள்வன்
கருமைபெற்றகடல் கொள்ள மிதந்ததோர் காலம் இதுவென்னப்
பெருமைபெற்றபிர மாபுரம்மேவிய பெம்மா னிவ னன்றே. 5

மறைகலந்தஒலி பாடலோடாடல ராகி மழுவேந்தி
இறைகலந்த இன வெள்வளைசோரஎன் உள்ளங்கவர் கள்வன்
கறைகலந்தகடி யார்பொழில் நீடுயர் சோலைக்கதிர் சிந்தப்
பிறைகலந்தபிர மாபுரம்மேவிய பெம்மா னிவ னன்றே. 6

சடைமுயங்குபுன லன்அனலன்எரி வீசிச் சதிர்வெய்த
உடைமுயங்கும்அர வோடுழிதந்தென துள்ளங்கவர் கள்வன்
கடல்முயங்குகழி சூழ்குளிர் கானல்அம் பொன்னஞ் சிறகன்னம்
பெடைமுயங்குபிர மாபுரம்மேவிய பெம்மா னிவ னன்றே. 7

வியரிலங்குவரை யுந்திய தோள்களை வீரம் விளைவித்த
உயரிலங்கையரை யன்வலி செற்றென துள்ளங்கவர் கள்வன்
துயரிலங்கும்உல கிற்பலஊழிகள் தோன்றும்பொழு தெல்லாம்
பெயரிலங்குபிர மாபுரம்மேவிய பெம்மா னிவ னன்றே. 8

தாணுதல் செய்திறைகாணிய மாலொடு தண்டாமரையானும்
நீணுதல் செய்தொழி யந்நிமிர்ந்தானென துள்ளங்கவர்கள்வன்
வாணுதல் செய்மக ளீர்முதலாகிய வையத்தவ ரேத்தப்
பேணுதல்செய்பிர மாபுரம்மேவிய பெம்மா னிவ னன்றே. 9

புத்தரோடுபொறி யில்சமணும்புறங் கூறநெறி நில்லா
ஒத்தசொல்லஉல கம்பலிதேர்ந்தென துள்ளங்கவர் கள்வன்
மத்தயானைமறு கவ்வுரி போர்த்ததோர் மாயம் இதுவென்னப்
பித்தர்போலும்பிர மாபுரம்மேவிய பெம்மா னிவ னன்றே. 10

அருநெறியமறை வல்லமுனி யகன்பொய்கை யலர்மேய
பெருநெறியபிர மாபுரம்மேவிய பெம்மானிவன் தன்னை
ஒருநெறியமனம் வைத்துணர் ஞானசம் பந்தன்உரைசெய்த
**திருநெறியதமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே.** 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**பிரமபுரீசுவரர்**
**தோணியப்பர்**

தேவி :—**திருநிலைநாயகி**
**பெரியநாயகி**

**பதிக வரலாறு :—** மூவாண்டுக் குழந்தையாம் திருஞான சம்பந்தர் தன்னைக் குளக்கரையில் அமரச்செய்து நீரில் மூழ்கி ஸ்நானம் செய்து பின் 'அகமருடணம்' என்ற தருப்பணங்கருதி மீண்டும் நீரில் மூழ்கிய தந்தை சிவபாதவிருதயரைக் காணுது, தந்தையை விட்டுக் கணமும் பிரிந்திரார் என்பதை வெளிப்படைக் காரணமாக் கொண்டு திருவருள் பெறவேண்டிய செவ்வியுண்டாதலாலே, "அம்மே! அப்பா!" என்று கூறி திருத்தோணிபுரச் சிகரத்தை நோக்கிக் கதறியழ, இறைவர் இறைவியுடன் விடையின்மேல் வந்தருளி இறைவியைக் கொண்டு பொன் வள்ளத்தில் பாலைக் கறந்து ஊட்டச்செய்ய, அம்மையும் அப்பாலிலே எண்ணரிய சிவஞானங் குழைத்து ஊட்ட, அதை உண்ட அளவிலே திருஞான சம்பந்தர் பரஞானம், அபரஞானம் யாவும் ஓதாதே உணர்ந்தார். பின் நீரினின்றும் வெளிவந்து கரை சேர்ந்த சிவபாதவிருதயர் குழந்தை பால் உண்ட அடையாளங்களைக் கண்டு ஒரு சிறு கோலினை எடுத்து ஓச்சி, "எச்சில் மயங்கிட உனக்குப் பால் கொடுத்தாரைக் காட்டு" என வினவ, தனக்குப் பால் கொடுத்த அம்மையப்பரைத் தன் சிறு விரலால் சுட்டிக்காட்டி அங்க அடையாளங்களுடன், "என்னை இது செய்த பிரான் இவனே" என்று தந்தைக்குக் காட்டுவது போல உலகத்தவர்க்கு இறைவரைக் காட்டியருளிய முதற்றிருப் பதிகம் இது.

**பொழிப்புரை :**

1. தோடு அணிந்த திருச்செவியுடையவனுய் இடப வாகனத்தின்மீது அமர்ந்து ஒப்பற்ற தூய்மையான வெண்ணிறமுடைய சந்திரனைச் சிரத்திலே யணிந்துகொண்டு, சுடுகாட்டுச் சாம்பலைத் தன் மேனி முழுவதும் தரித்துக்கொண்டு, என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட கள்வன் (யாவனெனின்) தாமரை மலரிற் றேன்றிய பிரமதேவன் முற்காலத்தில் இறைவனைப் பணிந்து வழிபட்டதனுல் அவனுக்கு அருள் செய்த பெருமையுடைய திருப்பிரமபுரம் என்னும் சீகாழிப்பதியில் விரும்பி எழுந்தருளியிருக்கின்ற பெருமானுகிய இவனே யாம்.

2. முற்றிய ஆமை ஓடு, இளமையான நாகம், பன்றியின் கூரிய கொம்பு (கோரைப்பல்) ஆகியவைகளை அணிகலன்களாகக் கொண்டு, தசை உலர்ந்துபோன பிரம கபாலத்தைத் தனது பலி பாத்திரமாகக் கையிற்றரித்து அதில் பிச்சையேற்று எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட கள்வன் (யாவனெனில்) கற்றலும் கேட்டலுமுடைய பெரியோர்கள் தங்கள் கரங்களால் தன் கழல்களை வணங்கிப் போற்ற விடையின்மேல் ஏறி அருள் செய்த திருப்பிரமபுரம் மேவிய பெருமானுகிய இவனே யாம்.

3. கங்கைநதி தங்கி நிற்கின்ற நீண்ட சடையின்மேல் ஒப்பற்ற வெண்மையொளி பொருந்திய சந்திரனைச் சிரத்தில் அணிந்து



தோணியப்பர் ஆலயம், சீகாழி



திருஞானசம்பந்தர் கோவில், சீகாழி

அழகு மிக்கதாக அடுக்கப்பட்ட கைவளையல்கள் கழன்று விழும்படி யாக என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவன் (யாவனெனில்) பதிகள் பல நிறைந்த இப்பார்மீது ஒப்பற்ற பதி இது என்று சொல்லும்படி மிக்க புகழ்பெற்ற இத்திருப்பிரமபுரத்தில் விரும்பி யுறைகின்ற பெருமானாகிய இவனே யாம்.

4. ஆகாயத்தில் செருக்குடன் திரிந்த மும்மதில்களையும் எரித் ததுமட்டுமன்றி பிரமனது மண்டையோட்டிலே மன மகிழ்ச்சி யுடன் பலியேற்க வந்து எனது சித்தத்தைக் கொள்ளை கொண்ட கள்வன் (யாவனெனில்) புற்றுக்குள் வசித்தலை விரும்புகின்ற பாம்பும், கொன்றை மலரும் நிறைந்து விளங்கும் மார்பில் இடப் பாகத்தில் உமாதேவியாரை வைத்து மகிழ்ந்த இத்திருப்பிரமபுரத் தில் விரும்பியுறையும் பெருமானாகிய இவனே யாம்.

5. ஒரு பாகத்தில் பெண்ணையுடையவன். சடைமுடியான். இடபவாகனத்தில் பவனி வருபவன் இவன் என்று யாவராலும் துதிக்கப்பட அதன்மீது அமர்ந்து எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட கள்வன் (யாவனெனில்) கருமை நிறங்கொண்ட கடலால் ஒரு காலத்திலே உலகெல்லாங்கவரப்பெற்றபொழுது இது ஒரு தோணியாகி மிதந்தது என்னும் பெருமை பெற்ற இத்திருப்பிரம புரத்திலே விரும்பியுறையும் பெருமானாகிய இவனே யாம்.

6. ஸ்வரங்களோடு கூடிய வேதகீதங்களோடு திருக்கூத்தினை யும் உடையவராய் மழுவேந்தி, என் கையிடத்தே கூட்டமாய்ப் பொருந்தியிருக்கின்ற வெள்ளிய ஒளிபடைத்த வளைகள் ஒவ்வொன் றாய்க் கழன்று போமாறு என் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டவன் (யாவனெனில்) இருள் நிறைந்ததும், மணம் மிகுந்ததுமான பொழில்களிடத்தும், நீண்டு உயர்ந்த சோலைகளிடத்தும் ஒளிக் கிரணங்கள் சிந்துமாறு சந்திரன் தவழ்கின்ற இத்திருப்பிரமபுரத் திலே விரும்பியுறைகின்ற பெருமானாகிய இவனே யாம்.

7. சடையிலே கங்கையையுடையவன். கையினில் ஏந்திய தீ உடையவன். அத்தீ வீசி அதனால் அழகு ஏற்பட, உடையிலே கச்சாகப் பொருந்திய பாம்போடு திரிந்து எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்டவன் (யாவனெனில்) கடலோடு கலக்கின்ற உப்பங்கழிகள் சூழ்ந்த குளிர்ச்சியுடைய சோலைகளில் அழகிய பொன்னிறம் பொருந்திய சிறகுகளையுடைய அன்னங்கள் தங்கள் பெடைகளைத் தழுவுகின்ற இத்திருப்பிரமபுரம் மேவிய பெருமா னாகிய இவனே யாகும்.

8. திருக்கயிலாய மலையைப் பெயர்த்தெடுக்க வியர்வை மிகுந்த தோள்களால் வீரத்தன்மையைத் தோற்றுவித்த இராவண னுடைய அவ்வாற்றலையழித்து எனது உள்ளத்தைக் கொள்ளை



திருஞானசம்பந்தர், சீகாழி

கொண்ட கள்வன் (யாவனெனில்) துன்பங்கள் மிக்க இவ்வுலகில் பல ஊழி (பிரளய) வெள்ளங்கள் தோன்றும்போதெல்லாம் ஏனை உலகம் அழியத் தான் அழியாது ஒவ்வொரு பெயருடன் விளங்கப் பெற்ற இத்திருப்பிரமபுரத்தில் விரும்பியுறைகின்ற பெருமானாகிய இவனே யாகும்.

9. திருமாலும், பிரமதேவனும், முறையே திருவடியையும் திருமுடியையும் குறி வைத்துக்கொண்டு இறைவனைக் காணுமாறு பேருரு எடுத்துத் தேடியுங் காணாது அவர்கள் தோல்வியுறச் சோதி யுருவாய் வெளிப்பட்டு நின்றவனாகிய எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட கள்வன் (யாவனெனில்) ஒளி வீசும் நெற்றியையுடைய பெண்களும் மற்றும் உலகத்தவரும் வணங்க அவர்களைக் காத்தருளுகின்ற இத்திருபிரமபுரத்தில் விரும்பிஉறைகின்ற பெருமானாகிய இவனே யாகும்.

10. புத்தரும் அறிவில்லாச் சமணரும் பழித்துரைக்க வேத நன்னெறியில் நில்லாத உலகத்தவர்கள் அப்பழிக் கூற்றுக்கு ஏற்ற வாறு தமக்குத் தோன்றியவற்றைச் சொல்லவும் பிச்சையேற்று எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட கள்வன் (யாவனெனில்) "இது வியப்பாகிய ஓர் மாயம்" என்னும்படியாக மதம் பொருந்திய யானை வருந்த அதன் தோலை உரித்துப் போர்த்துக் கொண்டவரும் பித்தர் போன்றவருமான திருப்பிரமபுரத்தில் மேவியிருக்கிற பெருமானாகிய இவனே யாகும்.

11. அரிய நெறிகளை வகுக்கின்ற வேதங்களில் வல்லவனாகிய பிரமனால் இறைவர் பூசையின் பொருட்டு உண்டாக்கப்பட்ட தாமரை மலர்கள் நிறைந்த விசாலமான பிரமதீர்த்தம் என்னும் தடாகத்தினையுடைய முத்தி நெறியையுடைய திருப்பிரமபுரம் என்னும் இப்பதியில் மேவிய பெருமானாகிய இவனை ஒருமைப்பட்ட மனத்துடன் உணர்ந்த திருஞானசம்பந்தன் பாடிய சிவநெறி காட்டுகின்ற **இத்தமிழ்த்திருப்பதிகம் ஓதவல்லவர்கள் தங்களுடைய பழவினைகளைப் போக்கிக் கொள்ளுதல் எளிய காரியமாகும்.**



# 2. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

## திருமாகறல்

(செங்கற்பட்டு—அரக்கோணம் மார்க்கத்தில் காஞ்சிபுரம் ரயில் நிலையத்திலிருந்து சுமார் 10 மைல்கள். பஸ் வசதிகள் உண்டு. தேசப் படத்தில் 2 என்ற எண்ணுல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

திருவிராகம்—பண் - சாதாரி] [3–ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

விங்குவிளை கழனிமிகு கடைசியர்கள்
பாடல்விளை யாடலரவம்
மங்குலொடு நீள்கொடிகள் மாடமலி
நீடுபொழின் மாகறலுளான்
கொங்குவிரி கொன்றையொடு கங்கைவளர்
திங்களணி செஞ்சடையினன்
**செங்கண்விடை யண்ணலடி சேர்பவர்கள்**
**தீவினைகள் தீருமுடனே.** 1

கலையினொலி மங்கையர்கள் பாடலொலி
யாடல்கவி னெய்தியழகார்
மலையினிகர் மாடமுயர் நீள்கொடிகள்
வீசுமலி மாகறலுளான்
இலையின்மலி வேலுனைய சூலம்வல
னேந்தியெரி புன்சடையினுள்
**அலைகொள்புன லேந்துபெரு மானடியை**
**யேத்தவினை யகலுமிகவே.** 2

காலையொடு துந்துபிகள் சங்குகுழல்
யாழ்முழவு காமருவுசீர்
மாலைவழி பாடுசெய்து மாதவர்கள்
ஏத்திமகிழ் மாகறலுளான்
தோலையுடை பேணியதன் மேலோர்சுடர்
நாகமசை யாவழகிதாப்
**பாலையன நீறுபுனை வானடியை**
**ஏத்தவினை பறையுமுடனே.** 3

இங்குகதிர் முத்தினொடு பொன்மணிகள்
உந்தியெழில் மெய்யுளுடனே
மங்கையரு மைந்தர்களு மன்னுபுன
லாடிமகிழ் மாகறலுளான்

கொங்குவளர் கொன்றைகுளிர் திங்களணி
செஞ்சடையி னனடியையே
**நுங்கள்வினை திரமிக வேத்திவழி**
**பாடுநுக ராவெழுமினே.** 4

துஞ்சுநறு நீலமிரு ணீங்கவொளி
தோன்றுமது வார்கழனிவாய்
மஞ்சுமலி பூம்பொழிலின் மயில்கண்ட
மாடமலி மாகறலுளான்
வஞ்சமத யானையுரி போர்த்துமகிழ்
வானோர்மழு வாளன்வளரும்
**நஞ்சமிருள் கண்டமுடை நாதனடி**
**யாரைநலி யாவினைகளே.** 5

மன்னுமறை யோர்களொடு பல்படிம
மாதவர்கள் கூடியுடனாய்
இன்னவகை யாலினிதி றைஞ்சியிமை
யோரிலெழு மாகறலுளான்
மின்னைவிரி புன்சடையின் மேன்மலர்கள்
கங்கையொடு திங்களெனவே
**உன்னுமவர் தொல்வினைக ளொல்கவுயர்**
**வானுலக மேறலெளிதே.** 6

வெய்யவினை நெறிகள்செல வந்தணையு
மேல்வினைகள் வீட்டலுறுவீர்
மைகொள்விரி கானன்மது வார்கழனி
மாகறலு ளானெழிலதார்
கையகரி கால்வரையின் மேலதுரி
தோலுடைய மேனியழகார்
**ஐயனடி சேர்பவரை யஞ்சியடை**
**யாவினைகள் அகலுமிகவே.** 7

தூசுதுகி லீள்கொடிகள் மேகமொடு
தோய்வனபொன் மாடமிசையே
மாசுபடு செய்கைமிக மாதவர்கள்
ஓதிமலி மாகறலுளான்
பாசுபத விச்சைவரி நச்சரவு
கச்சையுடை பேணியழகார்
**பூசுபொடி யீசனென வேத்தவினை**
**நிற்றலில போகுமுடனே.** 8

*தூயவிரி தாமரைக ணெய்தல்கழு*
*நீர்குவளை தோன்றமதுவுண்*
*பாயவரி வண்டுபல பண்முரலு*
*மோசைபயின் மாகறலுளான்*
*சாயவிர லூன்றியவி ராவணன*
*தன்மைகெட நின்றபெருமான்*
**ஆயபுக ழேத்துமடி யார்கள்வினை**
**ஆயினவு மகல்வதெளிதே.** 9

*காலினல பைங்கழல்க ணீண்முடியின்*
*மேலுணர்வு காமுறவிஞர்*
*மாலுமல ரானுமறி யாமையெரி*
*யாகியுயர் மாகறலுளான்*
*நாலுமெரி தோலுமுரி மாமணிய*
*நாகமொடு கூடியுடனாய்*
**ஆலும்விடை யூர்தியுடை யடிகளடி**
**யாரையடை யாவினைகளே.** 10

*கடைகொணெடு மாடமிக வோங்குகமழ்*
*வீதிமலி காழியவர்கோன்*
*அடையும்வகை யாற்பரவி யரனையடி*
*கூடுசம் பந்தனுரையால்*
*மடைகொள்புன லோடுவயல் கூடுபொழின்*
*மாகறலு ளானடியையே*
**உடையதமிழ் பத்துமுணர் வாரவர்கள்**
**தொல்வினைகள் ஒல்குமுடனே.** 11

*திருச்சிற்றம்பலம்*

*சுவாமி பெயர்* :—**அடைக்கலங்காத்தநாதர்** *தேவி* .—**புவனநாயகி**

**பதிக வரலாறு** :— தொண்டை நாட்டிலுள்ள திருமாகறல் என்னுமித்தலத்தையடைந்த திருஞானசம்பந்தசுவாமிகள் அவ்வூரின் இயற்கை வளங்களைக் கண்டு தலத்தைச் சிறப்பித்து ஒவ்வொரு திருப்பாட்டிலும் வியந்து போற்றியுள்ளார்.

**பொழிப்புரை :**

1. இஞ்சி விளையும் கழனிகளில் வேலை செய்யும் உழத்தியர்களின் பாடலும் ஆடலுமாகிய மிக்க ஒலியையும், மேக மண்டலம் வரை நீண்டுயர்ந்த கொடிகள் உடைய மாடமாளிகைகளையும், நெடிய சோலைகளையும் உடைய திருமாகறல் என்னுந்

தலத்தில் கோயில் கொண்டவனும் மணம் வீசுகின்ற கொன்றை மலரோடு கங்கையையும் வளரும் தன்மையுடைய பிறைச்சந்திரனையுமணிந்த சிவந்த சடையினையுடையவனும், திருமாலாகிய இடப ஊர்தியை உடையவனுமாகிய சிவபெருமானது திருவடியைச் சரணடைவோரது தீவினைகள் உடனே தீரும்.

2. கலைகள் பயிலப்படும் ஒலியுடன் மங்கையர்கள் பாடல், ஆடல் இவற்றின் ஒலி கலந்து அழகெய்தி அழகு பொருந்திய மலைகளை நிகர்த்த மாடங்களில் உயர்ந்து நீண்ட கொடிகள் வீசுகின்ற திருமாகறல் என்னுந்தலத்தில் கோயில் கொண்டவனும், இலை போன்ற வடிவையுடைய கூரிய வேலையும் கூரிய நுனியையுடைய சூலத்தையும் ஏந்தி நெருப்புப் போன்ற சிறு சடையினுள் அலைகள் வீசும் கங்கையைத் தரித்துக்கொண்டிருப்பவனுமாகிய சிவபெருமானுடைய திருவடிகளை ஏத்தத் தீவினைகள் முற்றிலும் நீங்கும்.

3. காலையிலும் மாலையிலும் துந்துபி, சங்கு, குழல், யாழ், மத்தளம் முதலியவற்றுடன் வழிபாடு செய்து மாதவர்கள் ஏத்தி மகிழ்வடையும் திருமாகறல் என்னுந் தலத்தையுடையவனும், தோலை உடையாகக் கொண்டு அதன்மேல் ஒளி பொருந்திய பாம்பைக் கச்சையாகக் கட்டி அழகுடையதாகப் பால் போன்ற வெண்ணீற்றைப் புனைபவனுமாகிய சிவபிரானது திருவடிகளையேத்த வினைகள் யாவும் உடனே நீங்கும்.

4. இஞ்சி முதலிய பொருள்களையும், முத்து, பொன், மணிகள் ஆகியவற்றையும் அடித்துக் கொண்டு வரும் நதியில் ஆண்களும் பெண்களும் நீராடி மகிழும் திருமாகறல் என்னும் தலத்தையுடையவனும், மணம் பெருகுகின்ற கொன்றையையும் குளிர்ச்சிமிக்க திங்களையும் அணிகின்ற செஞ்சடையினையுடையவனுமாகிய சிவபிரானுடைய திருவடிகளையே உங்கள் வினைகள் தீரும்படியாக வழிபாடு செய்யுங்கள்.

5. இதழ் குவியும் நறுமணமுள்ள நீலோத்பலம் இருள் நீங்கியதும் ஒளி காட்டுவதும், தேன் சொரியும் வயல்களின் அருகில், மேகங்கள் வரை உயர்ந்து அவை படிவது போன்ற மலர்ச் சோலைகளில் மயில்கள் நடமாடுவதுமான காட்சிகளை மிகுதியாயுடைய திருமாகறல் என்னுந்தலத்தில் கோயில் கொண்டருளியுள்ளவனும், வஞ்சகத்தையுடைய மதயானையின் தோலைப் போர்த்து மகிழ்பவனும், ஒப்பற்ற ஒரு மழுவாயுதத்தையுடையவனும், மிக்க கருநிறத்தையுடைய நஞ்சினைக் கண்டத்தே வைத்துள்ள நீலகண்டனும் ஆகிய தலைவனுடைய அடியவர்களை வினைகள் துன்புறுத்தா.

6. நிலைபெற்ற புகழுடைய வேதியர்களுடன், பலவிதமான தவவேடங்களையுடைய முனிவர்கள் கூடி, இதுபோன்ற வகையால்

(இங்குத் தாம் வழிபாடு செய்தவகையைத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் குறிப்பிடுகின்றார்போலும்!) இறைவனை இனிது வழி பட்டு வணங்கித் தேவர்களைப்போல் உயர்கின்ற திருமாக்றலைக் கோயிலாகக் கொண்டருளியவனுடைய மின்னல் போல் பிரகாச முடைய சிறு சடையின்மேல் மலர்களும், கங்கையொடு பிறைச் சந்திரனும் கொண்ட உருவத்தைத் தியானஞ் செய்பவர்களது தொல்வினைகள் யாவுந் தொலைந்து உயர்ந்த வானுலகம் ஏறுதலும் எளிதாகும்.

7. கொடிய வினைகள் விட்டு நீங்க, மேல் வருகின்ற வினைகளை யெல்லாம் ஒழிக்கத் தொடங்கும் முயற்சியுடையவர்களே! மேகங் கள் படிந்த சோலைகளினின்றும் பெருக்கெடுக்கும் தேன் வந்து சேரு கின்ற கழனிகளையுடைய திருமாகறலில் கோயில் கொண்டானும், யானையின் உரிக்கப்பட்ட தோலை உடைய அழகு நிறைந்த மேனிய னுமாகிய நம் தலைவனுடைய திருவடிகளைச் சேர்பவரை, அவர்களைச் சேர அஞ்சி வினைகள் அடையா. தொல்வினைகளும் முற்றிலும் அகன்றுபோம்.

8. பொன் மயமான மாடங்களின்மேல் கட்டப்பட்டுள்ள துணிகளால் ஆன நீண்ட கொடிகள் மேகங்களுடன் சென்று படியும் தன்மையுடையதும் மாசுபடு செய்கைகள்அற்ற மாதவர்கள் வேதங் களை ஓதிக்கொண்டு கூட்டமாகத் திகழ்கின்ற பெருமையுடையது மான திருமாகறல் என்னுந்தலத்தைக் கோயிலாக் கொண்டவனு டைய பாசுபதக் கோலத்தில் இச்சையுடன் நீண்ட பாம்பினைக் கச்சாகக் கொண்டு உடுத்தும் உடைக் கோலத்தைத் 'தியானித்து அழகு மிகுந்த வெண்ணீறு பூசும் ஈசன் என்று துதித்தால் நம் முடைய வினைகள் நம்மிடம் நிற்கும் ஆற்றல் இலவாய் உடனே நீங்கிப்போகும்.

9. தூய்மையான மலர்ந்த தாமரை மலர்களும், நெய்தல், கழுநீர், குவளை மலர்களும் மலர அவைகளில் உள்ள மதுவினை உண்கின்ற பரந்த கீற்றுக்களையுடைய பல வண்டுகள் பாடல்களை இசைபாடுகின்ற ஓசை மிகுந்துள்ள திருமாகறலில் எழுந்தருளியிருப் பவனை, வலி சாயும்படி ஒரு திருவிரல் ஊன்றி அதனல் இராவண னது நிலைகுலையும்படி நின்ற பெருமானுடைய புகழ்களையெல்லாம் ஏத்திப் பாடும் அடியார்களது வினைகளாயினவெல்லாம் அகலுவது மிக எளிதாகும்.

10. திருவடிகளையும், திருமுடியையும் அறிவதலில் விருப்பங் கொண்டவர்களாகிய திருமாலும் நான்முகனும் அறியாதவண்ணம் அழற்பிழம்பாய் உயர்ந்து நின்றவனுகிய திருமாகறலில் கோயில் கொண்டவனும், ஒலித்து எரிகின்ற தீயும், உரிக்கப்பட்ட தோலும் பருமணியையுடைய நாகமும் கூடி அசைந்து நடக்கின்ற

இடபவாகனமுமுடைய பெருமானது அடியவர்களை வினைகள் அடையாவாம்.

குறிப்பு: இப்பாடலில் 'நாலுமெரி' என்பதற்கு நெற்றிக் கண், சிரிப்பு, திருமேனி, திருக்கரம் ஆகிய நான்கு இடங்களிலும் எரி (தீ) உடையவன் என்ற ஒரு பொருளும் கிடைக்கிறது.

11. வாயில்களையுடைய மிக உயர்ந்த நீண்ட மாடங்கள் நிரம்பியதும் வாசனை கமழ்வதுமான வீதிகள் மிகுந்த சீகாழிப் பதியினருக்குத் தலைவனை, சிவபெருமானைச் சேரும் வகையால் துதித்துத் திருவடியைச் சார்கின்ற, திருஞானசம்பந்தனுடைய வாக்கினால் பாடப்பட்ட, மடைகளில் நிற்குந் தண்ணீர் ஓடிப் பாய்கின்ற வயல்களும், சோலைகளும் கூடிய திருமாகறலில் கோயில் கொண்டுள்ள பிரானடியிணையையே பொருளாக உள்ள தமிழ்ப் பாசுரங்கள் பத்தினையும் பொருளுடன் உணர்ந்து ஓதுவாருடைய தொல்வினைகளெல்லாம் உடனே தொலைந்து போகும்.

# 3. திருநாவுக்கரசு நாயனார்

## திருவண்ணாமலை

(விழுப்புரம்—காட்பாடி கிளை இருப்புப்பாதையில் திருவண்ணாமலை புகைவண்டி நிலயத்திலிருந்து சுமார் அரை மைலில் ஆலயம் உள்ளது. தேசப்படத்தில் 3 என்ற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

திருக்குறுந்தொகை] [5-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

பட்டி யேறுகந் தேறிப் பலவிலம்
இட்ட மாக விரந்துண் டுழிதரும்
அட்ட மூர்த்தியண் ணாமலை கைதொழக்
**கெட்டுப் போம்வினை கேடில்லை காண்மினே.** 1

பெற்ற மேறுவர் பெய்பலிக் கென்றவர்
சுற்ற மாமிகு தொல்புக ழாளொடும்
அற்றந் தீர்க்குமண் ணாமலை கைதொழ
**நற்ற வத்தொடு ஞானத் திருப்பரே.** 2

பல்லி லோடுகை யேந்திப் பலவிலம்
ஒல்லை சென்றுணங் கல்கவர் வாரவர்
அல்லல் தீர்க்குமண் ணாமலை கைதொழ
**நல்ல வாயின நம்மை யடையுமே.** 3



திருவண்ணாமலை கோபுரம்

பாடிச் சென்று பலிக்கென்று நின்றவர்
ஓடிப் போயினர் செய்வதொன் றென்கொலோ
ஆடிப் பாடியண் ணாமலை கைதொழ
ஓடிப் போகுநம் மேலை வினைகளே. 4

தேடிச் சென்று திருந்தடி யேத்துமின்
நாடி வந்தவர் நம்மையு மாட்கொள்வர்
ஆடிப் பாடியண் ணாமலை கைதொழ
ஓடிப் போநம துள்ள வினைகளே. 5

கட்டி யொக்குங் கரும்பி னிடைத்துணி
வெட்டி வீணைகள் பாடும் விகிர்தனார்
அட்ட மூர்த்தியண் ணாமலை மேவிய
நட்ட மாடியை நண்ண நன் காகுமே. 6

கோணிக் கொண்டையர் வேடமுன் கொண்டவர்
பாணி நட்டங்க ளாடும் பரமனார்
ஆணிப் பொன்னினண் ணாமலை கைதொழப்
பேணி நின்ற பெருவினை போகுமே. 7

கண்டந் தான்கறுத் தான்கால னாருயிர்
பண்டு கால்கொடு பாய்ந்த பரமனார்
அண்டத் தோங்குமண் ணாமலை கைதொழ
விண்டு போகுநம் மேலை வினைகளே. 8

முந்திச் சென்றுமுப் போதும் வணங்குமின்
அந்தி வாயொளி யான்றனண் ணாமலை
சிந்தி யாவெழு வார்வினை தீர்த்திடும்
கந்த மாமலர்ச் சூடுங் கருத்தனே. 9

மறையி னானொடு மாலவன் காண்கிலா
நிறையு நீர்மையு னின்றருள் செய்தவன்
உறையு மாண்பினண் ணாமலை கைதொழப்
பறையு நாஞ்செய்த பாவங்க ளானவே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :— அண்ணாமலையார் தேவி :— உண்ணாமுலையம்மை
அருணாசலேசுவரர்

**பதிக வரலாறு :—** நடுநாட்டிலுள்ள திருவண்ணாமலை என்னும் தலத்தையடைந்த திருநாவுக்கரசு நாயனார் அங்கு எழுந்தருளியுள்ள உண்ணாமுலையம்மையார் சமேத அண்ணாமலைநாதரைப் பாடினார். திருவண்ணாமலை நினைக்க முத்தி தரும் தலம் என்பர்.

இத்திருப்பதிகத்திலுள்ள ஒவ்வொரு திருப்பாட்டிலும் இறைவன் பெருமையையும், தலத்தின் சிறப்பினையும் கூறிய தோடு அமையாமல் ஒவ்வொரு பாட்டினிறுதியிலும், "செய்த பாவம் நீங்கி நன்மைகள் வந்தடையும்" என்று கூறியருளியுள்ள தால் அன்பர்கள் இப்பதிகத்தைப் பக்தி சிரத்தையுடன் படனம் செய்து நற்பயனைப் பெறுவார்களாக.

பொழிப்புரை :

1. பட்டிமாட்டினை வாகனமாக விரும்பி ஏறிப் பல இல்லங்கள் தோறும் விருப்பத்துடன் பிச்சையெடுத்துண்டு அலையும் எட்டு உரு வத்தினனான இறைவனின் வடிவமான அண்ணாமலையைக் கைகளால் தொழுதால் வினைகள் யாவும் கெட்டு ஒழியும். எக்காலத்திலும் கேடு இல்லை. உலகத்தீரே! இதனைக் காண்மின். (பட்டி மாடு - அடங்காத மாடு)

2. இல்லங்களில் இடும் பிச்சையை யேற்க எருதின்மேல் ஏறிச் செல்பவராய பெருமான் தமக்குச் சுற்றமான மிகுந்த பழம் பெருமையுடையவளுமான உமாதேவியுடன் இருந்து தம்மையடை வாரது துயர் தீர்க்கும் திருவண்ணாமலையைக் கைகளால் தொழ நல்ல தவமும் ஞானமும் சித்திக்கும்.

3. பற்கள் இல்லாத தலைமண்டையோட்டினைக் கையில் ஏந்திப், பல இல்லங்கட்கு விரைந்து சென்று அங்கே இடப்படுகின்ற உணவுடன் இடும் பெண்களின் உள்ளங்களையுங்கவர்கின்ற சிவ பெருமானின் அடியார்களுடைய துன்பங்களைத் தீர்க்கின்ற திருவண் ணாமலையைக் கைகளால் தொழ நன்மைகள் எல்லாம் நம்மைத் தாமே வந்தடையும்.

4. பாடிக்கொண்டே சென்று பிச்சைக்கென நின்றவர் (சிவ பெருமான்) ஓடிப்போய்விட்டார். இனிச் செய்வது என்கொலோ? (இது பிச்சையிட வந்த இருடிபத்தினி யொருவள் கூற்று. இவ்வாறு இருடிபத்தினியரின் உள்ளங்கவர்ந்த பெருமானின்) திருவண்ணாமலை யைக் கைகளால் தொழ நம்முடைய தொல்வினைகள் யாவும் தொலைந்து போகும்.

5. தேடிச்சென்று அப்பெருமானின் அழகிய திருவடிகளை ஏத்துங்கள். அப்படிச் செல்லும் நம்மையும் அவன் ஆட்கொண்டு அருள் புரிவான். ஆடியும் பாடியும் திருவண்ணாமலையைக் கைதொழ நமது வினைகள் யாவும் ஓடிப்போகும்.

6. கரும்பினில் கட்டி போன்றவர். வீணை வாத்தியத்தை இயக்கும் முறையில் இயக்கிப்பாடும் விகிர்தன். இப்படிப்பட்ட அட்டமூர்த்தியும் திருவண்ணுமலையில் பொருந்தியிருப்பவருமான நடனமாடும் பிரானைச் சேர்ந்தால் நன்மைகள் உண்டாகும்.

7. கோணலாக முடித்த கொண்டையை உடையவரும், பலப் பல வேடங்கள் பூண்டவரும், தாளத்திற்கியைய நட்டமாடும் பரமனுமாகிய சிவபிரானது ஆணிப்பொன் போன்ற திருவண்ணுமலையைக் கைகளால் தொழ நம்மை விடாது பற்றியிருக்கும் பெரும் வினைகள் எல்லாம் நம்மை விட்டு நீங்கும்.

8. கறுத்த கண்டம் உடையவன். இயமனது ஆருயிர் மீது பண்டு கால்கொண்டு பாய்ந்தவன். எல்லோருக்கும் மேலானவன். அவனுடைய ஆகாயமுற நிமிர்ந்து ஓங்கி நிற்கும் திருவண்ணுமலையைக் கைதொழ நம்முடைய பழைய வினைகள் யாவும் நம்மை விட்டுத் தொலையும்.

9. முந்திச் சென்று முப்போதும் வணங்குங்கள். அந்தி வானின் நிறத்தவனுகிய பெருமானின் அண்ணுமலையைச் சிந்தித்து எழுபவருடைய தீவினைகளையெல்லாம் மணமுள்ள மலர்களைச் சூடும் கருத்தனுகிய சிவபெருமான் தீர்த்தருள் செய்வான். (நினைக்க முத்தி தரும் தலம் திருவண்ணுமலை என்னும் வசனம் இங்குச் சிந்திக்கத் தகுந்தது.)

10. நான்முகனும், திருமாலுங் காணவியலாத தன்மையுடையவனும், எங்கும் நீங்காது நிறைந்து நிற்குந் தன்மையால் யாவர்க்கும் அருள் செய்பவனும் ஆகிய சிவபிரான் விரும்பி எழுந்தருளியிருக்கும் பெருமையினையுடைய திருவண்ணுமலையைக் கைதொழ நாம் செய்த பாவங்கள் யாவும் நம்மைவிட்டு நீங்கும்.



# 4. சுந்தரமூர்த்தி நாயனர்

## திருப்புன்கூர்

(விழுப்புரம்—மாயவரம் இரயில் மார்க்கத்தில் வைத்தீச்சுரன் கோயில் நிலையத்தினின்று மேற்கே சுமார் இரண்டு மைல் சென்ருல் இத் தலத்தை அடையலாம். தேசப்படத்தில் 4 என்ற எண்ணுல் குறிப்பிடப் பட்டிருக்கிறது )

பண் - தக்கேசி] [7-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

அந்த ணாளனுன் அடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரண மாக
வந்த காலன்றன் ஆருயி ரதனை
வவ்வினுய்க் குன்றன் வன்மைகண் டடியேன்
எந்தை நீயெனை நமன்தமர் நலியின்
இவன்மற் றென்னடி யானென விலக்கும்
சிந்தை யால்வந்துன் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானே. 1

வையக முற்றும் மாமழை மறந்து
வயலில் நீரிலை மாநிலந் தருகோம்
உய்யக் கொள்கமற் றெங்களை யென்ன
ஒளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும்
பெய்யு மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப்
பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளும்
செய்கை கண்டுநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானே. 2

ஏத நன்னில மீரறு வேலி
ஏயர் கோனுற்ற இரும்பிணி தவிர்த்துக்
கோத னங்களின் பால்கறந் தாட்டக்
கோல வெண்மணற் சிவன்றன்மேற் சென்ற
தாதை தாளற வெறிந்தசண் டிக்குன்
சடைமி சைமல ரருள்செயக் கண்டு
பூத வாளிநின் பொன்னடி யடைந்தேன்
பூம்பொ ழில்திருப் புன்கூரு ளானே. 3

நற்ற மிழ்வல்ல ஞானசம் பந்தன்
நாவினுக் கரையன் நாளைப்போ வானும்
கற்ற சூதனற் சாக்கியன் சிலந்தி
கண்ணப் பன்கணம் புல்லனென் றிவர்கள்
குற்றஞ் செய்யினும் குணமெனக் கருதும்
கொள்கை கண்டுநின் குரைகழலடைந்தேன்
பொற்றி ரண்மணிக் கமலங்கள் மலரும்
பொய்கை சூழ்திருப் புன்கூரு ளானே. 4

கோல மால்வரை மத்தென நாட்டிக்
கோளர வுசுற்றிக் கடைந்தெ ழுந்த
ஆல நஞ்சுகண் டவர்மிக இரிய
அமரர் கட்கருள் புரிவது கருதி
நீல மார்கடல் விடந்தனை உண்டு
கண்டத் தேவைத்த பித்தநீ செய்த
சீலங் கண்டுநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானே. 5

இயக்கர் கின்னரர் யமனொடு வருணன்
இயங்கு தீவளி ஞாயிறு திங்கள்
மயக்க மில்புலி வானரம் நாகம்
வசுக்கள் வானவர் தானவர் எல்லாம்
அயர்ப்பொன் றின்றிநின் திருவடி யதனை
அர்ச்சித் தார்பெறும் ஆரருள் கண்டு
திகைப்பொன் றின்றிநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானே. 6

போர்த்த நீள்செவி யாளரந் தணர்க்குப்
பொழில்கொ ளானிழற் கீழறம் புரிந்து
பார்த்த னுக்கன்று பாசுபதங்கொடுத்
தருளினைப்பண்டு பகீரதன் வேண்ட
ஆர்த்து வந்திழி யும்புனற் கங்கை
நங்கை யாளைநின் சடைமிசைக் கரந்த
தீர்த்த னேநின்றன் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானே. 7

மூவெ யில்செற்ற ஞான்றுய்ந்த மூவரில்
இருவர் நின்திருக் கோயிலின் வாய்தல்
காவ லாளரென் றேவிய பின்னை
யொருவ நீகரி காடரங் காக
மானை நோக்கியோர் மாநடம் மகிழ
மணிமு ழாமுழக் கவருள் செய்த
தேவ தேவநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானே. 8

அறிவி ளுல்மிக்க அறுவகைச் சமயம்
அவ்வ வர்க்கங்கே ஆரருள் புரிந்து
எறியு மாகடல் இலங்கையர் கோனைத்
துலங்க மால்வரை கீழடர்த் திட்டுக்
குறிகொள் பாடலி னின்னிசை கேட்டுக்
கோல வாளொடு நாளது கொடுத்த
செறிவு கண்டுநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானே. 9

கம்ப மால்களிற் றின்னுரி யானைக்
காமற் காய்ந்ததோர் கண்ணுடை யானைச்
செம்பொ னேயொக்குந் திருவுரு வானைச்
செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானை
உம்ப ராளியை உமையவள் கோனை
ஊரன் வன்றொண்ட னுள்ளத் தாலுகந்
**தன்பி னுற்சொன்ன அருந்தமிழ் ஐந்தோ**
**டைந்தும் வல்லவர் அருவினை யிலரே.** 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**சிவலோகநாதர்** தேவி: —**சொக்கநாயகி**

**பதிக வரலாறு** :—சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஏயர்கோன் கலிக்காம நாயனாரது பிணி தீர்த்தபின் அவருடன் தரிசித்துப் பாடிய திருப்பதிகம் இது. இறைவன் பலர்க்குப் பலவகையிற் செய்த பேரருட் செயல்களை எடுத்தோதிப் புகழ்ந்து அத்தகைய அருளே நம்மையுங் காக்கும் என்ற குறிப்புடன் பாடப்பட்டது. "அருளினை நினைந்தே அந்தணாளன் என்றெடுத்துப் பாடி" என்ற பெரிய புராணமாம் பன்னிரண்டாந் திருமுறை வாக்கும் சிந்தித்தற்குரியது.

**பொழிப்புரை :**

செழுமையான சோலைகள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளியிருப்பவனே! (இதை எல்லாப் பாடல்களின் உரைக்குங் கொள்ளவும்)

1. அந்தணச் சிறுவனாகிய மார்க்கண்டேயன் உன்னைச் சரணடைய அவனைக் காக்கும் நிமித்தமாக அவன்மேல் வந்த காலனுடைய உயிரையபகரித்த உன்னுடைய வல்லமையைக் கண்டு எந்தையாகிய நீ எமதூதர் என்னை வருத்தும்போது "இவன் நம்முடைய அடியவன்" என்று சொல்லி என்னையுங் காப்பாய் என்ற எண்ணத்துடன் உன்னுடைய திருவடிகளைச் சரணமடைந்தேன்.

2. "இவ்வுலகமெல்லாம் மழையின்மையால் வயல்களில் எங்கும் நீரில்லாது போயிற்று. உனக்கு ஏராளமாக நிலந்தருவோம், எங்களைக் காப்பாற்றுமாறு திருவுளங்கொள்க" என வேண்ட எவ்விடத்தும் மேகங்களாகிப் பரவி பெருமழையாகப் பொழியச் செய்து பிறகு அம்மழையினால் ஏற்பட்ட பெருவெள்ளத்தை ஒழித்திட்டு மறுபடியும் பன்னிரண்டு வேலி நிலங் கொண்டருளிய நின் திருவருளைக் கண்டு அடியேனும் உன்னைச் சரணடைந்தேன்.

3. பன்னிரண்டு வேலி நல்ல நிலங் கொடுத்த ஏயர்கோன் கலிக்காம நாயனார் எய்திய கொடுமையான நோயினைப் போக்கியதும், பசுக்கூட்டங்களின் பாலைக் கறந்து வெண் மணலால் செய்த சிவபெருமானின் இலிங்கத் திருவுருவின்மேல் அபிடேகஞ் செய்ய அதைத் தடுத்த தந்தையின் கால் வெட்டுண்டு வீழ எறிந்த சண்டேசுரருக்கு உன் சடைமீது விளங்கும். கொன்றை மாலையைச் சூட்டி யருள்செய்ததைக் கண்டும் பூதப்படையினேய்! உன் பொன்னடிகளைச் சரணடைந்தேன்.

4. நல்ல தமிழ் வல்லோனை திருஞான சம்பந்தன், திருநாவுக்கரசன், திருநாளைப் போவான், சூதன் எனப்படும் மூர்க்கநாயனார், சாக்கிய நாயனார், கோச்செங்கட் சோழர், கண்ணப்பர். கணம்புல்லர் ஆகிய இவர்கள் குற்றஞ்செய்யினும் அதையுங் குணமாகவே கொண்டு அருள் செய்த உன்னுடைய தன்மையைக் கண்டு ஒலிக்கின்ற வீரக்கழல்களணிந்த உனது திருவடிகளைச் சரணமடைந்தேன். (திருஞானசம்பந்தர் முதல் கணம்புல்லர் ஈருக இத்திருப்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ள அருளாளர்கள் 'குற்றம்' செய்ததாகச் சுந்தரர் அருளியது ஒருவகை நயம்பற்றியேயாகும். ஈண்டு விரிக்கிற் பெருகுமாதலால் தக்கோர்பால் கேட்டுணர்க.)

5. அழகிய பெரிய மந்தரமலையை மத்தாக நாட்டி வாசுகியாகிய பாம்பை நாணுகப் பூட்டிக் கடலைக் கடைய அதனால் எழுந்த ஆலாஹல விஷத்தைக் கண்டு தேவரும் அரக்கரும் பயந்து ஓடத் தேவர்கட்கருள் செய்யக் கருதி அந்த நீலநிறம் பொருந்திய விடத்தினையுண்டு அதனைக் கழுத்திலே வைத்த பேரருளாளனே! நீ செய்த இந்தச் சீரிய செய்கையைக் கண்டு அடியேனும் உன்னுடைய திருவடிகளைச் சரணமடைந்தேன்.

6. யக்ஷர்கள், கின்னரர்கள், இயமன், வருணன், அக்னி, வாயு, சூரியன், சந்திரன், புலி, குரங்கு, பாம்பு, எண்மராம் வசுக்கள், தேவர்கள், தானவர்கள், ஆகிய எல்லோரும் சோர்வு சிறிதுமின்றி உன் திருவடிகளையருச்சித்து அதனுற்பெற்ற பெரும்பேறு கண்டு சிறிதுகூடத் தடுமாற்றமில்லாமல் உறுதியுடன் நின் திருவடிகளைச் சரணமடைந்தேன்.

7. கல்லாலின் நிழலில் நால்வர்க்கறமுரைத்தாய்; அருச்சுனனுக்குப் பாசுபதாஸ்திரத்தையருளினாய்! பகீரதன் பிரார்த்திக்க

ஆரவாரித்து வந்திறங்கிய நீருருவாகிய கங்கையாகிய பெண்ணைச் சடைமீது அடக்கிக் கொண்ட பரிசுத்தனே! இத்தகைய உன்னுடைய அருட் செயல்களைக் கண்டு அடியேனும் உன்னுடைய திருவடிகளைச் சரணமடைந்தேன்.

8. மும்மதில்களையெரித்த காலத்தில் உன்னைச் சரணடைந்து பிழைத்த மூவரில் இருவர் நின் திருக்கோயில் வாயில் காப்பாளராக இருக்க அருள் செய்து மற்றொருவனை நீ இடுகாடே அரங்கமாகக் கொண்டு உமாதேவியார் களிக்கும் வண்ணம் ஒப்பற்ற நடனம் ஆடும்போது அழகிய மத்தளம் முழக்கும்படி அருள் புரிந்த தேவ தேவனே! உன்னுடைய திருவடிகளைச் சரணமடைந்தேன்.

9. அறிவிற் சிறந்த அறுவகைச் சமயத்தோருக்கும் அவ்விடத்திலேயே அரிய அருளைச் செய்தும், கடல் சூழ்ந்த இலங்கைக்கு மன்னனாகிய இராவணனை நடுங்கும்படி திருக்கயிலாய மலையின்கீழ் அமுக்கிப் பிறகு உன்னைத் துதித்துப் பாடுகின்ற இனிய பாடலின் இசைக்கு மகிழ்ந்து அவனுக்கு அழகிய வாளும் ஆயுளும் கொடுத்த நின் பேரருளையுங் கண்டு அடியேனும் நின் திருவடிகளைச் சரணமடைந்தேன்.

10. அசையும் மதயானையின் உரித்த தோலையுடையவனே, மன்மதனை எரித்ததாகிய ஒப்பற்ற நெற்றிக்கண்ணை உடையவனே, செம்பொன்னை நிகர்க்கின்ற திருமேனியுடைய செழுமையான சோலைகள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளியுள்ள பெருமானே, தேவர்கட்குள்ளே சிறந்த உமாதேவியாரின் நாயகனே ஊரனாகிய வன்தொண்டன் மனதால் **விரும்பி அன்பினாற் சொன்ன அரிய பத்துப் பாடல்கள் கொண்ட இப்பாமாலையைக் கற்று ஓதவல்லவர் ஒழித்தற்கரியதாகிய வினை யாதும் இல்லாதவராக ஆவார்கள்.**



 சிவமயம் 



# 2
# இடர்கள் நீங்கி இன்பம் பெற



ஓம் முகலிங்கமூர்த்தயே நம:

ஓம் சதாசிவமூர்த்தயே நம:

## 1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### திருநெடுங்களம்

(தற்பொழுது திருநட்டாங்குளம் என்று வழங்கப்படுகிறது. தஞ்சாவூர் — திருச்சிராப்பள்ளி மார்க்கத்தில் தொண்டைமான்பட்டி இரயில் நிலயத்தினின்று தெற்கில் சுமார் 4 மைல் தூரஞ்சென்ருல் இத்தலத்தை அடையலாம். தேசப் படத்தில் 5 என்ற எண்ணுல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

பண் - **பழந்தக்கராகம்]** **[1-ஆம் திருமுறை**

*திருச்சிற்றம்பலம்*

*மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்*
*பிறையுடையாய் பிஞ்ஞகனே யென்றுனைப்பே சினல்லால்*
*குறையுடையார் குற்றமோராய் கொள்கையினல் உயர்ந்த*
**நிறையுடையார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே.** 1

*கனைத்தெழுந்த வெண்டிரைசூழ் கடலிடைநஞ் சுதன்னைத்*
*தினைத்தனையா மிடற்றில்வைத்த திருந்தியதே வநின்னை*
*மனத்தகத்தோர் பாடலாடல் பேணியிராப் பகலும்*
**நினைத்தெழுவார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே.** 2

*நின்னடியே வழிபடுவான் நிமலாநினைக் கருத*
*என்னடியா னுயிரைவவ்வே லென்றடற்கூற் றுதைத்த*
*பொன்னடியே பரவிநாளும் பூவொடுநீர் சுமக்கும்*
**நின்னடியார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே.** 3

*மலைபுரிந்த மன்னவன்றன் மகளையோர்பால் மகிழ்ந்தாய்*
*அலைபுரிந்த கங்கைதங்கும் அவிர்சடையா ரூரா*
*தலைபுரிந்த பலிமகிழ்வாய் தலைவநின்ற ணிழற்கீழ்*
**நிலைபுரிந்தார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே.** 4

*பாங்கினல்லார் படிமஞ்செய்வார் பாரிடமும் பலிசேர்*
*தூங்கிநல்லார் பாடலோடு தொழுகழலே வணங்கித்*
*தாங்கிநில்லா அன்பினோடுந் தலைவநின்ற ணிழற்கீழ்*
**நீங்கிநில்லார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே.** 5

*விருத்தனாகிப் பாலனாகி வேதமோர்நான் குணர்ந்து*
*கருத்தனாகிக் கங்கையாளைக் கமழ்சடைமேற் கரந்தாய்*
*அருத்தனாய வாதிதேவ னடியிணையே பரவும்*
**நிருத்தர்கீதர் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே.** 6

*கூறுகொண்டாய் மூன்றுமொன்றாக் கூட்டியோர்வெங் கணையால்*
*மாறுகொண்டார் புரமெரித்த மன்னவனே கொடிமேல்*
*ஏறுகொண்டாய் சாந்தமீதென் றெம்பெருமா னணிந்த*
**நீறுகொண்டார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே.** 7

*குன்றினுச்சி மேல்விளங்கும் கொடிமதில்சூ ழிலங்கை*
*அன்றிநின்ற வரக்கர்கோனை யருவரைக்கீ ழடர்த்தாய்*
*என்றுநல்ல வாய்மொழியா லேத்தியிராப் பகலும்*
**நின்றுநைவார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே.** 8

*வேழவெண்கொம் பொசித்தமாலும் விளங்கியநான் முகனும்*
*சூழவெங்கும் நேடவாங்கோர் சோதியுளா கிநின்றாய்*
*கேழல்வெண்கொம் பணிந்தபெம்மான் கேடிலாப்பொன் னடியின்*
**நீழல்வாழ்வார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே.** 9

*வெஞ்சொற்றஞ்சொல் லாக்கிநின்ற வேடமிலாச் சமணும்*
*தஞ்சமில்லாச் சாக்கியருந் தத்துவமொன் றறியார்*
*துஞ்சலில்லா வாய்மொழியால் தோத்திரநின் னடியே*
**நெஞ்சில்வைப்பார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே.** 10

*நீடவல்ல வார்சடையான் மேயநெடுங் களத்தைச்*
*சேடர் வாழும் மாமறுகிற் சிரபுரக்கோன் நலத்தால்*
*நாடவல்ல பனுவன்மாலை ஞானசம்பந்தன் சொன்ன*
**பாடல்பத்தும் பாடவல்லார் பாவம்ப றையுமே.** 11

*திருச்சிற்றம்பலம்*

**சுவாமி** *பெயர்* :—**நித்யசுந்தரர்** *தேவி* :—**ஒப்பிலா நாயகி**

**பதிக வரலாறு :—** திருப்பாற்றுறை, திருவெறும்பியூர்த் திருமலை முதலிய தலங்களை வணங்கிய திருஞானசம்பந்தப் பெருமான் திருநெடுங்களத்தையடைந்து இறைவனையன்பால் "நின்பால் நேசம் செலாவகைத் தடுக்கும் இடும்பை தீர்த்தருள்வாய்" என்னுமிப் பதிகத்தைப் பாடியருளினர். ஒவ்வொரு திருப்பாடலிலும் 'இடர் களையாய்' என்ற குறிப்பு வந்துள்ளது கவனிக்கத்தக்கது. இது பற்றியே இடர்களையுந் திருப்பதிகமாகப் பெரியோர்களால் கொள்ளப்படுவது.

பொழிப்புரை :

1. வேதங்களையுடையவனே! தோலை உடையாகக் கொண்டவனே! நீண்ட சடையின்மேல் வளர்கின்ற பிறைச் சந்திரனையுடையவனே! தலைக்கோலமுடையவனே! என்று சொல்லி உன்னைத் துதித்தாலன்றிக் குறையுடையார்களுடைய குறைகளுக்குக் காரணமான குற்றங்களை ஆராயாத பெருமானே! திருநெடுங்களத்தினை விரும்பிக் கோயில் கொண்டுள்ளவனே! ஒழுக்கத்தினல் உயர்ந்த பெரியோர்களின் இடர்களை நீக்கி அருள்புரிவாயாக.

2. ஆரவாரத்தோடு தோன்றிய, வெண்மையான அலைகள் சூழ்ந்த கடலிடையுண்டான நஞ்சினை மிகச் சிறிய அளவாகக் கழுத்தினில் வைத்த பெருமையுடைய தேவனே! உன்னை மனத்தில் நினைத்து பாடல்களும் ஆடல்களும் கொண்டு இரவும் பகலும் போற்றுபவர்களின் இடர்களைக் களைந்து அருள்வாயாக. திருநெடுங்களத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ள பெருமானே.

3. திருநெடுங்களத்திலே விரும்பிக் கோயில் கொண்டுள்ளவனே! குற்றமற்றவனே! உன்னுடைய திருவடியையே வழிபடுபவனாகிய மார்க்கண்டேயன் உன்னைத் துதிக்க "இவன் என்னுடைய அடியவன், இவன் உயிரைக் கவரேல்" என்று அடர்த்து வந்த கூற்றினை உதைத்த உன்னுடைய பொன்னடிகளையே போற்றி நாள்தோறும் உன்னை வழிபடுவதற்காகப் பூவும் நீரும் சுமக்கின்ற உன் அடியார்களின் இடர்களைக் களைந்து அருள் செய்வாயாக.

4. திருநெடுங்களத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ளவனே! மலையரசனின் மகளாகிய பார்வதி தேவியை ஒரு பாகத்தில் கொண்டு மகிழ்ந்தவனே! அலைகள் வீசும் கங்கை நதியானது தங்குகின்ற சடையையுடைய திருவாரூர்ப் பெருமானே! பிரம கபாலத்தில் பிச்சையேற்று மகிழ்பவனே! எல்லோர்க்கும் தலைவனே! நின்னுடைய திருவடி நிழற்கீழ் உறுதியுடன் நிற்பாரது இடர்களைக் களைந்து அருள்புரிவாயாக.

5. திருநெடுங்களத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ள பெருமானே! யாவர்க்குந் தலைவனே! அடிமைப் பண்பு மிக்கவர்களும் தெய்வ வழிபாடு செய்பவர்களும், தவக்கோலங்கொண்ட

வர்களும் ஒன்றின மனதுடன் பாடலோடு உன்னுடைய திருவடியை வணங்கித் தாங்கமுடியாமல் கரை கடந்து பெருகுகின்ற அன்புடன் உன்னுடைய திருவடி நீழலை நீங்காது உன்னை வழிபடுகின்ற பக்தர்களின் துன்பங்களை நீக்கி அருள்புரிவாயாக.

6. திருநெடுங்களத்தினை விரும்பிக் கோயில் கொண்டுள்ளவனே! கிழவனாகி, பாலனாகி, மறைகள் நான்குணர்ந்து அவைகளின் கருத்தாகவும் ஆகிக் கங்கையைச் சடையில் மறைத்தவனே! பரம் பொருளாகிய ஆதிதேவனே! நின் திருவடிகள் இரண்டையும் வழி படுகின்ற ஆடல் பாடல் உடைய அடியார்களின் இடர்களைக் களைந்து அருள்வாயாக.

7. திருநெடுங்களத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ள பிரானே! மாது ஒரு பாகம் உடையவனே, பகைவர்களுடைய புரங்கள் மூன்றையும் திருமால், அக்னி, வாயு என்ற மூன்றையுங் கூட்டிய ஓர் கொடிய கணையினால் எரித்த பெரியோனே! கொடியின் மேல் எருதினையுடையவனே! எம்பெருமானாகிய நீ அணிந்த திருநீற்றினைப் பூசிக்கொள்ளத்தக்க சந்தனம் இதுவேயென்று கொண்டிருப்பவர்களாகிய அடியார்களின் இடர்களைக் களைந்து அருள் புரிவாயாக.

8. திருநெடுங்களத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ள பிரானே! மலையின் உச்சியின் மேல் விளங்கும் கொடிகளையுடைய மதில்களால் சூழப்பட்ட இலங்கையில் மாறுபட்டு நின்ற அரக்கர்களுக்கரசனாகிய இராவணனை மலையின் கீழ் நசுங்கும்படி மிதித்தவனே! என்று நல்ல வாசகங்களால் துதித்து இரவும் பகலும் வணங்கி நின்று உள்ளம் உருகுபவர்களாகிய அடியவர்களின் இடர்களைக் களைந்து அருள் செய்வாயாக.

9. திருநெடுங்களத்தினை விரும்பிக் கோயில் கொண்டுள்ள பெருமானே! குவலயாபீடம் என்னும் யானையின்தந்தத்தை முறித்த திருமாலும், பிரமனும் எல்லாவிடங்களிலும் தேடி உன்னைக் காணாது வருந்தும்படி அங்கே ஒரு சோதி வடிவாக நின்றவனே! பன்றியின் வெண்கொம்பணிந்த பெருமானே! எஞ்ஞான்றுமழி வில்லாத நின் பொன்னடியின் நீழலைப் பற்றுகக்கொண்டு வாழ்ந்து வருகின்ற அடியார்களின் இடர்களை நீக்கியருள்புரிவாயாக.

10. திருநெடுங்களத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ள பரமனே! கொடுஞ்சொற்களையே தம் வாய்மொழிகளாகக் கொண்டுள்ள தவவேடம் இல்லாத சமணர்களும் நல்ல கொள்கையைத் தமக்கு ஆதாரமாக இல்லாத புத்தர்களும் மெய்ப்பொருள் ஒன்றையுமறியமாட்டார்கள். அழிவில்லாத உண்மையான வாசகங்களால் அமைந்த தோத்திரங்களால் நின் திருவடிகளையே தங்கள் நெஞ்சில் வைத்து வழிபடுகின்ற அடியவர்களின் இடர்களைக் களைந்து அருள் புரிவாயாக.

11. நீண்ட, வளர்கின்ற சடையையுடைய சிவபெருமான் விரும்பிக் கோயில் கொண்டுள்ள திருநெடுங்களம் என்னும் தலத்தை அறிவிற் சிறந்தவர்கள் வாழுகின்ற பெரிய வீதிகளையுடைய சீகாழித் தலைவன் ஞானசம்பந்தன் கூறிய பொருள் சிறப்பால் எல்லோராலும் நாடவல்ல இப்பனுவல் மாலையாகிய **இப்பத்துப் பாடல்களையும் பாடவல்லவர்களின் பாவங்கள் தொலைந்து போகும் என்பது உறுதி.**

## 2. நமச்சிவாயத் திருப்பதிகம்
## சுந்தரமூர்த்தி நாயனர்

### திருப்பாண்டிக்கொடுமுடி

*(கொடுமுடி என்ற பெயராலேயே தற்பொழுது வழங்கப்படுகிறது. திருச்சி - ஈரோடு மார்க்கத்தில் உள்ளது. இரயில் நிலையத்திலிருந்து சுமார் இரண்டு பர்லாங் சென்ருல் ஆலயத்தை அடையலாம். தேசப் படத்தில் 6 என்கிற எண்ணல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)*

பண் - பழம்பஞ்சுரம்] **[7–ஆம் திருமுறை**

*திருச்சிற்றம்பலம்*

*மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப்*
*பாத மேமனம் பாவித்தேன்*
*பெற்ற லும்பிறந் தேன்இனிப்பிற*
*வாத தன்மைவந் தெய்தினேன்*
*கற்றவர் தொழு தேத்துஞ் சீர்க்கறை*
*யூரிற் பாண்டிக் கொடுமுடி*
*நற்றவா உனை நான்ம றக்கினும்*
*சொல்லும் நாநமச்சி வாயவே.* 1

*இட்ட னும்மடி ஏத்து வார்இகழ்ந்*
*திட்ட நாள்மறந் திட்டநாள்*
*கெட்டநாள்இவை என்ற லாற்கரு*
*தேன்கி ளர்புனற் காவிரி*
*வட்ட வாசிகை கொண்ட டிதொழு*
*தேத்து பாண்டிக் கொடுமுடி*
*நட்ட வாஉனை நான்ம றக்கினும்*
*சொல்லும் நாநமச்சி வாயவே.* 2

*ஓவு நாள்உணர் வழியும் நாள்உயிர்*
*போகும் நாள்உயர் பாடைமேல்*
*காவும் நாள்இவை என்ற லாற்கரு*
*தேன்கி ளர்புனற் காவிரிப்*

பாவு தண்புனல் வந்தி ழிபரஞ்
சோதி பாண்டிக் கொடுமுடி
நாவ லாஉனை நான்ம றக்கினும்
சொல்லும் நாநமச்சி வாயவே. 3

எல்லை யில்புகழ் எம்பி ரான் எந்தை
தம்பி ரான்என்பொன் மாமணி
கல்லை உந்தி வளம்பொ ழிந்திழி
காவிரி யதன் வாய்க்கரை
நல்ல வர்தொழு தேத்துஞ் சீர்க்கறை
யூரிற் பாண்டிக் கொடுமுடி
வல்ல வாஉனை நான்ம றக்கினும்
சொல்லும் நாநமச்சி வாயவே. 4

அஞ்சி ஞர்க்கரண் ஆதி என்றடி
யேனும் நான்மிக அஞ்சினேன்
அஞ்சல் என்றடித் தொண்ட னேற்கருள்
நல்கி னுய்க்கழி கின்றதென்
பஞ்சின் மெல்லடிப் பாவை மார்குடைந்
தாடு பாண்டிக் கொடுமுடி
நஞ்ச ணிகண்ட நான்ம றக்கினும்
சொல்லும் நாநமச்சி வாயவே. 5

ஏடு வான்இளந் திங்கள் சூடினை
என்பின் கொல்புலித் தோலின்மேல்
ஆடு பாம்பத ரைக்க சைத்த
அழக னேஅந்தண் காவிரிப்
பாடு தண்புனல் வந்தி ழிபரஞ்
சோதி பாண்டிக் கொடுமுடிச்
சேட னேஉனை நான்மறக்கினும்
சொல்லும் நாநமச்சி வாயவே. 6

விரும்பி நின்மலர்ப் பாத மேநினைந்
தேன்வி னைகளும் விண்டனன்
நெருங்கி வண்பொழில் சூழ்ந்தெ ழில்பெற
நின்ற காவிரிக் கோட்டிடைக்
குரும்பை மென்முலைக் கோதை மார்குடைந்
தாடு பாண்டிக் கொடுமுடி
விரும்பனே உனை நான்ம றக்கினும்
சொல்லும் நாநமச்சி வாயவே. 7

செம்பொ னேர்சடை யாய்தி ரிபுரம்
 தீயெ ழச்சிலை கோலினாய்
வம்பு லாங்குழ லாளைப் பாகம்
 அமர்ந்து காவிரிக் கோட்டிடைக்
கொம்பின் மேற்குயில் கூவ மாமயில்
 ஆடு பாண்டிக் கொடுமுடி
நம்ப னேஉனை நான்ம றக்கினும்
 சொல்லும் நாநமச்சி வாயவே. 8

சார ணன்தந்தை எம்பி ரான் எந்தை
 தம்பி ரான்எம்பொன் மாமணியென்று
பேரெ ணாயிர கோடி தேவர்
 பிதற்றி நின்று பிரிகிலார்
நார ணன்பிர மன்தொ ழுங்கறை
 யூரிற் பாண்டிக் கொடுமுடிக்
கார ணாஉனை நான்ம றக்கினும்
 சொல்லும் நாநமச்சி வாயவே. 9

கோணி யபிறை சூடி யைக்கறை
 யூரிற் பாண்டிக் கொடுமுடி
பேணி யபெரு மானைப் பிஞ்ஞகப்
 பித்த னைப்பிறப் பில்லியைப்
பாணு லாவரி வண்ட றைகொன்றைத்
 தார னைப்படப் பாம்பரை
**நாண னைத்தொண்டன் ஊரன் சொல்இவை**
 **சொல்லு வார்க்கில்லைத் துன்பமே.** 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**கொடுமுடிநாதர்** தேவி :—**பண்மொழி அம்மை**

**பதிக வரலாறு** :—சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருஈங்கோய்மலை முதலிய பல பதிகளை வணங்கிக்கொண்டு கொங்குநாட்டுத் தலமாகிய திருப்பாண்டிக்கொடுமுடி வந்து சேர்ந்து அங்குப் பெருமானை வணங்கியபொழுது வேட்கை பெருகத் தொழுது இப்பெருமானை என்றும் மறக்கவொண்ணாது என்ற மெய்க் குறிப்புடன் "அண்ணலார் அடிகள் மறக்கினும் நாம அஞ்செழுத்து அறிய எப்பொழுதும் எண்ணிய நாவே இன்சுவை பெருக இடையறாதியம்பும்" என்று இதனை இத்திருப்பதிகத்தில் அமைத்துப் பாடினார். உலகெலாம் உய்ய உரைத்த உறுதியாம் இத்திருப்பதிகம் நமச்சிவாயத் திருப்பதிகம் எனப் பெயர் பெற்றுப் பாடுவாரது துன்பம் தீர்க்கும்

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளாலேயே பலனும் சொல்லப் பட்டது.

**பொழிப்புரை :**

1. வேறு ஆதரவு ஏதுமில்லாமல் உனது திருப்பாதங்களையே என் மனதில் நினைத்தேன். அப்படி நினைக்கப் பெறுதலும் உண்மை யில் பிறந்தவன் ஆயினேன். இனி மீண்டும் வந்து பிறவாத தன் மையை உடையவனும் ஆயினேன். கற்றோர்கள் தொழுகின்ற சிறப்பையுடைய கறையூரில் திருப்பாண்டிக்கொடுமுடியில் எழுந்த ருளியிருக்கும் நல்ல தவத்தினால் அடையப்படும் நாதனே! நான் உன்னை மறந்தாலும் என்னுடைய நாவானது '**நமச்சிவாய**' என்னும் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டிருக்கும். (கறையூர் என்பது ஊரின் பெயர். திருப்பாண்டிக்கொடுமுடி ஆலயத்தின் பெயர். பின் இப் பெயர்கள் வரும் இடங்களிலும் இவ்வாறே கொள்க).

2. உயிர்களுக்கெல்லாம் நல்லவனாகிய உனது திருவடியைத் துதிப்பாடல் என்னை இகழ்ந்திட்ட நாட்களும் உன்னை நான் மறந் திட்ட நாட்களும் ஆகிய இந்த நாட்களை கெட்டவைகள் அன்றி நல்ல நாட்களாக நான் நினைக்கமாட்டேன். பெருகுகின்ற நீரை யுடைய காவிரியானது பூமாலைகளைக்கொண்டு உன் திருவடியை வணங்கித் துதிக்கின்ற திருப்பாண்டிக்கொடுமுடியில் எழுந்தருளி யிருக்கும் நடனமாடும் பெருமானே, உன்னை நான் மறந்தாலும் என்னுடைய நாவானது '**நமச்சிவாய**' என்னும் மந்திரத்தை உச் சரித்துக் கொண்டிருக்கும்.

3. உன்னைவிட்டு என்நினைவு நீங்கும் நாட்களை அறிவு கெடுகிற நாட்கள், உயிர் நீங்குகிற நாட்கள், உயர்ந்த பாடையின் மீதேற்றி சுமக்கும் நாட்கள் என்று கருதுவதன்றி வேறு நல்லவிதமாக நினைக்க மாட்டேன். விளங்குகின்ற நீரையுடைய காவிரியாற்றின் பரவிப் பாய்கின்ற குளிர்ந்த நீர் வந்து இறங்குகின்ற திருப்பாண்டிக்கொடு முடியில் எழுந்தருளியிருக்கும் நாவலனே! உன்னை நான் மறந்தா லும் என்னுடைய நாவானது **நமச்சிவாய** என்னும் 'மந்திரத்தை உச்சரித்துக் கொண்டிருக்கும்.

4. எல்லையிலாத புகழுடைய எமது பிரானே, எமது தந்தையே! எல்லோர்க்கும் தலைவனே, என்னுடைய பொன்னே, என் மாணிக்கமே, கற்களை உந்தித்தள்ளி நல்ல வளங்களைக் கொழித்து வருகிற காவிரியாற்றங்கரையில் திருக்கறையூரில் திருப் பாண்டிக்கொடுமுடியில் எழுந்தருளியிருக்கின்ற எல்லாம் வல்ல பெருமானே! உன்னை நான் மறந்தாலும் என் நாவானது '**நமச் சிவாய**' என்னும் மந்திரத்தை உச்சரித்துக் கொண்டிருக்கும்.

5. அச்சமுற்று அடைக்கலம் புகுந்தவர்களுக்கு நீ காவலாக இருக்கிறாய் என்றறிந்து அடியேனாகிய நானும் மிகவும் அஞ்சி

உன்னை அடைந்தேன். அவ்வாறு அடைந்த அடித்தொண்டனாகிய எனக்கும் அருள் நல்கின உனக்கு இதனால் ஏற்பட்ட நஷ்டம் என்ன? (ஒன்றுமில்லை என்றவாறு) பஞ்சைக் காட்டிலும் மிருது வான பாதங்களையுடைய மாதர்கள் குடைந்து நீராடுகின்ற திருப் பாண்டிக்கொடுமுடியில் எழுந்தருளியிருக்கும் விடமுண்ட கண் டனே! உன்னை நான் மறந்தாலும் என் நாவானது '**நமச்சிவாய**' என்னும் மந்திரத்தை உச்சரித்துக் கொண்டிருக்கும்.

6. மலரிதழ்போன்ற இளம்பிறைச்சந்திரனை தலையில் அணிந்து கொண்டாய். எலும்பு, கொல்லும் தொழிலையுடைய புலித்தோல், அதன்மீது அரைக் கச்சாக ஆடுகின்ற பாம்பை அணிந்த அழகனே! அழகிய குளிர்ந்த நீரையுடைய காவிரியின் பக்கத்தில் குளிர்ந்த நீர் வந்து இறங்குகின்ற மேலான ஒளியையுடைய திருப்பாண்டிக்கொடு முடியில் எழுந்தருளியிருக்கும் நித்தியமானவனே! உன்னை நான் மறந்தாலும் என் நாவானது '**நமச்சிவாய**' என்னும் மந்திரத்தை உச்சரித்துக் கொண்டிருக்கும்.

7. உன்னுடைய தாமரைமலர் போன்ற திருவடியையே நான் விரும்பித் தியானித்தேன். அதனால் என் வினைகளெல்லாம் நீங்கப் பெற்றேன். நெருக்கமாக வளம் மிகுந்த சோலைகள் சூழ்ந்து அழகு பெற நிற்கும் காவிரியின் கரையில் குரும்பை போன்ற மென் மையான தனங்களையுடைய பெண்கள் குடைந்து நீராடுகின்ற திருப்பாண்டிக்கொடுமுடியில் எழுந்தருளியிருக்கும் யாவராலும் விரும்பப்படும் பிரானே! உன்னை நான் மறந்தாலும் என் நாவானது '**நமச்சிவாய**' என்னும் மந்திரத்தைச் சதா உச்சரித்துக் கொண்டிருக்கும்.

8. சிவந்த ஒளியுள்ள பொன்னைப் போன்ற சடையையுடைய வனே! முப்புரங்களும் தீப்பற்றியெரியும்படி வில்லினை வளைத் தவனே! மணம் கமழ்கின்ற கூந்தலையுடைய உமாதேவியாரைப் பாகத்தில் இருத்திக்கொண்டு, காவிரிக்கரையில் மரங்களில் குயில் கள் கூவ மயில்கள் ஆடுகின்ற திருப்பாண்டிக்கொடுமுடியில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானே! உன்னை நான் மறந்தாலும் என் நாவானது '**நமச்சிவாய**' என்னும் மந்திரத்தை உச்சரித்துக் கொண்டிருக்கும்.

9. கோடிக்கணக்கான தேவர்கள் உன்னைத் தங்களுக்குச் சரண் அளிப்பவன், தந்தை, தலைவன், எம்தந்தைக்கும் தந்தை, எமக்குப் பொன், மணியொப்பவன் என்று புகழ்ந்து உனது திருநாமங்களை யெல்லாம் பிதற்றி நின்று உன்னை நீங்காது இருக்கின்றனர். விஷ்ணுவும், பிரமதேவனும் வணங்குகின்ற திருக்கறையூரில் திருப் பாண்டிக்கொடுமுடியில் எழுந்தருளியிருக்கும் எல்லாவற்றிற்கும் காரணனே! உன்னை நான் மறந்தாலும் என்னுடைய நாவானது '**நமச்சிவாய**' என்னும் மந்திரத்தை உச்சரித்துக் கொண்டிருக்கும்.



அப்பர் (உற்சவர்), திருப்புகலூர்

10. வளைந்த உருவமுடைய பிறைச்சந்திரனைத் தரித்த பெருமானை, திருக்கறையூரில் பாண்டிக்கொடுமுடியை விரும்பி எழுந்தருளியிருக்கும் பெருமானை, தலைக்கோலமுடைய பித்தனை, பிறவியில்லாதவனை, இசையோடு சஞ்சரிக்கின்ற வண்டுகள் சூழ்ந்து ஒலிக்கின்ற கொன்றை மாலையை அணிந்தவனை, படத்தையுடைய பாம்பினை அரைஞாணாக உடையவனை, தொண்டனாகிய ஆரூரன் துதித்துப் பாடிய இப்பாடல்களைப் பாடுவார்களுக்கு துன்பங்கள் இல்லையாம்.

## 3. காலபாசத் திருக்குறுந்தொகை
## திருநாவுக்கரசு நாயனர்

[5–ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

கண்டு கொள்ளரி யானைக் கனிவித்துப்
பண்டு நான்செய்த பாழிமை கேட்டிரேல்
கொண்ட பாணி கொடுகொட்டி தாளங்கைக்
கொண்ட தொண்டரைத் துன்னிலுஞ் சூழலே. 1

நடுக்கத் துள்ளும் நகையுளும் நம்பர்க்குக்
கடுக்கக் கல்ல வடமிடு வார்கட்குக்
கொடுக்கக் கொள்க எனவுரைப் பார்களை
இடுக்கண் செய்யப் பெறீரிங்கு நீங்குமே. 2

கார்கொள் கொன்றைக் கடிமலர்க் கண்ணியான்
சீர்கொள் நாமஞ் சிவனென் றரற்றுவார்
ஆர்க ளாகிலு மாக அவர்களை
நீர்கள் சாரப் பெறீரிங்கு நீங்குமே. 3

சாற்றி னேன்சடை நீண்முடிச் சங்கரன்
சீற்றங் காமன்கண் வைத்தவன் சேவடி
ஆற்ற வுங்களி பட்ட மனத்தராய்ப்
போற்றி யென்றுரைப் பார்புடை போகலே. 4

இறையென் சொல்மற வேல்நமன் தூதுவீர்
பிறையும் பாம்பு முடைப்பெரு மான்தமர்
நறவம் நாறிய நல்நறுஞ் சாந்திலும்
நிறைய நீறணி வாரெதிர் செல்லலே. 5

வாம தேவன் வளநகர் வைகலும்
காம மொன்றில ராய்க்கை விளக்கொடு
தாமம் தூபமும் தண்நறுஞ் சாந்தமும்
ஏம மும்புனை வாரெதிர் செல்லலே. 6

படையும் பாசமும் பற்றிய கையனீர்
அடையன் மின்நம தீசன் அடியரை
விடைகொ ளூர்தியி னான்அடி யார்குழாம்
புடைபு காதுநீர் போற்றியே போமினே. 7

விச்சை யாவதும் வேட்கைமை யாவதும்
நிச்சல் நீறணி வாரை நினைப்பதே
அச்ச மெய்தி அருகணை யாதுநீர்
பிச்சை புக்கவன் அன்பரைப் பேணுமே. 8

இன்னங் கேண்மின் இளம்பிறை சூடிய
மன்னன் பாதம் மனத்துட னேத்துவார்
மன்னும் அஞ்செழுத் தாகிய மந்திரம்
தன்னி லொன்றுவல் லாரையுஞ் சாரலே. 9

மற்றுங் கேண்மின் மனப்பரிப் பொன்றின்றிச்
சுற்றும் பூசிய நீற்றொடு கோவணம்
ஒற்றை யேறுடை யானடி யேஅலால்
பற்றொன் றில்லிகள் மேற்படை போகலே. 10

அரக்கன் ஈரைந் தலையுமோர் தாளினால்
நெருக்கி யூன்றியிட் டான்தமர் நிற்கிலும்
சுருக்கெ னாதங்குப் பேர்மின்கண் மற்றுநீர்
சுருக்கெ னிற்சுட ரான்கழல் சூடுமே. 11

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு:**—திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பூந்துருத்தியில் "திங்களும் ஞாயிறும் தோயுந் திருமட"மொன்று அமைத்து அதில் தங்கித் திருத்தொண்டு செய்து வந்த காலத்தில் பாடியருளிய அளவில்லாத தொகைப் பதிகங்களில் இது ஒன்று. சிவனடியார் பக்கஞ் செல்லாதீர் என்று இயமன் தூதுவருக்கு ஆணையிட்டது. இப் பதிகப் பாராயணம் எவ்வித சங்கடங்களையும் நீக்கவல்லது. சில பிரதிகளில் இது காலபாராயணத் திருக்குறுந்தொகை என்றே காணப்படுகிறது. (திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் திருநாவுக்கரசர் புராண உரை - பதிகக் குறிப்பு).

பொழிப்புரை :

இயமதுதர்களே! (இதனை எல்லாப் பாடல்களின் உரைக்கும் கொள்க).

1. கண்டுகொள்ள அரியவனை உள்ளத்தைக் கனியச் செய்து முன்பு நான் செய்த அடிமைத் திறத்தினைக் கேட்பீர்களேயானால் இறைவன் புகழைப் பாடுவதும் அதற்கேற்பத் தாளங்கள், பக்க வாத்தியங்கள் இவைகளைக் கைகளில் கொண்டவர்களுமாக உள்ள தொண்டர்களைச் சூழாதீர்கள்.

2. நடுங்கவைக்குந்தன்மையான இடர்கள் வந்த காலத்தும், பிறர் நகைக்குந்தன்மையான இழிந்த நிலையிலும் கூட இறைவனுக்கு அன்புடன் பணி செய்யவல்லவர்கட்கும், நல்ல மணிமாலைகளைச் சாத்துபவர்களுக்கும், இறைவனுக்கும் ஆகுக என்று கொடுப்பவர்களையும், அவன் பொருட்டுக் கொள்க என்பவர்களையும் துன்பஞ் செய்யாதீர்கள். இங்கு நின்றும் நீங்கிப் போங்கள்.

3. கார்காலத்தில் மலரும் தன்மையதான கொன்றையின் மணம்பொருந்திய மலர்களாலான மாலையைச் சூடியவனுடைய பெருமை மிக்க நாமமாகிய சிவன் என்று இடைவிடாது உச்சரிப்போர்கள் யாவராக ஆயினும் ஆகுக. அவர்களிடம் நீங்கள் அணுகாதீர்கள், விலகிப்போங்கள்.

4. நீண்ட சடை முடியையுடைய சங்கரனும், சீற்றங்கொண்டு காமனைக் கண்ணால் எரித்தவனுமாகிய சிவபெருமானின் சேவடியை மிகவும் களிப்புடைய மனத்தினராய்ப் "போற்றி" என்று உரைப்பவர்கள் பக்கமும் செல்லாதீர்கள். இதை நான் உங்கட்குச் சொன்னேன்.

5. இயம தூதுவர்களே! இன்று நான் கூறும் வார்த்தைகளைச் சிறிதுகூட மறவாதீர்கள். பிறைச் சந்திரனையும், பாம்பினையும் அணிகலன்களாக உடையானாகிய பரமனின் அடியார்களாகிய இனிய நறுமணம் வீசுஞ் சந்தனத்தைப் பூசாது நிறைய் வெண்ணீற்றையே பூசுபவர்கள் எதிரிலும் நீங்கள் செல்லக்கூடாது.

6. வாமதேவனாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில்களில் சிவபெருமான் திருவடிகளின்மீதன்றி வேறு எதிலுஞ் செல்லாத விருப்புடையராய் தீபம், மாலை, தூபம், குளிர்ந்த மணமுள்ள சந்தனம், திருநீறு இவைகளால் வழிபடுவாரது எதிரிலும் நீங்கள் செல்லாதீர்கள்.

7. படை, பாசம் இவற்றையேந்திய கைகளுடைய யமதூதர்காள்! நமது ஈசன் அடியாரை நீங்கள் அணுகாதீர்கள். இடபத்தை வாகனமாகக் கொண்ட பெருமானுடைய அடியார் குழாம் பக்கமாகவும் நீர் செல்லாது அவர்களை வணங்கிச் செல்வாங்கள்

8. வித்தையோ அன்றி விருப்பத்துக்குரியதோ, யாதெனில் நிதமும் திருநீறணியும் அடியாரை நினைப்பதேயாகும். பிச்சை புக்க பெருமானின் அன்பரிடம் ஆணவத்துடன் அருகணையாது அச்சத்துடன் அவர்களை அண்டி வழிபடுவீராக.

9. இன்னமுங் கூறுகிறேன் கேட்பீர்களாக! இளம்பிறை சூடிய தலைவனின் திருப்பாதத்தினை நிறைந்த மனத்துடன் வழிபடுபவர்களையும், நிலைபெற்ற ஐந்தெழுத்தாகிய மந்திரத்தில் ஏதேனும் ஒன்று வல்லவரையும் நீவிர் சாரவேண்டா. (ஒன்று என்பது ஒருமுறை ஓதுதல், ஒரு எழுத்தேனும் ஓதவல்லராதல், அன்றி ஐந்தெழுத்து செபவிதிகளில் ஏதேனும் ஒரு விதியால் செபிக்கவல்லராதல் என்று மூவகையாகவும் பொருள் கொள்ளலாம்.)

10. மற்றுங் கேளுங்கள்; மனதில் வேறொன்றும் இல்லாது மேனி முழுவதும் பூசிய நீறுடன், கோவணம், ஒப்பற்ற இடபவாகனம் உடைய சிவபெருமானின் திருவடிகளேயல்லாது மற்றொரு ஆதரவு இல்லாத அடியார்கள்மீது நீவிர் படை கொண்டு போகவேண்டா.

11. அரக்கனாகிய இராவணனுடைய பத்துத் தலைகளையும் ஒரு திருத்தாளினால் நெருக்கி ஊன்றிய இறைவனுடைய அடியவர்கள் நிற்குமிடத்திலும் நீங்கள் நில்லாது அங்கு நின்றும் பெயர்ந்து போங்கள். அவ்விதம் செய்யாது அவர்களிடம் உமது தொழில் வல்லமையைக் காட்ட முற்படுவீராயின் பெருமானின் திருவடி உமக்குச் சூடு கொடுக்கும் (உம்மைச் சுடும் என்றபடி).

## 4. நம்பியாண்டார் நம்பிகள் அருளிய விநாயகர் திருவிரட்டைமணி மாலை

[11-ஆம் திருமுறை

நம்பியாண்டார் நம்பிகள் திருநாரையூரில் எழுந்தருளியுள்ள பொல்லாப் பிள்ளையார்மீது அருளிச் செய்த திருப்பாடல்கள் பல வற்றுள் பின்வரும் இரண்டு பாடல்கள் சிந்திப்பதற்குரியன. இவற்றைப் பக்தியுடன் ஓதினால் நம் துன்பங்கள் நீங்கும். சுவர்க்க லோகானுபவமும் கிட்டும்.

திருச்சிற்றம்பலம்

அல்லல் களைந்தான்ற னம்பொ னுலகத்தின்
எல்லை புகுவிப்பான் ஈண்டுழவர்—செல்லல்களை
செங்கழு நீர்கட்குந் திருநாரையூர்ச் சிவன்சேய்
கொங்கெழு தாரைங்கரத்த கோ.

திருச்சிற்றம்பலம்

**இதன் பொருள் :**—உழவர்கள் நெல் வயல்களிலுள்ள செங்கழு நீர்மலர்களைக் களைந்து எறிவார்கள். அத்தகைய நீர்வளம் மிக்க வயல்கள் நிறைந்த திருநாரையூரில் உள்ள சிவபெருமானுடைய திருக்குமாரனாகிய ஐந்து கரத்தோடு கூடிய விநாயகப் பெருமான் தன்னை வழிபடுவார்களது துன்பங்களை நீக்கிப் பொன்னுலக வாழ் வையுந் தருவான்.

திருச்சிற்றம்பலம்

கோவிற் கொடிய நமன்றமர் கூடா வகைவிடுவன்
காவிற் றிகழ் திருநாரைப் பதியிற் கரும்பனைக்கை
மேவற் கரிய விருமதத் தொற்றை மருப்பின் முக்கண்
ஏவிற் புருவத் திமையவன்றுன் பெற்ற யானையையே.

திருச்சிற்றம்பலம்

**இதன் பொருள் :**—பரமேசுவரனின் திருமைந்தனான, இருமதம் பொழிந்துகொண்டிருக்கும் யானை முகத்தையும், ஒற்றைத் தந்தத் தையும், கருநிறம் பொருந்திய துதிக்கையையும், உடைய இவன் திருநாரையூரில் எழுந்தருளியுள்ளான். இவனை வணங்கி வழிபட் டால், கொடிய சூலமேந்திய யமனின் தூதுவர்கள் கையில் சிக் காமல் நாம் நல் வாழ்வு வாழ வகையுண்டு என்றவாறு.

[விநாயகப் பெருமானை வழிபட்டால் வரும் பேறுகளைக் கூறிய நம்பியாண்டார் நம்பிகள் எதிர்மறை முகத்தால் இவரை வழிபடா விட்டால் ஏற்படும் துன்பங்களையும் பின்வரும் பாட்டில் கூறியுள் ளார். எனவே, நாம் அவரை நாளும் வழிபடவேண்டுமென்பது வற்புறுத்தப்படுகிறது.]

திருச்சிற்றம்பலம்

அமரா அமரர்தொழுஞ் சரணாரைப் பதியமர்ந்த
குமரா குமரற்கு முன்னவனே கொடித் தேரவுணர்
தமரா சறுத்தவன்றன் னுழைத் தோன்றினனே யெனநின்
றமரா மனத்தவர் ஆழ்நரகத்தி லழுந்துவரே.

திருச்சிற்றம்பலம்

**இதன் பொருள் :**—திருநாரையூரில் எழுந்தருளியுள்ள குமரா திரிபுராதிகளை அழித்த சிவன் தன் திருமைந்தா! தேவேச! தேவர் தொழும் திருவடிகளையுடையவனே! முருகனுக்கு மூத்தவனே என நின்னை வணங்கா மனமுடையவர்கள் நரகலோகத்தை அடைந்து துன்பப்படுவார்கள்.

[பின்வரும் பாடலால் அவரை வழிபடுபவர்களைத் துன்பம் நெருங்கவும் முடியுமா? முடியாது என்றபடி.]

திருச்சிற்றம்பலம்

மருப்பை யொருகைக்கொண்டு நாரையூர் மன்னும்
பொருப்பை யடிபோற்றத் துணிந்தால்—நெருப்பை
அருந்த வெண்ணுகின்ற எறும்பன்றே யவரை
வருந்த வெண்ணுகின்ற மலம்.

திருச்சிற்றம்பலம்

**இதன் பொருள் :**—ஒற்றைத் தந்தத்தைத் தன் திருக்கரத்திலே கொண்டு விளங்கும் திருநாரையூரில் நிலைபெற்று எழுந்தருளியுள்ள விநாயகப்பெருமானைப் பக்தியுடன் வழிபடுவோரைத் துன்பம் நெருங்குமா? நெருங்க முடியாது. நெருங்கின் அதன் கதி என்னவாகும். நெருப்பையுண்ண எண்ணும் எறும்பு கதிதான் என்றவாறு.

## 5. காரைக்காலம்மையார் அருளிய அற்புதத் திருவந்தாதி

[11-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

இறைவனே யெவ்வுயிருந் தோற்றுவிப்பான் றேற்றி
இறைவனே யீண்டிறக்கஞ் செய்வான்—இறைவனே
எந்தா யெனவிரங்கு மெங்கள்மேல் வெந்துயரம்
வந்தா லதுமாற்று வான்.

**இதன் பொருள் :**—இறைவனே இவ்வுலகத்தையும் இவ்வுலகத்தி லுள்ள நால்வகைத் தோற்றம், எழுவகைப் பிறவி, எண்பத்து நான்கு லட்சம் யோனி பேதங்களாகிய கோடானு கோடி உயிர்களுக்கு உடம்புகளைப் படைத்துக் காத்து அவ்வுயிர்கள் இளைப்பாற உடம்பு[illegible] அழிக்கவும் செய்வான். எனவே, நம் பிதாவான அவனையே [illegible]ம் நாளும் வணங்கி வழிபட்டு நம் குறைகளை விண்ணப்பஞ் செய்தால் நம் துயர்களை நீக்கி நமக்கு இன்பத்தை யருள்வான்.

மதியா வடலவுணர் மாமதின்மூன் றட்ட
மதியார் வளர்சடை யினனை—மதியாலே
என்பாக்கை யாலிகழா தேத்துவரே லிவ்வுலகில்
என்பாக்கை யாய்ப்பிறவா ரீண்டு.

**இதன் பொருள்** :—தம்மைப் பகைத்த திரிபுரங்களைச் சிரித்து அவர்கள் புரத்தையழித்து அவர்களை ஆட்கொண்ட பெருமான் சிவன். அத்தகைய பெருமானை என்புதோல் போர்த்த உடம்புடன் கூடிய மக்கள் இகழாது வழிபாடு செய்வார்களானால் அவர்கள் மீண்டும் இவ்வுலகில் வந்து மக்களாய்ப் பிறக்கமாட்டார்கள் என்பது உறுதி. [அவர் பிறவி நோய் நீங்கும் என்பது கருத்து]

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :—இவ்விரு பாடல்கள் அடங்கிய அம்மையார் அருளிச் செய்த அற்புதத் திருவந்தாதியை நாளும் அன்பர்கள் ஓதி உய்யும் பொருட்டு இவற்றைமட்டும் இடம் கருதி வெளியிட்டுள்ளோம்.



 **சிவமயம்** 



# 3
# பாவங்கள் நீங்கிப் பவித்திரராக



ஓம் மஹாஸதாசிவமூர்த்தயே நம :  ஓம் உமாமஹேச்வரமூர்த்தயே நம :

## 1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### திருந்துதேவன்குடி

(இது சுற்றிலும் குடியிருக்கைகள் இன்றி வயல் மத்தியில் தனிக் கோயிலாக உள்ளது. கோயிலைச் சுற்றி ஓர் தீர்த்தம் மூன்று பக்கமும் அகழிபோல் சூழ்ந்துள்ளது. மாயவரம்—தஞ்சாவூர் மார்க்கத்தில் திருவிடைமருதூர் இரயில் நிலையத்திலிருந்து சுமார் 4 மைலில் உள்ளது. நண்டாங்கோயில் என்றும் வழங்கப்படுகிறது. தேசப் படத்தில் 7 என்ற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

பண் - கொல்லி]  [3-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

மருந்துவேண் டில்லிவை மந்திரங் கள்ளிவை
புரிந்துகேட் கப்படும் புண்ணியங் கள்ளிவை
திருந்துதே வன்குடித் தேவர்தே வெய்திய
அருந்தவத் தோர்தொழும் அடிகள்வே டங்களே. 1

வீதிபோக் காவன வினையைவீட் டுவ்வன
ஓதியோர்க் ககப்படாப் பொருளையோ விப்பன
தீதில்தே வன்குடித் தேவர்தே வெய்திய
ஆதியந் தம்மிலா அடிகள்வே டங்களே. 2

மானமாக் குவ்வன மாசுநீக் குவ்வன
வானையுள் கச்செலும் வழிகள்காட் டுவ்வன
தேனும்வண் டும்மிசை பாடுந்தே வன்குடி
ஆனஞ்சா டும்முடி யடிகள்வே டங்களே. 3

செவிகளார் விப்பன சிந்தையுட் சேர்வன
கவிகள்பா டுவ்வன கண்குளிர் விப்பன
புவிகள்பொங் கப்புனல் பாயுந்தே வன்குடி
அவிகளுய்க் கப்படும் அடிகள்வே டங்களே. 4

விண்ணுலா வுந்நெறி வீடுகாட் டுந்நெறி
மண்ணுலா வுந்நெறி மயக்கந்தீர்க் குந்நெறி
தெண்ணிலா வெண்மதி தீண்டுதே வன்குடி
அண்ணலான் ஏறுடை யடிகள்வே டங்களே. 5

பங்கமென் னப்படர் பழிகளென் னப்படா
புங்கமென் னப்படர் புகழ்களென் னப்படும்
திங்கள்தோ யும்பொழில் தீண்டுதே வன்குடி
அங்கமா றுஞ்சொன்ன அடிகள்வே டங்களே. 6

கரைதலொன் றும்மிலை கருதவல் லார்தமக்
குரையிலூ னம்மிலை உலகினின் மன்னுவர்
திரைகள்பொங் கப்புனல் பாயுந்தே வன்குடி
அரையில்வெண் கோவணத் தடிகள்வே டங்களே. 7

உலகமுட் குந்திறல் லுடையரக் கன்வலி
விலகுபூ தக்கணம் வெருட்டும் வேடத்தின
திலகமா ரும்பொழில் சூழ்ந்ததே வன்குடி
அலர்தயங் கும்முடி யடிகள்வே டங்களே. 8

துளக்கமில் லாதன தூயதோற் றத்தன
விளக்கமாக் குவ்வன வெறிவண்டா ரும்பொழில்
திளைக்குந்தே வன்குடித் திசைமுக னோடுமால்
அளக்கவொண் ணாவண்ணத் தடிகள்வே டங்களே. 9

செருமரு தண்துவர்த் தேர்அமண் ஆதர்கள்
உருமரு வப்படாத் தொழும்பர்தம் உரைகொளேல்
திருமரு வும்பூரய்கை சூழ்ந்ததே வன்குடி
அருமருந் தாவன அடிகள்வே டங்களே. 10

சேடர்தே வன்குடித் தேவர்தே வன்றனை
மாடமோங் கும்பொழில் மல்குதண் காழியான்
**நாடவல் லதமிழ் ஞானசம் பந்தன**
**பாடல்பத் தும்வல்லார்க் கில்லையாம் பாவமே.** 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**தேவதேவேசுவரர்**
**கர்க்கடேசுவரர்**

தேவி :—**அருமருந்தம்மை**

**பதிக வரலாறு**:—திருவியலூரில் இறைவன் அருள் வேடங் காட்டத்தொழுத திருஞானசம்பந்தர் திருந்துதேவன்குடி வந்து சேர்ந்தார். பொருந்திய காதலுடன் திருக்கோயில் புக்கு வணங்கி "மருந்தொடு மந்திரமாகி மற்றும் இவர் வேடமாம்" என்று இவ் வருந்தமிழ்மாலை புனைந்தார். 'அருந்தமிழ்மாலை' என்ற சேக்கிழார் பெருமானின் வாக்கு இப்பதிகத்தின் அருமையைப் புலப் படுத்தும். இத்தலம் நண்டு இறைவனைப் பூசித்துப் பேறுபெற்ற தலமாகும். சுற்றிலும் வீடுகள் ஏதுமின்றித் தற்சமயம் தனிக் கோயிலாக வயல் மத்தியில் உள்ளது.

**பதிக உரை**:

1. திருந்துதேவன்குடியில் எழுந்தருளியுள்ள தேவதேவேசுவரனும் அருந்தவத்தோர் வணங்கும் பெருமானும் ஆகிய சிவபெருமானின் வேடங்களாகிய (சின்னங்களாகிய) திருநீறு, உருத்திராக்கம், சடைமுடி இம்மூன்றும் மருந்தும், மந்திரமும் மற்றும் சிவ புண்ணியங்களுமாம்.

2. தீமை எதுவும் இல்லாத திருந்துதேவன்குடியில் வீற்றிருக்கும் தேவதேவனும் ஆதி அந்தமில்லா அடிகளுமான சிவபெருமானின் வேடங்கள் விதியையும் வெல்லுந்தன்மையன. வினையை அறவே யழிப்பன. எல்லா நூல்களையும் ஓதினோர்க்கும் அவற்றில் அகப்படாத உண்மைப் பொருளைத் தெரிவிப்பனவாகும்.

3. தேனையுண்ணும் வண்டுகள் இசைபாடுகின்ற திருந்து தேவன்குடி மேவிய பஞ்சகவ்ய அபிடேகங்கொள்ளும் சிவபெருமானது வேடங்கள் எல்லாப் பெருமைகளையும் உண்டாக்குவன. குற்றங்களையெல்லா மறவே ஒழிப்பன. சிவலோகத்தினை நினையச் செய்யும் நன்னெறியைக் காட்டுவனவுமாகும்.

4. நீர்வளம் மிக்க திருந்துதேவன்குடியில் வேள்விகளால் ஆராதிக்கப்படும் அடிகளுடைய வேடங்கள் அவற்றின் பெருமையைக் கேட்பார்க்கு மகிழ்ச்சியூட்டுவன. மனதில் சென்று புகுவன. கவிகள் புகழ்ந்து பாடுந் தன்மையுடையன. கண்களைக் குளிரச் செய்வனவுமாகும்.

5. தெளிந்த நிலவொளியையுடைய வெண்மதி தீண்டுகின்ற திருந்துதேவன்குடியில் எழுந்தருளியிருக்கும் பெருமானும், பெருமையுடைய எருதினை ஊர்தியாயுமுடைய அடிகளுமாகிய பரமசிவனுடைய திருவேடங்கள் வானுலகத்தைக் காட்டும் நெறியாகும். மோட்ச லோகத்தையும் அடைவிக்குநெறி. மண்ணுலகத்திலே சிறக்க வைக்கும் நெறியும் மயக்கத்தினைப் போக்குகின்ற நெறியுமாகும். (மயக்கம்—அஞ்ஞானம்).

6. சந்திரன் உலாவுகின்ற பொழில்கள் உள்ள திருந்துதேவன் குடி மேவிய வேதாங்கங்கள் ஆறினையும் விரித்தோதிய அடிகளாரின் திருவேடங்களை அணிந்தோரை இழிவாகச் சொல்லப்படும் பாவங்கள் உடையவரென்று சொல்லக்கூடாது. உயர்வாகக் கருதப்படும் புகழுடையவர்கள் என்றே சொல்லவேண்டும்.

7. அலைகள் பொங்கி எழும்படி நீர்பாயும் திருந்துதேவன்குடி மேவிய அரையில் வெள்ளைக் கோவணந் தரித்த அடிகளாகிய சிவபிரானின் திருவேடங்களைக் கருதவல்லவர்க்குக் குற்றம் ஒன்றும் இல்லை. அதன் பெருமையை உரைக்கில் ஏதும் குறைவு இல்லையாகும். உலகினில் நிலைபெற்று வாழ்வர்.

8. திலகம் போன்ற பொழில்கள் சூழ்ந்த திருந்துதேவன்குடியில் வீற்றிருக்கும் மலர்கள் சூடிய திருமுடியினையுடைய சிவபெருமானின் திருவேடங்கள் உலகம் அஞ்சும்படியான வல்லமையுடைய இராவணனது வலியையும் விலக்கத்தக்க வல்லமையுடைய பூதகணங்கள் இவ்வேடங்கள் தரித்தோர் மாட்டு அஞ்சத்தக்கது யாதுவரினும் அதை வெருட்டி ஓட்டும்.

9. மணம் மிக்க வண்டுகள் பொருந்திய சோலைகள் மிக்க திருந்துதேவன்குடியில் நான்முகனோடு திருமாலும் இன்ன தன்மையன் என்றளந்தறியாத சிவபெருமானின் திருவேடங்கள் அணிந்தாரை அச்சம் இல்லாமல் செய்விப்பன. தூய்மையான தோற்றத்தையளிப்பன. பிரகாசமுடையவர்களாக ஆக்குந் தன்மையுடையன.

10. புத்தரும் சமணரும் அருகில் நெருங்கவும் அருகரல்லா அருவருப்பையுடையவர்கள். அவர்கள் தம் பொய் வார்த்தையைக் கொள்ளவேண்டாம். வளம் மிக்க பொய்கை சூழ்ந்த திருந்துதேவன்குடி அடிகளின் திருவேடங்களே பிறவிப்பிணிக்கு அருமருந்தாவன ஆகும். (எனவே அவ்வேடங்களையே பரவ வேண்டும் என்பதாம்)

11. தேவர்கள் வணங்கும் திருந்துதேவன்குடிப் பெருமானாகிய தேவதேவேச்சுவரனை மாடங்கள் ஓங்கும் பொழில்கள் மல்கிய குளிர்ச்சி பொருந்திய சீகாழிப்பதித் தோன்றிய திருஞானசம்பந்தன் பாடிய பாடல்கள் பத்தும் பாடவல்லார்க்குப் பாவங்கள் இல்லையாக ஆகிவிடும்.

# 2. பாவநாசத் திருப்பதிகம்
## திருநாவுக்கரசு நாயனர்

பண் - பழம்பஞ்சுரம்] [4-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

பற்றற் றார்சேர் பழம்பதியைப் பாசூர் நிலாய பவளத்தைச்
சிற்றம் பலத்தெந் திகழ்கனியைத் தீண்டற் கரிய திருவுருவை
வெற்றி யூரில் விரிசுடரை விமலர் கோனைத் திரைசூழ்ந்த
ஒற்றி யூரெம் உத்தமனை உள்ளத் துள்ளே வைத்தேனே. 1

ஆனைக் காவில் அணங்கினை ஆரூர் நிலாய அம்மானைக்
கானப் பேரூர்க் கட்டியைக் கானூர் முளைத்த கரும்பினை
வானப் பேரார் வந்தேத்தும் வாய்மூர் வாழும் வலம்புரியை
மானக் கயிலை மழகளிற்றை மதியைச் சுடரை மறவேனே. 2

மதியங் கண்ணி ஞாயிற்றை மயக்கந் தீர்க்கும் மருந்தினை
அதிகை மூதூர் அரசினை ஐயா றமர்ந்த ஐயனை
விதியைப் புகழை வானோர்கள் வேண்டித் தேடும் விளக்கினை
நெதியை ஞானக் கொழுந்தினை நினைந்தேற் குள்ளம் நிறைந்ததே. 3

புறம்ப யத்தெம் முத்தினைப் புகலூர் இலங்கு பொன்னினை
உறந்தை யோங்கு சிராப்பள்ளி உலகம் விளக்கு ஞாயிற்றைக்
கறங்கு மருவிக் கழுக்குன்றிற் காண்பார் காணுங் கண்ணுனை
அறஞ்சூழ் அதிகை வீரட்டத் தரிமான் ஏற்றை அடைந்தேனே. 4

கோலக் காவிற் குருமணியைக் குடமூக் குறையும் விடமுணியை
ஆலங் காட்டி லந்தேனை அமரர் சென்னி யாய்மலரைப்
பாலில் திகழும் பைங்கனியைப் பராய்த்துறை எம்பசும் பொன்னைச்
சூலத் தானைத் துணையிலியைத் தோளைக் குளிரத் தொழுதேனே. 5

மருக லுறைமா ணிக்கத்தை வலஞ் சுழியின் மாலையைக்
கருகா வூரிற் கற்பகத்தைக் காண்டற் கரிய கதிரொளியைப்
பெருவே ளூரெம் பிறப்பிலியைப் பேணு வார்கள் பிரிவரிய
திருவாஞ் சியத்தெஞ் செல்வனைச் சிந்தை யுள்ளே வைத்தேனே. 6

எழிலார் இராச சிங்கத்தை இராமேச் சுரத்தெம் எழிலேற்றைக்
குழலார் கோதை வரைமார்பிற் குற்றா லத்தெங் கூத்தனை
நிழலார் சோலை நெடுங்களத்து நிலாய நித்த மணாளனை
அழலார் வண்ணத் தம்மானை அன்பி லணைத்து வைத்தேனே. 7

மாலைத் தோன்றும் வளர்மதியை மறைக்காட் டுறையும் மணாளனை
ஆலைக் கரும்பி னின்சாற்றை அண்ணா மலையெம் அண்ணலைச்
சோலைத் துருத்தி நகர்மேய சுடரிற் றிகழுந் துளக்கிலியை
மேலை வானோர் பெருமானை விருப்பால் விழுங்கி யிட்டேனே. 8

சோற்றுத் துறையெஞ் சோதியைத் துருத்தி மேய தூமணியை
ஆற்றிற் பழனத் தம்மானை ஆல வாய்எம் அருமணியை
நீற்றிற் பொலிந்த நிமிர்திண்டோள் நெய்த்தா னத்தெந் நிலாச் [சுடரைத்
தோற்றக் கடலை அடலேற்றைத் தோளைக்குளிரத் தொழுதேனே. 9

புத்தூ ருறையும் புனிதனைப் பூவ ணத்தெம் போரேற்றை
வித்தாய் மிழலை முளைத்தானை வேள்விக் குடியெம் வேதியனைப்
பொய்த்தார் புரமூன் றெரித்தானைப் பொதியில் மேயபுராணனை
வைத்தேன் என்றன் மனத்துள்ளே மாத்தூர் மேய மருந்தையே. 10

முந்தித் தானே முளைத்தானை மூரி வெள்ளே றூர்ந்தானை
அந்திச் செவ்வான் படியானை அரக்கன் ஆற்றல் அழித்தானைச்
சிந்தை வெள்ளப் புனலாட்டிச் செஞ்சொன்மாலை யடிச் சேர்த்தி
எந்தை பெம்மான் என்னெம்மான் என்பார் பாவ நாசமே. 11

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு** :—பொய்ப்பாசம் போக்குவாராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் பூம்புகலூர் சேர்ந்து அங்குத் தங்கிப் பெருமானை வணங்கித் தொண்டு செய்து கொண்டிருந்தபோது மொழிந்த எண்ணிறந்த வண்டமிழ் மாலைகளுள் இதுவும் ஒன்று. இப்பதிகம் " பார் பரவும் பாவநாசப் பதிகம் " என்று சேக்கிழார் பெருமானால் பன்னிரண்டாந் திருமுறையில் பாராட்டப்பட்டுள்ளதே இதன் பெருமைக்கு ஓர் சான்றாகும். " பாவநாசமே " என்று திருப் பதிகம் முடிவதால் பாவநாசப்பதிகம் எனப்பெயர் பெற்றது.

**பொழிப்புரை :**

1. உலகப்பற்று நீங்கினவர்களெல்லாம் சேர்ந்து வழிபடும் பழம்பதியென்னும் திருப்புனவாயில் கோயில்கொண்டானை, திருப் பாசூரில் நிலவியிருக்கின்ற பவளமேனியானை, திருச்சிற்றம்பலத்துத் திகழ்கின்ற கனியொப்பானை, தீண்டுதற்கரிய இயல்புடைய திருஉரு ஆயினானை, வெற்றியூர் என்னுந் தலத்து மேவிய விரிசுடர் போல் வானை, மும்மலங்களும் நீங்கினோர்கட்கெல்லாந் தலைவனை, கடல் சூழ்ந்த திருஒற்றியூரமர்ந்த எம்முத்தமனை என்னுடைய உள்ளத்தினுள்ளே நான் வைத்தேன். (பழம்பதி என்பது மிகப்பழமையான வனான பதி - இறைவன் என்ற பொருளையும் தரும்).

2. திருவானைக்காவில் வீற்றிருக்குந் தெய்வத்தை, திருவாரூரில் புகழுடன் விளங்குந் தலைவனை, திருக்கானப்பேர் என்னுந்

தலத்தில் கருப்பங்கட்டிபோல் இனிமையாக உள்ளானை, திருக்கா ஞூரிலே சுயம்புவாய்த் தோன்றிய கரும்பு போல்வானை, தேவலோ கத்தவர்களெல்லாம் வந்து பூசைசெய்கின்ற திருவாய்மூர் மேவிய வலம்புரிச் சங்கம்போல் தூய்மையும் பெருமையும் உடைய பிரானை, பெருமை பொருந்திய திருக்கயிலை மேவிய மழகளிற்றை, சந்திரன், சூரியன், தீ ஆகிய மூன்றுமாய் உள்ள பெருமானை நான் மறக்க மாட்டேன்.

3. பிறைச் சந்திரனையொரு மாலைபோல் தலைமீது வைத்த செங்கதிரவனை, பிறவிக்கு வித்தான அஞ்ஞானத்தைத் தீர்க்கும் மருந்தாக ஆயினனை, திருவதிகையாகிய மூதூரையாளும் அரசனை, திருவையாற்றுத் தலைவனை, வேத விதியாக உள்ளவனை, புகழே உருவாய் உள்ளவனை, தேவர்களும் விரும்பித் தேடுகின்ற ஞான விளக்கினை, செல்வத்தை, ஞானக்கொழுந்தினை நினைந்த எனக்கு உள்ளம் நிறைந்தது. (அதாவது பிற எவற்றிற்கும் இடமில்லாமல் நெஞ்சம் முழுவதும் இறைவர்க்கே இடமாயிற்று என்றவாறு.)

4. திருப்புறம்பயம் என்னும் தலத்தில் உள்ள முத்துபோல் வானை, திருப்புகலூரில் பிரகாசிக்கும் பொன்னாகிய பெருமானை, உறையூரிலும், பெருமை பொருந்திய திருச்சிராப்பள்ளியிலும் கோயில் கொண்டுள்ள, உலகமெல்லாம் இருள் நீங்கி விளக்கம் செய்யுஞ் சூரியனாய் இருப்பவனை, அருவிகள் ஒலிக்கின்ற திருக் கழுக்குன்றத்திலே தன்னைத் தரிசிக்கின்ற மெய்யடியார்களுடைய காண்கின்ற கண்களுக்குள்ளே கண்ணாய் நின்று அவர்கள் தன்னைக் காணும்படி காட்டுபவனை, தருமம் நிறைந்த திருவதிகைவீரட் டானத்தேயமர்ந்த ஆண் சிங்கத்தைச் சரணடைந்தேன்.

5. திருக்கோலக்காவிலே குரு உருவங்கொண்ட கோலத்தை, திருக்குடமூக்கிலேயமர்ந்த விஷம் உண்ட பெருமானை, திருவாலங் காடுறையும் தேன்போன்று இனிக்கும் பெருமானை, தேவர்கள் சிரத் தின்மீது வைக்கப்படும் மலர்த்திருவடிகளை, வெண்ணீற்றுப் பூச்சி னால் பால்போன்ற நிறத்துடன் திகழ்கின்ற கனியொப்பானை, திருப் பராய்த்துறை கோயில்கொண்ட பசும் பொன்னை, சூலப்படை யுடையானை பிறரொருவர் துணை வேண்டாது தான் யாவர்க்குந் துணையாகிய தனிமுதலை, தோள்கள் குளிரத் தொழுதேன்.

6. திருமருகலில் கோயில் கொண்ட மாணிக்கவண்ணனை, திரு வலஞ்சுழியில் எழுந்தருளிய மாலையாய் உள்ளானை, திருக்கருகாவூர் மேவிய நினைத்தார்க்கு நினைத்தனவெல்லாம் அளிக்கும் கற்பக விருக்ஷத்தை, காண்பதற்கரிய ஞான ஒளியை, திருப்பெருவேளூர் அமர்ந்த பிறப்பிலிப்பெருமானை, வழிபடுபவர்களால் பிரிதற்கரிய ஸ்ரீ வாஞ்சியம் கோயில்கொண்ட செல்வனாகிய சிவபெருமானை என் னுடைய சிந்தையுள்ளே வைத்தேன்.

7. அழகு மிகுந்த இராஜ சிங்கத்தை, இராமேச்சரத்தில் கோயில் கொண்ட ஆண்சிங்கம் போன்று விறலுடையவனை, குழல் வாய் மொழியம்மையை மலைபோன்ற மார்பில் வைத்த குற்றாலத்துக் கூத்தப்பெருமானை, நிழல் பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருநெடுங்களத்தில் நிலவியிருக்கும் நித்தியசுந்தரப் பெருமானை அழல்போன்ற வண்ணமுடைய எம் தலைவனை என்னுடைய அன்பால் என் நெஞ்சில் சேர்த்து வைத்தேன்.

8. மாலைக்காலத்துத் தோன்றும் வளர்பிறைச் சந்திரனை, திருமறைக்காட்டில் கோயில்கொண்ட மணாளப்பெருமானை, அடியார் மனத்தில் கருப்பஞ்சாறுபோல் இனிப்பவனை, திருஅண்ணாமலையின் பெருமையுடையானை, திருத்துருத்தியில் விரும்பி எழுந்தருளியுள்ள சுடர்போன்று பிரகாசிக்கும் தாணுவை, தேவர்களுக்கெல்லாம் மேலாய பெருமானை மிகுந்த விருப்பத்தினால் நான் விழுங்கிவிட்டேன். (மீண்டும் வெளிப்போகாதவாறு என் உள்ளத்துள்ளே செலுத்திவிட்டேன் என்றவாறு.)

9. திருச்சோற்றுத்துறையில் கோயில் கொண்டுள்ள சோதி வடிவினனை துருத்தியென்னும் தலத்தில் மேவிய தூயமணி போல்வானை, திருப்பழனத்துத் தலைவனை, திருவாலவாய் அமர்ந்த எம்முடைய அரிய மணியை, திருநீற்றுப்பூச்சினால் அழகுடன் விளங்கும் நிமிர்ந்த திண்ணிய தோள்களையுடைய திருநெய்த்தானத்தில் உறையும் நிலவொளி போன்றானை, தோன்றுகின்ற கடலை, போரில் வெற்றியுடைய ஆண் சிங்கத்தை என்னுடைய தோள்கள் குளிரத் தொழுதேன்.

10. திருப்புத்தூர் உறையும் புனிதனை, திருப்பூவணத்து எம்முடைய போரில் வல்ல ஆண்சிங்கத்தை, இவ்வுலகம் யாவும் தோன்றுவதற்கு முதற்காரணமாய்த் திருவீழிமிழலையில் தானே தோன்றியவனை, திருவேள்விக்குடியில் எழுந்தருளிய வேதப் பொருளினனை, சிவபூசையினின்றும் தவறிய திரிபுரர்களின் முப்புரங்களையும் எரித்தவனை, பொதிகைமலையில் வீற்றிருக்கும் மிகவும் பழைமையான பெருமானை, திருஆமாத்தூர் மேய பிறவிப் பிணிக்கு மருந்தாய பெருமானை என்னுடைய மனத்துள் வைத்திட்டேன்.

11. எல்லோர்க்கும் முன்னே சுயம்புவாகத் தோன்றினவனை முதிர்ந்த வெண்மையான எருதின்மேல் ஏறியவனை, அந்தியில் காணும் செவ்வானத்தின் நிறம் ஒத்தானை, இராவணனுடைய வலிமையை யழித்தவனைச் சிந்தையில் பெருக்கெடுத்தோடும் அன்பெனும் நீரால் திருமஞ்சனமாட்டி, செம்மையாகிய சொற்களால் ஆன பாமாலைகளால் அவன் திருவடியை அர்ச்சித்து எம் தந்தை, எம்பெருமான் என்று பரவுவாரது பாவங்கள் நாசம்டையுமே.

**குறிப்பு** :—பாவநாசமே என முடித்துப் பாவங்கள் நாசமாவதற் குரிய வழிகளை "நான் இவ்வாறு வழிபட்டேன்; யாவரும் வழி யடின் பாவம் நாசமாம்" என உபதேசித்தருளுகின்றமையால் பாவநாசத் திருப்பதிகம் எனப்படும். (திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் திருநாவுக்கரசர் புராணம், பதிகக் குறிப்புரை).

## 3. காரைக்காலம்மையார் பாடியது

பண் - **இந்தளம்]** **[11-ஆம் திருமுறை**

*திருச்சிற்றம்பலம்*

எட்டியிலவ மீகைசூரை காரைபடர்ந் தெங்கும்
சுட்டசுடலை சூழ்ந்தகள்ளி சோர்ந்த குடர்கௌவப்
பட்ட பிணங்கள் பரந்த காட்டில் பறைபோல் விழிகட்பேய்
கொட்டமுழவங் கூளிபாடக் குழக ளாடுமே. 1

குண்டைவயிற்றுக் குறிய சிறிய நெடிய பிறங்கற்பேய்
இண்டுபடர்ந்த விருள்சூழ்மயானத் தெரிவா யெயிற்றுப்பேய்
கொண்டு குழவி தடவி வெருட்டிக் கொள்ளென் றிசைபாட
மிண்டி மிளிர்ந்த சடைகடாழ விமல ளாடுமே. 10

சூடுமதியஞ் சடைமே லுடையார் சுழல்வார் திருநட்டம்
ஆடுமரவ மரையிலார்த்த வடிக ளருளாலே
காடுமலிந்த கனல்வாயெயிற்றுக் காரைக்காற் பேய்தன்
பாடல் பத்தும் பாடியாடப் பாவ நாசமே. 11

*திருச்சிற்றம்பலம்*

**பதிக வரலாறு** :—திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந் தரர் ஆகிய மூன்று சமயாசாரியர்களுக்கும் முற்பட்ட காலத்தவ ராகிய காரைக்காலம்மையார் இரண்டு திருப்பதிகங்கள், ஒரு அந்தாதி ஒரு இரட்டைமணிமாலை ஆகிய 4 பிரபந்தங்களை யருளிச் செய்தார். இவை பதினோராந் திருமுறையில் இடம்பெற்றுள்ளன. இவற்றுள் ஒன்று மேலே காட்டப்பெற்ற திருப்பதிகம். அப்பதி கத்தில் 3 திருப்பாட்டுக்களை மட்டும் சேர்த்துள்ளோம். இப்பதி கத்தைப் பக்தி சிரத்தையுடன் அன்பர்கள் ஓதுவார்களானால் அவர் கள் பாவம் நாசமாய்விடும் என்பது உறுதி. எனவே, அன்பர்கள் இதனை ஓதி உய்வார்களாக.

**கருத்து** :—சர்வ சம்மாரக் காலத்து இறைவன் நின்று நட மாடும்; சிவபெருமானைச் சூழ்ந்து பூதங்களும் ஆடும்; சம்மா ரத்தில் இறந்த பிணங்களைப் பேய்களும், கழுகுகளும், நரிகளும் பிடுங்கித் தின்னும் வரலாற்றைக் காட்டியுள்ளார் பதிகம் பாடிய காரைக்காலம்மையார்.



# சிவமயம்







# 4
# அடுத்தடுத்து வரும் ஆபத்துக்கள் அகல

ஓம் ஸுகாஸனமூர்த்தயே நம :

ஓம் உமேசமூர்த்தயே நம :

## 1. திருநாவுக்கரசு நாயனர்

### தனித்திருக்குறுந்தொகை

[5-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே. 1

நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே. 2

ஆளா காராளானு ரைஅடைந் துய்யார்
மீளா ஆட்செய்து மெய்ம்மையுள் நிற்கிலார்
தோளா தசுரை யோதொழும் பர்செவி
வாளா மாய்ந்துமண் ணுகிக் கழிவரே. 3

நடலை வாழ்வுகொண் டென்செய்திர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலின் நஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலி னர்கிடந் தூர்முனி பண்டமே. 4

பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்
ஆக்கைக் கேஇரை தேடி அலமந்து
காக்கைக் கேஇரை ஆகிக் கழிவரே. 5

குறிக ளும்அடை யாளமுங் கோயிலும்
நெறிக ளும்அவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்
பொறியி லீர்மன மென்கொல் புகாததே. 6

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே. 7

எழுது பாவைநல் லார்திறம் விட்டுநான்
தொழுது போற்றிநின் றேனையுஞ் சூழ்ந்துகொண்(டு)
உழுத சால்வழி யேஉழு வான்பொருட்(டு)
இழுதை நெஞ்சமி தென்படு கின்றதே. 8

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்பர் அவர்தம்மை நாணியே. 9

விறகில் தீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே. 10

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு** :—சமணசமயத்தினைத் துறந்து மீண்டும் சைவம்புக்குச் சிறந்திருந்த திருநாவுக்கரசு சுவாமிகளைச் சமண குருமார்களின் **தூண்டுதலால்** சுண்ணாம்பு சுடப்படும் அறையினுள் (நீற்றறை) அடைத்துத் தாளிட்டுக் காப்புகள் அமைக்கச் செய்தான் பல்லவ மன்னன். திருநாவுக்கரசு சுவாமிகள் அந்நீற்றறையினுள் அணைந்தபோது அம்பலத்தாடியின் தாள் நீழலையே அடைக்கல மாகப் புகுந்து "ஈண்டு வருந்துயருளவோ ஈசனடியார்க்கு" என்று துணிந்த மனத்துடன் அத்திருத்தாளிணையினையே உற்று நோக்கித் தொழுதிருந்தார். அவ்வெய்ய நீற்றறையும் இளவேனிற் பருவம், தென்றல் காற்று, குளிர்ந்த நீர்த்தடாகம், வெண்ணில

வொளி, யாழொலி ஆகியவற்றின் தன்மைகள் பொருந்தி ஐயருடைய திருவடி நீழல் அருளாகிக் குளிர்ந்தது. நீற்றறையினுள்ளிருந்து பாடியருளியதும், நீற்றறை குளிர்ந்ததுமான இத்திருப்பதிகம் நீற்றறையினுங் கொடிய தாபங்களையெல்லாம் குளிர வைக்கும் மாண்புடையது. இதனை ஓதிப் பெரும் பயனையடைவோமாக. ஈசன் இணையடி நீழலின் குளிர்ச்சியின்பத்தை அனுபவித்து உய்வோமாக.

பொழிப்புரை :

1. ஈசனாகிய எந்தையின் திருவடியின் நீழல் குற்றமற்ற வீணையின் ஒலியும், மாலையில் தோன்றும் முழுமதியத்தின் தண்ணொளியும், வீசுகின்ற தென்றலின் தன்மையும், இளவேனிலின் சுகமும், மொய்த்துக்கொண்டு வண்டுகள் பாடுகின்ற பொய்கையின் தண்மையும் போன்றதாகும். (அவைகள் அளிக்கும் இன்பத்தினையே இணையடி நீழலும் அளிப்பதாகும்).

2. ஞானம், கல்வி, மற்றும் நானறிந்த வித்தைகள் யாவும் 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்தேயாகும். என்னுடைய நாக்கானது கூறிச் செபிப்பதும் 'நமச்சிவாய' என்னும் அத்திரு மந்திரமேயாகும். நன்னெறி காட்டுவதும் 'நமச்சிவாய'வெனும் அம்மஹா மந்திரமே.

3. சிவபெருமானுக்கு அடியவர்களாக ஆகமாட்டார்கள். அடியவர்களாகிய நன்னெறியாளரைச் சார்ந்து நற்கதியடைய மாட்டார்கள். இறைவனுக்கே மீளா ஆளாய்ச் சென்று மெய்ந்நெறியாகிய சிவநெறியில் நிற்கும் ஆற்றல் இல்லாதவர்கள். அத்தகையோரது செவிகள் துளையிடப்படாத சுரைகளோ. வீணே இறந்து மண்ணாகிக் கழிந்து போகின்றனரே.

4. நாணமில்லாதவர்களே! துன்பம் மிக்க இவ்வாழ்வினைக் கொண்டு என்ன நற்காரியஞ் செய்தீர்கள். இறுதியில் சுடுகாட்டிற்குச் செல்வது என்பது சொற்பிரமாணமட்டுந்தானோ? (காட்சிப் பிரமாணமும் ஆம் என்பது கருத்து). கடலினின்று எழுந்த நஞ்சினையுண்ட பெருமான் நம்மைக் காத்தருள் செய்யாது விட்டு விட்டால் இவ்வுடல் பிணம் எனப் பேர் கொண்டு ஊர் மக்களால் வெறுக்கப்படும் ஒரு பண்டமாகிவிடும்.

5. புட்பங்களைக் கையினாற்றூவி சிவபெருமானின் பொற்பாதங்களை அருச்சிக்காதவர்களும், நாக்கைக் கொண்டு இறைவனின் திருநாமம் அஞ்செழுத்தையும் ஓதாதவர்களும் தத்தமது உடலுக்கே இரைதேடித் துக்கத்திலாழ்ந்து கடைசியில் காக்கைக்கே இரையாகிக் கழிவர்.

6. ஞானத்தினை உட்புகக்கொள்ளும் வாயில் இல்லாதவர் களே! இறைவனுடைய திருவுருவங்களும், விபூதி ருத்திராக்ஷங் களாகிய அவனது சின்னங்களும், அவன் கோயில் கொண்டுள்ள தலங்களும், தன்னையடைய அவன் வகுத்துள்ள வேத ஆகம நெறி களும், எல்லாந் தானென நின்றதொரு தன்மையும் எல்லாரும் அறியும்படி பலவாகிய வேதங்கள் உபதேசித்தும் உங்கள் மனம் அவற்றில் ஈடுபடாமைக்குக் காரணம் யாதோ?

7. வாழ்த்துவதற்கு வாயினையும் (பேசுந்திறம்) நினைப் பதற்கு நெஞ்சத்தையும் (சிந்தனைத்திறம்) வணங்குவதற்குத் தலை யினையும் (உடற்றிறம்) தந்த தலைவனுகிய சிவபெருமானை எங்கும் சூழ்ந்திருக்கும் மலர்களைத் தூவித் துதிக்காமல் தீவினையேனுகிய யான் நெடுங்காலம் வீணுகக் கழித்தேனே! (இறைவன் பூசையில் கழிக்கப்படும் காலமே நல்ல முறையில் கழிக்கப்படுங்காலம் ஆகும் என்பது கருத்து).

8. எழுதிய சித்திரம் போன்ற பாவையருடைய தொடர்பை நீத்து இறைவனைத் தொழுத நிலையில் நின்ற என்னையும் சூழ்ந்து நின்று, அனுபவித்த சுகங்களையே மீண்டும் வெறுப்பின்றி யனு பவிக்கும் பொருட்டு இந்த அறிவில்லாத நெஞ்சம் என்ன பாடு படுகின்றது.

9. மனம் நெகிழ்ந்து நெகிழ்ந்து நினைப்பவருடைய நெஞ்சத் துள்ளே புகுந்து நிற்கும் பொன்போல் ஒளிரும் சடையுடைய புண் ணிய உருவினன். பொய்ம்மையாளரது போலிப் பூசையில் அவ ரிடும் பூவும், நீருங்கண்டு அவரிடம் நாணங்கொண்டு பரிகசித்துச் சிரிப்பர். (உள்ளன்புடன் செய்யும் பூசையே புறக்கருவிகளில் குறை பாடுளதாயினுங்கூடச் சிறந்தது).

10. விறகில் தீப்போலவும், பாலிற்படு நெய் போலவும், மாமணிச் சோதியாகிய இறைவன் வெளிக்குத் தோன்ருது மறைந்துள்ளனன். உறவு என்னுங் கோலை நட்டு அறிவு என்னும் கயிற்றினுல் நன்கு கடைந்தால் மறைந்து நிற்கும் இறைவன் வெளிப்படக் காட்சி தருவான்.



# 2. சேக்கிழார் அருளிய பெரியபுராணம்

## திருநாவுக்கரசு நாயனார் புராணப்பகுதி

### நீற்றறை குளிர்ந்தது

[12–ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*ஆண்டவர சதனகத்து ளணைந்தபொழு தம்பலத்துத்*
*தாண்டவமுன் புரிந்தருளுந் தாணிழலைத் தலைக்கொண்டே*
*"ஈண்டுவருந் துயருளவோ வீசனடி யார்க்" கென்று*
*மூண்டமன நேர்நோக்கி முதல்வனையே தொழுதிருந்தார்.* **1**

*வெய்யநீற் றறையதுதான் வீங்கிளவே னிற்பருவந்*
*தைவருதண் டென்றலணை தண்கழுநீர்த் தடம்போன்று*
*மொய்யொளிவெண் ணிலவலர்ந்து முரன்றயா ழொலியினதாய்*
*ஐயர்திரு வடிநீழ லருளாகிக் குளிர்ந்ததே.* **2**

*மாசின்மதி நீடுபுனன் மன்னிவளர் சென்னியனைப்*
*பேசவினி யானையுல காளுடைய பிஞ்ஞகனை*
*ஈசனையெம் பெருமானை யெவ்வுயிருந் தருவானை*
*ஆசையிலா ராவமுதை யடிவணங்கி யினிதிருந்தார்.* **3**

*திருச்சிற்றம்பலம்*

**பொழிப்புரை :**

1. *திருநாவுக்கரசு சுவாமிகள் அந்த நீற்றறையினுள் புகுந்த பொழுது அம்பலத்திலே தாண்டவம் புரிகின்ற இறைவனின் திருவடியின் நிழலையே தமது தலைமேற்கொண்டு "சிவபெருமானின் அடியவர்க்கு ஈண்டு வருந் துன்பங்களும் உள்ளனவோ?" என்று துணிந்த மனத்துடன் அத்தாளிணையினையே நேர்நோக்கிப் பெருமானையே பதிகம் பாடித் தொழுதிருந்தார்.*

2. *மிகுந்த வெப்பமுடையதான அந்த நீற்றறையே சிறந்த இளவேனிற் பருவத்தில் மென்மையாக வீசிவரும் தென்றற் காற்று சார்ந்த குளிர்ந்த கழுநீர்த்தடாகம் போன்றும், நெருங்கிய ஒளியுடைய வெண்ணிலவின் கதிர்விரிந்தது போன்றும் மெல்லோசை விளைவிக்கும் யாழினது ஒலியையும் உடையதாகி, எல்லார்க்குந் தலைவராகிய சிவபெருமானின் திருவடிநீழலினது அருளாகிக் குளிர்ந்தது.*

3. குற்றமற்ற சந்திரனும் பெருமையுடைய கங்கை நதியும் நிலைபெற்று வளர்கின்ற சிரத்தினையுடையவனை, பேசுவதற்கு இனியவனை, உலகமெல்லாவற்றையுந் தனக்கடிமையாகக் கொண்ட பிஞ்ஞகனை, இறைவனை, எம்முடைய பெருமானை, எல்லா உயிர்களையுந் தோற்றுவிப்பவனை, ஆசையில் வந்ததும் உண்ணத் தெவிட்டாததுமான அமுதத்தை அடிவணங்கி இனிதிருந்தார். (வெய்ய நீற்றறையின் கொடுமை துன்புறுத்தாமையேயன்றி இறைவன் திருவடி நீழலாகிக் குளிர்ந்த காரணத்தால் அவர்க்கு நன்மையே யாகி இன்பத்துடன் இருந்தார் என்பது கருத்து.)

# 3. கொடுவிடம் அமுதமானது

## பெரியபுராணம்

[12–ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

ஆங்கதுகேட் டலுங்கொடிய வமண்சார்பாற் கெடுமன்னன்
ஓங்குபெரு மையலினு "னஞ்சூட்டு" மெனஉரைப்பத்
தேங்காதார் திருநாவுக் கரசரையத் தீயவிடப்
பாங்குடைய பாலடிசி லமுதுசெயப் பண்ணினுர். 1

"நஞ்சுமமு தாமெங்க ணுதரடி யார்க்" கென்று
வஞ்சமிகு நெஞ்சுடையார் வஞ்சனையாம் படியறிந்தே
செஞ்சடையார் சீர்விளக்குந் திறலுடையார் தீவிடத்தால்
வெஞ்சமண ரிடுவித்த பாலடிசின் மிசைந்திருந்தார். 2

பொடியார்க்குந் திருமேனிப் புனிதற்குப் புவனங்கண்
முடிவாக்குந் துயர்நீங்க முன்னைவிட மமுதாணுற்
படியார்க்கு மறிவரிய பசுபதியார் தம்முடைய
வடியார்க்கு நஞ்சமுத மாவதுதா னற்புதமோ. 3

திருச்சிற்றம்பலம்

**பொழிப்புரை :**

1. (விடங்கொடுத்துக் கொல்லுதலே இனிச் செய்யக்கடவது என்று) ஆங்கு அந்த வார்த்தைகளைக் கேட்டலும், கொடிய சமணர்களின் சார்பினுற் கெடுகின்ற பல்லவ மன்னனும் மிகுகின்ற மயக்கத்தினுலே (சமணர் சார்பினுல் அரசன் உண்மையறியாது மயங்கினுன் என்பது கருத்து). 'விஷத்தினை ஊட்டுங்கள்' என்று சொல்ல பகைவர்களாகிய சமணர்கள் திருநாவுக்கரசரை அத்தீய நஞ்சு கலந்த பாற்சோற்றினை யுண்ணும்படி செய்தனர்.

2. "எங்கள் நாதனுகிய சிவபெருமானின் அடியார்கட்குக் கொடிய விஷமும்கூட அமுதமாகும்" என்ற உறுதியுடையவராய், சிவந்த சடை முடியினையுடைய பரமசிவனது பெருமைகளை யெல்லாம் விளக்கிப் பாடும் திறமுடையவரான திருநாவுக்கரசர், வஞ்சனை மிகுந்த நெஞ்சமுடையாரது வஞ்சனையைத் தெரிந்து கொண்டே தீயவிடத்தால் கலந்து அக்கொடிய சமணர் இடுவித்த பாற்சோற்றினையுண்டு எக்குற்றவுமின்றி இனிதிருந்தார்.

3. திருநீறு நிறைந்து விளங்கும் திருமேனியினையுடைய புனிதனுகிய இறைவனுக்கு இவ்வுலகங்கள் யாவையும் அழிக்கும் தன்மையதாகிய பண்டைய காலத்து விஷமானது துன்பம் நீங்கும் படி அமுதமாகுமாகில், யாவர்க்கும் அறிவதற்கரிய தன்மையினு ராகிய பசுபதியாகிய பரமனுடைய அடியார்க்கு இந்த நஞ்சு அமுதமாவதும் ஒரு அற்புதம் ஆகுமோ? (ஆகாது என்றபடி).

# 4. திருநாவுக்கரசு நாயனர்

## திருவதிகைவீரட்டானம்

(விழுப்புரம்—மாயவரம் மார்க்கத்தில் பண்ருட்டி இரயில் நிலையத்திலிருந்து சுமார் இரண்டு மைல் தூரத்தில் கெடிலநதியின் வடகரையில் உள்ளது இத்தலம். தேசப்படத்தில் 8 என்ற எண்ணுல் குறிப்பிடப் பட்டிருக்கிறது.)

பண் - **காந்தாரம்] [4-ஆம் திருமுறை**

*திருச்சிற்றம்பலம்*

சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்திங்கட் சூளா மணியும்
வண்ண உரிவை யுடையும் வளரும் பவள நிறமும்
அண்ணல் அரண்முர ணேறும் அகலம் வளாய அரவும்
திண்ணன் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
**அஞ்சுவ தியாதொன் றுமில்லை அஞ்ச வருவது மில்லை.** 1

பூண்டதொர் கேழல் எயிறும் பொன்றிக ழாமை புரள
நீண்டதிண் டோள்வலஞ் சூழ்ந்து நிலாக்கதிர் போலவெண்ணூலும்
காண்டகு புள்ளின் சிறகுங் கலந்த கட்டங்கக் கொடியும்
ஈண்டு கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
**அஞ்சுவ தியாதொன் றுமில்லை அஞ்ச வருவது மில்லை.** 2

ஒத்த வடத்திள நாகம் உருத்திர பட்ட மிரண்டும்
முத்து வடக்கண் டிகையும் மூளைத்தெழு மூவிலை வேலும்
சித்த வடமும் அதிகைச் சேணுயர் வீரட்டஞ் சூழ்ந்து
தத்துங் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
**அஞ்சுவ தியாதொன் றுமில்லை அஞ்ச வருவது மில்லை.** 3

மடமான் மறிபொற் கலையும் மழுப்பாம் பொருகையில் வீணை
குடமால் வரையதிண் டோளுங் குனிசிலைக் கூத்தின் பயில்வும்
இடமால் தழுவிய பாகம் இருநில னேற்ற சுவடும்
தடமார் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
**அஞ்சுவ தியாதொன் றுமில்லை அஞ்ச வருவது மில்லை,** 4

பலபல காமத்த ராகிப் பதைத்தெழு வார்மனத் துள்ளே
கலமலக் கிட்டுத் திரியுங் கணபதி யென்னுங் களிறும்
வலமேந் திரண்டு சுடரும் வான்கயி லாய மலையும்
நலமார் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
**அஞ்சுவ தியாதொன் றுமில்லை அஞ்ச வருவது மில்லை.** 5

கரந்தன கொள்ளி விளக்குங் கறங்கு துடியின் முழக்கும்
பரந்த பதினெண் கணமும் பயின்றறி யாதன பாட்டும்
அரங்கிடை நூலறி வாளர் அறியப் படாததொர் கூத்தும்
நிரந்த கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
**அஞ்சுவ தியாதொன் றுமில்லை அஞ்ச வருவது மில்லை.** 6

கொலைவரி வேங்கை அதளுங் குலவோ டிலங்குபொற் றோடும்
விலைபெறு சங்கக் குழையும் விலையில் கபாலக் கலனும்
மலைமகள் கைக்கொண்ட மார்பும் மணியார்ந் திலங்கு மிடறும்
உலவு கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
**அஞ்சுவ தியாதொன் றுமில்லை அஞ்ச வருவது மில்லை.** 7

ஆடல் புரிந்த நிலையும் அரையில் அசைத்த அரவும்
பாடல் பயின்றபல் பூதம் பல்லா யிரங்கொள் கருவி
நாடற் கரியதொர் கூத்தும் நன்குயர் வீரட்டஞ் சூழ்ந்து
ஓடுங் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
**அஞ்சுவ தியாதொன் றுமில்லை அஞ்ச வருவது மில்லை.** 8

சூழு மரவத் துகிலுந் துகில்கிழி கோவணக் கீளும்
யாழின் மொழியவள் அஞ்ச அஞ்சா தருவரை போன்ற
வேழ முரித்த நிலையும் விரிபொழில் வீரட்டஞ் சூழ்ந்து
தாழுங் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
**அஞ்சுவ தியாதொன் றுமில்லை அஞ்ச வருவது மில்லை.** 9

நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
உரங்களெல் லாங்கொண் டெடுத்தான் ஒன்பதும் ஒன்றும் அலற
வரங்கள் கொடுத்தருள் செய்வான் வளர்பொழில் வீரட்டஞ் [சூழ்ந்து
நிரம்பு கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
**அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை.** **10**

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**வீரட்டேசுவரர்** தேவி :—**திரிபுரசுந்தரி**

**பதிக வரலாறு** :—சமணரது மையலில் சிக்குண்ட பல்லவ மன்னன் திருநாவுக்கரசு சுவாமிகளை நீற்று அறையிலிட்டும் விடங் கொடுத்தும் கொல்ல முயற்சிக்க இறைவர் திருவருளால் அரசுகளுக்கு எவ்வித துன்பமும் நேராதிருந்ததைக் கண்டு மீண்டும் சமணரது தூண்டுதலின்மேல் கோபாதிசயமான கொலைக்களிற்றை திருநாவுக்கரசர்மேல் விடும்படி ஏவினன். மிகுந்த ஆரவாரத்துடன் தம்மை நெருங்கி யானை வந்தபோது அடிகளார் சிறிதும் அஞ்சாது இடப வாகனத்திற்றிகழும் பெருமானின் பொற்கழல்களையே தொழுதிருந்தனர். அங்ஙனந் தொழுது விண்ணவர்தம் பெருமானை, விடையுகந்தேறும் பிரானைச் "சுண்ணவெண் சந்தனச் சாந்து" எனத் தொடுத்த இத்திருப்பதிகத்தை இம்மண்ணுலகத்து வாழ்வாரெல்லாம் ஓதிப் பயன்பெறுமாறு மகிழ்வுடனே பாடியருளினர். பாய்ந்து வந்த யானையும் அரசுகளை வலம் வந்து வணங்கி எழுந்து நின்றது. இப்பதிகத்தைப் பாராயணஞ் செய்து அச்சந் தவிர்ந்து வாழ்வோமாக.

**பொழிப்புரை :**

1. திருமேனியிற் பொலிந்திலங்கும் திருநீற்றுப்பூச்சும், சந்தனச்சாந்தும், சிரத்தில் தாங்கிய சுடர் விட்டொளிரும் பிறைச்சந்திரனாகிய சூளாமணியும், அழகிய நிறங்கொண்ட புலித்தோலுடையும், யானைத்தோலுடையும், அழகு வளர்கின்ற பவளநிறமும், பெருமையுடைய பாதுகாப்பும் வலிமையுமுடைய இடபவாகனமும், மார்பில் ஆபரணமாகக் கிடந்த பாம்பும், மிகுந்த பெருக்குடைய கெடில நதியாகிய தீர்த்தமும் உடைய ஒப்பற்ற ஒரு பெருமானின் அடியவர்கள் யாம். எனவே நாம் அஞ்சும்படியாக உள்ளது யாதொன்றும் இப்பொழுது இல்லை. இனியும் நாம் அஞ்சும்படி வரக்கடவதும் ஒன்றுமில்லை.

2. அணியாகப் பூண்ட ஒரு பன்றியின் பல்லும், பொன்போலத்திகழும் ஆமையோடு புரளும் மார்பும், நீண்ட வலிமையுடைய தோளை வலமாகச் சூழ்ந்த நிலாக்கதிர்போல் வெண்மை

யுடைய பூணூலும், காணத்தக்க அழகுடைய கொக்கினிறகும், கட்டங்கக் கொடியும், பெருகி வருகின்ற கெடிலப் புனலும் உடைய ஒப்பற்றவரான ஒருபெருமானின் அடியார்கள் நாம். எனவே நாம் அஞ்சும்படியாக உள்ளது யாதொன்றும் இப்பொழுது இல்லை. இனியும் நாம் அஞ்சும்படி வரக்கடவதும் ஒன்றுமில்லை.

3. வடம்போலத் தோளில் இட்டிருக்கும் இளமையுடைய நாகமும், யோகபட்டமிரண்டும், முத்துமாலையும், உருத்திராக்க மாலையும், முளைத்து இலைவிட்டது போன்று உள்ள மூவிலைச்சூலமும், சித்தவடம் என்னுந் திருமடமும், வானளாவ உயர்ந்த திருவீரட்டப் பதியைச் சூழ்ந்து ஓடும் கெடிலநதியாகிய தீர்த்தமும் உடையாராகிய ஒப்பற்ற ஒரு பெருமானின் அடியவர்கள் நாம். எனவே நாம் அஞ்சும்படியாக உள்ளது யாதொன்றும் இப்பொழுது இல்லை. இனியும் நாம் அஞ்சும்படி வரக்கடவதும் ஒன்றுமில்லை.

4. இளமையான மான்கன்றும், பொன் போன்று ஒளிரும் ஆடையும், மழுவும், பாம்பும், ஒரு கையில் வீணையும் மலைபோன்ற திண்ணிய தோளும் வளைந்த விற்போன்ற நிலையில் ஆடும் நடனத்தின் பயில்வும், திருமால் தழுவிய இடப்பாகமும், இப்பெரிய பூமி முழுவதுந் தாங்கிய சுவடும், விசாலமான கெடிலநதியாகிய தீர்த்தமும் உடையவராகிய ஒப்பற்ற ஒரு பெருமானின் அடியவர்கள் நாம். எனவே நாம் அஞ்சும்படியாக உள்ளது யாதொன்றும் இப்பொழுது இல்லை. இனியும் நாம் அஞ்சும்படி வரக்கடவதும் ஒன்றுமில்லை.

5. பற்பல தீய எண்ணங்களையுடையவராகி பதைத்து எழுவார்களுடைய மனதிற்குள்ளே அவைகளை உழக்கி அப்புறப்படுத்தும் கணபதியென்னும் களிறும், கண்களாகக் கொண்டுள்ள ஞாயிறு, திங்கள் ஆகிய இருசுடரும், உயர்ந்த திருக்கயிலாய மலையும், நலம் பொருந்திய கெடிலம் என்னும் தீர்த்தமும் உடையாராகிய ஒப்பற்ற ஒரு பெருமானின் அடியவர்கள் நாம். எனவே நாம் அஞ்சும்படியாக உள்ளது யாதொன்றும் இப்பொழுது இல்லை. இனியும் நாம் அஞ்சும்படி வரக்கடவது ஒன்றுமில்லை.

6. எரிந்து குறைந்த கொள்ளியாகிய விளக்கும், ஒலிக்கின்ற உடுக்கையின் முழக்கமும், பரந்து நிற்கும் பதினெட்டுக் கணமும், பிறர் பயின்றறியாத பாடலும், நூல்களின் அறிவு ஒன்றினாலேயே மட்டும் அறியக்கூடாததான ஒரு நடனமும், நிரம்பிய கெடிலம் என்னும் தீர்த்தமும் உடையவரான ஒப்பற்ற ஒரு பெருமானின் அடியவர்கள் நாம். எனவே நாம் அஞ்சும்படியாக உள்ளது யாதொன்றும் இப்போது இல்லை. இனியும் நாம் அஞ்சும்படி வரக்கடவதும் யாதொன்றும் இல்லை.

7. கொலைத்தொழில் வல்லதும் வரிகளையுடையதுமான புலித்தோலும், பொருந்தியிருக்கின்ற ஆமையோடும் விளங்குகின்ற பொன்னாலாகிய திருத்தோடும், விலை மதிப்புள்ள சங்கினால் ஆன குழையும், விலை மதிப்பில்லாத கபாலமாகிய பிச்சைப்பாத்திரமும், பார்வதியால் பாகம் கொள்ளப்பட்ட மார்பும், மணிவடங்கள் விளங்கிப் பிரகாசிக்கும் திருநீலகண்டமும் (நீல மணிபோல் வைத்த விடம் விளங்கு கண்டமும்), உலவுகின்ற கெடிலம் என்னும் தீர்த்தமும் உடையவராகிய ஒப்பற்றவராகிய ஒரு பெருமானின் அடியவர்கள் நாம். எனவே நாம் அஞ்சும்படியாக உள்ளது யாதொன்றும் இப்போது இல்லை. இனியும் நாம் அஞ்சும்படி வரக் கடவதும் ஒன்றுமில்லை.

8. நடனமியற்றுகின்ற நிலையும், இடையிலே கச்சாக அமைத்த பாம்பும், பாடல்கள் பயில்கின்ற பலவகையான பூதக் கூட்டங்களும், பல்லாயிரக்கணக்கான கருவி நூல்களால் அறியப் படாத திருக்கூத்தும், நன்றாக உயர்ந்து விளங்கும் திருவதிகை வீரட்டத்தினைச் சூழ்ந்து ஓடுகின்ற கெடிலம் என்னும் தீர்த்தத்தி னையுமுடைய ஒப்பற்ற ஒரு பெருமானது அடியவர்கள் நாம். எனவே நாம் அஞ்சும்படியாக உள்ளது யாதொன்றும் இப்போது இல்லை. இனியும் நாம் அஞ்சும்படி வரக்கடவதும் ஒன்றுமில்லை.

9. உடலைச் சூழ்ந்து இருக்கின்ற மர உரியாடையும், துகிலி னின்றும் கிழிக்கப்பட்ட கோவணமும், யாழினை யொத்த மொழி யுடைய உமாதேவியும் அஞ்சும்படித் தாம் அஞ்சாது பெரிய மலை போன்று வந்த யானையினைத் தோலை உரித்த நிலையும், விரிந்த பொழில்கள் நிறைந்த திருவீரட்டானத்தைச் சூழ்ந்து ஓடுங் கெடிலம் என்னும் தீர்த்தமுமுடையவரான ஒப்பற்ற ஒரு பெரு மானுடைய அடியவர்கள் நாம். எனவே நாம் அஞ்சும்படியாக உள்ளது யாதொன்றும் இல்லை. இனியும் நாம் அஞ்சும்படி வரக் கடவதும் ஒன்றுமில்லை.

10. நரம்புகளெழுந்த கைகளால் உமாதேவியார் அஞ்சும்படி கயிலாய மலையைத் தன் வலிமையெல்லாம் கொண்டு பெயர்த் தெடுத்தலில் முயன்றவனான இராவணனுடைய பத்து வாய்களா லும் அவன் அலறும்படி செய்துப் பின்னர் அவன் சாமகானத்துக் கிரங்கி அவனுக்கு வரங்கள் கொடுத்தருள் செய்தவனான, வளரும் பொழில்கள் நிறைந்த திருவீரட்டானஞ் சூழ்ந்து நிரம்பிய கெடிலம் என்னும் தீர்த்தத்தினையுடைய ஒப்பற்ற ஒரு பெருமா னுடைய அடியவர்கள் நாம். எனவே நாம் அஞ்சும்படியாக உள்ளது யாதொன்றும் இப்போது இல்லை. இனியும் நாம் அஞ்சும் படி வரக்கடவதும் ஒன்றுமில்லை.



சேக்கிழார் திருஉருவங்கள், குன்றத்தூர்

# 5. பெரியபுராணம்

## திருநாவுக்கரசு நாயனுர் புராணப்பகுதி

### சமணர் ஏவிய யானை கொல்லாது தொழுதது

[12-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*மாபாவிக் கடையமணர் வாகீசத் திருவடியாங்*
*காபாலி யடியவர்பாற் " கடக்களிற்றை விடு " கென்னப்*
*பூபாலர் செயன்மேற்கொள் புலைத்தொழிலோ னவர்தம்மேற்*
*கோபாதி சயமான கொலைக்களிற்றை விடச்சொன்னுன்.* 1

*பாவக்கொடு வினைமுற்றிய படிறுற்றடு கொடியோர்*
*நாவுக்கர செதிர்முற்கொடு நணுகிக்கரு வரைபோல்*
*ஏவிச்செறு பொருகைக்கரி யினையுய்த்திட வெருளார்*
*சேவிற்றிகழ் பவர்பொற்கழ றெளிவுற்றனர் பெரியோர்.* 2

*அண்ண லருந்தவ வேந்த ரானைதம் மேல்வரக் கண்டு*
*விண்ணவர் தம்பெரு மானை விடையுகந் தேறும் பிரானைச்*
*" சுண்ணவெண் சந்தனச் சாந்து " தொடுத்த திருப்பதி கத்தை*
*மண்ணுல குய்ய வெடுத்து மகிழ்வுட னேபாடு கின்றார்.* 3

*வஞ்சகர் விட்ட சினப்போர் மதவெங் களிற்றினை நோக்கிச்*
*" செஞ்சடை நீண்முடிக் கூத்தர் தேவர்க்குந் தேவர் பிரானுர்*
*வெஞ்சுடர் மூவிலைச் சூல வீரட்டர் தம்மடி யோம்நாம்!*
*அஞ்சுவ தில்லை "யென் றென்றே யருந்தமிழ் பாடி யறைந்தார்.* 4

*தண்டமிழ் மாலைகள் பாடித் தம்பெரு மான்சர ணுகக்*
*கொண்ட கருத்தி னிருந்து குலாவிய வன்புறு கொள்கைத்*
*தொண்டரை முன்வல மாகச் சூழ்ந்தெதிர் தாழ்ந்து நிலத்தில்*
*எண்டிசை யோர்களுங் காண விறைஞ்சி யெழுந்தது வேழம்.* 5

*திருச்சிற்றம்பலம்*

பொழிப்புரை :

1. பெரும்பாவிகளும் கடையவர்களுமாகிய சமணர்கள் வாகீசத் திருவடிகளாகிய சிவபிரானின் அடியவர்மேல் 'மத யானையை ஏவிவிடுக' என்று சொல்ல உலகத்தைக் காக்குந்

தொழில் பூண்டு கொலைத்தொழில் செய்யும் அவ்வரசன் கோபம் மிகவுமுடையதாகிய கொலையானையை அவர்மேல் ஏவும்படி சொன்னான்.

2. பாவங்கள் மிக்க கொடிய செய்கைகள் முடியும்பொருட்டு வஞ்சனையை மேற்கொண்டு கொலை புரிய எண்ணிய சமணராகிய கொடியவர்கள் திருநாவுக்கரசு சுவாமிகள் எதிரே அணுகி வந்து பகைவரைப் போரில் கொல்லுகின்ற துதிக்கையையுடைய யானையினை கரியதொரு மலையை ஏவுவதைப்போல ஏவிச் செலுத்த, பெருமைமிக்க திருநாவுக்கரசு சுவாமிகள் சிறிதும் அச்சமில்லாதவராகி இடபவாகனத்தில் திகழ்கின்ற சிவபெருமானது பொற்கழல்களையே மனதில் தெளிந்து இருந்தனர்.

3. பெருமையுடைய அரிய தவவேந்தராகிய திருநாவுக்கரசர் அந்த யானை தம்மேல் வருவதைக் கண்டு தேவர்கட்கெல்லாம் தலைவரை, இடபவாகனத்தின் மேலேறி வருபவராகிய சிவபிரானைத் துதித்துச் "சுண்ண வெண் சந்தனச் சாந்து" எனத் தொடங்கும் திருப்பதிகத்தை இம்மண்ணுலகுளோர் யாவரும் உய்யுமாறு எடுத்து மிகவும் மகிழ்ச்சியுடனே பாடுகின்றார்.

4. வஞ்சகர்கள் ஏவிய சினமும் போர்த்தொழில் வல்லதும் மதமுடையதுமான கொடிய யானையை நோக்கி, "சிவந்த சடையுடைய நீண்ட முடியினையுடைய கூத்தர், தேவர்கட்கெல்லாம் தேவராகிய மகாதேவனார், வெஞ்சுடர் மூவிலைச் சூலமேந்திய திருவீரட்டானேச்வரர். அவருடைய அடியோமாகிய நாம் அஞ்ச வருவதொன்றில்லை" என்று அரிய தமிழ்ப் பதிகம் பாடினார்.

5. குளிர்ச்சியுடைய தமிழ் மாலைகள் பாடித் தமது பெருமானையே அடைக்கலம் புகுந்த கருத்துடன் இருந்து விளங்கிய அன்பு மிக்க கொள்கையையுடைய திருத்தொண்டரை அவர் முன்பு வலமாகச் சுற்றி வந்து எதிர் தாழ்ந்து எண்டிசையோர்களும் காணும் படி அந்த யானை நிலத்தில் விழுந்து வணங்கி எழுந்தது.

# 6. திருநாவுக்கரசு நாயனார்

## நமச்சிவாயத் திருப்பதிகம்

பண் - காந்தார பஞ்சமம்] [4–ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே. 1

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கல மரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலம் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கலம் நமச்சி வாயவே. 2

விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை யொன்று மில்லையாம்
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே. 3

இடுக்கண்பட் டிருக்கினு மிரந்தி யாரையும்
விடுக்கிற் பிரானென்று வினவுவோ மல்லோம்
அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளி னுமுற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே. 4

வெந்தநீ றருங்கலம் விரதி கட்கெலாம்
அந்தணர்க் கருங்கல மருமறை யாறங்கம்
திங்களுக் கருங்கலந் திகழு நீண்முடி
நங்களுக் கருங்கல நமச்சி வாயவே. 5

சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமில னொடொறு நல்கு வானலன்
குலமில ராகிலுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே. 6

வீடினா ருலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினா ரந்நெறி கூடிச் சென்றலும்
ஓடினே னோடிச்சென் றுருவங் காண்டலும்
நாடினே னாடிற்று நமச்சி வாயவே. 7

இல்லக விளக்கது இருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே. 8

முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறி யேசர ணாதல் திண்ணமே
அந்நெறி யேசென்றங் கடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நமச்சி வாயவே. 9

மாப்பிணை தழுவிய மாதொர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே. 10

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு :**—யானையினை ஏவியும் இறைவனருளால் பதிகம் பாடித் தப்பிய திருநாவுக்கரசு சுவாமிகளைக் கடைசியாகச் சமணர்கள் ஒரு கல்லோடு சேர்த்துக் கட்டிக் கடலில் அழுத்தினார்கள். அதுகாலை சிந்தனை உறைப்புடைய மெய்த் தொண்டராகிய வாகீசர், "எது எப்பரிசாயினுமாகுக, யான் எந்தையை ஏத்துவன்" என்று திருவைந்தெழுத்தைத் துதிக்கத் தொடங்குபவராய்ச் "சொற்றுணை வேதியன்" என்னுமிப் பதிகத்தைப் பாடியவளவில் அவரைக் கட்டிய பாசங்கள் அற அவரை ஏற்றிய கல்லே தெப்பமாக அதன்மீது மிதந்தருளினார். முன் செய்த தவத்தால் வருணனும் இவரைத் தன் முதுகிற் சுமந்துகொண்டு வந்து திருப்பாதிரிப்புலியூருக்கு அருகே கரையேற விட்டான். சுவாமிகளும் அடியார் புடைசூழத் திருக்கோயிலுக்கு எழுந்தருளினார்.

**பொழிப்புரை :**

1. எவ்வகையானும் மக்கட்குத் துணையாய் நிற்கும் வேதத்தைச் சொன்னவனும், வேதத்தின் பொருளாய் விளங்குபவனும், சோதி ஸ்வரூபனுமான தேவனாகிய இறைவனுடைய பொன்போற் பொலிவுடைய திருவடிகளை விடாது பிடித்துப் பற்றிக் கைதொழுதலால் கல்லோடு சேர்த்துக் கட்டிக் கடலில் புகும்படிச் செலுத்தினாலும் அப்பொழுதும் உற்ற நல்ல துணையாவது நமச்சிவாய என்னும் திருமந்திரமேயாகும்.

2. பூக்களுள் சிறந்தது தாமரை மலரேயாகும். பசுக்களுக்குச் சிறப்பாவது சிவபெருமானுக்குப் பஞ்சகவ்யங்களை அபிடேகத்திற்கு அருளுதல் ஆகும். அரசர்க்குச் சிறப்பாவது ஒருபாற் கோடாது யாவர்க்கும் ஒப்ப முறை செய்தல். (அதுபோல) நாவிற்குச் சிறப்பாவது நமச்சிவாய மந்திரத்தை ஓதுதலேயாகும்.

3. வானம் அளாவ அடுக்கப்பட்டுள்ள விறகுக் குவியலில் தீயானது உண்ணும் பொருட்டுப் புகுந்தால் அவ்விறகுக் குவை முழுவதும் எரிந்து தீர்ந்துவிடும். (அதுபோல) இவ்வுலகில் வருதற்குக் காரணமாய் முன் செய்தனவும், பிறந்த பின்னர் பெருக்கியனவுமாகிய பாவங்களின் பெருக்கை அவை தொலையுமளவும் உடன் நின்று தீர்ப்பது நமச்சிவாய என்னும் திருமந்திரமேயாகும்.

4. எவ்வகைத் துன்பம் நேரினும் சிவபெருமான் அல்லது வேறு எவரையும், நீர் எம்மை விடுவித்தால் எமக்குப் பிரான் ஆவீர் என்று இரந்து கேட்க மாட்டோம். மலையின்கீழ் அகப்பட்டுக் கிடந் தாலும் (அதுபோன்ற பெருந்துன்பம் வரினும்) கருணையுடன் நாம் அடைந்த பயத்தினைத் தீர்ப்பது நமச்சிவாய என்னும் திருமந்தி ரமேயாகும்.

5. தவசிகளுக்கெல்லாம் அரிய பொருளாய் வேண்டப்படுவது திருநீறேயாகும். அந்தணர்க்கு வேண்டப்படுவது அரிய நான்கு மறைகளும், ஆறு அங்கங்களுமேயாகும். சந்திரனுக்கு வேண்டப் படுவது இறைவன் திருமுடியில் அமர்தலேயாகும். நமக்கெல்லாம் அரிய பொருளாய் வேண்டப்படுவது நமச்சிவாய என்னும் திரு மந்திரமேயாகும்.

6. இறைவன் வேண்டுதல், வேண்டாமை இலனாய் நாள் தோறும் யாவர்க்கும் நலம் செய்வோனாயினும் அவனடி சார்ந்த வரே அதனாற் பயன் பெறுவர். அவனை வழிபடுபவர் குலப் பெருமை முதலியவை இல்லாராயினும் அக்குலத்திற்குப் பொருந் துவதாகிய நன்மையைக் கொடுப்பது நமச்சிவாய என்னும் திரு மந்திரமேயாகும்.

7. மேலான தொண்டர்கள் இவ்வுலகப் பற்றுக்கள் யாவுங் கடந்த நிலையில் நின்றனர். அவர்கள் சிவநெறியினை முயன்று சிவயோகம் கைவரப் பெற்று நின்றனர். அவர்களைச் சென்று அடைந்து நானும் அந்நெறியினையடைய எண்ணி விரைந்து சென்று அவரது திருவுருவத்தைக் கண்டு அந்நெறியே திருவருளை நாடி னேன். அப்படி நாடி நின்ற என்னை நமச்சிவாய என்னும் திரு மந்திரம் நாடிற்று.

8. வீடுகளில் ஏற்றப்படும் விளக்கு அவ்வீடுகளில் உள்ள இருளை ஒழிக்கும். வேதத்தில் சொல்லப்படும் இத்திருவைந் தெழுத்தாகிய விளக்கு சுயஞ்சோதியாய்க் கெடாத ஒளியுள்ளது. வீடுகளில் ஏற்றப்படும் பல விளக்குகள் எல்லோராலும் காணப் பெறுவது. ஆனால் யாரும் காணாத முறையில் அகவிருளைப் போக்கும் விளக்காய் இருப்பது நமச்சிவாய என்னும் திருமந்தி ரமேயாகும்.

9. எல்லா நெறிகட்கும் முற்பட்ட நெறியாகிய முழுமுதற் கடவுளாகிய முக்கண்ணனாகிய சிவபெருமானின் நெறியையே நாம் சரணமடைதல் திண்ணம். அச்சிவநெறியில் சென்று சரண் அடைந்தவர்க்கெல்லாம் நல்ல வழியாக இருப்பது நமச்சிவாய என்னும் திருமந்திரமேயாகும்.

10. பெருமைவாய்ந்த பெண்மான் போன்ற உமாதேவியாரை ஓர் பாகத்து உடையவனுடைய மலர் மாலைகள் பொருந்திய

திருவடிகளை விடாது பற்றிக் கைகூப்பித் தொழும் பொருட்டு நாவினிடத்து இடையறுது பயிலப்படுவதாகிய நமச்சிவாயத் திருப் பதிகத்தினைப் பாடிப் போற்ற வல்லவர்களுக்கு எவ்வகையான துன்பங்களும் இல்லை.

# 7. பெரியபுராணம்

## கடலில் கல் தெப்பமாய் மிதந்தது

[12-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*அப்பரி சவ்வினை முற்றி யவரகன் றேகிய பின்னர்*
*ஒப்பரு மாழ்கடல் புக்க உறைப்புடை மெய்த்தொண்டர் தாமும்*
*" எப்பரி சாயினு மாக வேத்துவ னெந்தையை " என்று*
*செப்பிய வண்டமிழ் தன்னற் சிவனஞ் செழுத்தும் துதிப்பார்.* 1

*" சொற்றுணை வேதிய " னென்னுந் தூமொழி*
*நற்றமிழ் மாலையா " நமச்சி வாய "வென்று*
*அற்றமுன் காக்குமஞ் செழுத்தை யன்பொடு*
*பற்றிய உணர்வினற் பதிகம் பாடினர்.* 2

*பெருகிய வன்பினர் பிடித்த பெற்றியால்*
*அருமல ரோன்முத லமரர் வாழ்த்துதற்கு*
*அரியவஞ் செழுத்தையு மரசு போற்றிடக்*
*கருநெடுங் கடலினுட் கன்மி தந்ததே.* 3

*அப்பெருங் கல்லுமங் கரசு மேற்கொளத்*
*தெப்பமாய் மிதத்தலிற் செறிந்த பாசமுந்*
*தப்பிய ததன்மிசை இருந்த தாவில்சீர்*
*மெய்ப்பெருந் தொண்டனர் விளங்கித் தோன்றினர்.* 4

*இருவினைப் பாசமும் மலக்க லார்த்தலின்*
*வருபவக் கடலில்வீழ் மாக்க ளேறிட*
*வருளுமெய் யஞ்செழுத் தரசை இக்கடல்*
*ஒருகன்மே லேற்றிட லுரைக்க வேண்டுமோ.* 5

*அருணயந் தஞ்செழுத் தேத்தப் பெற்றவக்*
*கருணைநா வரசினைத் திரைக்க ரங்களால்*
*தெருணெறி நீர்மையிற் சிரத்திற் றங்கிட*
*வருணனுஞ் செய்தனன் முன்பு மாதவம்.* 6

வாய்ந்தசீர் வருணனே வாக்கின் மன்னரைச்
சேர்ந்தடை கருங்கலே சிவிகை யாயிட
ஏந்தியே கொண்டெழுந் தருளு வித்தனன்
பூந்திருப் பாதிரிப் புலியூர்ப் பாங்கினில். 7

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை :

1. அவ்விதமாக அக்காரியத்தை முடித்து அவர்கள் நீங்கிப் போயின பின்பு மிக்க ஆழமுள்ள கடலினுள்ளே புக்க உண்மைத் தொண்டில் திடமுடையவராகிய திருநாவுக்கரசரும் "எவ்வா றுயின நிலை நேரினும் நேருக நான் எந்தை பிரானை ஏத்துவேன்" என்று செப்பிய வளமுடைய தமிழினுல் சிவநாமமஞ்செழுத்தைத் துதிப்பாராயினர்.

2. "சொற்றுணை வேதிய"னென்னும் தூய வாசகத்தால் தொடங்கி நன்மை பயக்கும் தமிழ் மாலையாக "நமச்சிவாய" என்று துன்பங்கள் வாராவண்ணம் காக்கின்ற திருவைந்தெழுத்தை அன்புடன் பற்றிய உணர்வினுல் பதிகம் பாடியருளினர்.

3. பெருக்கெடுத்த அன்பினையுடையவராகி பிடித்துக் கொண்ட தன்மையினுலே பிரமதேவன் முதலாகிய தேவர்களாலும் வாழ்த்துவதற்கு அரியதாகிய திருவைந்தெழுத்தையும் திருநாவுக் கரசர் இவ்வாறு துதிக்கவே கருமையான பெரிய கடலினுள் கல் மிதந்தது.

4. அந்தப் பெரிய கல்லும் அங்குத் திருநாவுக்கரசு சுவாமிகள் அதன்மேல் வீற்றிருக்கும்படி ஒரு தெப்பம் போன்று மிதத்தலால் அவரது திருமேனியைக் கல்லுடன் வைத்துக் கட்டியிருந்த கயிறும் அறுந்து போயிற்று. அதன்மீது அமர்ந்திருந்த அழியாத பெரு மையையுடைய உண்மையான திருத்தொண்டராகிய திருநாவுக் கரசர் தமது பெருமை நன்கு விளங்கும்படித் தோன்றினர்.

5. நல்வினை, தீவினை ஆகிய இருவினைக் கயிற்றினுல் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலமாகிய கல்லுடன் கட்டப்படு வதால் பிறவியாகிய ஆழ்ந்த கடலினுள் விழுகின்ற மாக்கள் அப் பிறவிக்கடலினுள் ஆழ்ந்துவிடாமல் கரை ஏறும்படி அருள் செய் கின்ற மெய்ம்மைப் பொருளான அத்திருவைந்தெழுத்து திருநாவுக் கரசரை இந்தக் கடலில் ஒரு கல்லின்மேல் ஏற்றிடுதலும் ஒரு வியப் பாகச் சொல்லவேண்டுமோ? (வேண்டாம் என்றபடி)

6. இறைவனருளை நாடி திருவைந்தெழுத்தைப் போற்றும் பேறு பெற்ற அந்தக் கருணையே உருவான திருநாவுக்கரசரை தன் னுடைய அலைக்கரங்களால் ஏந்தி அவரது பெருமையைத் தெளிந்து

அறிந்துகொண்ட தன்மையால் தன் தலைமீது தாங்கிக்கொள்ள முன்.காலத்தில் வருணனும் பெருந்தவத்தினைச் செய்திருந்தனன்.

7. பெருமை பொருந்திய வருணன், திருநாவுக்கரசு நாயனாரைச் சேர்ந்து அடைந்த கருங்கல்லே சிவிகையாக ஆகிவிட அதனை ஏந்தியபடியே கொண்டுவந்து திருப்பாதிரிப்புலியூரின் பக்கத்தில் எழுந்தருளச் செய்தனன்.

# 8. திருநாவுக்கரசு நாயனர்

## திருப்பாதிரிப்புலியூர்

(விழுப்புரம் — மாயவரம் மார்க்கம் கடலூர் N.T. இரயில் நிலையத்திலிருந்து இரண்டு பர்லாங் தூரத்தில் உள்ளது இத்தல ஆலயம். தேசப் படத்தில் 9 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

**திருவிருத்தம்]** **[4-ஆம் திருமுறை**

திருச்சிற்றம்பலம்

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் றோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
ஏன்றா னிமையவர்க் கன்பன் திருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்களுக்கே. 1

பற்றாய் நினைந்திடப் போதுநெஞ் சேயிந்தப் பாரைமுற்றும்
சுற்றா யலைகடன் மூடினுங் கண்டேன் புகனமக்கு
உற்றா னுமையவட் கன்பன் றிருப்பா திரிப்புலியூர்
முற்றா முளைமதிக் கண்ணியி னான்றன மொய்கழலே. 2

விடையான் விரும்பியென் னுள்ளத் திருந்தா னினிநமக்கிங்
கடையா வவல மருவினை சாரா நமனையஞ்சோம்
புடையார் கமலத் தயன்போல் பவர்பா திரிப்புலியூர்
உடையா னடியா ரடியடி யோங்கட் கரியதுண்டே. 3

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த தீவண்ணனே. 8

மண்பா தலம்புக்கு மால்கடல் மூடிமற் றேழுலகும்
விண்பால் திசைகெட் டிருசுடர் வீழினு மஞ்சனெஞ்சே
திண்பா னமக்கொன்று கண்டோந் திருப்பா திரிப்புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே. 9

திருந்தா வமணர்தம் தீநெறிப் பட்டுத் திகைத்துமுத்தி
தருந்தா ளிணைக்கே சரணம் புகுந்தேன் வரையெடுத்த
பொருந்தா வரக்க னுடனெரித் தாய்பா திரிப்புலியூர்
இருந்தா யடியே னினிப்பிற வாமல்வந் தேன்றுகொள்ளே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**தோன்றுத்துணைநாதர்** தேவி :—**தோகைநாயகி**

**பதிக வரலாறு** :—இது கடலினின்றும் இறையருளால் கரையேறிய அப்பர் சுவாமிகள் திருப்பாதிரிப்புலியூர்க் கோயிலில் சென்று இறைவனை வணங்கிப் பாடியருளிய திருப்பதிகமாகும். இதில் ஆறு திருப்பாடல்களே இங்குக் கொடுக்கப்பட்டுள்ளன. இவற்றை ஓதி அன்பர்கள் அல்லல்களினின்றும் உய்வார்களாக.

**பொழிப்புரை :**

1. அன்னையாகவும் பிதாவாகவும் தமக்கையாகவும் உள்ள எம் பெருமான் அவன், அவள், அது என்ற மூவகைத்தாக இவ்வுலகத்தினைப் படைத்து உகந்தவன் என்மனத்துள் இருக்க ஏற்றுக்கொண்டான். தேவர்களுக்கு அன்பனுகிய திருப்பாதிரிப்புலியூரில் கோயில் கொண்டுள்ள பரமன் தன் அடியவர்களாகிய எங்களுக்குத் தோன்றுத்துணையாக இருந்தான்.

2. இவ்வுலகம் முழுவதையும் அலைகடல் மூடினும் நமக்குப் புகலிடம், நமக்கு உற்றவனும் உமையவளுக்கு அன்பனும் திருப்பாதிரிப்புலியூரில் கோயில் கொண்டுள்ள இளம்பிறைச் சந்திரனைச் சூடின பெருமானுடைய திருக்கழலேயாகும். ஆகையால் ஏ நெஞ்சமே! அதனையே பற்றுக நினைவாயாக.

3. இடப வாகனனுகிய பெருமான் விருப்பத்தோடு என்னுடைய உள்ளத்தில் அமர்ந்திருந்தான். இனி நமக்குத் துன்பங்கள் வந்து சேராது. கொடிய வினைகளும் நம்மையணுகா. இயமனுக்கும் நாம் பயப்படமாட்டோம். பிரம்மாதி தேவர்களையெல்லாம் தனக்கு உடைமைப் பொருளாகவுடைய திருப்பாதிரிப்புலியூர் பெருமானின் அடியவர்களாகிய எங்களுக்குக் கிடைத்தற்கரிய பொருள் இனியும் உண்டோ?

8. நான் புழுவாகப் பிறந்தாலும் புண்ணியனாகிய உன் திருவடி என் மனத்தினின்றும் நீங்காது நிலைத்திருக்க எனக்கு வரந்தர வேண்டும். இவ்வுலகத்திலே தொழுபவர்களுக்கு மனமிரங்கி அருள் செய்கின்ற திருப்பாதிரிப்புலியூரில் கோயில் கொண்டுள்ள சடைமேற்கங்கை நதியைத் தரித்த தீவண்ணனாகிய பெருமானே.

9. இந்தப் பூமி பாதாளத்தில் அழுந்தி கடலால் மூடப்பட்டு மற்றைய உலகங்களெல்லாம் தங்கள் நிலையினின்றும் பிறழ்ந்து சந்திர சூரியர்களும் நிலைதடுமாறி விழுந்தாலும் நெஞ்சமே! நீ பயப்படாதே. (ஏனெனில்) திருப்பாதிரிப்புலியூரில் கோயில் கொண்டுள்ள கண்ணுதற் கடவுளுடைய இரு திருப்பாதங்களாகிய வலிய பற்றுக்கோடு ஒன்று நாம் கண்டறிந்துவிட்டதனாலென்க.

10. உண்மை நிலை கண்டும் திருந்தாத சமணருடைய தீய நெறியிலகப்பட்டு மயங்கிப் பிறகு அதனின்றும் தப்பி முத்தி தரவல்ல நின் திருப்பாதங்களில் சரணமடைந்தேன். கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த இராவணனுடைய உடலை நெரித்தவனே! திருப்பாதிரிப்புலியூரில் கோயில் கொண்டுள்ளவனே! அடியேன் மீண்டும் பிறவாவண்ணம் ஏற்றுக்கொள்வாயாக.



 சிவமயம் 





# 5
# எடுத்தகாரியம் எளிதில் நிறைவேற

ஓம் ஸோமாஸ்கந்தமூர்த்தயே நம :

ஓம் சந்த்ரசேகரமூர்த்தயே நம :

## 1. கபிலதேவ நாயனர்

### மூத்த நாயனர் திருவிரட்டைமணிமாலை

[11-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்*
*பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்*
*ஆதலால் வானேரும் யானை முகத்தானைக்*
*காதலால் கூப்புவர்தம் கை.*

*திருச்சிற்றம்பலம்*

சகல கார்யங்களிலும் சித்திபெற எல்லா மதத்தர்களும் முதன்முதலில் விநாயகப்பெருமானை வணங்குவது நம் தமிழ்நாட்டு வழக்கம். இவருக்கு மூத்தபிள்ளையார் எனப் பெயர். சிவபெருமானே தேவர்களைத் துன்புறுத்திய கஜமுகாசுரனைக் கொன்று தேவர்களுக்கு நல்வாழ்வையளிப்பதற்காகவே, தன் இச்சையால் யானைமுகத்துடன் ஞானமயமான திருமேனியைத் தாங்கிக் கொண்டு தோன்றினுன் என்பது வரலாறு. இவரை வணங்கி வழிபட்டால் சகல கார்யங்களிலும் வெற்றி காணலாம் என்பது உறுதி.

சிவபெருமானும் திரிபுர தகனத்தின் பொருட்டுத் தேர்மீது ஏறிச் சென்றபோது, விநாயகப்பெருமானை முதற்கண் வணங்காது புறப்பட்டதால், தேர்ச்சக்கரத்தின் அச்சு முறிந்து பின்னர்ச் சிவபெருமான் அச்சிறுபாக்கத்தில் விநாயகப்பெருமானைப் பூஜித்துச் சென்றதால்தான் திரிபுராதிகளை வென்ருர் என்ருல் என்னே மூத்த பிள்ளையாரின் மேன்மை?

**இதன் பொருள் :—**விநாயகப்பெருமானை வழிபட்டால் அவனருளால் வழிபடுவோர்க்கு எல்லாவிதமான லட்சுமிகடாட்சம் சித்திக்கும்! செய்ய நினைக்கும் காரியங்களும் இனிது நிறைவெய்தும். செம்மையான சொற்களைப் பேசும் வாக்கு வல்லமையை அளிக்கும்; பெருமையையுந் தரும்; மக்களை நல்ல உருவுடையவராகச் செய்யும்; ஆதலால் தேவலோகத்தில் உள்ள தேவர்களும் விருப்பத்தால் பயபக்தியுடன் யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைக் கைகூப்பி வணங்கி அவனருளைப் பெறுவார்கள். எனவே, நிலவுலகத்திலுள்ள மக்களாகிய நாமும் வழிபடவேண்டும் என்பது பெறப்படும்.

## 2. பட்டினத்துப் பிள்ளையார் அருளிய

## திருவிடைமருதூர் மும்மணிக்கோவை

[பட்டினத்துப் பிள்ளையார் திருவிடைமருதூரில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ மகாலிங்கப்பெருமான்மீது பாடி அருளிய மும்மணிக்கோவையில் உள்ள ஒரு பாடல்.]

[11–ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

வளையார் பசியின் வருந்தார் பிணியின் மதனனம்புக்
கிளையார் தனங்கண் டிரங்கிநில்லார் இப்பிறப்பினில்வந்
தளையார் நரகினுக் கென்கடவார் பொன்னலர்ந்த கொன்றைத்
தளையார் இடைமருதன் னடியாரடி சார்ந்தவரே.

திருச்சிற்றம்பலம்

**இதன் பொருள் :—**திருவிடைமருதூரில் கோயில் கொண்டுள்ள கொன்றையணிந்த ஸ்ரீ மகாலிங்கப்பெருமான்றன் அடிகளையடைந்த அடியார்களது திருவடியைப் பெற்றவர்கள், இவ்வுலக வாழ்விலுள்ளவரை ஒருநாளும் துன்பப்படார்; பசியால் வருந்தமாட்டார்; நோய்வாய்ப்படார்; காம வேதனையில் சிக்கமாட்டார்; பணத்தைக் கண்டு மயங்கி விரும்பார்; பிறவியை மேலும் அடையார்; நரகமென்பது கிடையாது; எனவே எல்லா நன்மைகளையும் இகலோக வாழ்விலே பெறுவர் என்பது உறுதி.

**குறிப்பு :—**இந்தத் தலைப்பில் மேற்கொடுக்கப்பட்டுள்ள திருப்பாடல்களுடன் இந்நூலில் வேறு பகுதிகளில் உள்ள எந்தப் பதிகத்தையும் சேர்த்துப் பாடலாம்.

---

 # சிவமயம் 



# 6
# வேண்டிய யாவும் வேண்டியபடி பெற



ஓம் வ்ருஷபாரூடமூர்த்தயே நம:                ஓம் வ்ருஷபாந்திகமூர்த்தயே நம:

## 1. சுந்தரமூர்த்தி நாயனார்

### திருவாவடுதுறை

*(மாயவரம்—தஞ்சாவூர் மார்க்கத்தில் நரசிங்கன்பேட்டை இரயில் நிலையத்திலிருந்து தென்கிழக்கே 1 மைல். தேசப் படத்தில் 10 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)*

பண் - **தக்கேசி]**                                        **[7-ஆம் திருமுறை**

*திருச்சிற்றம்பலம்*

*மறையவ னொருமாணிவந் தடைய*
*வார மாய்அவன் ஆருயிர் நிறுத்தக்*
*கறைகொள் வேலுடைக் காலனைக் காலாற்*
*கடந்த காரணங் கண்டுகண் டடியேன்*
*இறைவன் எம்பெரு மான்என்றெப் போதும்*
*ஏத்தி ஏத்திநின் றஞ்சலி செய்துன்*
*அறைகொள் சேவடிக் கன்பொடும் அடைந்தேன்*
*ஆவ டுதுறை ஆதிஎம் மானே.* **1**

*தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி*
*சித்தி ரப்பந்தர் சிக்கென இயற்றச்*
*சுருண்ட செஞ்சடை யாய்அது தன்னைச்*
*சோழன் ஆக்கிய தொடர்ச்சிகண் டடியேன்*
*புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம்*
*போற்றி போற்றிஎன் றன்பொடு புலம்பி*
*அருண்டென் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்*
*ஆவ டுதுறை ஆதிஎம் மானே.* **2**

திகழும் மால்வன் ஆயிர மலரால்
ஏத்து வான்ஒரு நீள்மலர் குறையப்
புகழி ஞல்அவன் கண்இடந் திடலும்
புரிந்து சக்கரங் கொடுத்தல்கண் டடியேன்
திகழும் நின்திருப் பாதங்கள் பரவித்
தேவ தேவநின் திறம்பல பிதற்றி
அகழும் வல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 3

வீரத் தால்ஒரு வேடுவ ஞகி
விசைத்தொர் கேழலைத் துரந்துசென் றணைந்து
போரைத் தான்விச யன்றனக் கன்பாய்ப்
புரிந்து வான்படை கொடுத்தல்கண் டடியேன்
வாரத் தால்உன நாமங்கள் பரவி
வழிபட் டுன்திற மேநினைந் துருகி
ஆர்வத் தோடும்வந் தடியிணை அடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 4

ஒக்க முப்புரம் ஓங்கெரி தூவ
உன்னை உன்னிய மூவர்நின் சரணம்
புக்கு மற்றவர் பொன்னுல காளப்
புகழி ஞல்அருள் ஈந்தமை அறிந்து
மிக்க நின்கழ லேதொழு தரற்றி
வேதி யாஆதி மூர்த்திநின் அரையில்
அக்க ணிந்தஎம் மான்உனை அடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 5

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு:**—சிவபெருமான் எழுந்தருளியுள்ள பல தலங்களைத் தரிசிக்கச் சென்ற சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருநாட்டியத்தான்குடி, திருவலிவலம், திருப்புகலூர், திருப்பனையூர், திருநன்னிலம், திருவீழிமிழலை முதலிய தலங்களைத் தரிசித்துப் பதிகம் பாடித் துதித்துப் பின்னர் திருவாவடுதுறையையடைந்து இறைவன் கோயிலைப் புறத்தே வலம் வந்து பின்னர் உள்புக்கு உளங்கொண்டு உருகும் அன்புடன், “மறையவன்” என்று தொடங்கும் இப்பதிக மாலையைச் சாத்தி சிலந்தியைச் சோழமன்னனுக்கிய இறைவனின் கருணையைச் சிறப்பித்து வழிபட்டார். இப்பதிகத்தில் நமக்கு ஐந்து திருப்பாடல்களே கிடைத்துள்ளன. அன்பர்கள் இதனை உளமுருகும் பக்தியுடன் தினமும் ஓதினுல் எல்லாப் பேறுகளும் பெறுவர் என்பது உறுதி.

பொழிப்புரை :

திருவாவடுதுறையில் கோயில் கொண்டுள்ள முதல்வனாகிய சிவபெருமானே! (இதனை எல்லாப் பாடல்கட்கும் கொள்க)

1. பிரம்மசாரியாகிய ஒரு வேதியச் சிறுவன் உன்னைச் சரணடைய நீ அவன்மீது அன்புகொண்டு அவன் உயிரைக் காக்க இயமனைக் காலால் உதைத்து வெற்றி கொண்டதையறிந்து கொண்டு, எம்பெருமான் என்றும், இறைவன் என்றும் எப்போது முன்னைத் துதித்து அஞ்சலி செய்து உன்னுடைய திருவடிகளைச் சரணமடைந்தேன்.

2. தன்னுடைய வாயின் நூல்கொண்டு அழகிய பந்தலைச் செய்து உனக்குத் தொண்டு செய்த சிலந்திப் பூச்சியை சோழ மன்னனாகச் செய்த வரலாற்றைக் கேட்டுத் தொண்டனாகிய அடியேன் புரண்டு விழுந்து நின்பொன்மலர்ப்பாதம் போற்றி நின்று அன்புடன் புலம்பி இனிமேல் வரும் வினைகளுக்கு அஞ்சி உன் திருவடிகளைச் சரணமடைந்தேன்.

3. திருமாலானவர் ஆயிரம் மலர் கொண்டு உன்னை அருச்சிக்கும் சமயத்தில் ஒரு மலர் குறையத் தன்னுடைய தாமரை மலர்போன்ற கண்ணைப் பெயர்த்து எடுத்து அதையே மலராகக் கொண்டு உன்னையருச்சிக்கவும் அதற்கு மகிழ்ந்து நீ அத்திருமாலுக்குச் சக்கராயுதம் வழங்கிய வரலாற்றையறிந்து தொண்டனாகிய யான் நின்னுடைய திருவடிகளைத் துதித்து தேவதேவா என்று நின் கருணைத்திறங்கள் பலவற்றைச் சொல்லி வேரறுக்க முடியாத வலிய வினைகளுக்கு அஞ்சி உன்னைச் சரணமடைந்தேன்.

4. வேடக் கோலங்கொண்டு ஒரு பன்றியைத் துரத்திப் போய் அதனை எய்து அதையே குறிவைத்து எறிந்தவனும் பாசுபதாஸ்திரத்துக்காகத் தவஞ்செய்து கொண்டிருந்தவனுமான அருச்சுனனுக்கு மிகவும் அன்போடு இரங்கி மேலான அந்த அஸ்திரத்தை நீ அருளினதை யறிந்து தொண்டனாகிய யானும் அன்பால் உன் திருநாமங்களைப் புகழ்ந்து வழிபாடு செய்து நினைந்துருகி ஆசையுடன் வந்து உன் மலரடியிணையைச் சரணமடைந்தேன்.

5. முப்புரங்களும் ஒருங்கே எரியுமாறு நெருப்புச் சிந்திய உன்னை நினைத்த மூன்று பேர்கள் உன்னடைக்கலம் புக, அவர்கள் பொன்னுலகாளும்படி அருள் செய்தமையையறிந்து அடியேனும் மேலான உன் திருவடியையே வணங்கித் துதித்து வேதியா! ஆதிமூர்த்தியே! அக்கமணியணிந்த பெருமானே உன்னைச் சரணமடைந்தேன்,

# 2. சுந்தரமூர்த்தி நாயனார்

## திருநாகைக்காரோணம்

*(இது நாகப்பட்டினம் என்று பிரசித்தமாய் வழங்கப்படும். தஞ்சாவூர் — நாகூர் மார்க்கத்தில், நாகப்பட்டினம் இரயில் நிலையத்தி னின்றும் சுமார் 1 மைலில் உள்ளது. தேசப்படத்தில் 12 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)*

பண் - கொல்லிக்கௌவாணம்] [7–ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப்*
*பாவையரைக் கிறிபேசிப் படிறுடித் திரிவீர்*
*செத்தார்தம் எலும்பணிந்து சேவேறித் திரிவீர்*
*செல்வத்தை மறைத்துவைத்தீர் எனக்கொருநா ளிரங்கீர்*
*முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக் கோவை*
*அவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறுங்*
*கத்தூரி கமழ்சாந்து பணித்தருள வேண்டும்*
*கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே.* 1

*மிண்டாடித் திரிதந்து வெறுப்பனவே செய்து*
*வினைக்கேடு பலபேசி வேண்டியவா திரிவீர்*
*தொண்டாடித் திரிவேனைத் தொழும்புதலைக் கேற்றும்*
*சுந்தரனே கந்தமுதல் ஆடைஆ பரணம்*
*பண்டாரத் தேயெனக்குப் பணித்தருள வேண்டும்*
*பண்டுதான் பிரமாணம் ஒன்றுண்டே நும்மைக்*
*கண்டார்க்குங் காண்பரிதாய்க் கனலாகி நிமிர்ந்தீர்*
*கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே.* 5

*இலவவிதழ் வாய்உமையோ டெருதேறிப் பூதம்*
*இசைபாட இடுபிச்சைக் கெச்சுச்சம் போது*
*பலவகம்புக் குழிதர்வீர் பட்டோடு சாந்தம்*
*பணித்தருளா திருக்கின்ற பரிசென்ன படிறே*
*உலவுதிரைக் கடல்நஞ்சை அன்றமரர் வேண்ட*
*உண்டருளிச் செய்ததுமக் கிருக்கொண்ணு திடவே*
*கலவமயில் இயலவர்கள் நடமாடுஞ் செல்வக்*
*கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே.* 6

தூசுடைய அகலல்குல் தூமொழியாள் ஊடல்
தொலையாத காலத்தோர் சொற்பாடாய் வந்து
தேசுடைய இலங்கையர்கோன் வரையெடுக்க அடர்த்துத்
திப்பியகீ தம்பாடத் தேரொடுவாள் கொடுத்தீர்
நேசமுடை அடியவர்கள் வருந்தாமை அருந்த
நிறைமறையோர் உரைவீழி மிழலைதனில் நித்தல்
காசருளிச் செய்தீர்இன் றெனக்கருள வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 7

மாற்றமேல் ஒன்றுரையீர் வாளாநீர் இருந்தீர்
வாழ்விப்பன் எனஆண்டீர் வழியடியேன் உமக்கு
ஆற்றவேற் றிருவுடையீர் நல்கூர்ந்தீர் அல்லீர்
அணியாரூர் புகப்பெய்த அருநிதியம் அதனில்
தோற்றமிகு முக்கூற்றில் ஒருகூறு வேண்டும்
தாரீரேல் ஒருபொழுதும் அடியெடுக்கல் ஒட்டேன்
காற்றனைய கடும்பரிமா ஏறுவது வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 8

மறியேறு கரதலத்தீர் மாதிமையேல் உடையீர்
மாநிதியந் தருவனென்று வல்லீராய் ஆண்டீர்
கிறிபேசிக் கீழ்வேளூர் புக்கிருந்தீர் அடிகேள்
கிறியும்மாற் படுவேனோ திருவாணை உண்டேல்
பொறிவிரவு நற்புகர்கொள் பொற்சுரிகை மேலோர்
பொற்பூவும் பட்டிகையும் புரிந்தருள வேண்டும்
கறிவிரவு நெய்சோறு முப்போதும் வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 10

பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கும் எனக்கும்
பற்றாய பெருமானே மற்றாரை உடையேன்
உண்மயத்த உமக்கடியேன் குறைதீர்க்க வேண்டும்
ஒளிமுத்தம் பூணாரம் ஒண்பட்டும் பூவும்
கண்மயத்த கத்தூரி கமழ்சாந்தும் வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரென்
றண்மயத்தால் அணிநாவ லாரூரன் சொன்ன
அருந்தமிழ்க ளிவைவல்லா ரமருலகாள் பவரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—காயாரோகணேசுவரர் தேவி :—நீலாயதாக்ஷி அம்மை

**பதிக வரலாறு** :—சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருநாகைக் காரோணம் சென்று இத்திருப்பதிகத்தினைப் பாடி பொன்னும்,

நவமணியும், பட்டாடையும், சாந்தம், குதிரை, சுரிகை முலியவை களைப் பெற்றார் என்பது வரலாறு. இன்றும் இதனை உள்ளன் புடன் ஓதுவோர் வேண்டிய யாவும் பெறலாம்.

**பொழிப்புரை :**

கடல் சூழ்ந்த திருநாகைக்காரோணத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனே! (இதனைப் பின்வரும் எல்லாப் பாடல் உரைக்கும் சேர்த்துக்கொள்ளவும்)

1. பல ஊர்களில் போய்ப் பிச்சையேற்று உண்டு பல வேத கீதங்களைப் பாடித் தாருகவனத்து இருடிபத்தினிகளை வஞ்சித்துத் திரிவீர்! உயிர் நீத்தாரது எலும்புக் கூடுகளை அணிந்துகொண்டு எருதின்மீது ஏறித்திரிவீர்! செல்வத்தை ஒளித்து வைத்தீர். அடியேனுக்கு ஒருநாள் இரங்கி முத்துமாலை, பிரகாசிக்கின்ற வயிர மணிக் கோவைகள், ஆகியவற்றைத் தரிக்கக் கொடுத்தருளி, உடம்பில் மணம் வீசுகின்ற கஸ்தூரி மணக்கின்ற சந்தனம் என்பவற்றையும் நான் பூசும்படி எனக்குக் கிடைக்குமாறு கட்டளையிட்டருளவேண்டும்.

5. மிடுக்கான காரியங்களைச் செய்துகொண்டு உலகத்தாரால் வெறுக்கத்தக்க செயல்களைச் செய்து உம்மிஷ்டப்படியே திரிவீர். தொண்டு செய்து திரிகின்ற என்னை உம்முடைய அடியவரில் முதன்மையாக ஏற்றுக்கொண்ட அழகனே! சந்தனம் முதல் மற்றும் பல ஆடை ஆபரணங்களை பொக்கிஷத்திலிருந்து அடியேன் பெறும்படி பணித்தருள வேண்டும். அடியார்க்கு அருள்பவர் நீர் என்ற பிரமாண வார்த்தை ஒன்று உண்டே. உம்மைக் காண்பார்க்குக் காணவரிதாகிய நெருப்புருவாய் அமர்ந்த பெருமானே!

6. முருக்கம்பூபோன்ற உதடுகளையுடைய உமாதேவியாரோடு எருதேறி பூதங்கள் இசைபாட நல்ல உச்சிக்காலத்தில் பல இல்லங்களில் பிச்சைக்குப் புகுந்து திரிபவரே! அடியேனுக்குப் பட்டாடைகளையும்,சந்தனம் முதலிய வாசனைத் திரவியங்களும் அருள் செய்யாது இருப்பது என்ன வஞ்சனையோ? அலைகள் நிரம்பிய பாற்கடல் விஷத்தை அன்று தேவர்கள் பிரார்த்திக்க அமுது செய்தது உமக்கு அடியவர்கள் அல்லல்களைப் பார்த்துக்கொண்டு அவைகளைத் தீர்க்காது வாளாவிருக்கவொண்ணுது என்ற காரணம்பற்றியல்லவா?

7. உமாதேவியின் ஊடல் தீராத காலத்தில் இராவணன் கயிலாயமலையை எடுக்க அவனை நெருக்கிப் பிறகு அவன் திவ்வியமான சாமகீதம் பாட அதனால் மகிழ்ந்த நீர் அவனுக்குத் தேரும் வாளும் கொடுத்தீர். உம்பால் நேசமுள்ள அடியவர்கள் வருந்தாது உண்ண திருவீழிமிழலையில் நாள்தோறும் பொற்காசு அருளிச் செய்தீர். அதேபோல இன்று அடியேனுக்கும் அருளவேண்டும்.

8. என்னுடைய வேண்டுகோளுக்கு எதிர்மொழியாக ஒன்றும் பேசமாட்டீர். சும்மா இருந்தீர். என்னை வாழ்விப்பேன் என்று ஆண்டுகொண்டருளினீர். நீர் மிகவும் செல்வமுடையவர். வறுமை எய்தினவர் அல்லர். அடியேன் உமக்குத் தொண்டு செய்ய ஆரூரில் இட்ட பெருநிதியில் மூன்றில் ஒரு கூறு அடியேனுக்கு அளிக்கவேண்டும். தராவிடில் உம்மை ஒருபோதும் அடிபெயர்க்க ஒட்டேன். மற்றும் ஏறுவதற்கு வாயுவை ஒத்த வேகமுடைய குதிரையையருள வேண்டும்.

10. 'மானை ஏற்றுக்கொண்ட கையினையுடையிர், மிக்க அழகுடையீர், பெருஞ்செல்வம் தருவேன்' என்று வல்லவராய் வந்து ஆண்டு கொண்டீர். அடிகளே! இப்பொழுது வஞ்சனை பேசிக் கீழ் வேளூரில் போய் இருந்தீர். உம்மால் நான் வஞ்சனைப் படுவேனோ? உம்முடைய திருவருள் ஆணை என்பால் இருக்குமாயின் புள்ளிகளோடு கூடின நல்ல நிறத்தைக் கொண்ட பொற்சுரிகையின்மீது ஒரு பொன்னாலான பூவும், பட்டிகையும் வேண்டும். அன்போடு அருள் செய்யவேண்டும். நல்ல கறி வகைகளோடு கூடிய நெய் சோறு முப்பொழுதும் கிடைக்குமாறு அருள் செய்யவேண்டும்.

11. பண் போன்ற சொல்லினையுடைய பரவைக்கும் சங்கிலிக்கும் எனக்கும் ஆதரவாக உள்ள பெருமானே! வேறு யாரை நான் பற்றுக்கோடாக உடையேன். எல்லோர் உள்ளத்திலும் அந்தர்யாமியாயிருக்கின்ற நீர் அடியவனாகிய என்னுடைய குறையைத் தீர்க்கவேண்டும். ஒளி விடுகின்ற முத்துக்களும் பூணத்தகுந்த ஆரங்களும் அழகிய பட்டாடைகளும், மலர் மாலையும், கண்ணுக்கினியதான கஸ்தூரியும், பரிமளிக்கின்ற சந்தனமும் இவற்றை அருளவேண்டும் என்று பொருந்தும் வகையால் திருநாவலூரர் ஆரூரனாகிய சுந்தரன் செப்பிய இத்தமிழ்ப் பாடல்கள் கற்று ஓத வல்லவர்கள் சுவர்க்கலோகத்தை ஆளவல்லவர்கள் ஆவார்கள்.





# சிவமயம்





# 7
# தரித்திரம் நீங்கித் தனமுடன் வாழ



ஓம் புஜங்கலலிதமூர்த்தயே நம : ஓம் புஜங்கத்ராஸமூர்த்தயே நம :

## 1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### திருவாவடுதுறை

(நாலடி மேல்வைப்பு)

பண் - காந்தார பஞ்சமம்] [3-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

இடரினும் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்தநஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள்ஆவடுதுறை அரனே. 1

வாழினும் சாவினும் வருந்தினும்போய்
வீழினும் உனகழல் விடுவேன் அல்லேன்
தாழிளந் தடம்புனல் தயங்குசென்னிப்
போழிள மதிவைத்த புண்ணியனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள்ஆவடுதுறை அரனே. 2

நனவினும் கனவினும் நம்பாவுன்னை
மனவினும் வழிபடல் மறவேன்அம்மான்
புனல்விரி நறுங்கொன்றைப் போதணிந்த
கனல்எரி அனல்புல்கு கையவனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள்ஆவடுதுறை அரனே. 3

துய்மலோ டருந்துயர் தோன்றிடினும்
அம்மலர் அடியலால் அரற்று தென்நாக்
கைமல்கு வரிசிலைக் கணையொன்றினால்
மும்மதிள் எரிஎழ முனிந்தவனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள்ஆவடுதுறை அரனே. 4

கையது வீழினும் கழிவுறினும்
செய்கழல் அடியலால் சிந்தைசெய்யேன்
கொய்யணி நறுமலர் குலாயசென்னி
மையணி மிடறுடை மறையவனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள்ஆவடுதுறை அரனே. 5

வெந்துயர் தோன்றியோர் வெருவுறினும்
எந்தாய்உன் னடியலால் ஏத்தாதென்நா
ஐந்தலை யரவுகொண் டரைக்கசைத்த
சந்தவெண் பொடியணி சங்கரனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோஉனதின் னருள்ஆவடுதுறை அரனே. 6

வெப்பொடு விரவியோர் வினைவரினும்
அப்பாவுன் அடியலால் அரற்றுதென்நா
ஒப்புடை ஒருவனை உருவழிய
அப்படி அழலெழ விழித்தவனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோஉனதின் னருள்ஆவடுதுறை அரனே. 7

பேரிடர் பெருகியோர் பிணிவரினும்
சீருடைக் கழலலால் சிந்தைசெய்யேன்
ஏருடை மணிமுடி இராவணனை
ஆரிடர் படவரை அடர்த்தவனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோஉனதின் னருள்ஆவடுதுறை அரனே. 8

உண்ணினும் பசிப்பினும் உறங்கினும்நின்
ஒண்மல ரடியலால் உரையாதென்நாக்
கண்ணனுங் கடிகமழ் தாமரைமேல்
அண்ணலும் அளப்பரி தாயவனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோஉனதின் னருள்ஆவடுதுறை அரனே. 9

பித்தொடு மயங்கியோர் பிணிவரினும்
அத்தாவுன் னடியலால் அரற்று தென்நாப்
புத்தருஞ் சமணரும் புறன்உரைக்கப்
பத்தர்கட் கருள்செய்து பயின்றவனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோஉனதின் னருள்ஆவடுதுறை அரனே. 10

அலைபுனல் ஆவடு துறைஅமர்ந்த
இலைநுனை வேற்படை யெம்இறையை
நலம்மிகு ஞானசம் பந்தன்சொன்ன
விலையுடை யருந்தமிழ் மாலைவல்லார்
வினையாயினநீங் கிப்போய் விண்ணவர் வியனுலகம்
நிலையாகமுன் னேறுவர் நிலமிசை நிலையிலாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**மாசிலாமணியீசர்** தேவி :—**ஒப்பிலாமுலையம்மை (அதுலகுசநாயகி)**

**பதிக வரலாறு** :—திருஞானசம்பந்தர் அடியாராகிய திருக்கூட்டத்தாருடன் திருவாவடுதுறையில் தங்கியிருந்த நாட்களில் அவருடைய தந்தையான சிவபாதவிருதயர் தாம் செய்ய வேண்டிய வேள்விக்குரிய காலம் வந்தணைந்தமையால் அதற்குத் தேவையான பொருள் வேண்டினர். புகலியர் தலைவரும் "அந்தமில் பொருளாவன ஆவடுதுறையுள் எந்தையார் அடித்தலங்களன்றோ" என எழுந்து இறைவர் திருமுன்பு புக்கு "நீள் நிதி வேண்டினர்க்கு ஈவது ஒன்றும் மற்றிலேன்; உன்னடி அல்லதொன்று அறியேன்" என்று பேரருள் வினவிப்பாடிய செந்தமிழ்த் திருப்பதிகம் இது. பதிகம் பாடி முடித்து வள்ளலார் அடியிணை வழுத்தி அஞ்சலி செய்ததும் இறைவர் இன்னருளால் ஒரு சிவபூதம் விரைந்து வந்து பீடத்தின்மீது ஆயிரம் பசும்பொன் கொண்ட கிழி ஒன்று வைத்து "உய்த்த இக்கிழி உலவாப் பொற்கிழி. உமக்கு நித்தனர் அருள் செய்தது" என்று உரைக்க அத்தனர் திருவருள் நினைந்து அவனிமேற்பணிந்து அக்கிழியினையெடுத்துத் தாதையார்க்களித்து, "இப்பொருள் தங்கள் வேள்விக்கேயல்லாமல் சீகாழிப்பதி வாழும் வேதியர் அனைவர்க்கும் வேள்வி செய்யவும் வளரும்" என்று கூறி அவர்க்கு விடையளித்து அனுப்பித் தாம் ஆவடுதுறையில் மகிழ்ந்து இனிதிருந்தார். எடுக்கக் குறையாத உலவாக்கிழி பெற்ற இத்திருப்பதிகப் பாராயணம் இற்றை நாளிலும் அதற்குரிய பலனைக் கொடுத்துக்கொண்டிருக்கிறது. திருஞானசம்பந்தப் பெருமானின் திருவாக்கினலேயே "விலையுடை அருந்தமிழ் மாலை" எனப் போற்றப்பட்ட இத்திருப்பதிகம் அனைவர்க்கும் நலங்களனைத்தும் நல்குவதாக.

பொழிப்புரை :

1. துன்பத்திலும், தளர்ச்சியிலும், பண்டை வினைத் தொடர்ச்சியிலும், உன்னுடைய திருப்பாதங்களைத் தொழுது எழுவேன். திருப்பாற்கடலில் அமுதுடன் தோன்றிய விஷத்தினை கண்டத்தில் வைத்த வேதப் பொருளே! நிதி வேண்டினார்க்கு ஈவதற்கு எம்மிடம் ஒன்றும் இல்லையேல் நீ எங்களை ஆளும் வகை இதுதானா? உன்னுடைய இன்னருள் அதுவோ? ஆவடுதுறை அரனே. (கடைசி இரு அடிகளின் பொருளை எல்லாப் பாடல்களின் உரையிலும் சேர்த்துக்கொள்க)

2. வாழ்விலும், சாவிலும், வருத்தங்கள் படும்போதும் வழுக்கி விழுந்தபோதும் உன்னுடைய திருத்தாளை நான் விடமாட்டேன். கங்கை தங்குகின்ற தலையிலே பிறைச் சந்திரனை வைத்த புண்ணியனே!

3. கனவு, நினைவு, ஆகிய இருநிலைகளிலும் உன்னை நான் மனத்தாலும் வழிபடுதலை மறவேன். சுடுகின்றதும் பற்றி எரிகின்றதுமான அனல் தங்கும் திருக்கரங்களையுடையவனே.

4. தும்மல் நோய், மற்றும் கொடுந்துயரங்கள் தோன்றினாலும் உன்னுடைய மலர்போன்ற அத்திருவடியல்லாது வேறொன்றையும் என் நா பேசாது. கையில் பிடித்த வில்லில் பூட்டிய ஒரு கணையினால் முப்புரங்களும் எரியும்படி கோபித்தவனே!

5. கையில் உள்ள பொருள் நழுவினாலும் தொலைந்துபோனாலும் உன்னுடைய செம்மையான திருவடியல்லது வேறொன்றினை நினைக்கமாட்டேன். கொய்யப்பட்ட அழகிய மணம் வீசும் மலர்கள் விளங்கும் தலையினையும், கருமை பொருந்திய திருமிடற்றினையும் உடையவனே.

6. கொடுமையான துயரங்கள் தோன்றி அதன் காரணமாய அச்சம் எய்தினாலும் எந்தையே, உன்னுடைய திருவடிப் பெருமையைத் தவிர வேறு ஒன்றினையும் என் நா புகழ்ந்து பேசாது. ஐந்தலை நாகத்தினை அரையில் கச்சாக அணிந்த, வெண்ணீற்றுப் பொடி மேனியில் பூசிய சங்கரனே!

7. வெப்புநோயுடன் கலந்து தீவினைகள் நேர்ந்தாலும் என் அப்பனே! உன் திருவடியைத் தவிர வேறு ஒன்றினையும் என் நா பேசாது. மன்மதன் உருவழியும்படி அத்தன்மையாக நெருப்பு எழும்படி நெற்றிக் கண்ணை விழித்தவனே.

8. பெருங்கஷ்டங்கள் பெருகி, நோய் வந்தாலும் உன்னுடைய சிறப்பு மிக்க கழல்களைத் தவிர வேறு ஒன்றினைச் சிந்திக்க

மாட்டேன். இராவணனை பெருங்கஷ்டம் உறும்படி கயிலை மலையின்கீழ் மிதித்தவனே.

9. உண்ட நிலையிலும், பசித்த நிலையிலும், தூங்கும்போதும் உன்னுடைய ஒளி பொருந்திய மலரடிகளைத் தவிர வேறு ஒன்றினை என் நா போற்றிப் பேசாது. திருமாலும் பிரமதேவனும் உன்னை இன்ன தன்மையன் என்று அளக்க ஒண்ணுதபடி (அடிமுடி காணுத படி) ஆனவனே.

10. பித்தம் மேலிட்டு அதனுல் ஓர் பிணி வந்தாலும் என் தந்தையே! உன்னடி தவிர வேறு ஒன்றினை என் நா பேசாது. புத்தர்களும் சமணர்களும் அல்லாதவற்றைக் கூறப் பக்தர்களுக்குப் பேரருள் செய்து பழக்கப்பட்டவனே!

11. அலைகளோடு கூடிய புனல் உடைய திருஆவடுதுறையில் எழுந்தருளியிருக்கிற இலைபோன்ற நுனியுடைய சூலப் படையினை ஏந்திய எமது சிவபிரானை நலம் மிக்க திருஞானசம்பந்தன் பாடிய விலை உடைய அரிய தமிழ்மாலையைக் கற்று ஓதவல்லவர்கள் வினையாயின வெல்லாம் நீங்கிப்போய் விண்ணவர்களுடைய உலகத்தில் நிலைத்து நிற்க முன்னேறிச் செல்வர். துன்பமிக்க இந்நில உலகத்தில் தங்கியிருக்கமாட்டார்கள். (இத்திருப்பதிகம் தந்தையார் பொருட்டுப் பொன்பெறுங் குறிப்பு தோன்ற "ஈவது ஒன்று எமக்கில்லையேல்" எனப் பாடினமையால் "விலையுடை யருந்தமிழ் மாலை" எனப்பட்டது.)

## 2. சுந்தரமூர்த்தி நாயனுர்

### நம்பி என்ற திருப்பதிகம்

பண் - **தக்கேசி**] [**7-ஆம் திருமுறை**

திருச்சிற்றம்பலம்

மெய்யைமுற் றப்பொடிப் பூசியோர் நம்பி
வேதம்நான் கும்விரித் தோதியோர் நம்பி
கையில்ஓர் வெண்மழு வேந்தியோர் நம்பி
கண்ணும் மூன்றுமுடை யாயொரு நம்பி
செய்யநம் பிசிறு செஞ்சடை நம்பி
திரிபுரந் தீயெழச் செற்றதோர் வில்லால்
எய்தநம் பிஎன்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 1

திங்கள்நம் பிமுடி மேல்அடி யார்பாற்
சிறந்தநம் பிபிறந் தஉயிர்க் கெல்லாம்
அங்கண்நம் பியருள் மால்விசும் பாளும்
அமரர்நம் பிகும ரன்முதல் தேவர்
தங்கள்நம் பிதவத் துக்கொரு நம்பி
தாதை என்றுன் சரண்பணிந் தேத்தும்
எங்கள்நம் பியென்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 2

வருந்தஅன் றுமத யானை யுரித்த
வழக்குநம் பிமுழக் குங்கடல் நஞ்சம்
அருந்துநம் பிஅம ரர்க்கமு தீந்த
அருளின்நம் பிபொரு ளால்வரு நட்டம்
புரிந்தநம் பிபுரி நூலுடை நம்பி
பொழுதும் விண்ணும்முழு தும்பல வாகி
இருந்தநம் பியென்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 3

ஊறுநம் பிஅமு தாஉயிர்க் கெல்லாம்
உரியநம் பிதெரி யம்மறை அங்கம்
கூறுநம் பிமுனி வர்க்கருங் கூற்றைக்
குமைத்தநம் பிகுமை யாப்புலன் ஐந்தும்
சீறுநம் பிதிரு வெள்ளடை நம்பி
செங்கண்வெள் ளைச்செழுங் கோட்டெரு தென்றும்
ஏறுநம் பிஎன்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 4

குற்றநம் பிகுறு கார்எயில் மூன்றைக்
குலைத்தநம் பிசிலை யாவரை கையில்
பற்றுநம் பிபர மானந்த வெள்ளம்
பணிக்கும்நம் பிஎனப் பாடுத லல்லால்
மற்றுநம் பிஉனக் கென்செய வல்லேன்
மதியி லேன்படு வெந்துயர் எல்லாம்
எற்றுநம் பிஎன்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 5

அரித்தநம் பிஅடி கைதொழு வார்நோய்
ஆண்டநம் பிமுன்னை ஈண்டுல கங்கள்
தெரித்தநம் பிஒரு சேவுடை நம்பி
சில்பலிக் கென்றகந் தோறுமெய் வேடம்

தரித்தநம் பிசம யங்களின் நம்பி
தக்கன்றன் வேள்விபுக் கன்றிமை யோரை
இரித்தநம் பிஎன்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 6

பின்னைநம் பும்புயத் தான்நெடு மாலும்
பிரமனும் என்றிவர் நாடியுங் காணு
உன்னைநம் பிஒரு வர்க்கெய்த லாமே
உலகுநம் பிஉரை செய்யும தல்லால்
முன்னைநம் பிபின்னும் வார்சடை நம்பி
முழுதிவை இத்தனை யும்தொகுத் தாண்ட
தென்னைநம் பிஎம் பிரானாய நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 7

சொல்லைநம் பிபொரு ளாய்நின்ற நம்பி
தோற்றம் ஈறுமுத லாகிய நம்பி
வல்லைநம் பிஅடி யார்க்கருள் செய்ய
வருந்திநம் பிஉனக் காட்செய கில்லார்
அல்லல்நம் பிபடு கின்றதென் நாடி
அணங்கொரு பாகம்வைத் தெண்கணம் போற்ற
இல்லநம் பியிடு பிச்சைகொள் நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 8

காண்டுநம் பிகழல் சேவடி என்றும்
கலந்துனைக் காதலித் தாட்செய்கிற் பாரை
ஆண்டுநம் பியவர் முன்கதி சேர
அருளும்நம் பிகுரு மாப்பிறை பாம்பைத்
தீண்டுநம் பிசென்னி யிற்கன்னி தங்கத்
திருத்துநம் பிபொய்ச் சமண்பொரு ளாகி
ஈண்டுநம் பிஇமை யோர்தொழு நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 9

கரக்கும்நம் பிகசி யாதவர் தம்மைக்
கசிந்தவர்க் கிம்மையோ டம்மையி லின்பம்
பெருக்குநம் பிபெரு கக்கருத்தா......... 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—பழமலைநாதர் தேவி :—பெரியநாயகி

**பதிக வரலாறு** :—சுந்தரமூர்த்தி நாயனார் திருக்கூடலையாற்றூர் தொழுது திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) அடைந்து திருக்கோயில் வலம் கொண்டு இறைஞ்சி மகிழ்ந்து பெருமானை "நஞ்சியிடை"

என்னும் திருப்பதிகம் பாடித்தொழுது பின் பெருமானிடம் பொன் வேண்டும் குறிப்புக் கொண்டவராய்ப் பாடியருளியது இத்திருப் பதிகம். பனிமதிச் சடைப்பிரானும் சுந்தரருக்குப் பன்னீராயிரம் பொன்னை மிக்க அருளுடன் நல்கினர். இறைவரைப் பல வாற்றாலும் ஏத்தி எங்கட்கு எழுபிறப்பிலும் நீயே உற்ற துணை என்று பாடியருளியது இத்திருப்பதிகம். உள்ளம் கரைந்து இதனை ஓதும் பக்தர்களுக்கெல்லாம் நம்பி பாடிய நம்பியாகிய பரமன் பெருஞ்செல்வத்தினை அருள் செய்வான் என்பது உறுதி. எனவே அனைவரும் ஓதிப் பயன்பெறுவோமாக.

**பொழிப்புரை :**

நம்பி என்ற சிறந்த பெயரால் இறைவரைப் பலகாற் கூவி அழைத்துப் பெருமானின் பலவகைச் சிறப்புக்களையும் எடுத்தோதி நீயே எங்கட்கு எல்லாப் பிறப்பிலுந் துணை என்று குறையிரந்து அருளிச் செய்தது இத்திருப்பதிகம். பொருள் வெளிப்படையாக விளங்குந் தன்மையாதலால் விரிவஞ்சிச் சில இன்றியமையாக் குறிப்புக்கள் மட்டுமே தரப்பட்டுள்ளன.

1. நம்பி என்பது ஆடவருள் சிறந்தவனுக்கு உரிய பெயர். சிலவிடத்துத் தலைவன் என்னும் பொருளையும் தரும். செய்ய - சிவந்த திருமேனியுடைய.

2. பிறந்த உயிர்க்கெல்லாம் அங்கண் அருள் நம்பி - பிறப் பெடுத்த எல்லா உயிர்க்கும் கிருபை பாலிக்கும் நம்பி.

3. வழக்கு - வழங்கப்படும் செய்தி. பொருள் - உண்மை.

4. வெள்ளடை - திருக்குருகாவூர்க் கோயிலின் பெயர். பின் னர் நம்பியாரூரர் இத்திருப்பதியை நோக்கிச் செல்லும்போது வழியில் பசியாலும் தாகத்தாலும் வருந்த இறைவர் ஒரு தண் ணீர்ப் பந்தல் அமைத்துக் கட்டுச்சோறுடனும் தண்ணீருடனும் காத்திருந்து அளித்தார்.

5. குறுகார் - பகைவர் (இங்கு முப்புரத்தார்). குற்ற - அழித்த. இத்திருப்பாடலால் உயிர்கள் இறைவனைப் பாடுதலைத் தவிர வேறு கைம்மாறு யாதும் செய்ய இயலாது என்பதைக் குறித்தருளினர்.

6. அரித்த - ஒழித்த. ஒருசே - ஒற்றை எருது. இரித்த - பயந் தோடச் செய்த.

7. பின்னை நம்பும் புயத்தான் - இலக்குமி பற்றுகிற புயத்தினை யுடையவன். (திருமால்)

8. சொல்லாகவும் சொல்லின் பொருளாகவும் நிற்கும் நம்பி.

9. காண்டும்-காண்போம் என்று; ஆண்டுநம்பி-ஆட்கொள்ளுகின்ற நம்பி; குருமாப்பிறை - ஒளியுடைய பெரிய பிறை. (பெரிய என்பது ஈண்டுச் சிறப்பு குறித்தது). கன்னி - இங்குக் கங்கையைக் குறித்தது. சமணர்கட்குப் பொய்ப் பொருளாகியும் எங்கட்கு மெய்ப்பொருளாகியும் நிற்கின்ற நம்பி (தருமையாதீன உரைக் குறிப்பு).

10. கரக்கும் - ஒளித்துக்கொள்ளும். இத்திருப்பதிகத்தில் பத்தாவதாகிய இப்பாடலின் மீதிப் பகுதியைப் பெறும் பேறு பெற்றிலோம்.

# 3. சுந்தரமூர்த்தி நாயனர்

## திருஓணகாந்தன் தளி

(செங்கற்பட்டு — அரக்கோணம் மார்க்கம். காஞ்சீபுரம் என்ற பிரசித்தமான தலத்தில் மேற்கிலுள்ள சருவதீர்த்தக் குளத்துக்கு வடக்கே மூன்று பர்லாங் தூரத்தில் உள்ளது. தேசப்படத்தில் 11 என்கிற எண்ணுல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

பண் - இந்தளம்] [7-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

நெய்யும் பாலுந் தயிருங் கொண்டு
நித்தல் பூசனை செய்ய லுற்றார்
கையி லொன்றுங் காண மில்லைக்
கழல டிதொழு துய்யின் அல்லால்
ஐவர் கொண்டிங் காட்ட ஆடி
ஆழ்கு ழிப்பட் டழுந்து வேனுக்
குய்யு மாறென் றருளிச் செய்வீர்
ஓண காந்தன் தளியு ளீரே. 1

திங்கள் தங்கு சடைக்கண் மேலோர்
திரைகள் வந்து புரள வீசும்
கங்கை யாளேகல் வாய்தி றவாள்
கணப தியேல் வயிறு தாரி
அங்கை வேலோன் குமரன் பிள்ளை
தேவி யார்கொற் றட்டி யாளார் *
உங்க ளுக்காட் செய்ய மாட்டோம்
ஓண காந்தன் தளியு ளீரே. 2

* கோற்றட்டியாள் என்றும் பாடம்: கோற்றட்டி: மாயாவி. மந்திரவாதி ஒரு சிறு கோலை நிலத்தில் தட்டி எல்லாப் பொருளும் தருவிப்பதுபோலத் தேவியும் தன் சங்கற்பப்படியே எல்லாக் காரியங்களும் நிகழ்த்துகிறுள்.

பெற்ற போழ்தும் பெறுத போழ்தும்
பேணி யும்கழல் ஏத்து வார்கள்
மற்றோர் பற்றிலர் என்றி ரங்கி
மதியு டையவர் செய்கை செய்வீர்
அற்ற போழ்தும் அலந்த போழ்தும்
ஆபற் காலத் தடிகேள் உம்மை
ஒற்றி வைத்திங் குண்ண லாமோ
ஓண காந்தன் தளியு ளீரே. 3

வல்ல தெல்லாம் சொல்லி உம்மை
வாழ்த்தி னாலும் வாய்தி றந்தொன்
றில்லை என்னீர் உண்டும் என்னீர்
எம்மை ஆள்வான் இருப்ப தென்னீர்
பல்லை யுக்க படுத லையிற்
பகல்எ லாம்போய்ப் பலிதி ரிந்திங்
கொல்லை வாழ்க்கை ஒழிய மாட்டீர்
ஓண காந்தன் தளியு ளீரே. 4

கூடிக் கூடித் தொண்டர் தங்கள்
கொண்ட பாணி குறைப டாமே
ஆடிப் பாடி அழுது நெக்கங்
கன்பு டையவர்க் கின்பம் ஓரீர்
தேடித் தேடித் திரிந்தெய்த் தாலும்
சித்தம் என்பால் வைக்க மாட்டீர்
ஓடிப் போகீர் பற்றுந் தாரீர்
ஓண காந்தன் தளியு ளீரே. 5

வாரி ருங்குழல் வாள்நெ டுங்கண்
மலைம கள்மது விம்மு கொன்றைத்
தாரி ருந்தட மார்பு நீங்காத்
தைய லால்உல குய்ய வைத்த
காரி ரும்பொழில் கச்சி மூதூர்க்
காமக் கோட்டம்உண் டாக நீர்போய்
ஊரி டும்பிச்சை கொள்வ தென்னே
ஓண காந்தன் தளியு ளீரே. 6

பொய்ம்மை யாலே போது போக்கிப்
புறத்தும் இல்லை அகத்தும் இல்லை
மெய்ம்மை சொல்லி ஆள மாட்டீர்
மேலை நாள்ஒன் றிடவுங் கில்லீர்

எம்மைப் பெற்றால் ஏதும் வேண்டார்
ஏதுந் தாரீர் ஏதும் ஓதீர்
உம்மை என்றே எம்பெ ருமான்
ஓண காந்தன் தளியு ளீரே. 7

வலையம் வைத்த கூற்ற மீவான்
வந்து நின்ற வார்த்தை கேட்டுச்
சிலைஅ மைத்த சிந்தை யாலே
திருவ டிதொழு துய்யின் அல்லால்
கலைஅ மைத்த காமற் செற்றாய்
குரோத லோப மதவ ருடை
உலைஅ மைத்திங் கொன்ற மாட்டேன்
ஓண காந்தன் தளியு ளீரே. 8

வார மாகித் திருவ டிக்குப்
பணிசெய் தொண்டர் பெறுவ தென்னே
ஆரம் பாம்பு வாழ்வ தாரூர்
ஒற்றி யூரேல் உம்ம தன்று
தார மாகக் கங்கை யாளைச்
சடையில் வைத்த அடிகேள் உந்தம்
ஊரும் காடு உடையும் தோலே
ஓண காந்தன் தளியு ளீரே. 9

ஓவ ணமேல் எருதொன் றேறும்
ஓண காந்தன் தளியு ளார்தாம்
ஆவ ணஞ்செய் தாளுங் கொண்டு
வரைது கிலொடு பட்டு வீக்கிக்
கோவ ணமேற் கொண்ட வேடம்
கோவை யாகஆ ரூரன் சொன்ன
பாவ ணத்தமிழ் பத்தும் வல்லார்
பறையுந் தாஞ்செய்த பாவந் தானே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**ஓணகாந்தீச்வரர்** தேவி :—**காமாக்ஷியம்மை**

**பதிக வரலாறு** :—சுந்தரமூர்த்தி சுவாமிகள் காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதர் கோயில், கச்சிக் காமகோட்டம் கச்சிமேற்றளி முதலிய ஆலயங்களைத் தரிசித்துக்கொண்டு பின் சருவதீர்த்தக்கரையில் உள்ள ஓணன், காந்தன் என்ற இரு அசுரர்கள் பூசித்துப் பேறு பெற்ற ஓணகாந்தன் தளி என்னும் ஆலயத்துட் சென்று அங்குப் பிரானுரை உரிமையுடன் தோழமையால் பெருகும் அடிமைத்திறம் பேசி காசும் பொன்னும் பெறவேண்டி 'நெய்யும் பாலும்' எனத்

தொடங்கும் இத்திருப்பதிகத்தை எடுத்துப் போற்றி அளவில்லாத நிதி பெற்று இனிது எழுந்தருளியிருந்தார். இப்பதிகத்தை நாள் டோறும் ஓதுபவர் தேவையான காலத்தில் எங்ஙனமேனும் இறைவன் திருவருளால் தேவையான பணம் பெற்றுப் பணமுடை யின்றி வாழ்வார்கள் என்பது உறுதி.

**பொழிப்புரை :**

1. திருஓணகாந்தன் தளியில் எழுந்தருளியிருக்கும் பெருமானே! நெய், பால், தயிர் ஆகியவற்றைக் கொண்டு உன் பக்தர்கள் உன்னைத் தினமும் பூசை செய்கின்றார்கள். என்னுடைய கையிலோ யாதும் பொருள் இல்லை. வீரக்கழலணிந்த உன் திருவடிகளைத் தொழுது உய்ந்தால் அன்றி பஞ்சேந்திரியங்களாகிய ஐவரால் இந்த மாய வாழ்க்கையில் ஆட்டுவிக்க ஆடி ஆழ்குழியில் பட்டழுந்துவேனாகிய அடியேனுக்குப் பிழைத்தற்குரிய ஒரு வழியை அருளிச் செய்வீராக.

2. பிறைச் சந்திரனையணிந்த திருச்சடைமேல் அலைகள் வந்து புரளும் கங்கையோ எனில் வாய் திறந்து பேசமாட்டாள். கணபதியோ என்றால் பெரு வயிறன். அழகிய கையில் வேலைக் கொண்ட முருகனோவெனில் பிள்ளைப் பிராயத்தினன். தேவியாரோ எனில் கூலி கொடுத்து ஆட்கொள்ளமாட்டார். ஆதலால் உங்கட்கு நாங்கள் தொண்டு செய்யமாட்டோம்.

3. அருள் பெற்றபோதும், பெறாதபோதும் உம்மை விரும்பி உமது கழல்களைத் துதிப்பவர்கள் வேறு பற்றுக்கோடு இல்லாதவர்கள் என்று அவர்கள்பால் மனமிரங்கி அறிவுடையோரது செய்கையைச் செய்யமாட்டீர். (அதாவது அருள் செய்யமாட்டீர்) கைப் பொருள் இல்லாதபோதும் வருந்தினபோதும் மற்றும் ஆபத்துக் காலங்களிலும், சுவாமிகளே! உம்மை ஒற்றிவைத்து இவ்விடத்தில் உண்ணலாகுமோ; சொல்வீர்.

4. சொல்ல முடிந்ததெல்லாஞ் சொல்லி உம்மை வாழ்த்தினாலும் உமது வாயைத் திறந்து இல்லை என்றோ அல்லது உண்டு என்றோ சொல்லமாட்டீர். எம்மை ஆளும்பொருட்டு நீர் இருப்பது எதற்காக? பல்லுதிர்ந்த தலையில் பகற்பொழுதெல்லாம் போய்ப் பிச்சைக்கு அலைந்து திரியும் வாழ்க்கையை விரைவில் ஒழியமாட்டீர்.

5. தொண்டர்கள் சேர்ந்து தாங்கள் தொடங்கின பாடல்கள் குறையாமல் ஆடிப்பாடி அழுது மனம் நெகிழ்ந்து தொழ அவ்வாறு அன்புடையவர்க்கு சௌக்கியத்தைத் தருவதற்கு நினைக்கமாட்டீர். தேடித் தேடியலைந்து இளைத்தாலும் உமது திருவுள்ளத்தை என்னிடத்தில் செலுத்தமாட்டீர். ஓடியும் போகமாட்டீர். ஆதரவுந் தரமாட்டீர்.

6. நீண்ட அடர்ந்த கூந்தலேயும் வாள்போலுங் கண்களேயும் உடைய மலேமகளும் தேன்பொருந்திய கொன்றைமாலேயணிந்த விசாலமான மார்பினின்றும் நீங்காத் தையலாளுமான உமாதேவியார் உலகெலாம் பிழைக்க வைத்தருளிய இருண்டு அடர்ந்த பெருஞ் சோலேகள் நிறைந்த காஞ்சிமாநகராகிய பழம்பதியில் உள்ள திருக்காமகோட்டமாகிய அறச்சாலே யிருக்க நீர் போய் ஊரார் இடுகின்ற பிச்சையைக் கொள்வது யாது காரணம் பற்றியோ.

7. பொய்ம்மையாலே பொழுது போக்கி வெளியிலும் இல்லே, உள்ளும் இல்லே. உண்மையைச் சொல்லி ஆண்டுகொள்ள மாட்டீர். முன்னுளில் ஒன்றிடவும் இல்லே. எங்களேத் தொண்டராகப் பெறில் வேறு ஒன்றையும் விரும்பமாட்டீர். ஏதுங் கொடுக்கமாட்டீர். எதையும் சொல்லவும் மாட்டீர். இப்படிப் பட்ட உம்மை எம் இறைவன் என்று நாங்கள் சொல்லுகிறும்.

8. பாசத்தை வீசிய எமன் வந்து நின்ற வார்த்தையைக் கேட்டு, கல்லாலாகிய என் மனத்திலுல் உமது திருவடியை வணங்கிப் பிழைத்தலேயன்றி காமனே எரித்த பெருமானே! குரோதம், மதம், லோபம் என்பனவற்றையுடையோரது கெடு வழியில் சேர்ந்து இவ்விடத்திருக்கமாட்டேன்.

9. அன்புடையோராகி நின் திருவடிகளுக்குப் பணி செய்யுந் தொண்டர்கள் பெறுவது யாதோ? உமக்கு மாலே பாம்பு. நீர் வாழ்வது திருவாரூர். ஒற்றியூர் உம்முடையது அன்று. (ஒற்றியூர் - ஒற்றிவைத்த ஊர்) கங்கையாளேத் தாரமாகக் கொண்டு சடையில் வைத்துக்கொண்டீ அடிகளே! உம்முடைய ஊரும் மயானம். உம்முடைய உடை தோலேயாகும்.

10. ஓங்காரப் பொருளினுகிய எருதின்மேல் ஏறும் ஓணகாந்தன் தளியில் எழுந்தருளியிருக்கும் பெருமான் ஓலே ஒன்று செய்து, அடிமையுங் கொண்டு. அரையாடையின் மேல் பட்டுங் கட்டி, கோவணம் போக்கிய உடைகொண்ட கோலத்தை வரிசையாக ஆரூரன் எனப்படும் சுந்தரன் சொன்ன பாடல்களாகிய அழகிய இத்தமிழ் பத்தும் கற்று வல்லவர்க்கு அவர்கள் செய்த பாவங்கள் அவர்களே விட்டு நீங்கும்.



# 4. கருவூர்த் தேவர்

## திருவிசைப்பா

[9-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

அற்புதத் தெய்வம் இதனின்மற் றுண்டே
அன்பொடு தன்னைஅஞ் செழுத்தின்
சொற்பதத் துள்வைத்(து) உள்ளம்அள் ளூறும்
தொண்டருக்(கு) எண்டிசைக் கனகம்
பற்பதக் குவையும் பைம்பொன்மா ளிகையும்
பவளவா யவர்பணை முலையும்
கற்பகப் பொழிலும் முழுதுமாம் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே.

*திருச்சிற்றம்பலம்*

**இதன் பொருள்** :—கங்கை கொண்ட சோளேச்சரம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருப்பவனே அற்புதமான கடவுள்; இக்கடவுளைக் காட்டிலும் வேறு ஒரு கடவுள் உண்டோ? (இல்லை); தன்னை அன்புடன் பஞ்சாக்கரமாகிய சொல்லின் இடத்திலே வைத்து மனம் களிக்கின்ற (ஜபிக்கும்) மெய்யடியார்களுக்கு எட்டுத் திசைகளிலுமுள்ள பொன் (நிதி) குவியல்களும், பசும் பொன்னாலாகிய மாளிகைகளும், பவளம்போன்ற செந்நிறமுள்ள உதட்டினையுடைய பெண்களது பருத்த தனங்களும், (பெண் போகம்) கற்பகச் சோலையும், (இந்திரலோகானுபவம்) ஆகிய இவை முழுவதும் கிடைக்கும் என்றவாறு.

இதனைப் பாடிய ஆசிரியர் கருவூர்த்தேவர் என்பவர். இவர் திருவிசைப்பா, திருப்பல்லாண்டு ஆகிய இவ்விரண்டு பிரபந்தங்களையும் பாடிய ஒன்பது ஆசிரியர்களுள் ஒருவர். இவர் கொங்கு நாட்டிலுள்ள கருவூர் என்னுமூரில் அந்தணர் குலத்தில் தோன்றினுர். போகநாதரிடம் உபதேசம் பெற்றுர்; சித்தர்; காயகற்பம் உண்டவர்; திருப்புடைமருதூரில் இறைவனிடமே திருவடி தீட்சை பெற்றவர். திருநெல்வேலியில் பல அற்புதங்களை நிகழ்த்தியவர்; பொதிய மலையில் அகத்தியரிடம் தங்கியிருந்தவர்; தஞ்சை இராஜ ராஜ சோழன் காலத்தில் வாழ்ந்தவர்; காலம் கி. பி. 983—1014; இவ்வரசன் தஞ்சை பெரிய கோயிலைக் கட்டினுன்; பிரதிட்டை செய்த சிவலிங்கத்திற்கு அட்டபந்தன மருந்து சாத்த அது இறுகவில்லை; அரசன் வருந்திப் போகநாதரை அணுகினுன். அவர் கருவூர்த் தேவரையழைத்து இறுகுமாறு செய்யப் பணித்தார்.

கருவூர்த் தேவரும் அவ்வாறே செய்தார். திருவரங்கத்தையும் தரிசித்தவர். கடைசியாக இவர் கருவூர் ஆனிலேக்கோயிலில் சென்று அங்குள்ள பசுபதீசுவரரைத் தழுவிக்கொண்டு இறையடி அடைந்த பெருமையுடையவர்.

எனவே, இவ்வருளாளர் அருளிய முன் குறித்த திருப்பாட்டை அன்பர்கள் பக்தி சிரத்தையுடன் ஓதினுல் அதில் குறித்துள்ள பலன்களேக் கைம்மேல் பெறுவது உறுதி என்பர் அநுபவ மிக்கவர்.

## 5. திருவாலவாயுடையார்

### திருமுகப்பாசுரம்

[11–ஆம் திருமுறை

பாண்டி நாட்டுத் தலேநகரமான மதுரைமாநகரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள மீனுட்சி சுந்தரேசப்பெருமானுக்கு நாள்தோறும் இசையுடன் பாடிவரும் தொண்டிற் சிறந்து விளங்கினவர். "பாணபத்திரர்" என்பவர். இவருக்கு ஒரு சமயம் பணம் முடையாயிருந்து, ஆண்டவனே வேண்டினுர். சுந்தரேசப் பெருமானும் இவருக்கு அருள் புரிய எண்ணினுர். அதே சமயத்தில் சேரநாட்டில் அரசு புரிந்துவந்த சிவபக்த சிரோன்மணியான சேரமான் பெருமாள் நாயனுரின் கொடைத்திறத்தை உலகறியச் செய்யவும் எண்ணினுர். இதற்காகப் பாணபத்திரர் கனவில் சிவபெருமான் தோன்றி, ஒரு திருமுகத்தைக் கொடுத்து, "இதனேச் சேரர்பெருமானிடம் கொடுத்துப் பொருள் பெறுக" எனக் கூறி மறைந்தனர்.

["எதிரில் செல்வத்துக்கேற்ற பெரு நிதி கொடுக்க" என்ற கருத்தையுடைய "மதிமலிபுரிசை" என்று தொடங்கும் வாசகம் வரைந்த திருமுகத்தைச் சேரனுருக்குப் பாணபத்திரனுர்பால் கொடுத்தனுப்பினுர்]. திருமுகத்தைப் பெற்ற சேரரும் பாணபத்திரனுரை வணங்கியுபசரித்து இறைவன் அருளிய திருமுகத்தை வணங்கி வாங்கித் தலேயில் வைத்துப் போற்றியின்புற்றுர். அரசரும் தம் பண்டாரத்தில் இருந்த அளவற்ற நிதியங்களே எல்லாம் பொதி செய்து கொணரச் செய்தனர். ஆள்களின்மீது சிலவற்றை யெல்லாம் ஏற்றி, "இவற்றையும், யானே குதிரை முதலாகிய உயிருள்ள தனங்களேயும் நான் செய்யும் இவ்வரசையும் கைக்கொள்க" என்று வேண்டினர். பாணபத்திரர் இவற்றைக் கண்டு மகிழ்ந்து அதிசயம் எய்தினுர். "இவற்றுள் எனக்கு வேண்டுவனவற்றை அடியேன் ஏற்றுக்கொள்வேன். ஆனேயரசும், அரசுறுப்புக்களாகிய படை முதலியவற்றையும் தேவரீரே கைக்கொண்டருளும்" என்று

வணங்கி வேண்டியவற்றை எடுத்துக்கொண்டு மதுரைக்குத் திரும்பினர். சுந்தரேசப்பெருமானை வணங்கி நன்றி தெரிவித்துக் கிடைத்த செல்வத்துடன் இன்புற்று வாழ்ந்திருந்தார் எனத் திருவிளையாடற்புராணமும் பெரியபுராணமும் கூறுகின்றன.

இப்பாசுரத்தைப் பக்தி சிரத்தையுடன் அன்பர்கள் ஓதினல் பொன் பெறலாம் என்பது உறுதி :—

திருச்சிற்றம்பலம்

மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவு பானிற வரிச்சிற(கு)
அன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்கு
உரிமையி னுரிமையின் உதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
தன்போ லென்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன் ;
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

திருச்சிற்றம்பலம்

**இதன் பொருள்** :—சந்திரன் தவழும் மதில்கள் சூழ்ந்த மாடங்களையுடைய நான்மாடக்கூடலம்பதியில் நிலவும், பால்போன்ற வெள்ளை வரிகளோடு கூடிய சிறகுடன் கூடிய அன்னங்கள் பயிலும் பொழில்கள் சூழ்ந்த திருவாலவாயில் நிலைபெற வீற்றிருக்கும் சிவன், யாம் சொல்லும் இச்செய்தியினைப் பருவகாலத்து மேகம் போலப் பாவலர்களுக்கு இருபாலும் உரிமையுடனே வேண்டுவனவற்றை எல்லாம் உதவி, ஒளி விளங்கிய பெரிய பூர்ணசந்திரன் போன்று விளங்கும் வெண்கொற்றக் குடையின்கீழ் வீற்றிருந்து போர் வல்ல யானையினைச் செலுத்தும் சேரமன்னனே! காண்பாயாக: உரிய பண்பினுல் யாழினைப் பயிற்றும் பாணபத்திரன் உன்னைப் போலவே எம்மிடம் அன்புடையவன்; உன்னைக் காண்பதனைக் கருத்தினில் வைத்து உன்னிடம் (இத்திருமுகத்துடன்) வருகிறுன். மாட்சிமையுடைய பொருளினைக் கொடுத்துத் திருப்பி அவனை இங்கு அனுப்புவாயாக!

# 6. கபிலதேவ நாயனர் அருளிய

## மூத்த நாயனர் திருவிரட்டைமணிமாலை

[11-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*நல்லார் பழிப்பிலெழிற் செம்பவளத்தை நாணநின்ற*
*பொல்லா முகத்தெங்கள் போதகமே புரமூன்றெரித்த*
*வில்லா னளித்த விநாயகனே யென்றுமெய்ம்மகிழ*
*வல்லார் மனத்தன்றி மாட்டாளிருக்க மலர்த்திருவே.*

*திருச்சிற்றம்பலம்*

**இதன் பொருள்:**—செந்நிறமுடைய யானை முகத்தையுடைய ஞானசொரூபனே! மேருவை வில்லாக வளைத்துத் திரிபுராதிகளை வென்றவன் தன் திருக்குமாரனே! என மனமகிழ்ந்து நின்னை ஏத்தி வழிபடும் அன்பர் நெஞ்சந் தவிர வேறெங்கும் தாமரை மலரில் எழுந்தருளியுள்ள இலக்குமியிருக்கமாட்டாள். அதாவது இவர்களுக்குத்தான் லட்சுமிகடாட்சம் என்றுமுண்டு என்பதாம்.





# சிவமயம்





# 8
# கன்னிப் பெண்களுக்குக் கடிமணம் நிகழ



ஓம் ஸந்த்யாந்ருத்தமூர்த்தயே நம : ஓம் ஸதாந்ருத்தமூர்த்தயே நம :

## 1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### திருமருகல்

*(மாயவரம் — திருவாரூர் மார்க்கத்தில் நன்னிலம் இரயில் நிலையத்திலிருந்து கிழக்கே 6 மைலில் உள்ளது. தேசப்படத்தில் 13 என்கிற எண்ணுல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)*

பண் - இந்தளம்] [2-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

சடையா யெனுமால் சரண்நீ எனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவளுண் மெலிவே. 1

சிந்தா யெனுமால் சிவனே யெனுமால்
முந்தா யெனுமால் முதல்வா யெனுமால்
கொந்தார் குவளை குலவும் மருகல்
எந்தாய் தகுமோ இவளே சறவே. 2

அறையார் கழலும் மழல்வா யரவும்
பிறையார் சடையும் முடையாய் பெரிய
மறையார் மருகல் மகிழ்வா இவளை
இறையார் வளைகொண் டெழில்வவ் வினையே. 3

ஒலிநீர் சடையிற் கரந்தா யுலகம்
பலிநீ திரிவாய் பழியில் புகழாய்
மலிநீர் மருகல் மகிழ்வா இவளை
மெலிநீர் மையளாக் கவும்வேண் டினையே. 4

துணிநீ லவண்ணம் முகில்தோன் றியன்ன
மணிநீ லகண்டம் உடையாய் மருகல்
கணிநீ லவண்டார் குழலாள் இவள்தன்
அணிநீ லஒண்கண் அயர்வாக் கினையே. 5

பலரும் பரவப் படுவாய் சடைமேல்
மலரும் பிறையொன் றுடையாய் மருகல்
புலருந் தனையும் துயிலாள் புடைபோந்
தலரும் படுமோ அடியா ளிவளே. 6

வழுவாள் பெருமான் கழல்வாழ் கவெனா
எழுவாள் நினைவாள் இரவும் பகலும்
மழுவா ளுடையாய் மருகற் பெருமான்
தொழுவா ளிவளைத் துயராக் கினையே. 7

இலங்கைக் கிறைவன் விலங்கல் லெடுப்பத்
துலங்கவ் விரலூன் றலுந்தோன் றலனாய்
வலங்கொள் மதில்சூழ் மருகற் பெருமான்
அலங்கல் லிவளை அலராக் கினையே. 8

எரியார் சடையும் மடியும் மிருவர்
தெரியா ததொர்தீத் திரளா யவனே
மரியார் பிரியா மருகற் பெருமான்
அரியாள் இவளை அயர்வாக் கினையே. 9

அறிவில் சமணும் மலர்சாக் கியரும்
நெறியல் லனசெய் தனர்நின் றுழல்வார்
மறியேந் துகையாய் மருகற் பெருமான்
நெறியார் குழலி நிறைநீக் கினையே. 10

வயஞா னம்வல்லார் மருகற் பெருமான்
உயர்ஞா னமுணர்ந் தடியுள் குதலால்
இயன்ஞா னசம்பந் தனபா டல்வல்லார்
வியன்ஞா லமெல்லாம் விளங்கும் புகழே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—மாணிக்கவண்ணர்

தேவி :—வண்டுவார்குழலியம்மை

பதிக வரலாறு :—திருச்செங்காட்டங்குடியில் சிறுத்தொண்டர் தம்மோடினிதிருந்து கணபதீச்சரம் தொழுது பின் திருஞானசம்பந்தர் திருமருகலுக்கு எழுந்தருளி அங்கு மாணிக்கவண்ணரைத்

தரிசித்துப் பதிகம் பாடித் தொழுது தங்கியிருந்தார். அந்நாளில் வழிப்போக்கஞக ஒரு வணிகன் ஒரு கன்னியையும் அழைத்துக் கொண்டு வந்தவன் திருமருகல் அடைந்து கோயிலின் அருகே ஒரு மடத்தில் இரவு துயிலும்போது ஒரு அரவம் தீண்ட அவன் இறந்தான். அக்கன்னியும் அவனைத் தீண்டமாட்டாளாய் மிக வருந்திப் புலம்பிப் பின் அவள் நல்வினை காரணமாக இறைவனுடைய ஆலயத்தினை நோக்கிப் பெருமானின் கருணைத்திறமெல்லாவற்றையும் மனமுருகப்பாடிப் புலம்பிஞள். புலருந்தனையும் புலம்புகின்ற அக்கன்னிகையின் குரல் விடியற்காலையில் பெருமானைத் தொழவந்த திருஞானசம்பந்தரது திருச்செவியில் வந்து விழ கருணை வைத்து அடியார் சூழ அவள் இருந்த மடத்துக்குச் சென்று புலம்புகின்ற அவளை நோக்கி "பயப்படேல் நீ, பருவரலும் நும்பரிசும் பகர்வாய்" என அபயமளித்து அவள் கூறிய பின்வரும் வரலாற்றைக் கேட்டறிந்தார்.

"நான் வைப்பூரில் வாழும் தாமன் என்பானின் மகள். அவனுக்கு எழுவர் பெண்கள். இறந்துகிடக்கும் வணிகன் அவன் மருகன். மூத்த பெண்ணை அவனுக்குத் திருமணம் செய்துகொடுப்பதாய்க் கூறிப் பின் அவ்வாறு செய்யாது பணம் பெற்றுக்கொண்டு பிறிதொருவனுக்கு மணஞ்செய்து கொடுத்துவிட்டார் தந்தை. இவ்வாறே என்னைத் தவிர மற்றைய ஆறு பெண்களையும் மருகன் முறை வாய்ந்த இவனுக்குக் கொடாது பிறர்க்கு மணஞ் செய்து கொடுத்துவிட அதனுல் மனந்தளர்ந்த இவனுக்காகப் பெற்றேரை மறந்து இவனையே சார்ந்து போந்தேன். இவனும் இப்போது அரவந்தீண்டி மாள நடுக்கடலிற் கலங் கவிழ்த்தார் போல நின்றேன். சுற்றத்தார் என வந்து என் துயரம் எல்லாம் நீங்க அருள் செய்தீர்" எனக் கூறியது கேட்டு, காழி வேந்தர் கருணை கூர்ந்து அரவின் விடம் தீருமாறு பெருமானைப் பாடலுற்றுர். இப்பதிகத்தில், "உடையானே தகுமோ இந்த ஒள்ளிழையாள் உள்மெலிவு" என்றெடுத்துப் பாட வணிகனும் பொங்குவிடந் தீர்ந்தெழுந்து நின்முன். திருத்தொண்டர் கூட்டம் ஆரவாரிப்ப உச்சியின்மேல் கைகுவித்துப் பிள்ளையாரின் திருவடிகளில் விழுந்து வணங்கிய அந்நங்கையை அந்த வணிகஞகிய நம்பியொடு இப்பூமியில் இன்புற்றிருக்கும் வண்ணம் மணம் புணரும் பெருவாழ்வு வகுத்து அவர்க்கு ஆசியளித்து விடை கூறியனுப்பிஞர்.

அரவின் விடந்தீருமாறு பாடப்பட்ட இத்திருப்பதிகமும் விடந்தீர்த்த திருப்பதிகம் எனப்படும் "ஒன்றுகொலாம்" எனத் தொடங்கும் அப்பர் பெருமானின் பதிகத்தோடு ஓதற்குரியது எனினும் இப்பதிகத்தின் பயன் திருமணமேயாகையால் இதனை இத்தலைப்பில் சேர்த்துள்ளோம். இப்பதிகத்தைப் பக்தி சிரத்தையுடன் ஓதிஞல் திருமணம் ஆகாமல் வருந்தும் கன்னியர்கள் மங்கல நன்மணம் பெறுவர் என்றும், இது தாம் கண்ட உண்மை அனு

பவம் என்றும் நன்மதிப்பிற்கும் வணக்கத்திற்குமுரிய மேலையூர் தவராஜயோக மடம் தலைவர் தவத்திரு மாணிக்கவாசக ஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள் உணர்த்தியுள்ளார்கள். மேலும் சிவக்கவிமணி திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள், B. A., (பின் சம்பந்தசரணாலய சுவாமிகள் என நாமம் பூண்டு துறவு பூண் டவர்) தாம் உலகுய்ய இயற்றி வெளியிட்ட பெரியபுராண விரி வுரையில் "இத்திருப்பதிகத்தையும் இவ்வரலாறு கூறும் பெரிய புராணத்துள்ள திருப்பாடல்களையும் பக்தி செய்து நியமமாகச் சிலகாலம் ஓதிவந்தால் மணம் பெறுமல் வருந்தும் கன்னியர்கள் மங்கல நன்மணம் பெறுவர் என்பது கண்கூடாகப் பலவிடங்களில் கண்ட உண்மை. இது (திருஞானசம்பந்தப்) பிள்ளையாரது திரு வருட்பெருமையினை இன்றுங் காண உணர்த்துவதாம்" என்று கூறியுள்ளார். மற்றும் இத்திருப்பதிகத்தின் அருமையை விரிவஞ்சி விடுத்தோம். இதனை ஓதிப் பெரும்பயன் அடையவேண்டும் என் பதே எமது அவா. பெரியபுராணத்தினின்றும் இவ்வரலாறு பற்றிய இரு பாடல்களையும் சேர்த்துள்ளோம்.

பொழிப்புரை :

1. சடையாய் என்று சொல்வாள். சரண் நீயே என்று சொல்லுவாள். இடபவாகனனே என்று சொல்லுவாள். அலறி வீழ்வாள். நீர் மடையில் குவளைப்புஷ்பம் மலரும் திருமருகலில் கோயில் கொண்ட சுவாமியே! அத்தகைய இந்நங்கையின் மன நோய் தகுமோ? (தகாது என்று கூறியருளியபடி)

2. என்றுமழியாத நித்தியனே என்று சொல்லுவாள். சிவனே என்று அழைப்பாள். எல்லோர்க்கும் முந்தியவனே என்று கூறு வாள். முதல்வனே என்று போற்றுவாள். கொத்துக்களாகக் குவளைகள் மலருகின்ற திருமருகலில் வீற்றிருக்கும் எந்தையே! இவளுடைய துன்பம் தகுமோ?

3. ஒலிக்கின்ற கழல்களும், வெம்மை பொருந்திய வாயினை யுடைய பாம்பும், பிறைபொருந்திய சந்திரனும் உடையவனே! பெருமையுடைய வேதங்கள் உணர்ந்தவர்கள் வசிக்கும் திருமருகலை மகிழ்பவனே! இவளை வளையும் எழிலுங்கொண்டனையே.

4. கங்கையைச் சடையிற் கரந்தவனே! உலகில் பிச்சை யேற்றுத் திரிவாய். பழியில்லாத புகழினை யுடையவனே, நீர்வளம் மிக்க திருமருகலை மகிழ்ந்து உறைபவனே. இவளை மெலிவடையுந் தன்மையளாக்க நீ விரும்பினையே.

5. தெளிந்த நீலநிற முகில் தோன்றியதுபோல அழகிய நஞ்சினுற் கறுத்த திருக்கழுத்தையுடையவனே! மருகலில் நீல வண்டுகள் சேர்கின்ற குழலையுடைய இவளுடைய ஒளி நீலக்கண் களைச் சோர்வுபடச் செய்தனையே.

6. பலராலுந் துதிக்கப்படுபவனே! திருச்சடையின்மீது வளர்கின்ற பிறைச் சந்திரனையுடையவனே! மருகற்பெருமானே பொழுதுவிடியுமளவும் துயிலாதவளாய் வெளியாரால் அலர் (பழிச் சொற்கள்) தூற்றவும் படுவளோ இவ்வடியாள்.

7. பெருமானாகிய நின்கழல்கள் வாழ்க எனத் துதிக்கத் தவற மாட்டாள். உறங்கி விழித்தெழுவாள். இரவும் பகலும் மறவாது நினைப்பாள். மழுவாகிய படையை யுடையவனே! திருமருகற் பெருமானே! இத்தகைய இவளைத் துயரடையும்படிச் செய்தனையே.

8. இராவணன் மலையினை எடுக்கும்போது உன் அழகாக விளங்கும் திருவிரலை ஊன்றுதலும் மேல் யாதும் செய்யத் தோன்றானாய்ப் பணிந்து வேண்டி வரங்களுங்கொண்ட மதில் சூழ்ந்த திரு மருகற் பெருமானே, மாலையணிந்த இவளை அலர் தூற்றும்படிச் செய்தனையே.

9. எரியினையொத்த நிறமுடைய சடையினையும், திருவடியினையும் இருவரால் தெரிந்துகொள்ள முடியாதபடி ஒரு ஒளிப் பிழம்பாய் நின்றவனே! ஜீவன் முக்தர்கள் பிரியாது வழிபடும் திருமருகற் பெருமானே! அரியவளாகிய இவளைச் சோர்வுபடும்படி செய்தாயே.

10. அறிவில்லாத சமணர்களும் புத்தர்களும் சைவ நன்னெறியல்லாத புன்மை நெறிகளைச் செய்தனராக உழல்பவர்கள். மான் குட்டியைக் கையில் ஏந்தியவனே! திருமருகற் பெருமானே! அடர்ந்த கூந்தலையுடைய இவளை நிறை நீங்கும்படிச் செய்தனையே.

11. திருவருள் ஞானம் வல்லவர்கள் தொழுகின்ற திருமருகற் பெருமானை உயர்வு பொருந்திய திருஞானம் உணர்ந்து திருவடிகளை சிந்தையுள் தியானித்தலால் பாடிய திருஞானசம்பந்தனுடைய பாடல்கள் வல்லவர்கள் இப்பெரிய நிலவுலகத்தில் புகழுடையோராக விளங்கிடுவார்கள்.

குறிப்பு :—இத்திருப்பதிகம் அகப்பொருளிலக்கண அமைதி நிரம்பப் பாடியருளியது. அவ்விலக்கண நயங்களை அறிந்தார் மாட்டுக் கேட்டுணர்க.

# 2. பெரியபுராணம்

## திருமருகல் பதிக வரலாற்றுப் பகுதி

[12–ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*சடையானை எவ்வுயிர்க்குந் தாயா னானைச்*
*சங்கரனைச் சசிகண்ட மவுலி யானை*
*விடையானை வேதியனை வெண்ணீற் றானை*
*விரவாதார் புரமூன்றும் எரியச் செற்ற*
*படையானைப் பங்கயத்து மேவி னானும்*
*பாம்பணையில் துயின்றானும் பரவுங் கோலம்*
*உடையானை "உடையானே தகுமோ இந்த*
*ஒள்ளிழையாள் உள்மெலிவு?" என்றெடுத்துப் பாட;* **1**

*பொங்குவிடந் தீர்ந்தெழுந்து நின்றான்; சூழ்ந்த*
*பொருவில்திருத் தொண்டர்குழாம் பொலிய ஆர்ப்ப*
*அங்கையினை உச்சியின்மேற் குவித்துக் கொண்டங்கு*
*அருட்காழிப் பிள்ளையார் அடியில் வீழ்ந்த*
*நங்கைஅவள் தனைநயந்த நம்பி யோடு*
*நானிலத்தில் இன்புற்று வாழும் வண்ணம்*
*மங்குல்தவழ் சோலைமலி புகலி வேந்தர்*
*மணம்புணரும் பெருவாழ்வு வகுத்து விட்டார்.* **2**

*திருச்சிற்றம்பலம்*

பொழிப்புரை :

1. சடைமுடியுடையவனை, எல்லா உயிர்க்குந் தாய்போல் நன்மை செய்பவனை, சங்கரனை, பிறைச்சந்திரனைத் தலையில் அணிந்தவனை, இடபவாகனத்தானை, வேதங்கள் சொன்னவனை, திருநீறு பூசினவனை, பக்தி செய்யாரது முப்புரங்களையும் எரியச் செலுத்திய படைக்கலமுடையவனை, தாமரை மலரில் தோன்றிய பிரமதேவனும் பாம்பணையிற்றுயின்ற திருமாலும் துதிக்கின்ற திருக்கோலம் உடையவனை "உடையானே, தகுமோ இந்த ஒள்ளிழையாள் உள்மெலிவு" என்று தொடங்கிப் பாடவும்.

2. பொங்கிய விடம் தீர்ந்து வணிகனும் எழுந்து நின்றான். சூழ்ந்து நின்ற ஒப்பில்லாத திருத்தொண்டர் கூட்டம் ஆரவாரஞ் செய்ய அழகிய கைகளைத் தலைமீது கூப்பிக்கொண்ட வண்ணம் அருளுடைய சீகாழிப் பிள்ளையார் திருவடியில் விழுந்து வணங்கிய



மாணிக்கவாசகர் (உற்சவர்)
திருப்பெருந்துறை

அந்நங்கையை அவளை விரும்பிய நம்பியுடன் இந்தப் பூவுலகத்தில் இன்பமடைந்து வாழும்படியாக மேகங்கள் தவழ்கின்ற சோலைகள் மலிந்த புகலித்தலைவரான திருஞானசம்பந்தர் திருமணம் செய்வித்து அவர்களைப் பெருவாழ்வு பெறுமாறு வகுத்து அனுப்பினார்.

# 3. மாணிக்கவாசக சுவாமிகள்

## திருவாசகம்

### திருவெம்பாவை

[8–ஆம் திருமுறை

(சக்தியை வியந்தது)

மணிவாசகப் பெருமான் பல தலங்களையும் தரிசித்துக் கொண்டு திருவண்ணாமலை என்னும் நடுநாட்டுத் திருத்தலத்திற்கு எழுந்தருளினார். அவ்வூரின் இயற்கையழகினைக் கண்டு வியந்து இம்மலைதானோ முன்னொரு காலத்தில் நெருப்பு வடிவாயிருந்தது? திருமாலும் பிரமனும் அடியையும் முடியையும் தேடியுங் காணாத அளவு உயர்ந்தும், ஆழ்ந்துமிருந்தது?'' என்று பலபடிப் பாராட்டி அவ்வூரில் தங்கினார். அங்கு ஆலயத்தில் எழுந்தருளியுள்ள அருணாசலப் பெருமானையும், உண்ணாமுலையம்மையாரையும் வணங்கி வழிபட்டார். குருந்தடியில் முன்னாள் தன்னை ஆண்டுகொண்ட குருவுருவைக் கண்டு தரிசித்தார். இப்படி இவர் அங்கு தங்கியிருந்த காலம் மார்கழி மாதம். திருவாதிரைக்கு முந்திய பத்து நாட்கள் அங்குள்ள பெண்கள் பலரும் விடியற்காலையில் எழுந்து வீடுகளைச் சுத்தம் செய்து மெழுகிக் கோலமிட்டு வீட்டுத் தெய்வத்தை வழிபட்டு விட்டு நீர்நிலைக்கு நீராடச் செல்கின்றார்கள். அவர்கள் அங்ஙனம் செல்லும்போது அரன் நாமத்தையே இன்னிசையோடு பலவகையில் பாடிச் செல்வதையும் கண்டார். அக்காட்சி கவிதையாயிற்று. அவர்கள் வாய்மொழியாக இத்திருவெம்பாவையை இயற்றியருளினார்.

அன்பர்கள், தேவர்களுக்கு விடியற்காலமாகவுள்ள இந்த மார்கழி மாதத்தில், தினந்தோறும் விடியற்காலையில் நீராடி நியமத்துடன் இப்பிரபந்தத்தைப் படனம் செய்தால் மனத்தில் எண்ணிய நல்ல எண்ணங்கள் நிறைவுறும் என்பது ஆன்றோர் கண்ட முடிவு. எனவே, அன்பர்கள் இதனை பக்தி சிரத்தையுடன் பாராயணம் செய்து இக சௌபாக்யங்களையெல்லாம் பெறுவார்களாக! கன்னிப் பெண்கள் இதனை நாளும் ஓதினால் கடிமணம் பெறுவார்கள் என்பது ஆன்றோர் கருத்து.

திருச்சிற்றம்பலம்

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதா ரமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனு மாகாள் கிடந்தாள் என்னேயென்னே
ஈதே யெந்தோழி பரிசேலோ ரெம்பாவாய். 1

பாசம் பரஞ்சோதிக் கென்பா யிராப்பகல்நாம்
பேசும்போ தெப்போதிப் போதா ரமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்
சீசீ யிவையுஞ் சிலவோ விளையாடி
ஏசு மிடமீதோ விண்ணோர்க ளேத்துதற்குக்
கூசு மலர்ப்பாதம் தந்தருள வந்தருளும்
தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க் கன்பார்யா மாரேலோர் ரெம்பாவாய். 2

முத்தன்ன வெண்ணகையாய் முன்வந் தெதிரெழுந்தென்
அத்தன் ஆனந்தன் அமுதனென் றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீர் ஈசன் பழவடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ
எத்தோநின் னன்புடைமை யெல்லோ மறியோமோ
சித்த மழகியார் பாடாரோ நஞ்சிவனை
இத்தனையும் வேண்டும் எமக்கேலோ ரெம்பாவாய். 3

ஒண்ணித் திலநகையாய் இன்னம் புலர்ந்தின்றோ
வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ
எண்ணிக் கொடுள்ளவா சொல்லுகோ மவ்வளவும்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே
விண்ணுக் கொருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக் கினியானைப் பாடிக் கசிந்துள்ளம்
உண்ணெக்கு நின்றுருக யாமாட்டோம் நீயேவந்
தெண்ணிக் குறையிற் றுயிலேலோ ரெம்பாவாய். 4

மாலறியா நான்முகனுங் காணா மலையினைநாம்
போலறிவோ மென்றுள்ள பொக்கங்க ளேபேசும்
பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்
ஞாலமே விண்ணே பிறவே யறிவரியான்
கோலமும் நம்மையாட் கொண்டருளிக் கோதாட்டும்
சீலமும் பாடிச் சிவனே சிவனேயென்(று)
ஓல மிடினும் உணராய் உணராய்காண்
ஏலக் குழலி பரிசேலோ ரெம்பாவாய். 5

மானேநீ நென்னலை நாளைவந் துங்களை
நானே யெழுப்புவ னென்றலு நாணுமே
போன திசைபகரா யின்னம் புலர்ந்தின்றோ
வானே நிலனே பிறவே யறிவரியான்
தானேவந் தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய்
ஊனே யுருகா யுனக்கே யுறுமெமக்கும்
ஏனோர்க்கும் தங்கோனைப் பாடேலோ ரெம்பாவாய். 6

அன்னே யிவையுஞ் சிலவோ பலவமரர்
உன்னற் கரியா னொருவ னிருஞ்சீரான்
சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்
தென்னாவென் னாமுன்னந் தீசேர் மெழுகொப்பாய்
என்னானை யென்னரைய னின்னமுதென் றெல்லோமும்
சொன்னோங்கேள் வெவ்வேறா யின்னந் துயிலுதியோ
வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்
என்னே துயிலின் பரிசேலோ ரெம்பாவாய். 7

கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும்
ஏழி லியம்ப வியம்பும்வெண் சங்கெங்கும்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோங் கேட்டிலையோ
வாழியீ தென்ன வுறக்கமோ வாய்திறவாய்
ஆழியா னன்புடைமை யாமாறு மிவ்வாறோ
ஊழி முதல்வனாய் நின்ற வொருவனை
ஏழைபங் காளனையே பாடேலோ ரெம்பாவாய். 8

முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே யெங்கணவர் ஆவா ரவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே யெமக்கெங்கோ னல்குதியேல்
என்ன குறையு மிலோமேலோ ரெம்பாவாய். 9

பாதாள மேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியும் எல்லாப் பொருள் முடிவே
பேதை யொருபாற் றிருமேனி யொன்றல்லன்
வேதமுதல் விண்ணோரும் மண்ணுந் துதித்தாலும்
ஓத வுலவா வொருதோழன் றொண்டருளன்
கோதில் குலத்தரன்றன் கோயிற்பிணாப் பிள்ளைகாள்
ஏதவனூர் ஏதவன்பேர் ஆருற்றார் ஆரயலார்
ஏதவனைப் பாடும் பரிசேலோ ரெம்பாவாய். 10

மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி
ஐயா வழியடியோம் வாழ்ந்தோங்காண் ஆரழல்போற்
செய்யாவெண் ணீருடி செல்வா சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா
ஐயாநீ யாட்கொண் டருளும் விளையாட்டின்
உய்வார்க ளுய்யும் வகையெல்லா முய்ந்தொழிந்தோம்
எய்யாமற் காப்பா யெமையேலோ ரெம்பாவாய். 11

ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்தாடுந்
தீர்த்தனற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடுங்
கூத்தனிவ் வானுங் குவலயமும் எல்லோமுங்
காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி
வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்
ஆர்ப்பரவஞ் செய்ய அணிகுழன்மேல் வண்டார்ப்பப்
பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொற்பாதம்
ஏத்தி யிருஞ்சுனைநீ ராடேலோ ரெம்பாவாய். 12

பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்
அங்கங் குருகினத்தால் பின்னு மரவத்தால்
தங்கள் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநஞ்
சங்கம் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 13

காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாமாடச்
சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடிச்
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி யாடேலோ ரெம்பாவாய். 14

ஓரொருகா லெம்பெருமான் என்றென்றே நம்பெருமான்
சீரொருகால் வாயோவாள் சித்தம் களிகூர
நீரொருகா லோவா நெடுந்தாரை கண்பனிப்பப்
பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணியாள்
பேரரையற் கிங்ஙனே பித்தொருவ ராமாறும்
ஆரொருவ ரிவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தாள்
வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி
ஏருருவப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 15

முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை யாளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை யாளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி யவணமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய். 16

செங்க ணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கு மிலாததோர் இன்பநம் பாலதாக்
கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
இங்குநம் மில்லங்க டோறு மெழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை
அங்க ணரசை அடியோங்கட் காரமுதை
நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 17

அண்ணா மலையான் அடிக்கமலஞ் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகைவீ றற்றாற்போல்
கண்ணா ரிரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணா ரொளிமழுங்கித் தாரகைகள் தாமகலப்
பெண்ணாகி யாணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகிக்
கண்ணா ரமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணேயிப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 18

உங்கையிற் பிள்ளை யுனக்கே யடைக்கலமென்
றங்கப் பழஞ்சொற் புதுக்குமெம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போங்கேள்
எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க
எங்கை யுனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க
கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க
இங்கிப் பரிசே யெமக்கெங்கோன் நல்குதியேல்
எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோ ரெம்பாவாய். 19

போற்றி யருளுகநின் னாதியாம் பாதமலர்
போற்றி யருளுகநின் அந்தமாஞ் செந்தளிர்கள்
போற்றி யெல்லாவுயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்
போற்றியெல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்

போற்றியெல் லாவுயிர்க்கும் ஈறும் இணையடிகள்
　　போற்றிமால் நான்முகனுங் காணாத புண்டரிகம்
போற்றியா முய்யவாட் கொண்டருளும் பொன்மலர்கள்
　　போற்றியாம் மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய். 20

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை :

1. (பாவை நோன்பு நோற்கச் செல்லும் பெண்கள் ஒருவரை யொருவர் துயில் எழுப்பும் முறையில் சில பெண்கள் சேர்ந்து ஒரு பெண்ணை எழுப்பியது.)

தொடக்கமும் முடிவும் இல்லாத அரிய பெரிய ஒளி உருவங் கொண்ட இறைவனை நாங்கள் பாடக் கேட்டுங்கூட ஒளியுடைய விசாலமான கண்களையுடைய பெண்ணே! நீ தூங்குகின்றனையோ அல்லது உனது காதுகள்தாம் செவிடாய்க் கேளுந்தன்மை இழந்தனவோ? தேவர் தேவனை மகாதேவனுஞ் சிவபெருமானின் திருவடிகளை நாங்கள் துதித்துப் பாடிய வாழ்த்தொலி வீதிகளில் ஒலிக்கக் கேட்ட உடனேயே ஓர் நங்கை தேம்பித் தேம்பி அழுது தன்னை மறந்து தனது மலர்ப் படுக்கையினின்றும் புரண்டு வீழ்ந்து செயலற்றுக் கிடந்தாள். (அங்ஙனமிருக்க) என் அன்புடைய தோழியே! உன் தன்மை இதுதானோ? என்னே வியப்பு?

குறிப்பு :—'ஏலோரெம்பாவாய்' என்னுந் தொடரில் ஏல், ஓர் இரண்டும் அசை. பாவாய் என்பது விளியாக பாவை நோன்பு நோற்கும் பெண்களைக் குறிக்கும். இதனைப் பின்வரும் எல்லாப் பாடல்களுக்குங் கொள்க.

2. சிறந்த அணிகலன்களை யணிந்தவளே! நாம் இரவும் பகலும் எப்போதும் பேசும் சமயமெல்லாம் என்னுடைய அன்பு மேலான ஒளியாகிய சிவபெருமானுக்கே என்று கூறுவாய். (அங்ஙனமிருக்க) இப்பொழுது அந்த அன்பை உனது மலர்ப் படுக்கைக்கே வைத்தனையோ. (என்று எழுப்ப வந்த பெண்கள் கூற படுத்திருந்த நங்கை கூறுவாள்) நல்ல ஆபரணமணிந்த தோழிகளே! விளையாடி ஏசிப் பழிக்குமிடம் இதுவோ. (உடனே வந்த பெண்கள் கூறுவார்கள்.) மெய்யன்பிலாததால் தேவர் கட்குங்கூட வழிபடக் காட்டக் கூசும் திருவடிகளை நமக்கு வழிபடக் கொடுத்தருள எழுந்தருளும் ஒளி வடிவனும், சிவலோகத்துள்ள வனும், தில்லைச் சிற்றம்பலத்தாடுவானும் ஆகிய ஈசனுக்கு அன்பர் யாவர்? நாம் யார்?

3. முத்துப் போன்று ஒளிவிடும் வெண்மையான பற்களை யுடைய பெண்ணே! முன்பெல்லாம் எங்களுக்கு முன்னேயே விழித் தெழுந்து எங்கள் எதிரே வந்து என் அத்தன், ஆனந்தன், அமுதன்

என்று வாயூறும்படி இனிய சொற்களைப் பேசுபவளே! இப்பொழுது கதவையும் திறக்காதிருக்கின்றனையே! (ஈது என்ன வியப்பு என்று எழுப்ப வந்தவர் கூற) பக்தியுடையவர்களே, ஈசனுடைய பழைய அடியவர்களே, என்னிடம் நட்புடையவர்களே, புதிதாக இறைவனுக்கு ஆட்பட்ட எம்போல்வாரது அறியாமையைத் தீர்த்து ஆட்கொண்டால் அது உமக்குத் தீங்காகுமோ? (என்று எழுந்தவள் கூற எழுப்பியவர்கள் கூறுவார்கள்) உன்னுடைய அன்பு வேறு எதன்மேற்று? அது எங்களுக்குத் தெரியாததா? நல்ல சித்தம் உடையவர்கள் நமது சிவனைப் பாடாமலும் இருப்பார்களோ? (அதனை யறியாதார்போலப் பேசிய) எங்களுக்கு இத்தனையும் வேண்டுவதே.

4. ஒளிவிடும் முத்துப்போன்ற பற்களையுடைய நங்கையே, இன்னம் பொழுது விடியவில்லையோ? அதாவது இன்னும் எழுந்திராது உறங்குகின்றனையே (என எழுப்பும் பெண்கள் கூற எழுப்பப்பட்டவள் கூறுவாள்) அழகிய கிளிபோற் பேசும் பெண்கள் எல்லாரும் வந்துவிட்டனரோ? (எழுப்ப வந்தவர்) நாங்கள் எண்ணிப் பார்த்தே உள்ளபடி சொல்லுகிறோம். நீ கண் துயின்று இப்படி வீணாகக் காலத்தைக் கழிக்காதே. தேவர்களுக்கு அமுதம் போல்பவனும், வேதங்களால் பரம்பொருள் என்று பேசப்படுபவனும், கண்ணுக்கினியவனுமான நம் சிவபெருமானைப் பாடி உள்ளங் கசிந்துருக எழுந்திருப்பாயாக. வந்தவர்களை யெல்லாம் எண்ணிக் கணக்கிட்டுச் சொல்ல யாம் மாட்டோம். நீயே எழுந்து வந்து எண்ணிப் பார்த்து எவரேனுங் குறைந்திருந்தால் மீண்டும் போய்த் தூங்குவாயாக.

5. திருமாலும் நான்முகனும் அடி முடியறியாத மலைபோன்ற அழற்பிழம்பாய் நின்ற பெருமானை நாம் அறிவோம் என்ற பொய்மை வார்த்தைகளைப் பாலும் தேனும்போன்ற இனிய மொழிகளால் பேசும் கபடமுள்ளவளே! (இது உரிமையால், அன்பால் கடிந்துகொள்ளுதல் போன்றது) கதவைத் திறப்பாயாக. இந்நிலவுலகத்தவரும், விண்ணுலகத்தவரும் மற்றும் பிறரும் அறிவதற்கு அரியவனாகிய பெருமானுடைய அழகிய திரு உருவத்தையும், அவன் நம்மை ஆட்கொண்டு அருள் செய்யும் மேன்மையையும் புகழ்ந்து பாடிச் சிவனே, சிவனே என்று ஓலமிட்டுக் கூவியும் நீ அறிந்திலை. துயிலும் உணர்ந்தாயில்லை. வாசனைச் சாந்தணிந்த கூந்தலுடையாளே! நின் தன்மைதான் யாதோ?

6. மான் போன்றவளே! நேற்று நீ எங்களிடம் நானே முன்னாக வந்து உங்களை எழுப்புவேன் என்று சொன்னாயே, இன்று போன திசையை உரை செய்வாய். உனக்கு இன்னும் பொழுது புலரவில்லையோ? விண்ணோர், மண்ணோர், மற்றும் பிற உலகுளோர் யாவராலும் உணர்தற்கரிய பெருமான் தானாக வலிய வந்து எம்மை அடிமை கொண்டருளுதற்குரிய திருவடிகளைப் பாடி

வந்தவர்களாகிய எமக்கு உன் வாய் திறந்து பதில் சொல்கின்றா யில்லை. உடல் உருகாதிருக்கின்றாய். இத்தன்மை உனக்குத் தான் பொருந்தும். எங்களுக்கும் மற்றெல்லார்க்குந் தலைவனாகிய பரமசிவனைப் பாடுவாயாக.

7. தாயே! இச்செயல்கள் (அஃதாவது இறைவன்மாட்டு அன்பில்லாள்போன்று உறங்குவது) சிலவுளவோ? பல்வகையான தேவர்களால் நினைத்தற்கரியவன், ஒப்பற்ற ஒருவன், மிகுந்த பெருமையுடையவன் ஆகிய சிவபெருமானின் சின்னங்கள் (ஆலய மணி, சங்கு முதலியவற்றின் ஒலி) காதிலே விழுந்தால் 'சிவ சிவ' என்று வாய் திறந்து மொழிவாய். 'தென்னாடுடைய சிவனே' என்று பிறர் மொழியுமுன்பே நீ தீ சேர்ந்த மெழுகு ஒப்ப உள்ளம் உருகுவாய். எந்தை, எம்மன்னன், எம் இனிய அமுதம் என்று எல்லோருஞ் சேர்ந்து கூறினோம். தனித் தனியுங் கூறினோம். அவற்றையெல்லாம் கேட்டுங்கூட இன்னும் தூங்குகின்றனையோ? கொடுமையான நெஞ்சமுடைய அறிவில்லாதார் போலச் சும்மா கிடக்கின்றனையே. தூக்கத்தின் இயல்புதான் என்னே!

8. கோழி கூவ பறவைகள் ஒலிக்கும். மங்கல வாத்தியங்களும், சங்கு ஓசையும் ஒலிக்கும். ஒப்பற்ற மேலான ஒளி வடிவினனை, மேலான கருணையுடையவனை சிறந்த பொருள்கள் கொண்ட துதிகளாற் பரவினோம் அதனை நீ? கேட்டிலையோ நீ வாழி. இது என்ன தூக்கம்? வாய் திறந்து ஒன்றும் பேசாய். அருட்பெருங் கடலாம் அரனிடத்து நீ கொண்ட அன்பு செலுத்தும் முறை இவ்வாறு தானோ? ஊழிகளுக்கெல்லாம் தலைவனாய் யாவும் அழியுங் காலத்து அவற்றைத் தன்னுள் அடக்கித் தான் நிலைபெற்று நிற்கும் ஒப்பற்ற பெருமானை, உமாதேவியாரை ஒரு பாகங் கொண்ட வனையே பாடுவாயாக. (ஏழை பங்காளன் என்பது திக்கற்ற எளியவர்களுக்குத் துணையாக உள்ள பெருமான் என்றும் பொருள் படும்.)

9. முன்னாக உள்ள பழைய பொருள்களுக்கெல்லாம் பழமை யானவனே, பின்னாக உண்டான புதுமையானவற்றுக்கெல்லாம் புதியவனே, உன்னை எமது தலைவனாக உடைய பேறு பெற்ற உன்னு டைய சிறந்த அடிமைகளாக உள்ள நாங்கள் உன்னுடைய அடியார்களின் பாதங்களைப் பணிவோம். அவர்கட்கே நாங்கள் உரிமையுடையவராவோம். அவர்களே எங்கள் கணவர்களாவர். அவர்கள் மனமுவந்து இட்ட கட்டளைப்படியே அடிமை நிலையில் நின்று பணிகள் யாவும் செய்வோம். எங்கள் பெருமானாகிய நீ எங்கட்கு இவ்வண்ணம் அருள் செய்தீரேயானால் வேறு எக்குறையு மில்லாதவராவோம்.

10. பாதாள உலகம் ஏழினுக்கும் கீழாக சொல்லுக்கடங்காத நிலையிலே உளது இறைவனின் திருவடித் தாமரை. மலர் மாலை

யணிந்த திருமுடியோவெனின் எல்லாப் பொருட்கும் மேலான உயர்ந்த நிலையில் உள்ளது. அவன் மாதொரு பாகன் என்ற ஒரு திருமேனி மட்டும் உடையவன் அல்லன். வேதம் முதல் விண்ணோரும், மண்ணோருந் துதித்தாலும் அவன் தன்மையை முற்றும் ஓதி முடியாத பெருமையுடைய ஒரு தோழன். சிவாலயத் துள்ளிருக்கும் குற்றமில்லா நலமுடைய பெண்களே! எது அவன் ஊர், எது அவன் பெயர், அவனுக்கு உற்ருர் யார்? அயலார் யார்? அவனைப் புகழ்ந்து பாடும் முறைதான் யாது?

11. வண்டுகள் நிறைந்த விசாலமான திருக்குளத்திலே 'முகேர்' என்னும் ஒலி யெழும்படி கையினுல் நீரை வாரி இறைத்து உன் கழல்களைப் பாடி முழுகி எங்கள் பிரானே உங்களு டைய வழி யடிமைகளாகிய நாங்கள் நன்மை பெற்ருேம். செந் நிறம் உடைய பெருமானே, வெண்ணீறு பூசினவனே, பெருந் திருவாளனே, நுண்ணிய இடையையுடையவளும் மையுண்ட விசாலமான கண்களையுடையவளுமான அம்பிகையின் மணவா ளனே, ஐயனே! நீ உயிர்க் கூட்டங்களை ஆளாகக் கொண்டருளும் திருவிளையாட்டினுல் உயர்வு அடைபவர்களது உய்வகை யாவற்றி ஞலும் பிழைத்துவிட்டோம். இனி யாங்கள் தளர்வடையாதபடி எங்களைக் காக்க வேண்டும்.

12. நம்மைப் பிணித்துள்ள பிறவியென்னுந் துயர் கெடும்படி நாம் மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்து முழுகும் தீர்த்தம்போன்ற தூயவனும், தில்லைச் சிற்றம்பலத்துள்ளே கையில் தீயேந்தி ஆடுங் கூத்துடையவனும், நிலவுலகம், வானுலகம், மற்றும் எல்லாவற் றையும் படைத்தும், காத்தும், ஒடுக்கியும் விளையாடுபவனும் ஆகிய சிவபிரானுடைய புகழைப் பாடிப் பரவிக் கைவளையல்கள் ஒலி செய்யவும், மேகலை முதலிய அணிகள் ஒலிக்கவும், அழகிய கூந்தலின் மேல் வண்டுகள் ஆரவாரஞ் செய்யவும் பூக்கள் பூத்துத் திகழும் பொய்கையில் குடைந்து நம்மை ஆளுடைய பிரானின் பொற்பாதங்கள் ஏத்தி பெரிய சுனை நீரில் மூழ்கியாடுவோமாக.

13. அழகிய கரிய குவளை மலர்களாலும், செந்தாமரை மலர் களாலும், குருகு (நீர்வாழ் பறவைகளை) உடைமையாலும், மற்றும் ஒலியினுலும் தங்களது அழுக்கைப் போக்கிக்கொள்ள விரும்பு பவர்கள் வந்து சேர்வதினுலும் எங்கள் இறைவியையும் இறைவ னையும் ஒத்து விளங்கும் இம்மடுவில் இறங்கிப் பாய்ந்து பாய்ந்து நம்முடைய வளையல்கள் சத்தஞ் செய்யவும், சிலம்புகள் ஒலிக் கவும் மார்புகள் குலுங்கவும், நாம் முழுகும் நீரும் மேல் எழவும், தாமரை மலர்கள் நிறைந்த இப்பொய்கையில் குதித்து நீராடுவோ மாக.

14. காதுகளில் பொருந்திய தோடுகள் அசைய, அழகிய அணிகலன்கள் அசைய, கூந்தலில் சூடிய மாலைகள் அசைய, வண்டு

களின் கூட்டம் ஆட குளிர்ந்த நீரிலே யாடி, திருச்சிற்றம்பலத்தைப் பாடி, வேதப் பொருளைப்பாடி, அப்பொருளாகிய பரம சிவத்தைப் பாடி, சோதி உருவத்தின் பெருமை பாடி, சடையைச் சூழ்ந்து அணிந்துகொண்ட கொன்றைப் பூமாலையைப் பாடி, எல்லாவற்றிற்கும் முதற்காரணமான அவன் திறனும் பாடி, முடிவாகவும் இருக்கும் பெருமையையும் பாடி, வேறு படுத்தி நம்மை வளர்த்தெடுத்த வளையல்களணிந்த அருட்சக்தியின் பாதத் திறனும் பாடி நீராடுவோமாக.

15. ஒவ்வொரு சமயத்தில் எம்பெருமான் என்றே பல முறை நம்பெருமானுடைய பெருமைகளை யெல்லாம் வாய் ஓயாதவளாய்ச் சொல்லுவாள், மனங் களிகூர்ந்து கண்களில் ஆனந்த பாஷ்பம் இடையருது பொழிய நிலத்தே வந்து விழும் வணக்கத்தினையுடையவள். இறைவனைத் தவிர மற்றைய விண்ணோர்களையும் வணங்கமாட்டாள். பெருங் கடவுளாகிய இறைவனிடம் பித்துக்கொள்ளும் வகையும் இத்தகையதே. இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர் ஒருவர் யாவர்? (அவர் நமது சிவபெருமானேயன்றோ?) அப்படிப்பட்ட அவரது திருத்தாளிணையினை நாம் வாயாரப் பாடி அழகிய இப்பூம்புனலில் கச்சணிந்த முலைகளையுடைய பெண்களே, நாம் பாய்ந்து ஆடுவோமாக.

16. ஏ மழையே! நீ கடலையடைந்து அது சுருங்குமாறு நீரைக் குடித்து எழுந்து எம்மைப் பெற்ற அம்மைபோலக் கரிய நீல நிறங்கொண்டு எம்மை ஆட்கொள்ளும் அவ்வுடையாளின் இடைபோல ஒளியுடன் மின்னி விளங்கி, எமது பிராட்டியின் திருவடிகளில் கிடக்கும் சிலம்புபோல் ஒலித்து, திருப்புருவம்போல் வானவில் உண்டாகச் செய்து, நம்மை ஆளாக உடைய பெருமாட்டியினின்றும் எஞ்ஞான்றும் பிரிதல் இல்லாத எம்மிறைவன் தன்னடியார்களுக்கும், அவ்வம்மை நமக்கும் சுரக்கும் இனிய அருள் மழைபோல் நீ பொழிவாயாக.

17. மணம் நிறைந்த கூந்தலுடைய பெண்ணே! திருமாலிடத்தும், நான்முகனிடத்தும் மற்றும் தேவர்கள் யாவரிடத்தும் இல்லாததொரு பேரின்பம் நம்மிடத்து உண்டாக நம்மைக் குற்றங் களைந்து நமது மனைகள் தோறும் எழுந்தருளித் தமது செந்தாமரை யனைய அழகிய திருவடிகளைக் காணக் காட்டும் கடவுளை, அருள் நோக்கம் உடைய தலைவனை, அடியவர்களாகிய நமக்குக் கிடைத்த ஆரமுதை, நம்முடைய பெருமானைப் பாடி நன்மைகள் சிறந்து ஓங்கும்படி இத்தாமரை மலர்கள் நிறைந்த பொய்கையில் முழுகி நீராடுவோமாக.

18. அண்ணாமலையானின் திருவடித் தாமரைகளைச் சேர்ந்து வணங்கும் தேவர்களது முடிகளின் மணிக்கூட்டங்கள் திறமொழிந்து ஒளி மழுங்கினதுபோல, சூரியனின் கிரணங்கள் வந்து

இருளைப் போக்கத் தமது ஒளி மழுங்கி நட்சத்திரக் கூட்டங்கள் அகல, பெண்ணுகியும், ஆணுகியும், அல்லா அலியுமாகியும், ஒளி யுடையவாணுகியும், நிலமாகியும், இத்தனைக்கும் வேருகவும், காண் போர்க்குக் கண் நிறைந்த அமுதமாகியும் நின்றவனின் கழல்களைப் பாடி, ஏ பெண்ணே! இப்பூம்புனல் பாய்ந்தாடுவோமாக.

19. எங்கள் பெருமானே! உம் கையில் ஒப்படைக்கப்படும் இப்பெண் உமக்கே அடைக்கலம் என்று திருமணக் காலத்தில் தொன்றுதொட்டு வழங்கும் வசனத்தைப் புதுப்பிக்கும் அச்சத்தி ஞலே உன்னிடம் ஒரு விண்ணப்பஞ் செய்கின்ருேம். கேட்டு அருள் செய்வாயாக. எமது கொங்கைகள் நின்னன்பரல்லாரது தோள் களைத் தழுவாதிருக்க. எமது கைகள் உனக்குத் தவிர வேறு யாவர்க்குந் தொண்டு செய்யா நிலையை அடைக. எம் கண்கள் இரவும் பகலும் உன்னைத் தவிர வேறு ஒன்றையுங் காணுதிருக்க. இவ்வாறே நீ எங்கட்கருள் செய்குவையேல் கதிரவன் எத்திசையில் எழுந்தாலும் அதனுல் எமக்கு வரக்கூடிய குறை யாது உளது?

20. நினது ஆதியாகிய பாதமலரைத் தந்தருளுக—உம்மைப் போற்றுகிருேம். நின் அந்தமாகிய செந்தளிர்கள் போன்ற திருவடி களைத் தந்தருளுக—உம்மைப் போற்றுகின்ருேம். எல்லா உயிர் களின் தோற்றத்துக்குங் காரணமான உமது அழகிய திருவடிகளைப் போற்றுகின்ருேம். எல்லா உயிர்களின் போகத்துக்குங் காரண மாகும் உமது பூங்கழல்களைப் போற்றுகின்ருேம். எல்லா உயிர்க் கும் ஒடுக்கத்திற்கு இடமாயுள்ள உமது உபய பாதங்களைப் போற்றுகின்ருேம். திருமாலும் நான்முகனுங் காணுத உமது திருவடித் தாமரைகளைப் போற்றுகின்ருேம். நாங்கள் கடைத் தேறும்படி எம்மை ஆட்கொண்ட பொன்மலர்களாகிய நின் திருவடிகளைப் போற்றுகின்ருேம். பல்லாற்ருனும் உம்மைப் போற்றி நாம் இம்மார்கழி நீராடுதலைச் செய்வோமாக.





# சிவமயம்





# 9
# இகலோகத்தில் இசையுடன் வாழ



*ஓம் காளிதாண்டவமூர்த்தயே நம :* *ஓம் கங்காதரமூர்த்தயே நம :*

## 1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### திருநல்லூர்

(*மாயவரம்—தஞ்சாவூர் மார்க்கத்தில் சுந்தரப் பெருமாள் கோயில் இரயில் நிலையத்திலிருந்து தெற்கே* 1½ *மைல்கள். ஆண்டான் கோயில் என வழங்கப்படுகிறது. தேசப்படத்தில்* 14 *என்கிற எண்ணால் குறிப் பிடப்பட்டிருக்கிறது.*)

பண் – குறிஞ்சி] [1–ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

கொட்டும் பறைசீராற் குழும அனலேந்தி
நட்டம் பயின்றாடும் நல்லூர்ப் பெருமானை
முட்டின் றிருபோதும்முனியா தெழுந்தன்பு
பட்ட மனத்தார்கள் அறியார் பாவமே. 1

ஏறி லெருதேறும் எழிலா யிழையோடும்
வேறும் முடனுமாம் விகிர்தர் அவரென்ன
நாறும் மலர்ப்பொய்கை நல்லூர்ப் பெருமானைக்
கூறும் மடியார்கட் கடையா குற்றமே. 2

சூடு மிளந்திங்கட் சுடர்பொற் சடைதாழ
ஓடுண் கலனாக வூரு ரிடுபிச்சை
நாடுந் நெறியானை நல்லூர்ப் பெருமானைப்
பாடும் மடியார்கட் கடையா பாவமே. 3

நீத்த நெறியானை நீங்காத் தவத்தானை
நாத்த நெறியானை நல்லூர்ப் பெருமானைக்

காத்த நெறியானைக் கைகூப் பித்தொழு
தேத்து மடியார்கட் கில்லை யிடர்தானே. 4

ஆகத் துமைகேள்வ னரவச் சடைதாழ
நாகம் மசைத்தானை நல்லூர்ப் பெருமானைத்
தாகம் புகுந்தண்மித் தாள்க டொழுந்தொண்டர்
போகம் மனத்தராய்ப் புகழத் திரிவாரே. 5

கொல்லுங் களியானை யுரிபோர்த் துமையஞ்ச
நல்ல நெறியானை நல்லூர்ப் பெருமானைச்
செல்லும் நெறியானைச் சேர்ந்தா ரிடர்தீரச்
சொல்லு மடியார்க ளறியார் துக்கமே. 6

எங்கள் பெருமானை யிமையோர் தொழுதேத்தும்
நங்கள் பெருமானை நல்லூர் பிரிவில்லாத்
தங்கை தலைக்கேற்றி யாளென் றடிநீழல்
தங்கு மனத்தார்க டடுமாற் றறுப்பாரே. 7

காம னெழில்வாட்டிக் கடல்சூ ழிலங்கைக்கோன்
நாம மிறுத்தானை நல்லூர்ப் பெருமானை
ஏம மனத்தாரா யிகழா தெழுந்தொண்டர்
தீப மனத்தார்க ளறியார் தீயவே. 8

வண்ண மலரானும் வைய மளந்தானும்
நண்ண லரியானை நல்லூர்ப் பெருமானைத்
தண்ண மலர்தூவித் தாள்க டொழுதேத்த
எண்ணு மடியார்கட் கில்லை யிடுக்கணே. 9

பிச்சக் குடைநீழற் சமணர் சாக்கியர்
நிச்ச மலர்தூற்ற நின்ற பெருமானை
நச்சு மிடற்றானை நல்லூர்ப் பெருமானை
எச்சு மடியார்கட் கில்லை யிடர்தானே. 10

தண்ணம் புனற்காழி ஞான சம்பந்தன்
நண்ணும் புனல்வேலி நல்லூர்ப் பெருமானை
வண்ணம் புனைமாலை வைக லேத்துவார்
விண்ணு நிலனுமாய் விளங்கும் புகழாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—பெரியஆண்டவர் கலியாணசுந்தரேசுவரர்
தேவி :—திரிபுரசுந்தரி கலியாணசுந்தரி

**பதிக வரலாறு** :—திருஞானசம்பந்தப் பெருமான் திருச்சக்கரப் பள்ளி, திருப்புள்ளமங்கை, திருஆலந்துறை, திருச்சேலூர், திருப் பாலைத்துறை முதலிய பதிகளைத் தரிசித்துப் பதிகம் பாடித் தொழுது பின் திருநல்லூர் சேர்ந்தார். அங்கு மறையோர் எதிர் கொண்டு வரவேற்கச் சிவிகையில் பொலிவுறச் சென்றணைந்து தொண்டர்குழாம் புடைசூழ ஆலயம் செல்வார் சிவிகையினின்றும் இறங்கி நடந்து சென்றார். திருக்கோபுரந் தொழுது பின்னர் ஆலயத்தை வலம் வந்தபோது கண்களில் ஆனந்த பாஷ்பம் அருவி போற் பாய சிவபெருமானைப் பரவு சொற்பதிகமாய இதனைப் பாடி யருளினர். இதன் திருக்கடைக் காப்புப் பாடலில் "விண்ணும் நிலனுமாய விளங்கும் புகழாரே" என்று ஞானபோனகர் பதிகப் பலனை விளக்கியிருப்பது கவனிக்கத்தக்கது.

**பொழிப்புரை** :

1. பறை கொட்டும் சீருக்குத் தக்கபடி கையில் அனலேந்தி நடனமாடுகின்ற திருநல்லூர்ப் பெருமானைச் சிறிதும் இடையீடு இல்லாமல் இரவும் பகலும் அன்பு செலுத்துகின்ற மனதினையுடை யவர்கள் பாவத்தினையே அறியமாட்டார்கள்.

2. எழில் மிகுந்த உமாதேவியோடு உடனும் வேறும் இருக்கும் பெருமான். எருது ஏறும் பெருமான் இவர் என்று வாசம் மிக்க மலர்கள் நிறைந்த பொய்கையுடைய திருநல்லூர்ப் பெருமானைத் துதிக்கும் அடியவர்களுக்கு எந்தக் குற்றமும் வந்து அடையாது.

3. இளம் பிறைச் சந்திரனைச் சூடுகின்ற ஒளி வீசுகின்ற பொன் போன்ற திருச்சடை தாழ ஓட்டினையே கலனாகக் கொண்டு ஊரூராக இடுகின்ற பிச்சையை நாடும் தன்மையுடையவனை, திருநல்லூர்ப் பெருமானைப் பாடுகின்ற அடியார்களைப் பாவங்கள் சென்றடையா.

4. எல்லாந் துறந்த நெறியுடையவனை, என்றும் பிரியாத தவத்தினையுடையவனை, ஒழுங்காக அமைக்கப்பட்ட வேத நெறி யாயினானை, திருநல்லூர்ப் பெருமானை, சரண் புகுந்தோரைக் காத்த நெறியானைக் கைகூப்பித் தொழுது வணங்கும் அடியவர்கட்கு இடர்கள் இல்லையாம்.

5. உடம்பிலே ஒரு கூறாகக் கொண்ட உமாதேவியின் நாயகன், சடையிலே நாகத்தினைப் பூண்டவன் ஆகிய திருநல்லூர்ப் பெருமானை மிகுந்த ஆர்வத்தோடு சென்று திருப்பாதங்களைத் தொழும் தொண்டர்கள் இன்பம் நிறைந்த மனத்தினராய்ப் புகழோடு வாழ்வார்கள்.

6. உமாதேவியும் அஞ்சும்படியாக யானையின் தோலை உரித்துப் போர்த்தியவனை, நன்னெறியாளனை, திருநல்லூர்ப்

பெருமானை, அவனைச் சேர்ந்தவர்கள் செல்லுகின்ற நல்ல நெறியாக உள்ளவனைத் தங்கள் இடர்கள் தீரும்படியாக பிரார்த்தனை செய்கின்ற அடியார்கள் துக்கம் என்பதையே அறியமாட்டார்கள்

7. தேவர்களும் தொழுது ஏத்துகின்ற எங்கள் பெருமானை, திருநல்லூரைப் பிரியாது விரும்பி உறைகின்ற நம்முடைய தலைவனை தங்கள் கைகளைத் தலைமீது ஏற்றி அவன் அடி நிழலில் யாம் என்று தங்குகிற மனத்தையுடையவர்கள் தடுமாற்றங்களை யறுப்பவர்களாக ஆவார்கள்.

8. மன்மதனை எரித்து இராவணனுடைய சரீரத்தை நெருக்கினவனை, திருநல்லூர்ப் பெருமானை நல்ல மனத்தினராக, இகழாது வணங்கி யெழுகின்ற தொண்டர்கள் அறிவுடைய யோகிகளாக ஆவார்கள். தீயனவற்றை அறியமாட்டார்கள்.

9. பிரமதேவனும் திருமாலும் சென்று அடைய அரியவனை, திருநல்லூர்ப் பெருமானைக் குளிர்ந்த புஷ்பங்களைத் தூவி திருப் பாதங்களைத் தொழுது ஏத்த எண்ணுகின்ற அடியார்களுக்குத் துன்பங்கள் கிடையா.

10. சமணர்களும் புத்தர்களும் பழிச் சொற்கள் கூறும்படி நின்ற பெருமானை, விடங்கொண்ட கண்டனை, திருநல்லூர்ப் பெருமானைத் துதிக்கின்ற அடியவர்களுக்கு இடர்கள் இல்லையாம்.

11. குளிர்ந்த நீர்வளம் மிகுந்த சீகாழி ஞானசம்பந்தன் நீரையே வேலியாகக் கொண்ட திருநல்லூரில் எழுந்தருளியிருக்கும் பெருமானைப் பரவி மிகுந்த அழகுடன் புனைந்த இப்பாமாலையைத் தினந்தோறும் பாடித் தொழுபவர்கள் விண்ணிலும் நிலனிலும் வியாபித்து விளங்கும் புகழ் உடையவர்களாக இருப்பார்கள்.

## 2. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### திருமுதுகுன்றம்

(இது விருத்தாசலம் என்ற பெயரில் மிகவும் பிரசித்தமாக வழங்கப் படுவது. விழுப்புரம்—திருச்சி குறுக்கு வழி (கார்ட் லைன்) மார்க்கத்தில் உள்ளது. இரயில் நிலையத்திலிருந்து சுமார் $1\frac{1}{2}$ மைலில் தலம் உள்ளது. தேசப் படத்தில் 15 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

#### திருவிருக்குக்குறள்

பண் - குறிஞ்சி] [1-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

நின்று மலர்தூவி, இன்று முதுகுன்றை
நன்றும் ஏத்துவீர்க், கென்றும் இன்பமே. 1

அத்தன் முதுகுன்றைப், பத்தி யாகிநீர்
நித்தம் ஏத்துவீர்க், குய்த்தல் செல்வமே. 2

ஐயன் முதுகுன்றைப், பொய்கள் கெடநின்று
கைகள் கூப்புவீர், வையம் உமதாமே. 3

ஈசன் முதுகுன்றை, நேச மாகிநீர்
வாச மலர்தூவப், பாச வினைபோமே. 4

மணியார் முதுகுன்றைப், பணிவா ரவர்கண்டீர்
பிணியா யினகெட்டுத், தணிவா ருலகிலே. 5

மொய்யார் முதுகுன்றில், ஐயா வெனவல்லார்
பொய்யா ரிரவோர்க்குச், செய்யாள் அணியாளே. 6

விடையான் முதுகுன்றை, இடையா தேத்துவார்
படையா யினசூழ, உடையார் உலகமே. 7

பத்துத் தலையோனைக், கத்த விரலூன்றும்
அத்தன் முதுகுன்றை, மொய்த்துப் பணிமினே. 8

இருவர் அறியாத, ஒருவன் முதுகுன்றை
உருகி நினைவார்கள், பெருகி நிகழ்வோரே. 9

தேரர் அமணரும், சேரும் வகையில்லான்
நேரின் முதுகுன்றை, நீர்நின் றுள்குமே. 10

நின்று முதுகுன்றை, நன்று சம்பந்தன்
ஒன்றும் உரைவல்லார், என்றும் உயர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**பழமலைநாதர்** தேவி :—**பெரியநாயகி**

**பதிக வரலாறு** :—திருநீலகண்ட யாழ்ப்பாணருடன் தில்லையம் பதி தரிசித்து அவர் வேண்டியபடியே திருஞானசம்பந்த சுவாமிகள் திருஎருக்கத்தம்புலியூரையும் தரிசித்துப் பெருமானுர் பதி பல வணங்கி திருமுதுகுன்று சென்று அத்தலத்தை வலமாக வந்து வழி படும்பொழுது இந்த திருவிருக்குக்குறள் பதிகத்தை யருளிச் செய்தார்.

**பொழிப்புரை** :

1. இன்றைக்கே முதுகுன்றம் என்னும் தலத்தினை மலர் தூவி ஏத்தும் உங்களுக்கு என்றும் இன்பமாகும்.

2. இறைவன் மேவியிருக்கும் திருமுதுகுன்றத்தைப் பக்தியுடன் நித்தமும் துதிக்கும் உங்களுக்குப் பொருள் பெருகும்.

3. நமக்கெல்லாம் தலைவனாகிய பரமசிவன் எழுந்தருளியிருக்கும் திருமுதுகுன்றத்தை மனத்தில் வஞ்சம் இல்லாமல் கைகூப்பித் தொழும் உங்களுக்கு இவ்வுலகமெல்லாம் உரிமையாகும்.

4. சிவபெருமானுடைய திருமுதுகுன்றத்தை அன்பாகி நீங்கள் மணம் மிக்க மலர்களைத் தூவி யருச்சிக்க பாசங்களும் வினையும் போகும்.

5. அழகு பொருந்திய திருமுதுகுன்றத்தைப் பணிந்தெழுபவர்கள் யாவரோ அவர்களே நோய்கள் யாவும் நீங்கி உலகிலே மனச்சாந்தியுடன் வாழ்வார்கள்.

6. பக்தர்களின் நெருக்கம் பொருந்திய திருமுதுகுன்றில் இறைவனை ஐயா! எனத் தோத்திரிக்கவல்லவர்கள் இரவலர்க்கு இல்லையென்று பொய் சொல்லமாட்டார்கள். இலக்குமிதேவியும் அவர்களுக்கு உடன் உறைவாகிவிடுவாள்.

7. இடபவாகனனுடைய திருமுதுகுன்றத்தை, இடைவிடாது துதிப்பவர்கள் பரிவாரங்கள் சூழ உலகம் முழுவதையும் தமதாக உடையவர் ஆவார்கள்.

8. பத்துத் தலையாளாகிய இராவணனைக் கத்தும்படி ஒரு விரலால் ஊன்றிய பெருமானுடைய திருமுதுகுன்றத்தை நெருங்கிப் பணியுங்கள்.

9. திருமால், நான்முகன் என்னும் இவ்விருவரும் அறியாத ஒப்பற்றவனும் ஏகனுமாகிய பெருமானுடைய திருமுதுகுன்றத்தை மனமுருகி தியானிப்பவர்கள் எல்லா வளங்களும் பெருகித் திகழ்வார்கள்.

10. புத்தரும் சமணரும் சென்றடைய வழியில்லாத பெருமானின் திருமுதுகுன்றத்தை நீங்கள் நிலையாக இருந்து மனத்திலே தியானம் செய்யுங்கள்.

11. திருமுதுகுன்றத்தை திருஞானசம்பந்தன் இறைவனோடு நன்றாக ஒன்றிய நிலையில் நின்று அருளிய இவ்வுரை ஓத வல்லவர்கள் எக்காலத்தும் இவ்வுலகில் உயர்ந்தவர்களாக இருப்பார்கள். (உயர்ந்த பதவிகள் பெற்று மிக்க புகழுடன் விளங்குவர் என்றவாறு.)

---

 **சிவமயம்** 



# 10
# சிவனடியே சிந்திக்கும் சிவஞானம் பெருக



ஓம் கங்காவிஸர்ஜனமூர்த்தயே நம :    ஓம் த்ரிபுராந்தகமூர்த்தயே நம :

## 1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### திருப்பாசுரம்

பண் – கௌசிகம்]    [3-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே. 1

அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர்
எரியர் ஏறுகந் தேறுவர் கண்டமும்
கரியர் காடுறை வாழ்க்கைய ராயினும்
பெரிய ராறறி வாரவர் பெற்றியே. 2

வெந்த சாம்பல் விரையெனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மையே
சிந்தி யாஎழு வார்வினை தீர்ப்பரால்
எந்தை யாரவர் எவ்வகை யார்கொலோ. 3

ஆட்பா லவர்க்கருளும் வண்ணமும் ஆதிமாண்பும்
கேட்பான் புகில்அள வில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை
தாட்பால் வணங்கித் தலைநின் றிவைகேட்கத் தக்கார். 4

ஏதுக்க ளாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி

மாதுக்கம் நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கள் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே. 5

ஆடும் மெனவும் அருங்கூற்றம் உதைத்து வேதம்
பாடும் மெனவும் புகழல்லது பாவம் நீங்கக்
கேடும் பிறப்பும் அறுக்கும் மெனக்கேட் டீராகில்
நாடுந் திறத்தார்க் கருளல்லது நாட்ட லாமே. 6

கடிசேர்ந்த போதுமலரான கைக்கொண்டு நல்ல
படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத் தாதைபண்டு
முடிசேர்ந்த காலையற வெட்டிட முக்கண் மூர்த்தி
அடிசேர்ந்த வண்ணம் அறிவார் சொலக் கேட்டுமன்றே. 7

வேத முதல்வன் முதலாக விளங்கி வையம்
ஏதப் படாமை யுலகத்தவர் ஏத்தல் செய்யப்
பூத முதல்வன் முதலே முதலாப் பொலிந்த
சூதன் ஒலிமாலை யென்றே கலிக்கோவை சொல்லே. 8

பாராழி வட்டம் பகையால் நலிந்தாட்ட ஆடிப்
பேராழி யானதிடர் கண்டருள் செய்தல்பேணி
நீராழி விட்டேறி நெஞ்சிடங் கொண்டவர்க்குப்
போராழி யீந்த புகழும் புகழுற்ற தன்றே. 9

மாலா யவனும் மறைவல்ல நான்முகனும்
பாலாய தேவர்பக ரில்லமு தூட்டல் பேணிக்
காலாய முந்நீர் கடைந்தார்க் கரிதா யெழுந்த
ஆலாலம் உண்டங்கம ரர்க்கருள் செய்த தாமே. 10

அற்றன்றி யந்தண் மதுரைத் தொகை யாக்கினும்
தெற்றென்று தெய்வந் தெளியார் கரைக்கோலை தெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கெதிர் வினூரவும் பண்பு நோக்கில்
பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானு மன்றே. 11

நல்லார்கள் சேர்புகலி ஞானசம்பந்தன் நல்ல
எல்லார் களும்பரவும் ஈசனை யேத்து பாடல்
பல்லார் களும்மதிக்கப் பாசுரஞ் சொன்னபத்தும்
வல்லார்கள் வானோ ருலகாளவும் வல்ல ரன்றே. 12

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு** :—மதுரையில் பாண்டியவரசன் முன் சமணர்க்கும் திருஞானசம்பந்தப் பிள்ளையார்க்கும் நிகழ்ந்த சுரவாதம், அனல்வாதம், புனல்வாதம் என்ற மூன்றனுள் புனல்வாதத்தின்

போது பாடியருளியது இத்திருப்பதிகம். சமணர்கள் தமது சமயப் பொருளாகிய 'அத்தி நாத்தி' என்பதை ஏட்டில் வரைந்து தாம் முன்புற வைகை ஆற்றில் இட்டார்கள். உள்ளீடில்லாத நெல் பதர் போல அவ்வேடு ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டுக் கண்ணுக்குத் தெரியாதவாறு கடலை நோக்கிப் போயிற்று. தோல் வியைக் கண்டு நடுங்கிய சமணர்கள் தமதச்சத்தை மறைத்து "நீவிரும் ஏடு இட்டபின் முடிவு காண்போம்" என்று பிள்ளை யாரிடங் கூற பாண்டிய மன்னனும் அவர் திருக்குறிப்பை நோக்க, பரசமயங்கள் பாறும் வண்ணம் இத்திருப்பாசுரத்தைப் பாடி யருளினார் திருஞானசம்பந்தர்.

உலகியல் வேத நூல் ஒழுக்கம் என்பதும் நிலவு மெய்ந்நெறி சிவநெறியதென்பதும் சமணர்கள் அறியார் ஆயினும் பாண்டியன் அறியும் பான்மையால் "வாழ்க அந்தணர்" என்று எடுத்து இத் திருப்பதிகத்தை ஏட்டினில் வரைந்து தம்மழகிய கையினால் வைகை யாற்றில் இட, அவ்வேடு மயக்கத்தைத் தரும் பிறவியாற்றில் பெரிய தவத்தினை உடையோரது மனம் எதிர்த்துச் செல்லுமாறு போல "இந்நிலவுலகர்க்கெல்லாம் இதுவேபொருள்" என எடுத்துக் காட்டி நீரில் எதிர் கிழித்துப் போயிற்று. "எம்பிரான் சிவனே எல்லாப்பொருளும்" என்று எழுதிய ஏட்டினில் "வேந்தனும் ஓங்குக" என்று பாடிய வாய்மையால் பாண்டியனுடைய கூனும் நிமிர்ந்தது. அனைவரும் அதிசயிக்கத் தோல்வியுற்ற சமணர்கள் அஞ்சி நின்றார்கள் என்பது வரலாறு.

இவ்வருமைத் திருப்பதிகம், திருப்பாசுரம் எனப் பெயர் பெற்று வேத, ஆகம, புராண சாரமாய்த் திகழ்வது. 'சிவஞானபோதம்' என்னும் ஞான நூலின் பன்னிரண்டு சூத்திரக் கருத்துக்களையும் விரிப்பது. இதனை மெய்ஞ்ஞானம் என்று அருணந்தி சிவாசாரியார் போற்றியுள்ளார். இதனைப் பொருள் தெரிந்து போற்றுவோர் "பவமதனையற மாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்" பெறுவர் என்பது திண்ணம். இவ்வரிய திருப்பாசுரத்தின் முதல் திருப் பாடலின் மெய்ப்பயன் இவ்வுலகமெல்லாம் துன்பம் நீங்கி இன்ப வாழ்வு அடைவதாம். எனவே இத்திருப்பாடலை மட்டும் வாழ்த்துப் பாடலாகத் தொன்றுதொட்டுச் சைவ சம்பிரதாயத்தில் கொள்ளப் பட்டு வருதலைக் காணலாம்.

**பதிக உரை :**

இத்திருப்பாசுரக் கருத்தினைச் சேக்கிழார் பெருமான் தமது பன்னிரண்டாந் திருமுறையாகிய பெரியபுராணத்துள் இருபத்தி மூன்று பாடல்களால் விரித்துக் கூறியுள்ளார். அப்பாடல்கள் இப்பகுதியில் பாராயணத்துக்கும் உரியவையாகையால் அவற் றையே உரையுடன் கீழே கொடுத்துள்ளோம்.

# 2. சேக்கிழார்—பெரியபுராணம்

## திருப்பாசுரக் கருத்து

[12–ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

"அந்தணர் தேவர்ஆன் இனங்கள் வாழ்க" என்
றிந்தமெய்ம் மொழிப்பயன் உலகம் இன்புறச்
சந்தவேள் விகள்முதற் சங்க ரர்க்குமுன்
வந்தஅர்ச் சனைவழி பாடு மன்னவாம். 1

வேள்வி நற்பயன் "வீழ்புன" லாவது
நாளும் அர்ச்சனை நல்லுறுப் பாதலால்;
ஆளும் "மன்னனை வாழ்த்தியது)" அர்ச்சனை
மூளும் மற்றிவை காக்கும் முறைமையால். 2

"ஆழ்க தீய"தென் றோதிற் றயல்நெறி
வீழ்க என்றது வே" றெல்லாம் அரன்பெயர்
சூழ்க" என்றது தொல்லுயிர் யாவையும்
வாழி அஞ்செழுத் தோதி வளர்கவே. 3

சொன்ன "வையக மும்துயர் தீர்கவே"
என்னும் நீர்மை இகபரத் தில்துயர்
மன்னி வாழுல கத்தவர் மாற்றிட
முன்னர் ஞானசம் பந்தர் மொழிந்தனர். 4

"அரிய காட்சியர்" என்பதவ் வாதியைத்
"தெரிய லாம்நிலை யால்"தெரி யாரென
உரிய அன்பினிற் காண்பவர்க் குண்மையாம்
பெரிய நல்லடை யாளங்கள் பேசினர். 5

"ஆயி னும்பெரி யாரவர்" என்பது
மேய இவ்வியல் பேயன்றி விண்முதற்
பாய பூதங்கள் பல்லுயிர் அண்டங்கள்
ஏயும் யாவும் இவர்வடி வென்றதாம். 6

பின்பும் "ஆரறி வாரவர் பெற்றியே"
என்ப தியாருணர் வானும்சென் றெட்டொணு
மன்பெ ருந்தன்மை யார்என வாழ்த்தினர்
அன்பு சூழ்சண்பை ஆண்டகை யாரவர்.

"வெந்த சாம்பல் விரை "யென் பதுதம
தந்த மில்லொளி அல்லா ஒளியெலாம்
வந்து வெந்தற மற்றப் பொடியணி
சந்த மாக்கொண்ட வண்ணமும் சாற்றினர். 8

தமக்குத் " தந்தையர் தாயிலர் " என்பதும்
அமைத்திங் கியாவையும் ஆங்கவை வீந்தபோ
திமைத்த சோதி அடக்கிப்பின் ஈதலால்
எமக்கு நாதர் பிறப்பிலர் என்றதாம். 9

" தம்மை யேசிந்தி யா "எனும் தன்மைதான்
மெய்ம்மை யாகி விளங்கொளி தாமென
இம்மை யேநினை வார்தம் இருவினைப்
பொய்ம்மை வல்லிருள் போக்குவர் என்றதாம். 10

" எந்தை யாரவர் எவ்வகை யார்கொல் " என்(று)
இந்த வாய்மைமற் றெப்பொருட் கூற்றினும்
முந்தை யோரைஎக் கூற்றின் மொழிவதென்(று)
அந்தண் பூந்தராய் வேந்தர் அருளினர். 11

ஆதி " ஆட்பா லவர்க்கரு ளுந்திறம் "
நாதன் மாட்சிமை கேட்க நவிலுங்கால்
ஓதும் எல்லை உலப்பில ஆதலின்
யாதும் ஆராய்ச்சி இல்லையாம் என்றதாம். 12

அன்ன ஆதலில் " ஆதியார் தாளடைந்
தின்ன கேட்கவே ஏற்றகோட் பாலவும்
முன்னை வல்வினை யும்முடி வெய்தும்அத்
தன்மை யார்க் "கென் றனர்சண்பை காவலர். 13

மன்னும் " ஏதுக்க ளாலெனும் " வாய்மைதான்
தன்ன தொப்புவே றின்மையின் சங்கரன்
இன்ன தன்மையை ஏது எடுத்துக்காட்
டன்ன வாற்றால் அளப்பிலன் என்றதாம். 14

தோன்று காட்சி " சுடர்விட் டுளன் "என்ப(து)
ஆன்ற அங்கிப் புறத்தொளி யாய்அன்பில்
ஊன்ற உள்ளெழும் சோதியாய் நின்றனன் ;
ஏன்று காண்பார்க் கிதுபொருள் என்றதாம். 15

" மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்றும் " என்ப(து)
ஆதிச் சுடர்ச்சோ தியைஅன்பின் அகத்துள் ளாக்கிப்
போதித்த நோக்குற் றொழியாமற் பொருந்தி வாழ்ந்து
பேதித்த பந்தப் பிறப்பின்நெறி பேர்மின் என்றும். 16

ஈண்டு " சாதுக்கள் என்றெடுத் தோதிற்று
வேண்டும் வேட்கைய எல்லாம் விமலர்தாள்
பூண்ட அன்பினிற் போற்றுவீர்! " சார்மின் " என்(று)
ஆண்ட சண்பை அரசர் அருளினர். 17

" ஆடும் " எனவாந் திருப்பாட்டின் அமைத்த மூன்றும்
நீடும் புகழோ? பிறர்துன்பம் நீத்தற்கோ? என்று
தேடும் உணர்வீர் உலகுக்கிவை செய்த தீசர்
கூடுங் கருணைத்திறம் என்றனர் கொள்கை மேலோர். 18

கருதுங் " கடிசேர்ந்த " எனுந்திருப் பாட்டில் ஈசர்
மருவும் பெரும்பூசை மறுத்தவர்க் கோறல் முத்தி
தருதன் மையதாதல் சண்டீசர் தம்செய்கை தக்கோர்
பெரிதும் சொலக்கேட் டனம்என்றனர் பிள்ளை யார்தாம். 19

" வேதமுதல்வன் " எனும்மெய்த் திருப்பாட் டினினேர்
ஆதி உலகோர் இடர்நீங்கிட ஏத்த " ஆடும் "
பாத முதலாம் பதினெண் புராணங்கள் என்றே
ஓதென் றுரைசெய் தனர்யாவும் ஓதா துணர்ந்தார். 20

" பாவுற்ற பாராழி வட்டத் " திருப் பாட்டின் உண்மை
காவற்றொழி லானெனும் கண்ணனும் காவல் பெற்ற
தியாவர்க்கு மேலாய ஈசன்அருள் ஆழிபெற்று
மேவுற்ற சீருற் ற(து)என்றனர் வேதவாயர். 21

" மாலா யவன் " என்ன வருந்திருப் பாட்டில் மாலும்
தோலா மறைநான் முகனும் தொடர்வாம் அமரர்
ஏலா வகைசுட்ட நஞ்சுண் டிறவாமை காத்த
மேலாம் கருணைத் திறம்வெங்குரு வேந்தர் வைத்தார். 22

ஆன" அற் றன்றி " என்ற அத்திருப் பாட்டிற் கூடல்
மாநக ரத்துச் சங்கம் வைத்தவன் தேற்றத் தேறு
ஈனர்கள் எல்லைக் கிட்ட ஏடுநீர் எதிர்ந்து செல்லில்
ஞானம் ஈசன்பால் அன்பே என்றனர் ஞானம் உண்டார். 23

திருச்சிற்றம்பலம்

இத்திருப்பாடல்கள் " வாழ்க அந்தணர் " என்று தொடங்கும் திருப்பாசுரக் கருத்துக்களை விளக்கியவாறு காண்க.

1. அந்தணர், தேவர்கள், பசுக்கூட்டங்கள் வாழ்க என்று வாழ்த்திய இம்மெய்ம்மொழியின் பயன் இவ்வுலகமெல்லாம் இன்புற்று வாழ வேதவிதிதமான வேள்விகளும், இறைவர்க்குரிய வழிபாடுகளும் நிலைத்து நிற்க வேண்டியேயாகும்.

2. வேள்வியின் பயன் மழைபெய்தல். அதனை வாழ்த்தியது இறைவருடைய அர்ச்சனைக்குரிய உறுப்புக்களிலே புனல் ஒன்றாத லால். "வேந்தனும் ஓங்குக" என்று மன்னனை வாழ்த்தியது ஆலய பூசைகளையும் மற்றும் வேத வேள்விகளையும் என்றும் குறைபா டடையாது காத்து வருபவன் அரசனாகலின்.

3. "ஆழ்க தீயது" என்று திருஞானசம்பந்தர் ஓதியது வேத ஆகம நெறியல்லாத மற்றைய அயல் நெறிகள் ஆகியவற்றை வீழ்க என்று செப்பியதாகும். "எல்லாம் அரன் நாமமே சூழ்க" என்றது ஆன்மகோடிகள் அனைத்தும் எம்பெருமான் திருநாமமாகிய ஐந் தெழுத்தையும் செபித்து உய்யும்பொருட்டேயாகும்.

4. "வையகமுந் துயர் தீர்கவே" என்றது இம்மையிலும் மறுமையிலும் நேரக்கூடிய துன்பங்கள் யாவுந் தீர்ந்து உலகுயிர்கள் வாழும் பொருட்டேயாகும்.

5. "அரிய காட்சியர்" என்பது ஆதிமுதல்வனை யாரும் தெரிந்துகொள்ள இயலாத நிலைபற்றியது. அன்பில்லார்க்குக் காண டற்கரியவர். அங்ஙனமிருந்தும் உரிய அன்பினால் காண முயல்ப வர்க்கு அவன் எளியனாய் திருமேனி தரித்து வந்து காட்சியளிப் பான் என்று அவனுடைய நல்லடையாளங்களாகிய அங்கை எரி, ஏறும் இடபம், கரியகண்டம், உறையும் காடு என்பவற்றைப் பேசினார்.

6. "ஆயினும் பெரியாரவர்" என்பது மேற்கூறிய உருவத் திருமேனியேயன்றி ஐம்பெரும் பூதங்களாகவும், பல்லுயிர்க் கூட் டங்களாகவும், பலவண்டங்களாகவும் பிறவனைத்தும் இவர் வடி வாம் என்பதைக் குறித்ததாகும்.

7. பின்பும் "ஆர றிவார் அவர் பெற்றியே" என்பது எக் காரணம்பற்றியெனின் எவருடைய உணர்வாலும் சென்று எட்ட மாட்டாத நிலைபெற்ற பெருமைத் தன்மையை உடையவர் என சண்பை ஆண்டகையாளராகிய திருஞானசம்பந்தர் மொழிந்தார் என்பதாம் (அவனருளே கண்ணாகக் காணின் அல்லால் எவராலுந் தம் மறிவினால் காண்டற்கு அரியவன் என்பதாம்.)

8. "வெந்த சாம்பல் விரை" என்பது தமது எல்லையில்லாப் பேரொளியின்முன் மற்ற எல்லாப் பொருளும் நீறாகி நிற்க (பிரளய காலத்தில் அழியுந்தன்மையான யாவும் அழியாதசிவசோதியில் வந்து ஒடுங்குவதைக் காட்ட) அச்சாம்பலையே வாசனைச் சந்தனப் பூச்சுமாதிரி கொண்ட தன்மையைச் சாற்றினார்.

9. தமக்குத் தந்தையோடு தாயும்மிலர் என்பது இவ்வுலகம் யாவையும் தோற்றி, காத்து, அவையழிந்தபோது தம்முள் அடக்கி

அவற்றை மீண்டும் தோற்றுவிப்பதால் எம்முடைய தலைவர் பிறப்பில்லாதவர் என்பதாகும். எல்லாம் தம்முள் அடங்குதலாலும் தாம் எதிலும் அடங்காத் தன்மையாலும் பெருமான் பிறப்பிறப்பில்லாதவர். பிறப்பில்லானுக்குத் தாயும் தந்தையும் இல்லை என்பது வெளிப்படை.

10. "தம்மையே சிந்தியா" என்று எடுத்த தன்மை யாதெனின் மெய்யொளியாகிய பெருமான் இவன் என்று அவனைச் சிந்திப்பவர்களுடைய இருவினையாகிய இருளை நீங்கச் செய்வார் என்பதாம்.

11. "எந்தையார் அவர் எவ்வகையார் கொல்" என்ற இவ்வாய்மை மற்று எவ்வகையாகக் கூறினும் எல்லார்க்கும் முதல்வனை பெருமானை முற்றுங் கூறமுடியாது என்பதாகும்.

12. "ஆதி ஆட்பாலவர்க்கருளுந் திறம்" என்றெடுத்தோதியது நம் தலைவனுடைய பெருமை நவில்வதென்றால் அது ஒரு அளவுக்குட்படாதது ஆகும். ஆகையால் அவ்விஷயத்தில் எவ்வித மான ஆராய்ச்சியும் தேவையில்லை என்பதாம்.

13. அவன் மாண்பு அன்னதகையது ஆதலின் முதல்வனாகிய அவன் தாளிணையைச் சரணடைந்து கோள்களாலும் வினையாலும் விளையும் கேடுகள் வந்தடையாதவாறு வேண்டினால் அப்படி வேண்டுபவர்க்குக் கிரகங்களின் துன்பமும் வலிய வினைகளும் முடிவெய்தும் என்று மொழிந்தனர் சண்பை வேந்தர். (திருஞானசம்பந்தர்)

14. நிலைபெற்றதான "ஏதுக்களால் எனும்" இந்த மெய்ம் மொழி அவனுக்கு ஒப்பாகக் கூறக்கூடிய பொருள் இன்னொன்று இல்லையாதலால் சங்கரனுடைய தன்மை இது என்பதை ஏதுக்கள் எடுத்துக் காட்டுக்கள் போன்றவைகளால் அளந்து காட்ட முடியாது என்பதாகும்.

15. "சுடர்விட்டுளன்" என்றது அக்னி என்னும் புறவொளியாயும், உள்ளே எழும் அருட்சோதியாகவும் பெருமான் நின்றுள்ளனன். நன்கு ஊன்றி உன்னுபவர்க்கு இது 'உண்மைப் பொருள்' என்று காட்டியதாகும்.

16. "மாதுக்கம் நீங்கலுறுவீர் மனம்பற்றும்" என்பது அந்த ஆதியாய சுடர்விட்டொளிரும் சோதிவடிவினனை அன்பினால் தம் மனத்தின்கண் பாவித்து ஞான நோக்கினால் இடைவிடாது நோக்கி வாழ்ந்து பிறவித்துயரை நீக்குங்கள் என்று கூறியதாகும்.

17. சாதுக்கள் என்றெடுத்தோதியது வேண்டும் வேட்கை யாவும் இறைவன் திருவடி நேயமே என்று பேரன்புடன் போற்றுபவர்களே! சிறிது பொழுதேனும் அவன்பால் வந்து சாருங்கள் என்று சண்பை அரசர் அருளிச் செய்தார்.

18. "ஆடும்" என்ற திருப்பாட்டில் அமைத்த மூன்றும், அதாவது ஆடும் என்பதும், கூற்றம் உதைத்தது என்பதும், வேதம் பாடும் என்பதும் இறைவனுக்குப் புகழோ அல்லது பிறர் துன்பம் தீர்த்தற்கோ என்று ஆராயும் உணர்வினையுடையவர்களே, உலகுக்கு இவைகளை ஈசன் செய்தது அவனுடைய கருணைத் திறமே என்று உரைத்தனர் மேலான கொள்கையுடைய திருஞான சம்பந்தர்.

19. "கடிசேர்ந்த" என்னும் திருப்பாட்டில் சிவபூசைக்கு இடையூறு விளைவிப்பவர்களைக் கொல்லுதலும் முத்தி தரும் தன்மையதாதலை சண்டீசருடைய செய்கையைத் தக்க பெரியோர்கள் பெரிதும் சொல்லக் கேட்டுத் தெரிந்துகொண்டோம் என்றனர் பிள்ளையார்.

20. "வேதமுதல்வன்" என்ற மெய்த்திருப்பாட்டில் இவ்வுலக மெல்லாம் இடர் நீங்கி வாழும்படி ஏத்த ஆடுகின்ற திருப்பாதத் தையே முதன்மையாகக் கொண்ட (சிவபெருமானையே முதல்வ னாகக்கொண்ட) சூதமுனிவன் உரை செய்த பதினெண்புராணங் களையும் ஓதுக என்று உரைத்தனர் யாவும் ஓதாதுணர்ந்த பெரி யோராகிய திருஞானசம்பந்தர்.

21. "பாவுற்ற பாராழி வட்டம்" என்ற திருப்பாட்டில் கூறப்பட்ட உண்மையாவது யாதெனில் காவற்றொழிலான் என்ற திருமாலும் சிறந்த காவற்றொழிலைப் பெற்றது யாவர்க்கும் மேலாய பரமேச்வரனின் அருள் உருவாகிய சக்கராயுதத்தைப் பெற்ற பெருமையாலேயே ஆகும்.

22. "மாலாயவன்" என வருந் திருப்பாட்டில் குறிப்பிட்டது திருமாலும் நான்முகனும் மற்றும் தேவர் பலரும் ஏற்றுக்கொள்ள முடியாதபடி வருத்திய நஞ்சினை உண்டு அவர்கள் இறவாத வண்ணம் காத்தருளிய மேலான கருணைத் திறத்தினைப் போற்றிய தாகும்.

23. "அற்றன்றி" என்ற திருப்பாட்டில் மதுரையில் சங்கம் வைத்த பாண்டியன் தேற்றியுந் தேருத சமணர்களின் முடிவுக்காக வைகையாற்றில் இட்ட ஏடு நீரில் எதிர்ந்து செல்லுமாயின் உண்மையான ஞானமாவது சிவபெருமானிடம் செலுத்தும் அன்பேயாகும் என்றனர் ஞானத்தையே அமுதாக உண்ட பெரியார்.

**குறிப்பு :** —திருஞானசம்பந்தர் திருப்பாதம் சிறியேன் அறி வுக்குத் தந்த நெறியே சென்று சிறிது யான் அறிநீர்மை கும்பிட் டேன் என்று சேக்கிழார் பெருமான் கூறியருளினுரெனில் இத் திருப்பதிகத்துக்கு முற்றப் பொருள் உரைத்து விட்டோம் என்று யாவரே கூறவல்லார்?

 சிவமயம் 



# 11
# சத்துரு ஜயம் சித்தமாய்க் கிடைக்க



ஓம் கல்யாணஸுந்தரமூர்த்தயே நம : ஓம் அர்த்தநாரீச்வரமூர்த்தயே நம :

## 1. மாணிக்கவாசக சுவாமிகள்

### திருவாசகம்

### திருவுந்தியார்

[8-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*வளைந்தது வில்லு விளைந்தது பூசல்*
*உளைந்தன முப்புரம் உந்தீபற*
*ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற.* 1

*ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்*
*ஓரம்பே முப்புரம் உந்தீபற*
*ஒன்றும் பெருமிகை உந்தீபற.* 2

*தச்சு விடுத்தலும் தாமடி யிட்டலும்*
*அச்சு முறிந்ததென் றுந்தீபற*
*அழிந்தன முப்புரம் உந்தீபற.* 3

*உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண்*
*டெய்யவல் லானுக்கே உந்தீபற*
*இளமுலை பங்கனென் றுந்தீபற.* 4

*சாடிய வேள்வி சரிந்திடத் தேவர்கள்*
*ஓடிய வாபாடி உந்தீபற*
*உருத்திர நாதனுக் குந்தீபற.* 5

ஆஆ திருமால் அவிப்பாகங் கொண்டன்று
சாவா திருந்தானென் றுந்தீபற
சதுர்முகன் தாதையென் றுந்தீபற. 6

வெய்யவன் அங்கி விழுங்கத் திரட்டிய
கையைத் தறித்தானென் றுந்தீபற
கலங்கிற்று வேள்வியென் றுந்தீபற. 7

பார்ப்பதி யைப்பகை சாற்றிய தக்கனைப்
பார்ப்பதென் னேயேடி யுந்தீபற
பணைமுலை பாகனுக் குந்தீபற. 8

புரந்தரன் ஞரொரு பூங்குயி லாகி
மரந்தனி லேறினர் உந்தீபற
வானவர் கோனென்றே உந்தீபற. 9

வெஞ்சின வேள்வி வியாத்திர ஞர்தலை
துஞ்சின வாபாடி யுந்தீபற
தொடர்ந்த பிறப்பற வுந்தீபற. 10

ஆட்டின் தலையை விதிக்குத் தலையாகக்
கூட்டிய வாபாடி யுந்தீபற
கொங்கை குலுங்கநின் றுந்தீபற. 11

உண்ணப் புகுந்த பகனொளித் தோடாமே
கண்ணைப் பறித்தவா றுந்தீபற
கருக்கெட நாமெலாம் உந்தீபற. 12

நாமகள் நாசி சிரம்பிர மன்படச்
சோமன் முகம்நெரித் துந்தீபற
தொல்லை வினைகெட உந்தீபற. 13

நான்மறை யோனு மகத்திய மான்படப்
போம்வழி தேடுமா றுந்தீபற
புரந்தரன் வேள்வியில் உந்தீபற. 14

சூரியனார் தொண்டை வாயினிற் பற்களை
வாரி நெரித்தவா றுந்தீபற
மயங்கிற்று வேள்வியென் றுந்தீபற. 15

தக்கனு ரன்றே தலையிழந் தார்தக்கன்
மக்களைச் சூழநின் றுந்தீபற
மடிந்தது வேள்வியென் றுந்தீபற. 16

பாலக ஞர்க்கன்று பாற்கடல் ஈந்திட்ட
கோலச் சடையற்கே யுந்தீபற
குமரன்றன் தாதைக்கே யுந்தீபற. 17

நல்ல மலரின்மேல் நான்முக ஞர்தலை
ஒல்லை யரிந்ததென் றுந்தீபற
உகிரால் அரிந்ததென் றுந்தீபற. 18

தேரை நிறுத்தி மலையெடுத் தான்சிரம்
ஈரைந்தும் இற்றவா றுந்தீபற
இருபதும் இற்றதென் றுந்தீபற. 19

திருச்சிற்றம்பலம்

[**பதிக வரலாறு** :—மணிவாசகப் பெருமான் தில்லையில் தங்கி யிருந்த காலத்து மகளிர் உந்திப் பறந்து விளையாடுதலைக் கண்ட போது அவர்கள் கூற்ருக இப்பதிகத்தை அருளிச் செய்தார். இறைவனே தமது திருக்கரத்தால் திருவாசகத்தை எழுதிக் கொண்டான் என்ருல் என்னே இத்திருவாசகத்தின் பெருமை! என்னே இதன் தெய்வத் தன்மை? இதனை ஓதும் பக்தர்கள் தங்கள் பகையை வெல்வர் என்பது உறுதி.]

**இதன் கருத்து** :—பரமேசுவரனிடம் வேண்டிய வரங்களைப் பெற்ற தக்கன் (பிரமதேவன் மகன்) சிவனை அவமதித்து அவனைத் தேவர்கள் முன்னிலையில் நிந்தித்து, யாககர்த்தாவாக அவரிருந்தும் அவரை நீக்கித் தானே ஒரு யாகம் செய்யத் தொடங்கினன். அங்குக் கிடைக்கவுள்ள அவிர்ப்பாகத்திற்கு ஆசைப்பட்ட தேவர்கள் சிவநிந்தையைக் காதால் கேட்டனர். அதன் பயன் சிவன் கோபத்தினின்றும் தோன்றிய வீரபத்திரக் கடவுள் தக்கன் வேள்விச்சாலைக்குச் சென்று இனிய சொற்களாலே இறைவனுக்கு முதலவிர்ப்பாகத்தைக் கொடுக்க வேண்டினர். தக்கன் மறுத்தான். உடனே வீரபத்திரக் கடவுள் கோபம் கொண்டு அங்கு கூடியிருந்த தேவர்கள் அனைவரையும் கண்டித்த வரலாறுகளைக் கூறுவது இப்பதிகம். (தக்க யாக சம்மார விவரத்தை விரிவாகக் கந்தபுராணம் தட்ச காண்டத்திலுள்ள யாக சங்காரப் படலத்தில் காண்க.)

**இதன் பொருள் :**

1. திரிபுர சம்மாரத்தைக் கூறுவது.

2. இறைவர் திரிபுரம் எரிக்கச் சென்றபோது அவரது கையில் ஒரே அம்புதான் இருந்தது. இரண்டு இல்லை. அந்த ஓரம்பும் அவருக்கு மிகையேயாகும். (புன்னகையால் புரம் எரித்தபடியால் அந்த ஓரம்பும் மிகையென்பது கருத்து.)

3. திரிபுர சம்மாரத்திற்கு இறைவன் தேர்மீது ஏறிச் சென்ற போது அத்தேர்ச் சக்கரத்தின் அச்சு முறிந்தது. பின்னர் சரி செய்யப்பட்டது. திரிபுரங்களும் இறைவன் புன்னகையால் எரிந்தன.

4. இதுவும் மேற்கூறிய கருத்தையே கூறுவது.

5. வீரபத்திரக் கடவுளுக்குப் பயந்து தேவர்கள் ஓட்டம் பிடித்தனர்.

6. பிரமதேவனது பிதாவான திருமால் யாகசாலையில் இருந்து அவிசை வாங்கியுண்டும் சாவாதிருந்தான் என்று கூறுவது.

7. அக்கினியின் கையைத் தடிந்தார் வீரபத்திரக் கடவுள் என்பதைக் கூறுவது.

8. உமாதேவியைத் தக்கன் இகழ்ந்ததால் நேர்ந்த ஆபத்தைக் குறிப்பது.

9. வீரபத்திரருக்குப் பயந்த இந்திரன் குயிலுருவமெடுத்துக் கொண்டு மரமேறி ஒளிந்தான் என்பது.

10. தக்கன் தலை அறுந்ததைப்பற்றிக் கூறுவது.

11. தக்கன் மனிதத் தலைக்குப் பதிலாக அவனை உயிர்ப்பிக்க எண்ணிய வீரபத்திரக்கடவுள் யாகசாலையில் வெட்டப்பட்டிருந்த ஒரு ஆட்டின் தலையைத் தக்கன் உடலில் பொருத்தி எழுப்பினர் என்பது. ("அத்தனை யிகழும் நீரார் ஆவரிப்பரிசே யன்றே?")

12. பகன் என்னும் ஒரு சூரியன் கண்ணைப் பிடுங்கி எறிந்த வரலாறு. சிவாஷ்டோத்தரத்தில் உள்ள இக்கருத்தை நோக்குக. "பகநேத்ரபிதே நம:"

13. சரசுவதியின் மூக்கை அரிந்ததும், சந்திரனைத் தேய்த்ததும் கூறப்பெற்றன.

14. யாககர்த்தாவாயிருந்த தக்கன் ஓட இந்திரனும் பிரமனும் அவனைத் தொடர்ந்ததைக் குறித்தது.

15. பூஷன் என்னும் ஒரு சூரியன் பற்களைப் பிடுங்கியெறிந்தார் என்பதுபற்றிக் கூறுவது. சிவாஷ்டோத்தரத்திலுள்ள "பூஷதந்தபிதே நம:" என்பது சான்று.

16. தக்கன் தலையிழந்ததும், அவன் மக்கள் அவனைச் சூழ்ந்திருந்ததும் யாகம் அழிந்ததும்பற்றிக் கூறுவது.

17. பால் வேண்டி அழுத உபமன்யு முனிவருக்குத் திருப்பாற் கடலையே இறைவன் அளித்தார் என்பது வரலாறு.

18. அகங்காரங் கொண்ட ஐந்து தலைகளோடிருந்த பிரம தேவனது ஒரு தலையை இறைவன் தன் நகத்தால் கிள்ளி எறிந்தார் என்பது. இது திருக்கண்டியூரில் நிகழ்ந்த அற்புதம்.

19. சிவ பக்தனான இராவணன் அகங்காரத்தால் கயிலையைப் பெயர்க்க முயன்றபோது அவனைத் தண்டித்த வரலாறு கூறுவது.

## 2. நக்கீரதேவ நாயனார்

### திருமுருகாற்றுப்படை

[11-ஆம் திருமுறை

**நூலாசிரியர் வரலாறு** :—நக்கீரர் மதுரைக் கணக்காயனார் மகனாவர். இவர் மதுரைக் கடைச்சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மருள் ஒருவர். பொய்யடிமையில்லாத புலவர்கள் என்றும் இவர்களை யழைப்பது வழக்கம். இவர்களுள் தலையாயவராகக் கருதப்படுபவர் நக்கீரர் பெருமான். ஒரு மலைக்குகையில் முன்னமே சிவபூசையில் தவறிய அன்பர்களைக் கற்கிமுகி என்னும் பிரமராக்கதம் ஒன்று குகையில் அடைத்து வைத்து அவர்கள் எண்ணிக்கை ஆயிரம் ஆனதும் அவர்களனைவரையும் ஒரு சேர உண்ண விரும்பியது. இதுவரை அக்குகையில் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்பர் அடைபட்டிருந்தனர். சிவபூசையில் தவறிய நக்கீரரையும் இப்பூதம் அக்குகையிலடைத்து ஆயிரம் பெயர்களானதால் அவர்களை ஒரு சேர உண்ண எண்ணி அப்பூதம் நீராடச் சென்றது. அதுசமயம் குகையிலிருந்த அத்தனை பேரும் நக்கீரரைப் பார்த்து மிக்க கோபமடைந்து இவரால் தங்கள் அனைவரின் உயிர்கள் முடிவடையப் போகும் வரலாற்றைச் சொல்லி வருந்தினர். உடனே நக்கீரதேவர் திருமுருகாற்றுப் படையைப் பாடினார். முருகப்பெருமான் திருவருளால் நீராடச் சென்ற பூதம் வேலால் இறந்தது; குகை உடைந்தது; அனைவரும் விடுதலைப் பெற்றனர். எனவே, இதனை அன்பர்கள் நாள்தோறும் பக்தி சிரத்தையுடன் ஓதினால் எத்தகைய பகையையும் வெல்வது உறுதி என்பது சத்தியம்.

இனி, இந்நூல் விழுமிய ஓசையமைந்த ஆசிரியப்பாவான் 317 அடிகளையுடையதாய் ஆறு பிரிவுகள் பெற்றுச் சொல்லினும் பொருளினும் சுவைபடத் திகழ்ந்து சங்கத் தமிழ் நூல்களில் தலைமை பெற்று விளங்குவது.

பரிசில் பெற்று வந்த இரவலன் ஒருவன் பரிசில் வேண்டி எதிர் வந்த இரவலன் ஒருவனை நோக்கித் தான் பெற்ற பரிசிலாகிய பெருவளத்தினை எடுத்துச் சொல்லி, "நீயும் அங்குச் சென்றால் விரும்பிய பொருளைப் பரிசிலாகப் பெற்று வரலாம்" என்று



திருப்பரங்குன்றம்

அக்கொடையாளியின் பெயர், ஊர் முதலியன கூறி அவரிடம் செல்லுமாறு வழிப்படுத்துவான். (ஆற்றுப்படுத்துவான்) இங்ஙனம் செய்யும் செய்யுள் இயற்றுவதற்கு **ஆற்றுப்படை** என்று பெயர். ஆற்றுப்படை—வழிப்படுத்துதல்.

திருமுருகாற்றுப்படை என்பது பேரின்பத்தை நாடி வரும் இரவலன் ஒருவனை ஜீவன் முக்தனுகிய ஒருவன் எதிர்ப்பட்டு முருகக் கடவுளிடம் ஆற்றுப்படுத்தியது என்னும் பொருளில் வந்தது. **பத்துப்பாட்டு** என்னும் நூல் வரிசையில் முதற்கண் அமைந்துள்ளது. இதுமட்டுமா? சைவத் தெய்வப் பன்னிரு திருமுறைகளுள் பதினோராந் திருமுறையிலும் இடம்பெற்றுச் சைவ சமய நூலாகவும் திகழ்கின்றது. இது இறைவன் சம்பந்தம் உடையதாதலின் **திரு** என்னும் அடைமொழியுடன் வழங்கப் பெறுகின்றது.

இந்நூலிற்கு உச்சிமேற்புலவர்கொள் நச்சினுர்க்கினியர் ஒரு சிறந்த உரையினை இயற்றியுள்ளார். இதுவன்றியும் பரிமேலழகர் உரை ஒன்றும் வெளி வந்துள்ளது. இன்னும் இதுவரை கிடைத்துள்ள வேறிரு உரைகளும் காசி மடத்து அதிபர், கொடைவள்ளல் ஸ்ரீலஸ்ரீ அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் நன் முயற்சியால் வெளி வந்துள்ளன. அவ்வுரையாசிரியர்கள் **கவிப்பெருமாளும் பரிதியாருமாவார்கள்.** வாழ்க சைவம் வாழ்க காசிமடத்துத் தலைவர்!!

இதன் படனபலன் பகையை வெல்லலும் நினைத்த கார்யங்கள் சித்தித்தலும், பேரின்பப் பெருவாழ்வு பெறுதலுமாம்.

## 1. திருப்பரங்குன்றம்

*திருச்சிற்றம்பலம்*

உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிரொளி
உறுநர்த் தாங்கிய மதன்உடை நோன்தாள்
செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை
மறுஇல் கற்பின் வாள்நுதல் கணவன்
கார்கோள் முகந்த கமம்சூல் மாமழை
வாள்போழ் விசும்பில் வள்உறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தண்நறுங் கானத்து
இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து
உருள்பூந் தண்டார் புரளும் மார்பினன்
மால்வரை நிவந்த சேண்உயர் வெற்பில்

கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பின் பணைத்தோள்
கோபத்து அன்ன தோயாப் பூந்துகில்
பல்காசு நிரைத்த சில்காழ் அல்குல்
கைபுனைந்து இயற்றாக் கவின்பெறு வனப்பின்
நாவலொடு பெயரிய பொலம்புனை அவிர்இழைச்
சேண்இகந்து விளங்கும் செயிர்தீர் மேனித்
துணையோர் ஆய்ந்த இணைஈர் ஓதிச்
செங்கால் வெட்சிச் சீறிதழ் இடைஇடுபு
பைந்தாள் குவளைத் தூஇதழ் கிள்ளித்
தெய்வ உத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகம் தைஇய தேம்கமழ் திருநுதல்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகள் அறும் உச்சிப்
பெருந்தண் சண்பகம் செரீஇக் கரும் தகட்டு
உளைப்பூ மருதின் ஒள்இணர் அட்டிக்
கிளைக் கவின்(று) எழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு
இணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி ஒண் தளிர்
நுண்பூண் ஆகம் திளைப்பத் திண்காழ்
நறும்குறடு உரிஞ்சிய பூம்கேழ்த் தேய்வை
தேம்கமழ் மருதுஇணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகிழ் இளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்தாது அப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழிஓங்கிய வென்றுஅடு விறற்கொடி
வாழிய பெரிது என்றுஏத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகம் சிலம்பப் பாடிச்
சூர்அர மகளிர் ஆடும் சோலை
மந்தியும் அறியா மரம்பயில் அடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
பார்முதிர் பனிக்கடல் கலங்க உள்புக்குச்
சூர்முதல் தடிந்த சுடர்இலை நெடுவேல்
உலறியகதுப்பின் பிறழ்பல் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கண் சூர்த்த நோக்கின்
கழல்கண் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை அலைக்கும் காதின்பிணர் மோட்டு
உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்
குருதிஆடிய கூர்உகிர்க் கொடு விரல்
கண்தொட்டு உண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்தொடித் தடக்கையின் ஏந்தி வெருவர
வென்றுஅடு விறற்களம் பாடித்தோள் பெயரா

நிணம்தின் வாயள் துணங்கை தூங்க
இருபேர் உருவின் ஒருபேர் யாக்கை
அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர்நல் வலம் அடங்கக் கவிழ்இணர்
மாமுதல் தடிந்த மறுஇல் கொற்றத்து
எய்யா நல்இசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்து உறையும்
செலவுநீ நயந்தனை ஆயின் பலவுடன்
நன்னர் நெஞ்சத்து இன்நசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே
செருப்புகன்று எடுத்த சேண்உயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போர்அரு வாயில்
திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடம்மலி மறுகில் கூடற் குடவயின்
இரும்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முள்தாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கள்கமழ் நெய்தல் ஊதி எல்படக்
கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்
அம்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்று அமர்ந்து உறைதலும் உரியன்;
அதா அன்று—

## 2. திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்)

வைந்நுதி பொருத வடுஆழ் வரிநுதல்
வாடா மாலை ஓடையொடு துயல்வரப்
படும்மணி இரட்டும் மருங்கின் கடுநடைக்
கூற்றத்து அன்ன மாற்றரும் மொய்ம்பின்
கால்கிளர்ந்து அன்ன வேழம் மேல்கொண்டு
ஐவேறு உருவின் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
மின்உறழ் இமைப்பில் சென்னிப் பொற்ப
நகைதாழ்பு துயல்வரூஉம் வகைஅமை பொலம்குழை
சேண்விளங்கு இயற்கை வாண்மதி கவைஇ
அகலா மீனின் அவிர்வன இமைப்பத்
தாவுஇல் கொள்கைத் தம்தொழில் முடிமார்
மனன்ஏர்பு எழுதரு வாள்நிற முகனே
மாஇருள் ஞாலம் மறுஇன்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்; ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்துஇனிது ஒழுகிக்
காதலின் உவந்து வரம் கொடுத்தன்றே; ஒருமுகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ

அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே ; ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏம்உற நாடித்
திங்கள் போலத் திசைவிளக்குமே ; ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம் வேட்டன்றே.
ஒருமுகம் குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகை அமர்ந்தன்றே ;
ஆங்குஅம் மூவிருமுகனும் முறைநவின்று ஒழுகலின்
ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பில்
செம்பொறி வாங்கிய மொய்ம்பில் சுடர்விடுபு
வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்
விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது ஒருகை ;
உக்கம் சேர்த்தியது ஒருகை ;
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை அசைஇயது ஒருகை ;
அங்குசம் கடாவ ஒருகை ; இருகை
ஐயிரு வட்டமொடு எஃகுவலம் திரிப்ப ; ஒருகை
மார்பொடு விளங்க ; ஒருகை
தாரொடு பொலிய : ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப ; ஒருகை
பாடுஇன் படுமணி இரட்ட ; ஒருகை
நீல்நிற விசும்பின் மலிதுளி பொழிய ; ஒருகை
வான்அர மகளிர்க்கு வதுவை சூட்ட ; ஆங்குஅப்
பன்னிரு கையும் பாற்பட இயற்றி
அந்தரப் பல்லியம் கறங்கத் திண்காழ்
வயிர்எழுந்து இசைப்ப வால்வளை ஞரல
உரம்தலைக் கொண்ட உரும்இடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ
விசும்பு ஆறாக விரைசெலல் முன்னி
உலகம் புகழ்ந்த ஓங்குஉயர் விழுச்சீர்
அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே ;
அதா அன்று—

### 3. திருஆவினன்குடி (பழநி அடிவாரம்)

சீரை தைஇய உடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வால்நரை முடியினர்
மாசுஅற இமைக்கும் உருவினர் மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்பு எழுந்து இயங்கும் யாக்கையர் நன்பகல்
பலஉடன் கழிந்த உண்டியர் இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர் யாவதும்
கற்றோர் அறியா அறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம்பு ஆகிய தலைமையர் காமமொடு
கடும்சினங் கடிந்த காட்சியர் இடும்பை

யாவதும் அறியா இயல்பினர் மேவரத்
துனிஇல் காட்சி முனிவர் முற்புகப்
புகை முகந்து அன்ன மாசுஇல் தூஉடை
முகைவாய் அவிழ்ந்த தகைசூழ் ஆகத்துச்
செவி நேர்பு வைத்த செய்வுஉறு திவவின்
நல்யாழ் நவின்ற நயன்உடை நெஞ்சின்
மெல்மொழி மேவலர் இன்நரம்பு உளர
நோய்இன்று இயன்ற யாக்கையர் மாவின்
அவிர்தளிர் புரையும் மேனியர் அவிர்தொறும்
பொன்உரை கடுக்கும் திதலையர் இன்னகைப்
பருமம் தாங்கிய பணிந்து ஏந்து அல்குல்
மாசுஇல் மகளிரொடு மறுஇன்றி விளங்கக்
கடுவோடு ஒடுங்கிய தூம்புஉடைவால் எயிற்று
அழல்என உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறல்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்அணி நீள்கொடிச் செல்வனும் வெள்ஏறு
வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்
உமைஅமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூஎயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்
நூற்றுப் பத்து அடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றுஅடு கொற்றத்து
ஈர்இரண்டு ஏந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்
நாற்பெரும் தெய்வத்து நல்நகர் நிலைஇய
உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவரும் தலைவர் ஆக
ஏமுறு ஞாலம் தன்னில் தோன்றித்
தாமரை பயந்த தாவுஇல் ஊழி
நான்முக ஒருவற் சுட்டிக் காண்வரப்
பகலில் தோன்றும் இகல்இல் காட்சி
நால்வேறு இயற்கைப் பதினொரு மூவரோடு
ஒன்பதிற்று இரட்டி உயர்நிலை பெறீஇயர்
மீன்பூத்து அன்ன தோன்றலர் மீன்சேர்பு
வளிகிளர்ந்து அன்ன செலவினர் வளிஇடைத்
தீஎழுந்து அன்ன திறலினர் தீப்பட
உரும்இடித்து அன்ன குரலினர் விழுமிய
உறுகுறை மருங்கில்தம் பெறுமுறை கொண்மார்
அந்தரக் கொட்பினர் வந்துஉடன் காணத்
தாவுஇல் கொள்கை மடந்தையொடு சில்நாள்
ஆவினன்குடி அசைதலும் உரியன் ;
அதா அன்று—

### 4. திருவேரகம் (சுவாமிமலை)

இருமூன்று எய்திய இயல்பினின் வழாஅது
இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான்கு இரட்டி இளமைநல் யாண்டு
ஆறினிற் கழிப்பிய அறன்நவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்து
இருபிறப்பாளர் பொழுது அறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர உடீஇ
உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து
ஆறெழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி
நாஇயல் மருங்கில் நவிலப்பாடி
விரைஉறு நறுமலர் ஏந்திப் பெரிது உவந்து
ஏரகத்து உறைதலும் உரியன்;
அதா அன்று—

### 5. குன்றுதோறாடல்

பைங்கொடி நறைக்காய் இடைஇடுபு வேலன்
அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூதாளம் தொடுத்த கண்ணியன்
நறும்சாந்து அணிந்த கேழ்கிளர் மார்பின்
கொடுந்தொழில் வல்வில் கொலைஇய கானவர்
நீடுஅமை விளைந்த தேக்கள் தேறல்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை அயர
விரல்உளர்ப்பு அவிழ்ந்த வேறுபடு நறுங்கால்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
இணைத்த கோதை அணைத்த கூந்தல்
முடித்த குல்லை இலைஉடை நறும்பூச்
செங்கால் மராஅத்த வால் இணர்இடை இடுபு
சுரும்பு உணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்து காழ்அல்குல் திளைப்ப உடீஇ
மயில்கண்டன்ன மடநடை மகளிரொடு
செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்
செயலைத் தண்தளிர் துயல்வரும் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் இயத்தன்
தகரன் மஞ்ஞையன் புகர்இல் சேவல்அம்
கொடியன் நெடியன் தொடிஅணி தோளன்
நரம்பு ஆர்த்துஅன்ன இன்குரல் தொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறும்தண் சாரல்



குன்றுதோருடல் (திருத்தணிகை)



பழமுதிர்சோலை

மருங்கில் கட்டிய நிலன்நேர்பு துகிலினன்
முழவுஉறழ் தடக்கையின் இயல ஏந்தி
மென்தோள் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதோ றாடலும் நின்றதன் பண்பே;
அதா அன்று—

## 6. பழமுதிர்சோலை (அழகர்கோயில்)

சிறுதினை மலரொடு விரைஇ மறிஅறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
ஊர்ஊர் கொண்ட சீர்கெழு விழவினும்
ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்
வேலன் தைஇய வெறிஅயர் களனும்
காடும் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப்பூம் கடம்பும்
மன்றமும் பொதியிலும் கந்துஉடை நிலையினும்
ஆண்டலைக் கொடியொடும் மண்ணி அமைவர
நெய்யோடு ஐயவி அப்பிஐது உரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
முரண்கொள் உருவின் இரண்டுஉடன் உடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாள் கொழுவிடைக்
குருதியொடு விரைஇத் தூவெள் அரிசி
சில்பலிச் செய்து பல்பிரப்பு இரீஇச்
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெரும்தண் கணவீரம் நறுந்தண் மாலை
துணைஉற அறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பின் நன்னகர் வாழ்த்தி
நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி
இமிழ்இசை அருவியோடு இன்இயம் கறங்க
உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்
முருகியம் நிறுத்து முரணினர் உட்க
முருகுஆற்றுப் படுத்த உருகெழு வியன்நகர்
ஆடுகளம் சிலம்பப் பாடிப்பல வுடன்
கோடுவாய் வைத்துக் கொடுமணி இயக்கி
ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட
ஆண்டு ஆண்டு உறைதலும் அறிந்த ஆறே
ஆண்டு ஆண்டு ஆயினும் ஆகக் காண்தக
முந்துநீ கண்டுழி முகன்அமர்ந்து ஏத்திக்
கைதொழூஉப் பரவிக் கால்உற வணங்கி

நெடும்பெரும் சிமயத்து நீலப் பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
அறுவர் பயந்த ஆறுஅமர் செல்வ
ஆல்கெழு கடவுள் புதல்வ மால்வரை
மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழைஅணி சிறப்பிற் பழையோள் குழவி
வானோர் வணங்கு வில்தானைத் தலைவ
மாலைமார்ப நூல்அறி புலவ
செருவில் ஒருவ பொருவிறல் மள்ள
அந்தணர் வெறுக்கை அறிந்தோர் சொல்மலை
மங்கையர் கணவ மைந்தர் ஏறே
வேல்கெழு தடக்கைச் சால்பெரும் செல்வ
குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே
அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் முருக
நசையினர்க்கு ஆர்த்தும் இசைபேர் ஆள
அலர்ந்தோர்க்கு அளிக்கும் பொலம்பூண்சேஎய்
மண்டுஅமர் கடந்த நின்வென்று ஆடுஅகலத்துப்
பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேள்
பெரியோர் ஏத்தும் பெரும்பெயர் இயவுள்
சூர்மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி
போர்மிகு பொருந குரிசில் எனப்பல
யான்அறி அளவையின் ஏத்தி ஆனாது
நின்அளந்து அறிதல் மன்னுயிர்க்கு அருமையின்
நின்அடி உள்ளி வந்தனன் நின்னொடு
புரையுநர் இல்லாப் புலமையோய் எனக்
குறித்தது மொழியா அளவையில் குறித்துஉடன்
வேறுபல் உருவிற் குறும்பல் கூளியர்
சாறுஅயர் களத்து வீறுபெறத் தோன்றி
அளியன் தானே முதுவாய் இரவலன்
வந்தோன் பெரும நின்வண்புகழ் நயந்துஎன
இனியவும் நல்லவும் நனிபல ஏத்தித்
தெய்வம் சான்ற திறல் விளங்குஉருவின்
வான்தோய் நிவப்பின் தான் வந்துஎய்தி
அணங்கு சால்உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணம்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி
அஞ்சல் ஓம்புமதி அறிவல் நின்வரவுஎன
அன்புடை நன்மொழி அளைஇ விளிவுஇன்று
இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒருநீ ஆகத் தோன்ற விழுமிய
பெறல் அரும்பரிசில் நல்கும்மதி பலவுடன்

வேறுபல் துகிலின் நுடங்கி அகில்சுமந்து
ஆரம்முழுமுதல் உருட்டி வேரல்
பூஉடை அலங்கு சினைபுலம்ப வேர்கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியின் தொடுத்த
தண்கமழ் மலர்இறால் சிதைய நன்பல
ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமலர் உதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங் களிற்று
முத்துஉடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறம் கிளரப் பொன்கொழியா
வாழை முழுமுதல் துமியத்தாழை
இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை இரியக் கேழலோடு
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குரூஉ மயிர்யாக்கைக் குடாவடி உளியம்
பெருங்கல் விடர்அளைச் செறியக் கருங்கோட்டு
ஆமா நல்ஏறு சிலைப்பச் சேண் நின்று
இழும்என இழிதரும் அருவிப்
பழமுதிர்சோலை மலை கிழவோனே.

திருச்சிற்றம்பலம்

## தனி வெண்பாக்கள்

குன்றம் எறிந்தாய் குரைகடலில் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையாய்— என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாய்என் உள்ளத்து உறை. 1

குன்றம் எறிந்ததுவும் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும்—இன்றென்னைக்
கைவிடா நின்றதுவும் கற்பொதும்பில் காத்ததுவும்
மெய்விடா வீரன்கை வேல். 2

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை. 3

இன்னம் ஒருகால் எனதிடும்பைக் குன்றுக்கும்
கொன்னவில்வேல் சூர்தடிந்த கொற்றவா—முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும். 4

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே. 5

அஞ்சு முகந்தோன்றில் ஆறு முகந்தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்—நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலும் தோன்றும்
முருகாஎன் றோதுவார் முன். 6

முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான். 7

* காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா—பூக்கும்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்காய் இனி. 8

* பரங்குன்றில் பன்னிருகைக் கோமான்றன் பாதம்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு—சுருங்காமல்
ஆசையால் நெஞ்சே அணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல். 9

* நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறும் சாற்றினல்—முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைத்த எல்லாம் தரும். 10

* இக்குறியுள்ள 3 வெண்பாக்களும் பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பெறவில்லை என்பதைக் கவனிக்கவும். சிலர் இப்பத்துப் பாடல்களையும் நக்கீரதேவர் இயற்றவில்லை என்று கூறுவதும் சிந்திக்கத்தக்கது.

## திருமுருகாற்றுப்படை விளக்கம்

நக்கீரதேவ நாயனர் தாம் பாடியருளிய இத்திருமுருகாற்றுப் படை என்னும் திவ்ய ப்ரபந்தத்தில் முருகன் எழுந்தருளியுள்ள

பல தலங்களுள்ளும் சிறப்பாக விரும்பி எழுந்தருளியுள்ள இடங்கள் ஆறு என்று வகுத்துக்கொண்டார். அவைகளை ஆறு படைவீடு களாகப் பெரியோர் இன்றும் அவ்வாறே போற்றி வருகின்றனர். இவ்வாசிரியரைப் பின்பற்றியே பின் வந்த அருணகிரியாரும் குமர குருபர சுவாமிகளும் இதே முறையில் இவ்வாறுபடைவீடு களையும் தம் பாடல்களில் குறித்துள்ளார்கள் என்பது கவனிக்கத் தக்கது. படைவீடு என்றால் முருகன் விரும்பி எழுந்தருளி யிருக்கும் திருத்தலங்களாம்.

அவையாவன :—திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், (திருச் சீரலைவாய்) திருவாவினன்குடி, திருவேரகம், (சுவாமிமலை) குன்று தோருடல், பழமுதிர்சோலை (அழகர்மலை எனத் தற்போது வழங்கி வருகிறது).

1. **திருப்பரங்குன்றம்** :—இது பாண்டிநாட்டில் சமயாசாரியர் களால் பாடப்பெற்ற 14 சிவத்தலங்களுள் ஒன்று ; அருணகிரியார் திருப்புகழ் பெற்றது ; முருகன் சூரனுடன் போர் செய்து வென்று அவனை ஆட்கொண்டருளித் தேவர்களுக்கு நல்வாழ்வு அளித்த பிறகு, தேவர்கள் வேண்டுகோளுக்கு இணங்க தன்னிடமிருந்து பிரிந்து இந்திராணி காவலில் தேவலோகத்தில் ஐராவதம் (தெய்வயானை) என்னும் தேவயானையினால் வளர்க்கப்பட்ட காரணத்தால் **தெய்வயானை** என்னும் பெயரினையுடைய அம்மை யாரை மணந்துகொண்டு எழுந்தருளியுள்ள தலம்.

2 **திருச்சீரலைவாய்** :—சமுத்திரக் கரையோரத்தில் உள்ள தலம். எத்தனையோ ஆண்டுகளாகக் கடலின் கரையிலிருந்து அலைகளால் தினமும் மோதப்பட்டும் கொஞ்சம்கூட அழிவில்லாமல் இருக்கும் தலம். திருப்புகழ் பெற்றது. இங்குதான் முருகப் பெருமான் சூரனைச் சம்ஹரித்தபின் வந்து சிவலிங்கத்தை வைத்து பிரதிட்டை செய்து பூசித்தான் என்பது கந்தபுராண வரலாறு. இங்கு சூரசம்மார உற்சவம் மிகச் சிறப்பான முறையில் கந்தசஷ்டி தோறும் நடந்து வருவது கண்கூடு. லக்ஷக்கணக்கான மக்கள் வந்து தரிசித்துப் பலன் அடைகிறார்கள்.

3. **திருஆவினன்குடி** :—இது பழனி மலையடிவாரத்திலுள்ள தலம். இது பழனியல்ல. பழனி மலைமீதுள்ள தலத்தைக் குறிக்கும். இது அடிவாரத்திலுள்ளது. இரண்டிற்கும் அருண கிரியார் தனித்தனித் திருப்புகழ் பாடியுள்ளார். பலர் திருஆவினன் குடியையே பழனி என மயங்கி வழங்கி வருகின்றனர். இத்தலத் தில் (திரு) லட்சுமி, (ஆ) காமதேனு, (இனன்) சூர்யன், (குடி) இந்திரன் முதலியோர் இறைவனைப் பூசித்துப் பேறு பெற்றனர். இம்மூர்த்திகளை யித்தலத்தில் கண்டு வணங்கலாம்.

4. **திருவேரகம் அல்லது சுவாமிமலை** :—இத்தலத்தைத் திரு முருகாற்றுப்படை உரையாசிரியரான நச்சினார்க்கினியர் இத்தலம்

மலை நாட்டிலுள்ள ஒரு திருப்பதி என்கிறார். ஆனால் பெரும்பாலும் வழங்கப்பெற்று வருவது, சோழநாட்டில் கும்பகோணத்திற்கு அண்மையிலுள்ள சுவாமிமலை என்பதாகும். இத்தலத்திற்கு அருணகிரியார் அருளிய திருப்புகழ்ப் பாடல்களுமுண்டு. இங்கு தான் சுவாமிக்கு முருகன் பிரணவோபதேசம் செய்து சுவாமி நாதன் ஆயினான் என்பதும் தல வரலாறு.

5. **குன்றுதோறாடல்** :—தொகையாகச் சொன்னால் குன்றுகள் தோறும் எழுந்தருளியுள்ளான் என்றும், தனித்தலமாகக் கருதினால் திருத்தணிகை என்றும் சொல்லுவது வழக்கு. முருகப் பெருமான் சூரனுடன் போர் புரிந்து அதனாலுண்டான கோபம் தணிந்த இடம், செருத்தணி என்பது திருத்தணி என்று வழங்கப் பெறுகிறது. இத்தலத்தின் பெருமையை முருகப்பெருமான் வள்ளிநாயகியாருக்குக் கூறியருளினார் என்று கந்தபுராணம் தட்ச காண்டம் கூறும். இத்தலத்தில்தான் முருகப்பெருமான் சிவலிங்கப் பிரதிட்டை செய்து பூசை செய்து பேறுபெற்றார். இதற்கு கச்சி யப்ப முனிவர் இயற்றிய அரிய புராணமும் ஒன்றுண்டு. தற்காலத் தில் இத்தலம் மிகப் பிரசித்தமாகப் பிரார்த்தனைத் தலமாக விளங்குகிறது. திருப்புகழும் இதற்குண்டு.

6. **பழமுதிர்சோலை** :—தனியாகச் சொன்னால், அழகர்மலை எனத் தற்காலம் வழங்கும் மதுரைக்கு அண்மையிலுள்ள தலத்தைக் குறிக்கும். இது தற்போது விஷ்ணுத்தலமாகக் காட்சி யளிக்கிறது. மலைமீது முருகன் தனிக் கோயிலுமுள்ளது. தொகை யாகச் சொன்னால் பழங்கள் முதிர்ந்துள்ள சோலைகள் தோறும் முருகன் எழுந்தருளியிருப்பான் என்பதாகும்.

**பொழிப்புரை** :

## திருப்பரங்குன்றம்

(மதுரை—விருதுநகர் மார்க்கத்தில் மதுரையிலிருந்து 4 மைல்கள். தேசப் படத்தில் 16 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

எல்லாச் சமயத்தாரும் மகிழும்படி உதயமாகும் சூரியனைக் கடலிடத்திற் கண்டதுபோல, இந்திரியங்களின் வழியே செல்லாமல் கண்களை மூடிக்கொண்டு மனசினால் பார்த்தற்குரிய காந்தியையும், தன்னைச் சரணம் என்று அடைந்தவரைக் காக்கும்பொருட்டு அவரது அறியாமையாகிய அஞ்ஞானத்தைக் கெடுக்கும் வலிமை யுடைய திருவடியையும், பகைவர்களை அழித்த கையினையும், உயர்ந்த கற்பினையுடைய தெய்வயானைக்குக் கணவன்; கடலிலே நீரை முகந்து கருநிறம் பொருந்திய மேகங்கள் ஆகாயத்தில் சென்று மழைத்துளிகளைச் சிதறும் குளிர்ச்சி பொருந்திய கடப்ப

மலர்களாலாகிய மாலையை மார்பிலுடையவன்; பலவிதமான தமக்கே உரிய ஆடையாபரணங்களால் அலங்கரிக்கப்பெற்றுப் பார்ப்பவர்களுக்குப் பயத்தைக் கொடுக்கும் தெய்வமகளிர் ஒன்று கூடிப் பலர் மலர்களாலும் தளிர்களாலும் தம்மை யழகுபடுத்திக் கொண்டு, கோழிக் கொடியையுடையவனை வாழ்த்திப் பாடி, வேலன், (தெய்வம் மேற்கொண்டாடுபவன்) பல பயங்கரமான பாம்பு முதலியவற்றை அணிந்துகொண்டுள்ள பேய் மகளானவள் நிணத்தைத் தின்னும் வாயையுடையவள் முதலியோர் ஒன்று கூடி, சூரனைச் சம்மரித்து வெற்றியையும் கீர்த்தியையுமுடைய முருகப்பெருமான் அழகிய திருவடியை வணங்கி வழிபட்டு அருளைப் பெற்றனர்கள். அந்த அருள்பேற்றை நீயும் அடைய விரும்புவா யானால், அந்த முத்தியை யிப்போதே பெறுவாய்; அவன் பல வளப்பங்கள் பொருந்திய திருப்பரங்குன்றத்தில் வீற்றிருக் கின்றான்; (இத்தலம் மதுரைக்கு மேற்கிலுள்ளது.) இதுவு மல்லாமல் ஏனைய தலங்களிலும் எழுந்தருளியுள்ளான்.

## திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்)

(இது திருச்செந்தூர் என்று பிரசித்தமாக வழங்கப்படுவது. திருநெல்வேலி—திருச்செந்தூர் இரயில் மார்க்கத்தில் திருநெல்வேலியிலிருந்து 38 மைல்கள். இரயில் நிலையத்திலிருந்து சுமார் $1\frac{1}{2}$ மைலில் தலம் உள்ளது. தேசப் படத்தில் 17 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக் கிறது.)

கூர்மையுள்ள அங்குசத்தால் அடிபட்ட அடையாளமுடை யதும், முகப்பட்டத்தோடு கூடியதும், காற்றைப் பார்க்கிலும் வேக மான நடையையுடையதுமான யானைமீது ஏறி, பிரகாசம் பொருந்திய நவமணிகளால் ஆன கிரீடத்துடனும், சூரிய சந்திரன் போன்ற ஒளிவீசும் குண்டலங்களுடனும் விளங்க தவ விரதங்களை முடிக்கும் மனத்தில் பொருந்தித் தோன்றும் ஒளியுடைய முகங் களில் :—

1. ஒருமுகம் உலக இருளை நீக்கி ஒளி தருகின்றது;
2. ஒருமுகம் தன்னிடம் அன்புடையார் துதித்தற்குப் பொருந்தி அவர் விரும்பும் பொருள்களை முடித்துக் கொடுக்கிறது;
3. ஒருமுகம் வேதமந்திரங்களின் விதிப்படித் தப்பாமல் பிராம ணர்கள் முறையாகச் செய்யும் யாகங்களுக்குத் தீங்கு வராதபடி காக்கும்;
4. ஒருமுகம் இவ்வுலகத்தில் வழங்காத வேதப் பொருள்களை முனிவர் மகிழ ஆய்ந்தறிவித்து சந்திரனைப்போலத் திசைகளை விளங்கும்படிச் செய்யும்;

5. ஒருமுகம் நடுவு நிலைமையைக் கெடுத்துப் பகைவராகிய அசுரரைக் கறுவறுப்பேன் என்ற எண்ணத்தையுடையது ;

6. ஒருமுகம் குறவர் மடமகளாகிய வள்ளியம்மையாருடன் மகிழ்ச்சியைப் பொருந்தியது ;

இவ் ஆறு முகங்களுக்கேற்பத் தொழிலைச் செய்யப் பன்னிரண்டு பெருமை பொருந்திய கரங்களையும் உடையவன் முருகன் ; அந்தக் கரங்கள் செய்யுந்தொழில்களைக் கீழே விளக்குகிறார் ஆசிரியர்.

| | | |
|---|---|---|
| 1. | ஒருகை | ஆகாயத்தில் சஞ்சாரம் செய்யும் தேவரிஷிகளுக்குக் காவலாக எடுத்தது ; |
| 2. | ஒருகை | மருங்கில் வைத்தது ; |
| 3. | ஒருகை | அங்குசத்தையுடையது ; |
| 4. | ஒருகை | தொடையின்மேல் அசைந்தது ; |
| 5-6. | இரு கைகள் | கரிய கேடயத்தோடு வேலாயுதத்தை வலமாகச் சுழற்றும் ; |
| 7. | ஒருகை | முனிவர்களுக்கு ஞானோபதேசம் செய்யும் ; |
| 8. | ஒருகை | தாழ்ந்த மலர் மாலையோடு சேர்ந்து விளங்கும் ; |
| 9. | ஒருகை | தொடி (ஒருவகைஆயுதம்) சுழற்றும் ; |
| 10. | ஒருகை | மணியை யுடைத்தாயிருக்கும் ; |
| 11. | ஒருகை | மழையினைப் பெய்யச் செய்யும் ; |
| 12. | ஒருகை | தெய்வப் பெண்களுக்கு மணமாலையைத் தரிக்கும். |

பல வாத்தியங்கள் கோஷிக்க, சங்கு ஒலிப்ப, மயில் கொடியிடத்திருந்து கூவ, ஆகாயவழியாகச் செல்லுதலை மேற்கொண்டு நன்மையோங்கிய பல உயர்ந்த மக்கள் புகழ்ந்த உயர்வாகிய சிறப்பினையுடைய புகழையுடைய திருச்செந்தூரில் எழுந்தருளியிருப்பான் ; அதுவுமல்லாமல் வேறு தலங்களிலும் உள்ளான்.

## திருஆவினன்குடி

(இது பழநி அடிவாரம். திண்டுக்கல்—கோயம்புத்தூர் மார்க்கத்தில் பழநி இரயில் நிலையத்தினின்றும் 1½ மைல். பழநி ஸ்தலம் மலைமேல் உள்ளது. தேசப் படத்தில் 18 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

மரவுரியினையுடையவரும், வெளுத்த முடியினையுடையவரும், மான்தோலைப் போர்த்துக் கொண்டவரும், விரதங்களால் வாடிய உடம்பினையுடையவரும், பல பகல்கள் உணவு கொள்ளாதவரும், பகையில்லாத மனதையுடையவரும், கற்றோர்கள் அறியாத அறிவினையுடையவரும், அவர்களுக்குத் தாம் எல்லையாக விளங்குபவரும், கோபமில்லாதவரும், வருத்தமில்லாதவரும், நல்லறிவினருமான

முனிவர்கள் முன்னே செல்லுகின்றனர்; புகை நிறமுடைய ஆடையையும் மாலை அணிந்த மார்பினையும் உடையவரும் செல்லுகின்றனர்; சதா வீணை வாசித்துக்கொண்டிருக்கும் கந்தருவர்களும் அவர்களது குற்றமற்ற கற்பினையுடைய கந்தர்வப் பெண்களும் கீதம் பாடவும் செல்லுவர்; பாம்பைப் பயமுறுத்தும் கருடக்கொடியையும் தேவர்களையும் திக்குப்பாலகர்களையும் காக்கும் தொழிலையே விரும்பிய திருமாலும், உமாசகாயராக ரிஷபக்கொடியையும் பலத்த தோள்களையும், முக்கண்களையும், உடைய உருத்திரனும், (முப்புரத்தையும் எரித்தவன்) நான்கு தந்தங்களுடனும், வெற்றி நடையிடும் ஐராவதமாகிய யானையின்மீது ஏறி அழகாக வரும் இந்திரனும், பலரும் புகழும் அரி, அயன், அரன் என்னும் மும்மூர்த்திகளும் முருகப்பெருமான் சாபத்தால் இழந்த தம் தம் தொழிலை மீண்டும் பெற்று விளங்க இம்மண்ணுலகத்தே வந்து தோன்றியவர்களையும், முப்பத்து முக்கோடி தேவர்களையும், ஏனையோரையும் காத்தற்பொருட்டு ஆகாயத்தே திரிதலையுடையவராய், ஒருங்கே வந்து காணும்படியாகக் கெடுதலில்லாத கற்பினையுடைய தெய்வயானையம்மையாருடன் திருவாவினன்குடியில் சில நாள் இருத்தலும் உரியன்: இதுவுமல்லாமல் வேறிடங்களிலுமிருப்பான்.

## திருவேரகம் (சுவாமிமலை)

*(இது சுவாமிமலை என்று வழங்கப்படுவது. மாயவரம்—தஞ்சாவூர் மார்க்கத்தில் சுவாமிமலை இரயில் நிலையத்திலிருந்து தென்மேற்கே சுமார் 1 மைல். தேசப் படத்தில் 19 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)*

வேதத்தில் கூறப்பட்ட ஆறு தொழிலையும் தப்பாமல் செய்பவரும், தாய்வழி தந்தைவழி ஆகிய இருவழிகளிலும் மறுவில்லாத குடியில் தோன்றினவரும், 48 வருடம்வரை பிரமசரிய விரதங் காத்தவரும், மூன்று அக்னிகளை வளர்ப்பவரும், ஒன்பது இழை கொண்ட பூணூலையணிந்தவரும், ஆன அந்தணர்கள் காலமறிந்து தங்கள் கடன்களை ஆற்றும்பொருட்டுத் தோய்த்து ஈரம் புலராத ஆடைகளையணிந்தவரும், ஆறெழுத்தாகிய மந்திரத்தைக் கணிப்பவருமான பல அந்தணர்கள் தன்னை விதிப்படி வழிபடும் முருகப்பெருமான் இத்தலத்தில் எழுந்தருளியுள்ளான்; இதுவுமல்லாமல் ஏனைய இடங்களிலுமுள்ளான்.

## குன்றுதோறாடல்

*(இது திருத்தணிகை எனவழங்கப்படும் பிரசித்தமான தலம். அரக்கோணம்—ரேணிகுண்டா மார்க்கத்தில் திருத்தணி இரயில் நிலையத்திலிருந்து மலையடிவாரம் 1 மைல். தேசப் படத்தில் 20 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)*

சந்தனம் பூசித் தம்மைப் பலவகையில் அலங்கரித்துக்கொண்டு கொடிய தொழிலையுடைய வேடர்கள் பலவிதமாக அச்சத்தை உண்டு பண்ணுமாறு தம்மை அலங்காரம் செய்துகொண்ட வேடர் பெண்களுடன் குரவைக் கூத்தாடுவார்கள்; தெய்வம் மேற்கொண்டுள்ள வேலன் தன்னைச் சிவந்த ஆடையாலும் சிவந்த புட்பங்களாலும் அலங்காரம் செய்துகொண்டு, வாத்ய கோஷங்களுடனும் வெறியாட்டு ஆடுவான்; இத்தகைய பலருடன் முருகப்பெருமான் பல மலைகள்தோறும் சென்று விளையாடும் குணமுடையவன். இதுவுமல்லாமல்,

## பழமுதிர்சோலை

(இது அழகர்கோயில் என்று வழங்கப்படுகிறது. மதுரை இரயில் நிலையத்திலிருந்து சுமார் 12 மைல் பஸ் வசதிகள் உண்டு. தேசப் படத்தில் 21 என்கிற எண்ணுல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

சிறிய தினையரிசியைப் பூக்களோடு கலந்து, ஆட்டையறுத்துக் கோழி மேலாகிய கொடியுடன் தாமவ்விடத்து நிற்கும்படி நிறுத்தி நடக்கும் திருவிழாவிலும், அன்புடன் தன்னை நினைத்துத் துதிப்பாருள்ள இடத்திலும், வேலன் வெறியாடுமிடத்திலும், காட்டிலும், சோலையிலும், ஆற்றிடைக் குறையிலும், ஆறுகளிலும், குளங்களிலும், வேறு பலவூர்களிலும், நாற்சந்தி, முச்சந்திகளிலும், ஊர் நடுவிலும், அம்பலத்திலும் எழுந்தருளியிருப்பான் முருகன்; இவ்விடங்களிலுமன்றி வேறு பிற விடங்களிலும் இருப்பன். நீ அவன் திருவடிகளில் சிரம் பொருந்த வீழ்ந்து வணங்குவாய்; பஞ்சபூதங்களாலும், கார்த்திகைப் பெண்களாலும், பாலூட்டி வளர்த்த ஆறு வடிவங்களும் ஒன்ருகச் சேர்ந்த (கந்தனென்னும்) பெயரையுடைய செல்வரே! கல்லாலின் கீழிருந்த சிவகுமாரனே! பார்வதி தனயனே! பகைவருக்கு யமன் போன்றவனே! துர்க்கையின் புதல்வரே! காடுகிழாள் மகனே! சேனைத் தலைவனே! நூலறிந்த புலவரே! வெற்றி பொருந்திய இளையவரே! புகழுடையவரே! தெய்வயானை, வள்ளியம்மையார் மணவாளரே! வேலேந்திய வேலவரே! குறிஞ்சிக் கிழவோனே! மோக்ஷ வீட்டிற்குத் தலைவரே! முத்தியை விரும்பி வருவார்க்கு அதைக் கூட்டுவிக்கும் பெரியோனே! இவ்வாறு தேவரும், முனிவரும், ஏனையோரும், பலவாறு துதிக்கும் தேவரீரது பெருமையையறியாது உம்முடைய திருவடியைப் பெற வேண்டி உம்மிடம் வந்தனன். ஆதலால் தேவரீர் என்னைக் காக்க வேண்டும் என்பதாம். நீரருவிகள் விழும் பழமுதிர்சோலையில் வீற்றிருப்பான்.

---

 சிவமயம் 



# 12
# வாக்குவன்மை வளமாய்ப் பெருக



*ஓம் கஜயுத்தமூர்த்தயே நம :* *ஓம் ஜ்வராபக்நமூர்த்தயே நம :*

## மாணிக்கவாசக சுவாமிகள்

### திருவாசகம்

### திருச்சாழல்

(*சிவனுடைய காருண்யம்*)

[8-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்*
*பேசுவதும் திருவாயான் மறைபோலும் காணேடி*
*பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண்டென்னை*
*ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ.* **1**

*என்னப்பன் எம்பிரான் எல்லார்க்குந் தானீசன்*
*துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது என்னேடீ*
*மன்னுகலை துன்னுபொருள் மறைநான்கே வான்சரடாத்*
*தன்னையே கோவணமாச் சாத்தினன்காண் சாழலோ.* **2**

*கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை*
*தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடீ*
*தாயுமிலி தந்தையிலி தான்தனியன் ஆயிடினும்*
*காயில் உலகனைத்தும் கற்பொடிகாண் சாழலோ.* **3**

*அயனை அநங்கனை அந்தகனைச் சந்திரனை*
*வயனங்கண் மாயா வடுச்செய்தான் காணேடீ*
*நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்*
*சயமன்றோ வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ.* **4**



நடராஜர், சிவகாமி அம்பாள், மாணிக்கவாசகர்

தக்கனையும் எச்சனையும் தலையறுத்துத் தேவர்கணம்
தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்ததுதான் என்னேடீ
தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்தருளி யருள்கொடுத்தங்(கு)
எச்சனுக்கு மிகைத்தலைமற் றருளினன்காண் சாழலோ. 5

அலரவனும் மாலவனும் அறியாமே அழலுருவாய்
நிலமுதற்கீ ழண்டமுற நின்றதுதான் என்னேடீ
நிலமுதற்கீ ழண்டமுற நின்றிலனேல் இருவருந்தம்
சலமுகத்தா லாங்காரந் தவிரார்காண் சாழலோ. 6

மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தா லவன்சடையிற் பாயுமது என்னேடீ
சலமுகத்தா லவன்சடையிற் பாய்ந்திலளேற் றரணியெல்லாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாம் சாழலோ. 7

கோலால மாகிக் குரைகடல்வா யன்றெழுந்த
ஆலால முண்டான் அவன்சதுர்தான் என்னேடீ
ஆலால முண்டிலனேல் அன்றயன்மா லுள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண் சாழலோ. 8

தென்பா லுகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர்
விண்பால் யோகெய்தி வீடுவர்காண் சாழலோ. 9

தானந்த மில்லான் தனையடைந்த நாயேனை
ஆனந்த வெள்ளத் தழுத்துவித்தான் காணேடீ
ஆனந்த வெள்ளத் தழுத்துவித்த திருவடிகள்
வானுந்து தேவர்கட்கோர் வான்பொருள்காண் சாழலோ. 10

நங்காய் இதென்னதவம் நரம்போ டெலும்பணிந்து
கங்காளம் தோண்மேலே காதலித்தான் காணேடீ
கங்காளம் ஆமாகேள் காலாந் தரத்திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ. 11

கானார் புலித்தோ லுடைதலையூண் காடுபதி
ஆனால் அவனுக்கிங் காட்படுவார் ஆரேடீ
ஆனாலும் கேளாய் அயனும் திருமாலும்
வானாடர் கோவும் வழியடியார் சாழலோ. 12

மலையரையன் பொற்பாவை வாணுதலாள் பெண்திருவை
உலகறியத் தீவேட்டான் என்னுமது என்னேடீ
உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்தும்
கலைநவின்ற பொருள்களெல்லாம் கலங்கிடுங்காண் சாழலோ. 13

தேன்புக்க தண்பணைசூழ் தில்லைச்சிற் றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலுமது என்னேடீ
தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணியெல்லாம்
ஊன்புக்க வேற்காளிக் கூட்டாங்காண் சாழலோ. 14

கட்கரியும் பரிமாவும் தேருமுகந் தேரூதே
இடபமுகந் தேறியவா றெனக்கரிய இயம்பேடீ
தடமதில்கள் அவைமூன்றும் தழலெரித்த அந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ. 15

நன்றாக நால்வர்க்கும் நான்மறையின் உட்பொருளை
அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் காணேடீ
அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் ஆயிடினும்
கொன்றான்காண் புரமூன்றும் கூட்டோடே சாழலோ. 16

அம்பலத்தே கூத்தாடி அமுதுசெயப் பலிதிரியும்
நம்பனையும் தேவனென்று நண்ணுமது என்னேடீ
நம்பனையும் ஆமாகேள் நான்மறைகள் தாமறியா
எம்பெருமான் ஈசாவென் றேத்தினகாண் சாழலோ. 17

சலமுடைய சலந்தரன்தன் உடல்தடிந்த நல்லாழி
நலமுடைய நாரணற்கன் றருளியவா றென்னேடீ
நலமுடைய நாரணன்றன் நயனமிடந் தரனடிக்கீழ்
அலராக விடவாழி யருளினன்காண் சாழலோ. 18

அம்பரமாம் புள்ளித்தோல் ஆலாலம் ஆரமுதம்
எம்பெருமா னுண்டசதுர் எனக்கறிய இயம்பேடீ
எம்பெருமா னேதுடுத்தங் கேதமுது செய்திடினும்
தம்பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ. 19

அருந்தவருக் காலின்கீழ் அறமுதலா நான்கனையும்
இருந்தவருக் கருளுமது எனக்கறிய இயம்பேடீ
அருந்தவருக் கறமுதனூன் கன்றருளிச் செய்திலனேல்
திருந்தவருக் குலகியற்கை தெரியாகாண் சாழலோ. 20

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு:**—ஈழநாட்டுப் புத்தர்கள் தில்லையின் பெருமையையும், தில்லைவாழந்தணர்கள் சிறப்பையும் கேள்வியுற்றுப் பொறாமை கொண்டு, பௌத்த அரசனையும் அவனது ஊமைப் பெண்ணையும் அழைத்துக்கொண்டு தில்லைக்கு வந்தனர். தில்லைவாழந்தணர்களைத் தம்முடன் வாதம் செய்ய அழைத்தனர். அவர்கள் பயந்து தம் வழிபடு கடவுளாகிய நடராஜப் பெருமானிடம் விண்ணப்பம் செய்துகொண்டனர். நடராஜப்

பெருமானின் ஆணையின்படித் திருவாதவூரரை **புத்தநந்தி**யின் முன் கொண்டுவந்து விட்டனர். அடிகளாரும் பௌத்தர்கள் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் அருளியும் அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. மறக்கருணை காட்டி அவர்களை ஆட் கொள்ள எண்ணி அவர்களை ஊமைகளாக்கி விட்டனர். அதனைக் கண்டு வியந்த பௌத்த அரசன் "பேசவல்லார் ஊமையாயினமை யின், ஊமை பேச வேண்டுமே! என் மகளைப் பேசுமாறு செய்க" என்று வேண்டிக்கொண்டான். மணிவாசகப் பெருமானும் அவ்வூமைப் பெண்ணை அங்கு வரவழைத்துப் புத்தர்கள் கேட்ட கேள்விகளுக்குப் பதிலளிக்குமாறு பணித்தனர். அப்பெண்மணி பதி லளித்ததுபோல மணிவாசகப் பெருமானே முன்னிரண்டடிகளில் தம் கேள்வியையும் பின்னிரண்டடியில் அவள் பதிலளித்ததுபோலத் தம் கருத்தடங்கிய **இத்திருச்சாழல்** என்னும் பிரபந்தத்தைத் தில்லையிலே அருளிச் செய்தார் என்பது பதிக வரலாறு. இப்பதிக பாராயணம் ஊமை, தத்துவாய் போன்றவைகளையும் போக்கும். வாக்கு வன்மையைப் பெருகச் செய்யும்.

[மதிப்பிற்குரிய, மேலையூர் தவராஜ யோக மடம் தலைவர் தவத்திரு மாணிக்கவாசக ஞானதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் "இப்பதிகத்தைப் பக்தி சிரத்தையுடன் ஓதினால் ஊமை நீங்கும். தத்திப் பேசுதலும் நீங்கும்" என்று அருளியுள்ளார்கள். இதன்படித் தற்காலத்திலும் ஒரு பிள்ளை 6 வயதுவரை ஊமையா யிருந்து அவன் பெற்றோர் இப்பதிகத்தைப் பக்தி சிரத்தையுடன் ஓதி வந்ததன் பயனாக அப்பிள்ளை பேச ஆரம்பித்துப் பள்ளியில் படித்து வருகிறான் என்றால் என்னே இதன்மேன்மை?]

1. தோழி, எம்பெருமான் தன் திருமேனியில் பூசிக்கொள்வது வெண்ணீறு; அணிந்துகொள்வது சீறிவரும் பாம்பு; தன் புனிதத் திருவாயால் பேசுவது மறை போலும். நீறு பூசியும் மறை பேசியும் நாகம் அணிந்தும் பயன் யாது?

எல்லா உயிர்க்கும் தலைவனாய் அவ்வவ்வுயிரையும் போற்றிப் புரக்கும் தன்மையனாய் நின்றான் என்பதே.

2. என் அப்பனாய் எம்பிரானாய் எல்லார்க்கும் தலைவனாய் இருந்துங் கந்தல்களைத் தைத்துக் கோவணமாய்க் கொள்வது எக்காரணம் பற்றியோ?

நான்மறையே அரைஞாணாய் மெய்ந்நூலுட் பொதிந்த தத்துவப் பொருட்களே கௌபீனமாய்த் தரித்துக்கொண்டான் என்றறிக.

3. ஈசனுக்குச் சுடுகாடே கோயில்; புலித்தோலே ஆடை; அவன் தாயும் தந்தையும் இல்லாதவன்; தனியன்

தன்னைப் பிறப்பிப்பார் இல்லாத தனியன் ஆனாலும் அவன் கோபம் கொண்டால் உலகெல்லாம் வெறும் புழுதி ஆம் என்றறிக.

4. பிரமன், மன்மதன், யமன், சந்திரன் ஆகியவர்களை பழிச் சொல் அழியாதபடி வடுச்செய்து தண்டித்தான் இறைவன்.

முக்கண் அப்பனாகிய எம்பெருமானே மனமுவந்து தண்டிப்பானாயின் அதுவே அவர்களுக்கு உண்மையில் பெருவெற்றியன்றோ?

5. யக்ஞேச்வரனை (சிவபிரானை) மதியாது தொடங்கிய யாகத்தை முடிக்கத் துணிந்த தக்ஷனையும் யாகத்தை நடத்தியவனையும் தலைவெட்டிச் சாய்த்தும் யாகத்திற்கு வந்திருந்த தேவர்களை வருத்தி யடக்கியும் என்ன காரியம் செய்தான்!

தேவர்களை அவ்வாறு வருத்தி அடக்கினாலும் பின் அவர்களுக்கிரங்கி அருள் புரிந்ததோடு தக்ஷனுக்கும் ஆட்டுத் தலை கொடுத்து உயிர்பெறச் செய்தருளினான் என்றறிக.

6. பிரம விஷ்ணுக்கள் உணரமுடியாமல் பாதலத்தின் கீழும் அண்டமுகட்டின் மேலும் பரந்து அழற்பிழம்பாய் நின்ற காரணந்தான் யாதோ?

அவ்வாறு பாதலத்திற் கப்பாலும் அண்டமுகட்டிற் கப்பாலும் பரந்து நில்லாவிடின் பிரம விஷ்ணுக்கள் சினங் காரணமாய்க் கொண்ட அகங்காரம் நீங்கப்பெறார் என்க.

7. மலைமகளாகிய பார்வதிக்கு ஒரு பாகம் கொடுத்ததுமே மற்றொருத்தி (கங்கை) கோபம் கொண்டு தலையிற் பாய்ந்து நிற்பது எதனாலோ?

அவ்வாறு தலையில் பாய்ந்து நில்லாமற் போனால் உலகம் யாவும் பாதலத்தில் அழுந்திப் பெருங் கேடு உண்டாகும்.

8. ஆரவாரத்தோடு அலைகடலில் தோன்றிய ஆலகால விடத்தை உண்டான் அவன் திறமைதான் என்னே!

அவ்விடத்தை எம்பிரான் உண்ணாதிருந்திருப்பின் அன்று பிரம விஷ்ணுக்கள் உட்பட எல்லாத் தேவரும் அழிந்திருப்பர் என்க.

9. தென்றிசை நோக்கித் திருநடனமாடும் தில்லைச்சிற்றம்பலத்து ஐயன் தன்னொரு பாகத்தே பெண்ணை விரும்பி வைத்துக் கொண்ட பெரும்பித்தன் போலும்!

அவ்வாறு ஒரு பாகத்தே பெண்ணை வைத்திலனேல் மண்ணவர் விண்ணடைதற்பொருட்டு யோக நிலையெய்தி விடுவர். இறுதியில் உலக இயக்கம் தடைப்படும்.

10. அந்தமில் பரமன் தன்னை யடைந்த நாயேனாகிய என்னைப் பேரின்ப வெள்ளத்தில் ஆழ்த்தினான் காண்!

ஆனந்த வெள்ளத்தில் அழுத்திய அவன் திருவடிகள் வானத் துயர்ந்த தேவர்கட்குப் பெறலரும் பெரும்பொருள் என்று உணர்க.

11. பெண்ணே! நரம்பு, ஓடு, எலும்பு, கங்காளம் ஆகிய வற்றை விரும்பி அணிந்துள்ளானே; இது என்ன தவவேடம்!

இவை வந்தவாற்றைச் சொல்கிறேன், கேள்; யுகாந்த காலத் திலே பிரம விஷ்ணுக்களை முடித்து அடையாளமாக அவற்றைத் தரித்துக்கொண்டான்.

12. உடுப்பது புலித்தோல்; உண்கலம் கபாலம்; உறைபதி சுடுகாடு; இவ்வாறு இருக்கும் இவனுக்கு ஆட்படுவார் யார்?

இவ்வாறு அவன் இருப்பினும் அவனுக்கு பிரம விஷ்ணுக்களும் இந்திரனும் மற்றுமுள்ள தேவர்களும் வழிவழி அடியார்கள் என்பதுணர்க.

13. இமவான் மகளாகிய பார்வதியை உலகறியுமாறு அக்னி சாக்ஷியாகத் திருமணம் செய்துகொண்டது எக்காரணம் பற்றியோ?

உலகினர் அறியுமாறு அக்னி சாக்ஷியாகத் திருமணம் செய்து கொள்ளானேயாகில் உலகெலாம் தடுமாறும்; மெய்ந்நூற் பொருட்கள் யாவும் நிலை மாறிக் கலங்கும் என்க.

14. தேன் ஒழுகும் வயல்கள் சூழ்ந்த தில்லையில் ஆடும் தேவன் தானே வலியச்சென்று ஆலங்காட்டில் ஊர்த்துவ நடனம் புரிந்ததன் காரணம் யாது?

அவ்வாறு அவன் நடனம் புரியாதிருப்பின் புலவு நாறும் வேலை யுடைய காளிக்கு உலகமெல்லாம் உணவாகிவிடும் என்க.

15. தோழி, மதயானையும் பாய்குதிரையும் தேரும் விரும்பாது இடபத்தை (காளையை) விரும்பி அதன்மேற் சென்ற காரணத்தை எனக்குச் சொல்வாயாக.

பொன், வெள்ளி, இரும்பு ஆகியவற்றால் முறையே இயன்ற மூன்று மதில்களையும் சிரித்து எரித்த காலத்தே திருமால் இடப உருக்கொண்டு எம்பிரானைத் தாங்கினான்.

16. அன்று கல்லால மரத்தின்கீழ் அமர்ந்து சனகர், சநந்த னர், சநத்குமாரர், சநத்ஸுஜாதர் ஆகிய நால்வருக்கும் வேதத் தின் உட்பொருளை விளங்க உரைத்தான் காண்.

அவ்வாறு அறமுரைத்தான் ஆயினும் மூன்று புரங்களையும் கூட்டாக எரித்தழித்தான்.

17. தோழி, அம்பலத்தில் கூத்தாடி ஐயம் புகுந்து யாண்டும் திரியும் நம்பனாகிய சிவபிரானையும் பரம்பொருளென்று விரும்பி யடைதல் யாது காரணம் பற்றி?

கூறுகிறேன் கேள்; இவ்வாறு திரியும் நம்பனைத்தான் வேதங்கள் எல்லாம் 'எம்மால் உணர முடியாத ஈசனே' என்று புகழ்ந்து வழிபட்டன.

18. சினமே தன்னியல்பாகக் கொண்ட சலந்தரனின் உடலை யழித்த நல்ல சக்கரப்படையை நாரணற்கு அருளியதன் காரணந் தான் யாதோ?

நாராயணன் (ஆயிரம் பூவிற்கொரு பூ குறைந்தமையின்) தன் கண்ணையே பறித்து அருச்சித்தமையால் கொடுத்தான்.

19. தோழி, புள்ளி வாய்ந்த புலித்தோல் ஆடை; ஆலகால விடம் உண்ணும் அமுதம்; இவ்விஷத்தை எம்பெருமான் உட்கொண்ட திறனை எனக்கு எடுத்துச் சொல்வாயாக.

எம்பெருமான் எதை உடுத்துக்கொண்டாலும் எதை உண்டாலும் தன் பெருமையைத் தான் உணராத பெருமையன்.

20. தோழி, எப்பற்றையும் ஒழித்து நின்ற அருந்தவ முனிவர்களாகிய சனகாதியர்க்கு அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவற்றை உரைத்தருளிய காரணத்தை எனக்கறியக் கூறுவாயாக.

அவ்வாறு எம்பெருமான் அருளிச் செயாதிருப்பின் சிறந்த தவமுடைய அவர்களுக்கும் உலக நியதி விளங்கியிரா என்பதேயாம்.



 சிவமயம் 



# 13
# அகால மரணமும் துர் மரணமும் விலக



ஓம் சார்த்தூலஹரமூர்த்தயே நம :

ஓம் பாசுபதமூர்த்தயே நம :

## 1. திருநாவுக்கரசு நாயனர்

### விடந்தீர்த்த திருப்பதிகம்

### திங்களூர்

(*தஞ்சாவூர் இரயில் நிலையத்தினின்றும் சுமார் 10 மைலில் உள்ள திருப்பழனம் என்னும் தலத்திலிருந்து தெற்கில் மண்சாலை வழி சுமார் 1 மைலில் உள்ளது. தேசப் படத்தில் 35 என்கிற எண்ணால் குறிப்பிடப் பட்டிருக்கிறது.*)

பண் - இந்தளம்] [4-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

ஒன்றுகொ லாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்றுகொ லாமுய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ ளாமிடு வெண்டலை கையது
ஒன்றுகொ லாமவர் ஊர்வது தானே. 1

இரண்டுகொ லாமிமை யோர்தொழு பாதம்
இரண்டுகொ லாமிலங் குங்குழை பெண்ணாண்
இரண்டுகொ லாமுரு வஞ்சிறு மான்மழு
இரண்டுகொ லாமவர் எய்தின தாமே. 2

மூன்றுகொ லாமவர் கண்ணுத லாவன
மூன்றுகொ லாமவர் சூலத்தின் மொய்யிலை
மூன்றுகொ லாங்கணை கையது வில்நாண்
மூன்றுகொ லாம்புர மெய்தன தாமே. 3

நாலுகொ லாமவர் தம்முக மாவன
நாலுகொ லாஞ்சன னம்முதற் றோற்றமும்
நாலுகொ லாமவர் ஊர்தியின் பாதங்கள்
நாலுகொ லாமறை பாடின தாமே. 4

அஞ்சுகொ லாமவர் ஆடர வின்படம்
அஞ்சுகொ லாமவர் வெல்புல னாவன
அஞ்சுகொ லாமவர் காயப்பட் டான்கணை
அஞ்சுகொ லாமவர் ஆடின தாமே. 5

ஆறுகொ லாமவர் அங்கம் படைத்தன
ஆறுகொ லாமவர் தம்மக னார்முகம்
ஆறுகொ லாமவர் தார்மிசை வண்டின்கால்
ஆறுகொ லாஞ்சுவை யாக்கின தாமே. 6

ஏழுகொ லாமவர் ஊழி படைத்தன
ஏழுகொ லாமவர் கண்ட இருங்கடல்
ஏழுகொ லாமவர் ஆளு முலகங்கள்
ஏழுகொ லாம்இசை யாக்கின தாமே. 7

எட்டுக்கொ லாமவர் ஈறில் பெருங்குணம்
எட்டுக்கொ லாமவர் சூடு மினமலர்
எட்டுக்கொ லாமவர் தோளிணை யாவன
எட்டுக்கொ லாந்திசை யாக்கின தானே. 8

ஒன்பது போலவர் வாசல் வகுத்தன
ஒன்பது போலவர் மார்பினில் நூலிழை
ஒன்பது போலவர் கோலக் குழற்சடை
ஒன்பது போலவர் பாரிடந் தாமே. 9

பத்துக்கொ லாமவர் பாம்பின்சண் பாம்பின்பல்
பத்துக்கொ லாமெயி றுந்நெரிந் துக்கன
பத்துக்கொ லாமவர் காயப்பட் டான்தலை
பத்துக்கொ லாமடி யார்செய்கை தானே. 10

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு** :—"ஒரு நம்பி அப்பூதி" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளால் திருத்தொண்டத்தொகையில் வைத்துப் பாடப் பட்ட அப்பூதியடிகளார் அந்தணர் குலத்தில் பிறந்து மறைபயின்று எரியோம்பி இறைவன் தாளில் நீங்காத பக்தியுடையவராய்த் திகழ்ந்தார். கல்லுடன் பிணித்துக் கடலில் இடப்பட்ட திருநாவுக்

கரசர் நமச்சிவாயப் பதிகம் பாடி கரையேறிய அற்புதங் கேட்டு அவர்பால் அவரைக் காணுத முன்பே பக்தி கொண்டு தாம் அமைத்த எல்லா அறங்களையும் திருநாவுக்கரசர் பேராலேயே அமைத்ததுடன் தம் வீட்டில் உள்ள இயங்கு பொருள், நிலைப் பொருள், புத்திரர் முதல் யாவர்க்கும் அத்திருநாமத்தினையே இட்டு வழங்கி வந்தார். இத்தகைய பக்தருடைய இல்லத்துக்கு திருநாவுக்கரசு சுவாமிகள் வர நேர்ந்ததும் எல்லையில்லா ஆனந்தக் கடலில் முழுகி வழிபட்ட அப்பூதியடிகளாருடைய அன்புக்குக் கட்டுப்பட்டு அவரில்லத்தில் அமுது செய்ய திருநாவுக்கரசர் இசைந்தார். அமுது வகைகள் யாவும் அமைத்து முடித்ததும் பரிகலம் வேண்டி மூத்த திருநாவுக்கரசு என்று பெயரிட்டு வழங்கிய தம் மூத்த மகனை வாழையிலை அரிந்து வர தோட்டத்துக்கு ஏவ, அம்மகன் நல்லதொரு வாழைக் குருத்தை யரிந்தபோது அரவம் ஒன்று கையிற்றீண்ட விஷம் தலைக்கேறுமுன் விரைந்தோடி இலையினைத் தாயார் கையிற் கொடுத்துக் கிழே விழுந்தான். குறிகளால் விஷம் தீண்டியதையறிந்த பெற்றோர் இது அறியின் பெரியவர் அமுதுகொள்ள இசையார் என்று எண்ணி அப்பெறலரும் புதல்வனைப் பாயினுட்பெய்து மூடி ஒரு மூலையில் மறைத்து வைத்துப் பின் அரசுகளைத் திருவமுது செய்ய அழைத்தார்கள். பரிகலமமைத்துச் சுவாமிகளை இருத்தி அமுது படைக்கும் முன் எல்லோர்க்கும் திருநீறு வழங்கும் சுவாமிகள் மூத்த சேயினைக் காட்டுங்கள் என்ன, அப்பூதியார் நிகழ்ந்தவற்றை உரைக்க முற்படாது "அவன் இப்போது இங்கு உதவான்" என்ன அது கேட்டுப் பொருத திருநாவுக்கரசு சுவாமிகள் நடந்த விஷயத்தை வினவியறிந்து "நன்று நீர் புரிந்த வண்ணம், யாவர் இத்தன்மை செய்தார்" என்று கூறி ஆவிதீர் அச்சவத்தை நோக்கி பெருமான் அருளும் வண்ணம் "ஒன்று கொலாம்" என்று எடுத்து பெருமானின் சீர்பாட இறந்த மகனும் உயிர்பெற்று எழுந்து சுவாமிகள் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அருள்பெற்றான் என்பது வரலாறு. இவ்வரிய பதிகம் விடந்தீர்த்த திருப்பதிகம் எனப் பெயர் பெற்று இன்றும் அதனை மந்திரமாகக் கொண்டு மெய்யன்போடு பாராயணஞ் செய்து சித்தி பெற்றோர் விடம் நீக்க வல்லவராவர் என்பது பெரியோர்கள் கருத்து. இவ்விருபதாவது நூற்றாண்டிலும் இத்திருப்பதிகத்தை ஓதி விபூதியணிந்ததும் விடத்தால் வீழ்ந்த ஒருவன் உயிர் பெற்றெழுந்ததைத் தாம் அனுபவத்தில் கண்டுள்ளதாகக் கோவை சிவக்கவிமணி திரு. C.K. சுப்பிரமணிய முதலியார், B. A. (பெரியபுராணப் பேருரையாசிரியர், பின்னர் ஸ்ரீமத் சம்பந்தசரணலய சுவாமிகள் என்னும் திருநாமத்துடன் துறவு பூண்டவர்) தாம் எழுதி வெளியிட்டுள்ள "வாகீசர் அல்லது மெய்யுணர்தல்" என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளதும் சிந்தனை செய்தற்குரியது.

**பதிகப் பொருள் :**

பொருள் எளிதில் விளங்குந்தன்மையதால் விரிவஞ்சி இன்றியமையாக் குறிப்புகள் மட்டும் தரப்பட்டுள்ளன.

1. வரை - மலை ; ஊர்வது - வாகனமாகக் கொள்வது.

2. இரண்டு கொலாம் உருவம் - பெண்ணும் ஆணுமாக இருவகையும் கூடிய உருவம்.

3. மூன்று கொலாங் கணை - மூன்று கூறுகள் உடைய அம்பு. கணையின் ஈர்க்கு வாயு, உடல் திருமால், கூர் - அக்னி. (வில், நாண், கணை என மூன்றாக உரைத்தலுமாம்.)

4. முகம் - காட்சிப்படும் நெறிகளை உணர்த்தியது.

சனனம் நான்கு வகை :—முட்டையில் தோன்றுதல், கருப்பத்தில் தோன்றுதல், வியர்வையில் தோன்றுதல், நிலத்தில் தோன்றுதல்.

5. காயப்பட்டான் கணை - மன்மத பாணங்கள். ஆடினது ஐந்து - பஞ்சக்ருத்ய தாண்டவம்.

6. அங்கம் - வேதாங்கங்கள்.

7. ஊழி - பிறவியைக் குறிப்பது. எழுவகைப் பிறப்புக்கள். உலகங்கள் ஏழு - இனம்பற்றி மேல் உலகம் ஏழு, கீழுலகம் ஏழு.

8. ஈறில் பெருங்குணம் எட்டு - எண்குணத்தான் (குறள்). இனமலர் எட்டு - பூசைக்குரிய எட்டுவித புஷ்பங்கள், ஞானபூஜா மலர் எட்டு: கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறுமை, இரக்கம், அறிவு, மெய், தவம், அன்பு.

9. ஒன்பது வாசல் - சரீரத்தில் உள்ள நவத்வாரங்கள் ; நூலிழை - பூணூல் ; பாரிடம் - சிவகணங்கள். இவை பதினெண் கணங்கள் எனப்படும். ஈரொன்பது என வகை குறிக்க ஒன்பது எனப்பட்டது. (திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் குறிப்புரை).

10. காயப்பட்டான் தலை - இராவணன் தலைகள். அடியார் செய்கை - அடியார் செய்கைகள் பத்து விதப்படும். தசகாரியம்.

(1) சிரவணம்
(2) ஸ்மரணம் (தியானம்)
(3) கீர்த்தனம்
(4) பிரதக்ஷிணம்
(5) தரிசனம்
(6) அர்ச்சனம்
(7) வந்தனம், பாதசேவனம்
(8) தாஸ்யம்
(9) ஸக்யம்
(10) ஆத்ம நிவேதனம்

# 2. சுந்தரமூர்த்தி நாயனர்

## திருப்புக்கொளியூர் அவிநாசி

(*அவிநாசி என்றே தற்பொழுது வழங்கப்படுகிறது. ஈரோடு—கோயம்புத்தூர் மார்க்கம் திருப்பூர் இரயில் நிலையத்தினின்றும் சுமார் 8 மைல். கோயம்புத்தூரில் இருந்து 'பஸ்' மார்க்கம் 28 மைல். தேசப் படத்தில் 23 என்கிற எண்ணல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.*)

பண் - குறிஞ்சி] [7-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*எற்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெரு மானையே*
*உற்றாய் என்றுன்னையே உள்குகின் றேன்உணர்ந் துள்ளத்தால்*
*புற்றா டரவா புக்கொளி யூர்அவி நாசியே*
*பற்றாக வாழ்வேன் பசுபதி யேபர மேட்டியே.* 1

*வழிபோவார் தம்மோடும் வந்துடன் கூடிய மாணிநீ*
*ஒழிவ தழகோ சொல்லாய் அருளோங்கு சடையானே*
*பொழிலா ருஞ்சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை*
*இழியாக் குளித்த மாணியென் னைக்கிறி செய்ததே.* 2

*எங்கேனும் போகினும் எம்பெரு மானை நினைந்தக்கால்*
*கொங்கே புகினுங் கூறைகொண் டாறலைப் பார்இலை*
*பொங்கா டரவா புக்கொளி யூர்அவி நாசியே*
*எங்கோ னேஉனை வேண்டிக்கொள் வேன்பிற வாமையே.* 3

*உரைப்பார் உரைஉகந் துள்கவல் லார்தங்கள் உச்சியாய்*
*அரைக்கா டரவா ஆதியும் அந்தமும் ஆயினாய்*
*புரைக்காடு சோலைப் புக்கொளி யூர்அவி நாசியே*
*கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே.* 4

*அரங்காவ தெல்லா மாயிடு காடது அன்றியும்*
*சரங்கோலை வாங்கி வரிசிலை நாணியிற் சந்தித்துப்*
*புரங்கோட எய்தாய் புக்கொளி யூர்அவி நாசியே*
*குரங்காடு சோலைக் கோயில்கொண் டகுழைக் காதனே.* 5

*நாத்தா னும்உனைப் பாடல்அன் றிநவி லாதெனாச்*
*சோத்தென்று தேவர் தொழநின்ற சுந்தரச் சோதியாய்*
*பூத்தாழ் சடையாய் புக்கொளி யூர்அவி நாசியே*
*கூத்தா உனக்குநான் ஆட்பட்ட குற்றமுங் குற்றமே.* 6

மந்தி கடுவனுக் குண்பழம் நாடி மலைப்புறம்
சந்திகள் தோறுஞ் சலம் புட்பம் இட்டு வழிபடப்
புந்தி உறைவாய் புக்கொளி யூர்அவி நாசியே
நந்தி உனைவேண்டிக் கொள்வேன் நரகம் புகாமையே. 7

பேணு தொழிந்தேன் உன்னையல் லாற்பிற தேவரைக்
காணு தொழிந்தேன் காட்டுதி யேல்இன்னங் காண்பன்நான்
பூணுண் அரவா புக்கொளி யூர்அவி நாசியே
காணாத கண்கள் காட்டவல் லகறைக் கண்டனே. 8

நள்ளாறு தெள்ளா றரத்துறை வாய்எங்கள் நம்பனே
வெள்ளாடை வேண்டாய் வேங்கையின் தோலை விரும்பினாய்
புள்ளேறு சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை
உள்ளாடப் புக்க மாணியென் னைக்கிறி செய்ததே. 6

நீரேற ஏறுநிமிர் புன்சடை நின்மல மூர்த்தியை
போரேற தேறியைப் புக்கொளி யூர்அவி நாசியைக்
காரேறு கண்டனைத் தொண்டன் ஆரூரன் கருதிய
சீரேறு பாடல்கள் செப்பவல் லார்க்கில்லை துன்பமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**அவிநாசியப்பர்** தேவி :—**பெருங்கருணை நாயகி**

**பதிக வரலாறு** :—சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாரூரில் இருக்கும் நாளில் சேரமான் பெருமாள் நாயனாரைக் காண வேண்டி மலைநாடு செல்லும் வழியில் கொங்குநாட்டில் திருப்புக் கொளியூர் சென்று அடைந்தபோது மறையோர் வாழும் அப்பதியின் மாடவீதி மருங்கணைவார் நிறைந்த செல்வத்துடன் கூடிய எதிர் மனைகள் இரண்டில் ஒன்றில் மங்கல வாத்தியங்களும் மற்றொன்றில் அழுகை ஒலியும் கேட்டு ஆங்கு உறையும் அந்தணாளர்களை "இரண்டும் உடன் நிகழ்வது என்" எனக் கேட்டார். அவர்கள் வணங்கி ஐயாண்டு பிராயத்த புதல்வர் இருவர். ஒரு மடுவில் குளிக்க இறங்கியபோது ஒருவனை முதலை விழுங்கிவிட்டது. பிழைத்தவனுக்கு இன்று பூணுல் அணியும் கலியாணம் நிகழும் மனை இது. அந்த மனையோ இறந்த மகனை நினைந்து அழுவாரது மனை என உரைத்தார்கள். இத்தன்மையினைக் கேட்ட நம்பியாரூரர் இரங்கிய திருஉள்ளத்தினரானார். அப்போது அவரைக் கண்டிறைஞ்ச எண்ணங்கொண்டிருந்த மகனையிழந்த அந்த மறையோனும் அவன் மனைவியும் தம் சித்த சோகத்தினை மாற்றிக் கொண்டு நம்பிகளின் திருப்பாதங்களை வணங்கி நின்றார்கள். முக மலர்ந்து தம்மைத் தொழுவாரைக் கண்ட சுந்தரர் "இன்ப மைந்தன் தன்னை இழந்தீர் நீரோ" என்று வினவ அவர்கள்

வணங்கி "அது முன்பு நடந்தது. இப்பொழுதுத் தங்களைத் தரிசித்து வணங்க முயன்றேம். எங்கள் அன்பு பழுதாகாமல் தேவரீர் எழுந்தருளப் பெற்றேம்" எனத் தொழுதார்கள். மைந்தன் இழந்த துயரையும் மறந்து நான் வந்ததற்கே சிந்தை மகிழ்ந்தனர் இவர்கள் என்று திருவுளங் கொண்ட நம்பி ஆரூரர் இம்மறைச் சிறுவனை முதலை வாயினின்றும் அழைத்துக் கொடுத்தே எந்தை பெருமான் அவிநாசியின் கழல் பணிவேன் என்று சென்றார். அச்சிறுவனை முதலை விழுங்கிய மடுவினை வினவிக் கேட்டறிந்து அங்குச் சென்று கரையின்மீது நின்று இத்திருப்பதிகத்தைப் பாட ஆரம்பித்தார். "உரைப்பார் உரை" எனத் தொடங்கும் நான்காவது திருப்பாடல் முடியும் முன்னரே இறைவன் அருளால் முதலையானது தரைக்கு வந்து சிறுவனை உமிழ்ந்து சென்றது. முதலை வயிற்றுள் இருந்த ஆண்டுகளும் தரையின்மீது வளர்ந்ததெனவே நிரம்பி அச்சிறுவன் முதலை வாயினின்றும் மீண்டான்.

பொழிப்புரை :

1. புற்றின்கண் வாழ்கின்ற ஆடுகின்ற பாம்பையுடையவனே; திருப்புக்கொளியூர் அவிநாசியில் எழுந்தருளி யிருப்பவனே! எல்லா உயிர்களுக்கும் பதியே! எல்லார்க்கும் மேலோனே! எழுபிறப்பிலும் எனக்குத் தலைவனாக உள்ள உன்னையே எனக்கு உற்றவன் என்று உணர்ந்து மனத்தினால் நினைக்கின்றேன். உன்னையே ஆதரவாகக் கொண்டு வாழ்வேன். எக்காரணத்தால் உன்னை நான் மறக்கப் போகிறேன். (ஒரு காரணத்தாலும் உன்னை மறக்க மாட்டேன் என்பது குறிப்பு).

2. அருள்மிக்க சடைமுடியுடையவனே! பொழில்களும் சோலைகளும் உள்ள திருப்புக்கொளியூரில் உள்ள குளத்தில் இறங்கிக் குளித்த பிராமணச் சிறுவன் செய்த குற்றம் என்னை? வழிச் செல்வோருடன் தானும் ஒருவனாய் வந்த அச்சிறுவன் இறந்து போவது உனக்கு அழகியதோ? சொல்வாயாக.

3. மிகுதியாக ஆடுகின்ற பாம்பை யணிந்தவனே, திருப்புக்கொளியூரில் அவிநாசியில் வீற்றிருப்பவனே! எங்கள் தலைவனே, நான் எங்கே சென்றாலும், கொங்குநாட்டில் புகுந்தாலுங்கூட எம்பெருமானாகிய உன்னை நினைந்தக்கால் வழிமறித்துக் கொள்ளை கொள்பவர் யாருமிலர். உன்னிடம் நான் வேண்டிக்கொள்வது பிறவாமையே யாகும்.

4. உன்புகழ் பாடுகிறவர்களுடைய சொல்லை விரும்பி உன்னை எஞ்ஞான்றும் மறவாது நினைக்கவல்லாருடைய தலைமீது இருப்பவனே! அரையில் ஆடுகின்ற பாம்பையுடையவனே! இவ்வுலகமெல்லாவற்றுக்கும் முதலாயும் ஈறாயும் ஆனவனே, உயர்வதற்காக ஆடுகின்ற சோலைகள் நிறைந்த திருப்புக்கொளியூர் அவிநாசிப்

பெருமானே! முதலையையும் இயமனையும் இக்குளக்கரைக்கண் பிள்ளையைக் கொணர்ந்து தருமாறு ஆணையிடுவாயாக.

5. குரங்குகள் ஆடுகின்ற சோலைகளையுடைய திருப்புக்கொளியூர் அவிநாசிப் பெருமானே, காதில் குழை யணிந்தவனே, உனக்கு நடனமிடும் அரங்காவது சுடுகாடு. அதுவன்றியும் நீ அம்பையெடுத்து வில்லிற் றொடுத்து முப்புரங்களையும் எரித்தனை.

6. எங்களது நாக்குகள் உன்னைப் பாடுவதன்றி வேறு பேசாது. உனக்கு வணக்கம் என்று தேவர்கள் தொழும்படி நின்ற அழகிய சோதி வடிவனே! பூமாலைகள் அணிந்த தாழ்ந்த சடையையுடையவனே! திருப்புக்கொளியூர் அவிநாசியப்பனே! நடராஜப் பெருமானே! நான் உனக்கு ஆட்பட்டதும் குற்றமாமோ? (ஆகாது என்றபடி).

7. பெண் குரங்குகள் ஆண் குரங்குகளுக்கு உண்பதற்காகப் பழங்கள் வேண்டி மலைப்புறங்களில் புகுந்து காலை, நண்பகல், மாலை, முச்சந்திகளிலும் சலம், புஷ்பம் இவை கொண்டு வழிபட அவைகளின் மனத்திலும் பொருந்தியிருப்பவனே! திருப்புக்கொளியூர் அவிநாசியப்பனே! நந்தியே! நரகம் புகாதிருத்தலையே உன்னிடம் நான் வேண்டிக்கொள்கிறேன்.

8. பூணுகவும், நாணுகவும் பாம்பினையுடைய பரமனே, திருப்புக்கொளியூர் அவிநாசியப்பனே, உன்னைத் தவிர வேறு தெய்வத்தைப் பேணுது அடியேன் நீங்கினேன். கண்ணுற் காணுதும் விலகினேன். காணுந் தன்மையற்ற கண்களையும் காணும்படிச் செய்யவல்ல நஞ்சுண்ட கண்டனே! நீயே உன்னைக் காட்டுவாயாயின் உன் பெருமைகளை மேலும் அதிகமாகத் தெரிந்து கொள்வேன்.

9. திருநள்ளாறு, தெள்ளாறு, திருவரத்துறை முதலிய தலங்களில் உறையும் நம்பனே! வெண்மையான ஆடைகளை விரும்பாது புலித்தோலை விரும்பினவனே! பறவைகள் மிக்க சோலைகள் நிறைந்த திருப்புக்கொளியூரில் நீராட இறங்கின அந்தணச் சிறுவன் செய்த குற்றம் என்னை?

10. கங்கை தங்கிய பெருமையுடைய நீண்ட புன்சடையினையுடைய நின்மலமூர்த்தியை, போர் செய்யும் எருதின்மீது ஏறுபவனை திருப்புக்கொளியூர் அவிநாசியை கருமை பொருந்திய கண்டம் உடையவனை அவனுடைய தொண்டனுகிய ஆரூரன் திருவருள் கருதிப் பாடிய பெருமை மிக்க இப்பாடல்களைப் பாட வல்லவர்கட்குத் துன்பம் இல்லையாம்.

---



# சிவமயம்





## 14
## பரமனைத் தரிசித்த பலனைப் பெற



ஓம் கங்காளமூர்த்தயே நம :   ஓம் கேசவார்த்தமூர்த்தயே நம :

## திருநாவுக்கரசு நாயனார்

### திருப்பூவணம்

*(மதுரை—மானாமதுரை மார்க்கத்தில் மதுரைக்குக் கிழக்கே 12 மைலில் உள்ளது. திருப்பூவணம் இரயில் நிலையத்திலிருந்து 2 பர்லாங். தேசப் படத்தில் 24 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)*

திருத்தாண்டகம்]   [6–ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*வடிவேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும்*
*வளர்சடைமேல் இளமதியந் தோன்றுந் தோன்றும்*
*கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றும்*
*காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும்*
*இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்*
*எழில்திகழும் திருமுடியு மிலங்கித் தோன்றும்*
*பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்*
*பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.* 1

*ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்றும்*
*அடியவர்கட் காரமுத மாகித் தோன்றும்*
*ஊனாகி யூர்திரிவா னாகித் தோன்றும்*
*ஒற்றைவெண் பிறைதோன்றும் பற்றார் தம்மேல்*
*சேணாக வரைவில்லா லெரித்தல் தோன்றும்*
*செத்தவர்தம் எலும்பினாற் செறியச் செய்த*
*பூணாணும் அரைஞாணும் பொலிந்து தோன்றும்*
*பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.* 2

கல்லாலின் நீழற் கலந்து தோன்றும்
கவின்மறையோர் நால்வர்க்கு நெறிக ளன்று
சொல்லாகச் சொல்லியவா தோன்றுந் தோன்றும்
சூழரவம் மான்மறியுந் தோன்றுந் தோன்றும்
அல்லாத காலனைமுன் அடர்த்தல் தோன்றும்
ஐவகையால் நினைவார்பால் அமர்ந்து தோன்றும்
பொல்லாத புலாலெலும்பு பூணுய்த் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே. 3

படைமலிந்த மழுவாளும் மானுந் தோன்றும்
பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும்
நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்றும்
நான்மறையி னொலிதோன்றும் நயனந் தோன்றும்
உடைமலிந்த கோவணமுங் கீளுந் தோன்றும்
மூரல்வெண் சிரமாலை உலாவித் தோன்றும்
புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே. 4

மயலாகுந் தன்னடியார்க் கருளுந் தோன்றும்
மாசிலாப் புன்சடைமேல் மதியந் தோன்றும்
இயல்பாக இடுபிச்சை ஏற்றல் தோன்றும்
இருங்கடல்நஞ் சுண்டிருண்ட கண்டந் தோன்றும்
கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை
ஆயிரமா முகத்தினொடு வானில் தோன்றும்
புயல்பாயச் சடைவிரித்த பொற்புத் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே. 5

பாராழி வட்டத்தார் பரவி இட்ட
பன்மலரும் நறும்புகையும் பரந்து தோன்றும்
சீராழித் தாமரையின் மலர்க ளன்ன
திருந்தியமா நிறத்தசே வடிகள் தோன்றும்
ஓராழித் தேருடைய இலங்கை வேந்தன்
உடல்துணித்த இடர்பாவங் கெடுப்பித் தன்று
போராழி முன்னீந்த பொற்புத் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே. 6

தன்னடியார்க் கருள்புரிந்த தகவு தோன்றும்
சதுர்முகனைத் தலையரிந்த தன்மை தோன்றும்
மின்னனைய நுண்ணிடையாள் பாகந் தோன்றும்
வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்தல் தோன்றும்
துன்னியசெஞ் சடைமேலோர் புனலும் பாம்பும்
தூயமா மதியுடனே வைத்தல் தோன்றும்
பொன்னனைய திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே. 7

செறிகழலுந் திருவடியுந் தோன்றுந் தோன்றும்
திரிபுரத்தை எரிசெய்த சிலையுந் தோன்றும்
நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்றும்
நெற்றிமேல் கண்தோன்றும் பெற்றந் தோன்றும்
மறுபிறவி யறுத்தருளும் வகையுந் தோன்றும்
மலைமகளுஞ் சலமகளும் மலிந்து தோன்றும்
பொறியரவும் இளமதியும் பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 8

அருப்போட்டு முலைமடவாள் பாகந் தோன்றும்
அணிகிளரும் உருமென்ன அடர்க்குங் கேழல்
மருப்போட்டு மணிவயிரக் கோவை தோன்றும்
மணமலிந்த நடந்தோன்றும் மணியார் வைகைத்
திருக்கோட்டில் நின்றதோர் திறமுந் தோன்றும்
செக்கர்வா னொளிமிக்குத் திகழ்ந்த சோதிப்
பொருப்போட்டி நின்றதிண் புயமுந் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 9

ஆங்கணைந்த சண்டிக்கும் அருளி யன்று
தன்முடிமேல் அலர்மாலை யளித்தல் தோன்றும்
பாங்கணைந்து பணிசெய்வார்க் கருளி யன்று
பலபிறவி யறுத்தருளும் பரிசுந் தோன்றும்
கோங்கணைந்த கூவிளமும் மதமத் தம்மும்
குழற்கணிந்த கொள்கையொடு கோலந் தோன்றும்
பூங்கணைவேள் உருவழித்த பொற்புத் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 10

ஆரொருவர் உள்குவார் உள்ளத் துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்
வாருருவப் பூண்முலைநன் மங்கை தன்னை
மகிழ்ந்தொருபால் வைத்துகந்த வடிவுந் தோன்றும்
நீருருவக் கடலிலங்கை அரக்கர் கோனை
நெறுநெறென அடர்த்திட்ட நிலையுந் தோன்றும்
போருருவக் கூற்றுதைத்த பொற்புத் தோன்றும்
பொழில் திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**பூவண நாதர்** தேவி :—**மின்னம்மை**

**பதிக வரலாறு** :—திருநாவுக்கரசு சுவாமிகள் தம்முடைய பாண்டியநாட்டு யாத்திரையில் திருவாலவாய்ப் பெருமானைத் தரிசித்துப் பின் திருப்பூவணம் என்னும் தலத்தையடைந்து திருக் கோயிலினுள் சென்றபோது அங்கு சிவபெருமான் நேரே காட்சி

தந்தருளக் கண்டு வணங்கிப் பாடிய திருப்பதிகம் இது. இதனைப் பக்தியுடன் ஓதுவார் இறைவனைத் தங்கள் அகக்கண்களால் நேரே தரிசித்துப் பெரும் புண்ணியம் பெறுவர் என்பது திண்ணம்.

**பதிகப் பொருள் :**

வெளிப்படை. எனவே விரிவஞ்சி சிறு குறிப்புக்கள் மட்டும் தரப்பட்டுள்ளன.

1. வடிவு - அழகு ; குழைதோடு கலந்து - இடப்பால் அம்மைக்குரிய தோடும், வலப்பால் அப்பனுக்குரிய குழையுமாகக் கூடிய அம்மையப்பனின் ஒன்றுபய திருஉருவம் ; பொடியேறு - திருநீறு சாத்திய.

2. ஊண் ஆகி - பலியேற்பானாகி ; பற்றார் - பகைவர், திரிபுர வசுரர் ; சேண்நாகவரை வில் - மேருமலையாகிய வில்.

3. ஐவகையால் நினைவார் - ஐந்து முகங்களையுடைய சதாசிவ மூர்த்தியாக வழிபடுபவர், ஐந்தெழுத்தாகிய மந்திர உருவாக வழிபடுவர், ஐந்தொழிற்பெருங் கூத்துடையவனாக வழிபடுவார் முதலிய பல பொருள்கள் கொண்டது.

4. பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை - முருகப்பெருமான். உமாதேவியுடனும் முருகப்பெருமானுடனும் கூடிய ஸோமாஸ்கந்த மூர்த்தியாகவே பெருமானை நாயனார் தரிசித்தார் என்பது இதிலிருந்து தெரிகிறது.

5. மயல் - பெருவிருப்பு. இறைவனைத் தவிர வேறு அறியாத அன்பின் நிலை.

6. பாராழிவட்டத்தார் - கடல் சூழ்ந்த நிலவுலகத்தவர்கள்.

7. பொன்னனைய திருமேனி - பொன்போன்ற நிறமுடைய இறைவன் திருமேனி. இத்தலத்திலேதான் பொன்னனையாள் என்னும் உருத்திர கணிகைக்காக இரசவாதஞ் செய்த திருவிளையாடல் நிகழ்ந்தது. பொன்னினாலேயே இறைவன் திருஉருவைச் சமைத்தாள் அந்நங்கை.

8. பெற்றம் - எருது.

9. அரும்பு ஒட்டு - அரும்பினை வென்ற ; உரும் - இடி ; வைகைத் திருக்கோடு - வையை நதிக்கரை ; பொருப்பு - மலை.

10. கூவிளம் - வில்வம் ; மத்தம் - ஊமத்த மலர். பூங்கணை வேள் - மன்மதன்.

11. யார்யார் எவ்வெவ்வாறு நினைக்கின்றார்களோ அவ்வவர்களுக்கு அவ்வத்திறமாய் வந்து அருள் புரிபவர் என்பது முதல் இரண்டடிகளில் குறிக்கப்படுகிறது.

---



# சிவமயம்





# 15

## நன்மக்கட் பேறு நலமுடன் பெற



ஓம் பிக்ஷாடநமூர்த்தயே நம : ஓம் ஸிம்ஹக்நமூர்த்தயே நம :

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### திருவெண்காடு

(விழுப்புரம்—மாயவரம் மார்க்கத்தில் சீர்காழி இரயில் நிலையத்திலிருந்து சுமார் $8\frac{1}{2}$ மைல். பஸ் வசதி உண்டு. தேசப்படத்தில் 25 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

பண் - சீகாமரம்] [2-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

கண்காட்டு நுதலானுங் கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டு முருவானும் பிறைகாட்டுஞ் சடையானும்
பண்காட்டு மிசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டி லுறைவானும் விடைகாட்டுங் கொடியானே. 1

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாஒன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே. 2

மண்ணொடுநீ ரனல்காலோ டாகாய மதிஇரவி
எண்ணில்வரு மியமான னிகபரமு மெண்டிசையும்
பெண்ணினொடாண் பெருமையொடு சிறுமையுமாம் பேராளன்
விண்ணவர்கோன் வழிபடவெண் காடிடமா விரும்பினனே. 3

விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின் தண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்த நகைகாட்டுங் காட்சியதே. 4

வேலைமலி தண்கானல் வெண்காட்டான் திருவடிக்கீழ்
மாலைமலி வண்சாந்தால் வழிபடுநன் மறையவன்றன்
மேலடர்வெங் காலனுயிர் விண்டபினை நமன்தூதர்
ஆலமிடற் றானடியார் என்றடர வஞ்சுவரே. 5

தண்மதியும் வெய்யரவுந் தாங்கினான் சடையினுடன்
ஒண்மதிய நுதலுமையோர் கூறுகந்தா னுறைகோயில்
பண்மொழியா லவன்நாமம் பலஓதப் பசுங்கிள்ளை
வெண்முகில்சேர் கரும்பெணைமேல் வீற்றிருக்கும் வெண்காடே. 6

சக்கரமாற் கீந்தானுஞ் சலந்தரனைப் பிளந்தானும்
அக்கரைமே லசைத்தானு மடைந்தயிரா வதம்பணிய
மிக்கதனுக் கருள்சுரக்கும் வெண்காடும் வினைதுரக்கும்
முக்குளநன் குடையானும் முக்கணுடை இறையவனே. 7

பண்மொய்த்த வின்மொழியாள் பயமெய்த மலையெடுத்த
உன்மத்தன் உரநெரித்தன் றருள்செய்தான் உறைகோயில்
கண்மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடல்முழங்க
விண்மொய்த்த பொழில்வரிவண் டிசைமுரலும் வெண்காடே. 8

கள்ளார்செங் கமலத்தான் கடற்கிடந்தா னெனவிவர்கள்
ஒள்ளாண்மை கொளற்கோடி யுயர்ந்தாழ்ந்து முணர்வரியான்
வெள்ளானை தவஞ்செய்யு மேதகுவெண் காட்டானென்று
உள்ளாடி உருகாதா ருணர்வுடைமை யுணரோமே. 9

போதியர்கள் பிண்டியர்கள் மிண்டுமொழி பொருளென்னும்
பேதையர்க ளவர்பிறிமி னறிவுடையீ ரிதுகேண்மின்
வேதியர்கள் விரும்பியசீர் வியன்திருவெண் காட்டானென்று
ஓதியவர் யாதுமொரு தீதிலரென் றுணருமினே. 10

தண்பொழில்சூழ் சண்பையர்கோன் தமிழ்ஞான சம்பந்தன்
விண்பொலிவெண் பிறைச்சென்னி விகிர்தனுறை வெண்காட்டைப்
பண்பொலிசெந் தமிழ்மாலை பாடியபத் திவைவல்லார்
மண்பொலிய வாழ்ந்தவர்போய் வான்பொலியப் புகுவாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—சுவேதாரணியேசுவரர்

தேவி :—பிரம்மவித்தியா நாயகி

பதிக வரலாறு :—முத்தமிழ் விரகர் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருநனிபள்ளி, திருவலம்புரம், திருச்சாய்க்காடு, முதலிய தலங்களில் ஊனெலாம் உருக ஏத்திப் பரமனைப் பணிந்து பதிகம்

பாடிப் பின்னர் திருவெண்காட்டினை யடைந்தார். அங்குத் தொண்டர்கள் எதிர்கொண்டு இன்னதன்மையர் ஆனார்கள் என்று சொல்ல ஒண்ணாத பெருமகிழ்ச்சி பொங்க சண்பை மன்னரை ஆலயத்துக்கு அழைத்துச் சென்றார்கள். முத்தமிழ் விரகரும் முதல்வருடைய கோபுரமாகிய ஸ்தூல லிங்கத்தைத் தரிசித்து உவகையோடு உள்புக்கு கோயிலை வலம் வந்து நித்தனார் திருமுன்பு எய்தி நிலமுறத் தொழுது வீழ்ந்தார். மெய்ப்பொரு ளாயினாரான பரமனை 'கண்காட்டு நுதல்' என்று முன் எடுத்து அத் தலத்துத் தீர்த்தமான முக்குளத்தையும் சேர்த்துப் பாடியருளிய திருப்பதிகம் இது. 'செப்பரும் பதிகமாலை' எனச் சேக்கிழார் பெருமானால் போற்றப்பட்டது. இப்பதிகத்தின் இரண்டாவது திருப்பாடல் திருப்பெண்ணாகடத்தில் வாழ்ந்த அச்சுத களப்பாளர் புத்திரப்பேறின்றி வருந்திப் பின் தமது குலகுருவாகிய அருணந்தி சிவாச்சாரிய மூர்த்திகளது ஆணைப்படி திருமுறையிற் கயிறு சாத்தியபோது உதயமாய் அத்திருவுள்ளக்கிடையின்படி அவர் திருவெண்காட்டையடைந்து இறைவனை வணங்கி முக்குளத்தில் தமது மனைவியாருடன் விதிப்படி மூழ்கி வழிபட்டு சுவேதவனப் பெருமாள் என்னும் ஸ்ரீ மெய்கண்ட தேவராகிய சைவப் பிரதம சந்தானாசார்ய மூர்த்திகளைப் புத்திரராகப் பெற்றருளினார். திருவெண்காட்டில் முக்குளம் மூழ்கி இத்திருப்பதிகத்தை ஓதி திருவெண்காட்டானைப் பரவுபவர்கள் நன்மக்கட்பேறு பெறுவர். அங்ஙனம் பெற்றவர்கள் இன்றும் இருக்கிறார்கள். சோமன், சூரியன், அக்னி என்ற இம்மூவரால் உண்டாக்கப்பட்டு முறையே சோமதீர்த்தம், சூரியதீர்த்தம், அக்கினி தீர்த்தம் என வழங்கு பவையே முக்குளம் எனப்படுவது. திருவெண்காடு சென்று முக் குளம் மூழ்க இயலாதவர்களும் இப்பதிகத்தை உள்ளன்புடன் ஓதி வருவார்களேயாயின் அம்முக்குளம் மூழ்கிய பலனாகிய நன்மக்கட் பேறு இறைவனருளால் கிடைக்கும். புத்திரப்பேறு தவிர இரண் டாம் திருப்பாட்டில் சொல்லிய பயன் யாவும் உடன் பெறுவர் என்பது முக்காலும் உறுதி.

பொழிப்புரை :

1. நெருப்புக் கண்ணைக் காட்டுகின்ற நெற்றியையுடையவ னும், எரிகின்ற தீயைக் காட்டுகின்ற கையினை உடையவனும், ஒரு பாகத்திலே உமாதேவியைக் காட்டும் உருவமுடையவனும், பிறைச் சந்திரனை தலையின்மீது காட்டுபவனும், பண்ணினைக் காட்டுகின்ற இசையானவனும், பயிரினை உண்டாக்கும் மழைக்குக் காரணமான புயலாகவும் உள்ளவனும், திருவெண் காட்டில் எழுந்தருளியிருப்பவனும் இடபத்தைக் கொடியாக உடைய சிவபெருமானே.

2. மூங்கிலைப் போன்ற தோளினையுடைய உமாதேவியை ஒரு பங்கிலே கொண்ட சிவபெருமானின் திருவெண்காட்டுத் தல

தீர்த்தங்களாகிய சோம, சூர்ய, அக்னி தீர்த்தங்கள் எனப்படும் முக்குளத்திலே முழுகும் செயலுடையவர்களை தீவினைகள் வந்து பீடிக்காது. பேய்கள் வந்து அடையா. ஏற்கெனவே பிடித்திருப் பினும் அவை விலகிப்போகும். மக்கட்பேறும், மற்றும் உள்ளத் திலே விரும்பிய வரங்கள் யாவும் இறைவனால் அருளப் பெறுவர். இதில் ஒரு சிறிதும் ஐயம் கொள்ளவேண்டாம்.

3. நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், சந்திரன், சூரியன், இயமானன் என்ற அட்டமூர்த்தமாகவும் இம்மை, மறுமையாக வும், அட்டத்திக்குகளும், பெண்ணோடு ஆணும், பெரியவற்றிற் கெல்லாம் பெரியதாயும், சிறியவற்றிற்கெல்லாம் சிறியதாகவும் ஆன பேரருளாளன் — சிவபிரான் — தேவேந்திரன் வந்து வணங்கி வழிபடுவதற்காகத்தான் திருவெண்காட்டைத் தனக்கு உறைவிட மாக விரும்பி எழுந்தருளினான்.

4. திருநீலகண்டப்பெருமான் உறையும் திருவெண்காட்டில் குளிர்ச்சி பொருந்திய முல்லை நிலத்தில் மடல் விரிந்த தாழை மலரின் நிழலைப் பார்த்து இது தன்னை உண்ண வரும் ஒரு குருகு— நாரை — என்று நினைத்து குளத்திலே உள்ள கெண்டைமீன் தாமரையின் பூவின் பக்கல் சென்று மறைந்துகொள்ள அதைக் கண்டு கடல் ஒளிவிடுகின்ற தன் முத்துக்களாகிய பற்களைக் காட்டும் காட்சி காணப்படும் (கெண்டையின் அறியாமை நோக்கி கடல் நகைத்தது என்றவாறு).

5. கடற்கரைச் சோலைகள் நிறைந்த திருவெண்காட்டுப் பெருமானின் திருவடிகளில் பூமாலைகளும், நறுஞ்சந்தனமும் இட்டு வழிபட்ட நல்லதொரு மறையவனை யடர்த்து வந்த கொடிய காலனுடைய உயிரை மாய்த்தபின் இயம தூதர்கள் சிவனடியார்களை நெருங்குவதற்கும் அச்சமுற்றனர். (சுவேதகேது என்னும் அந்த ணன் பொருட்டு இத்தலத்திலும் காலசங்காரம் நிகழ்ந்ததாகத் தல புராணங் கூறுகிறது.)

6. குளிர்ச்சியுள்ள சந்திரனையும், கொடுவிடமுடைய பாம் பினையும் சடாமுடியுடன் தாங்கினவனும், ஒளி பொருந்திய பிறைச் சந்திரனை யொத்த நெற்றியுடைய உமாதேவியாரை இடப்பாகத் தில் விரும்பி வைத்துக்கொண்டுள்ளவனுமான சிவபெருமான் உறைகின்ற இடம், பண்ணோடு கூடிய மொழிகளால் அவன் நாமங்கள் பலவற்றை ஓதுதற்குப் பசுங்கிளிகள் வெண் மேகம் வரை உயர்ந்திருக்கும் கரிய பனை மரங்களின் மேல் வீற்றிருக்கும் திருவெண்காடேயாகும்.

7. திருமாலுக்குச் சக்கராயுதத்தை யளித்தவனும், சலந்தரா சுரன் உடல் இரு கூறுபடப் பிளந்தவனும், அரையின்மேல் எலும்பு மாலையைத் தரித்தவனும், ஐராவதம் என்னும் தேவலோகத்து

யானை அடைந்து வழிபட அதற்கு மிகவும் அருள் செய்த திருவெண் காடும், முழுகுவாரது வினைகளைப் போக்குகின்ற முக்குளமும் உடையானும் மூன்று கண்களையுடைய இறைவனுகிய சிவபெருமானேயாகும்.

8. பண்சேர்ந்த இனிய மொழிகளையுடைய உமாதேவியார் பயப்படும்படியாக கயிலாயமலையைப் பெயர்த்தெடுத்த வைத்தியக் காரனுகிய இராவணனுடைய மார்புகளை நெரித்துப் பிறகு அவன் சாமகானம் பாடி மகிழ்வித்த அன்று அவனுக்கு வரங்கள் அருள் செய்த பெருமான் உறையும் இடம், கண்கள் நெருங்கிய தோகைகளுடைய நீலமயில்கள் நடனமாட, கடல்கள் ஒலிக்க. விண்ணளாவிய சோலைகளில் கோடுகளையுடைய வண்டுகள் இசை பாடுகின்ற திருவெண்காடேயாகும்.

9. தேன்மிகுந்த தாமரை மலரோனுகிய பிரமதேவனும், கடலில் கிடந்தவனுகிய திருமாலும் ஆகிய இவர்கள் தங்களுடைய பெருமையை நிலை நிறுத்துவதற்காக (தங்களில் யார் பெரியவர் என்று நிலைநிறுத்துவதற்காக) முறையே ஆகாயத்தில் உயரப் பறந்தும், பாதாளத்தில் ஆழ்ந்து சென்று தேடியும் உணர்வதற்கரியவனை சிவபெருமான் என்றும், வெள்ளையானை தவம் செய்கின்ற மேன்மையுடைய திருவெண்காட்டையுடையவன் என்றும் உள்ளங் கசிந்து உருகாதவரது அறிவை நாம் மதிக்கமாட்டோம்.

10. புத்தர்கள், சமணர்கள் ஆகிய வன்மொழிகளையே உண்மைப் பொருள் என்று கூறும் அறிவில்லாதவர்களை விட்டு நீங்குங்கள். அறிவுடையோர்களே, இவ்விஷயத்தைக் கேளுங்கள். வேதம் ஓதுபவர்கள் விரும்புகிற பெருமையுடைய விசாலமான திருவெண்காட்டைக் கோயிலாகக் கொண்டவன் என்று சொல்லுபவர்கள் எந்தவிதமான தீமைகளும் இல்லாதவர்கள் என்று அறிந்துகொள்ளுங்கள். (அன்னவர்களைத் தீமைகள் வந்து சாரா. முன் வினைவயத்தால் உள்ளனவும் தொலைந்துபோகும் என்றபடி).

11. குளிர்ச்சி மிகுந்த பொழில்கள் சூழ்ந்த சண்பை என்னும் சீகாழிப் பதியுள்ளோர்களின் தலைவனுகிய தமிழ்வல்ல ஞானசம்பந்தன் ஆகாயத்தில் விளங்குகின்ற பிறைச்சந்திரனைச் சூடிய சிரத்தினையுடைய விகிர்தன் உறைகின்ற திருவெண்காடு என்ற தலத்தை, பண் விளங்குகின்ற செம்மை நெறி செலுத்துகின்ற தமிழ்மாலையாகப் பாடிய இவை பத்தும் வல்லவர்கள் இம்மண்ணுலகில் பெருமையுடன் வாழ்ந்தவர் ஆவார்கள். பிறகு அவர்கள் விண்ணுலகத்திலும் சிறந்து வாழும்படி போய்ச் சேருவார்கள்.



திருவாரூர் கோயில்

 சிவமயம் 



# 16

## அரனையருச்சித்த அரும்பலன் பெற



ஓம் சண்டேசாநுக்ரஹமூர்த்தயே நம :　　　ஓம் தக்ஷிணமூர்த்தயே நம :

## திருநாவுக்கரசு நாயனர்

### திருவாரூர்

(மாயவரம்—காரைக்குடி மார்க்கம். திருவாரூர் சந்திப்பு இரயில் நிலயத்திலிருந்து கோயில் 1 மைல். தேசப் படத்தில் 26 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

திருத்தாண்டகம்]　　　[6-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி
　　கழலடைந்தார் செல்லுங் கதியே போற்றி
அற்றவர்கட் காரமுத மானுய் போற்றி
　　அல்லலறுத் தடியேனை யாண்டாய் போற்றி
மற்றொருவ ரொப்பில்லா மைந்தா போற்றி
　　வானவர்கள் போற்று மருந்தே போற்றி
செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி
　　திருமூலட் டானனே போற்றி போற்றி. 1

வங்கமலி கடனஞ்ச முண்டாய் போற்றி
　　மதயானை யீருரிவை போர்த்தாய் போற்றி
கொங்கலரு நறுங்கொன்றைத் தாராய் போற்றி
　　கொல்புலித்தோ லாடைக் குழகா போற்றி
அங்கணனே யமரர்கடம் மிறைவா போற்றி
　　யாலமர நீழலறஞ் சொன்னய் போற்றி
செங்கனகத் தனிக்குன்றே சிவனே போற்றி
　　திருமூலட் டானனே போற்றி போற்றி. 2

மலையான் மடந்தை மணாளா போற்றி
 மழவிடையாய் நின்பாதம் போற்றி போற்றி
நிலையாக வென்னெஞ்சி னின்றாய் போற்றி
 நெற்றிமே லொற்றைக்கண் ணுடையாய் போற்றி
இலையார்ந்த மூவிலைவே லேந்தீ போற்றி
 யேழ்கட லு மேழ்பொழி லு மானாய் போற்றி
சிலையாலன் றெயிலெரித்த சிவனே போற்றி
 திருமூலட் டானனே போற்றி போற்றி. 3

பொன்னியலு மேனியனே போற்றி போற்றி
 பூதப் படையுடையாய் போற்றி போற்றி
மன்னியசீர் மறைநான்கு மானாய் போற்றி
 மறியேந்து கையானே போற்றி போற்றி
உன்னுமவர்க் குண்மையனே போற்றி போற்றி
 யுலகுக் கொருவனே போற்றி போற்றி
சென்னிமிசை வெண்பிறையாய் போற்றி போற்றி
 திருமூலட் டானனே போற்றி போற்றி. 4

நஞ்சுடைய கண்டனே போற்றி போற்றி
 நற்றவனே நின்பாதம் போற்றி போற்றி
வெஞ்சுடரோன் பல்லிறுத்த வேந்தே போற்றி
 வெண்மதியங் கண்ணி விகிர்தா போற்றி
துஞ்சிருளி லாட லுகந்தாய் போற்றி
 தூநீறு மெய்க்கணிந்த சோதீ போற்றி
செஞ்சடையாய் நின்பாதம் போற்றி போற்றி
 திருமூலட் டானனே போற்றி போற்றி. 5

சங்கரனே நின்பாதம் போற்றி போற்றி
 சதாசிவனே நின்பாதம் போற்றி போற்றி
பொங்கரவா நின்பாதம் போற்றி போற்றி
 புண்ணியனே நின்பாதம் போற்றி போற்றி
அங்கமலத் தயனோடு மாலுங் காணா
 அனலுருவா நின்பாதம் போற்றி போற்றி
செங்கமலத் திருப்பாதம் போற்றி போற்றி
 திருமூலட் டானனே போற்றி போற்றி. 6

வம்புலவு கொன்றைச் சடையாய் போற்றி
 வான்பிறையும் வாளரவும் வைத்தாய் போற்றி
கொம்பனைய நுண்ணிடையாள் கூறா போற்றி
 குரைகழலாற் கூற்றுதைத்த கோவே போற்றி
நம்புமவர்க் கரும்பொருளே போற்றி போற்றி
 நால்வேத மாறங்க மானாய் போற்றி
செம்பொனே மரகதமே மணியே போற்றி
 திருமூலட் டானனே போற்றி போற்றி. 7

உள்ளமா யுள்ளத்தே நின்றாய் போற்றி
உகப்பார் மனத்தென்றும் நீங்காய் போற்றி
வள்ளலே போற்றி மணாளா போற்றி
வானவர்கோன் தோள்துணித்த மைந்தா போற்றி
வெள்ளையே றேறும் விகிர்தா போற்றி
மேலோர்க்கு மேலோர்க்கும் மேலாய் போற்றி
தெள்ளுநீர் கங்கைச் சடையாய் போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 8

பூவார்ந்த சென்னிப் புனிதா போற்றி
புத்தேளிர் போற்றும் பொருளே போற்றி
தேவார்ந்த தேவர்க்கும் தேவே போற்றி
திருமா லுக் காழி யளித்தாய் போற்றி
சாவாமே காத்தென்னை யாண்டாய் போற்றி
சங்கொத்த நீற்றெஞ் சதுரா போற்றி
சேவார்ந்த வெல்கொடியாய் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 9

பிரமன்றன் சிரமரிந்த பெரியோய் போற்றி
பெண்ணுருவோ டாணுருவாய் நின்றாய் போற்றி
கரநான்கு முக்கண்ணு முடையாய் போற்றி
காதலிப்பார்க் காற்ற வெளியாய் போற்றி
அருமந்த தேவர்க் கரசே போற்றி
அன்றரக்க னைந்நான்கு தோளுந் தாளும்
சிரநெரித்த சேவடியாய் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—வன்மீகநாதர் (புற்றிடங்கொண்டநாதர்)
வீதிவிடங்கர் தேவி :—அல்லியங்கோதை

குறிப்பு :—திருவாரூரில் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்த இத்திருப்பதிகப் பாடல்கள் பத்திலும் மொத்தம் போற்றி என்னும் சொற்கள் 108 உள்ளன. வடமொழியில் நம : என்பதற்கு நேர் தமிழ்ச் சொல் போற்றியாகும். ஆன்மார்த்த பூஜாகாலத்தில் சிவபெருமானுக்குத் தமிழில் அர்ச்சனை மலர் தூவி வழிபடுதல் செய்ய விரும்பும் அன்பர்கள் இத்திருத்தாண்டகப் பாடல்களை ஓதி மலர் தூவலாம். இது வடமொழியில் சிவாஷ்டோத்தர சதம் செய்த பலனைத் தரும் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை.

தமிழில் பெருமானுக்கு அர்ச்சனை செய்ய வேண்டும் என்று பலர் தற்காலத்தில் எங்கும் விரும்புகிறார்கள். அவர்களுக்கு இது ஒரு நல்ல திருப்பதிகம். மேலும் இல்லத்தில் ஆன்மார்த்த பூசை

இல்லாத அன்பர்களும் இத்திருத்தாண்டகத்தை உள்ளன்புடன் உருகி ஓதினுல் இறைவனை யருச்சித்த பலனைப் பெறுவார்கள் என்பது திண்ணம்.

பொருள் வெளிப்படை—இன்றியமையாக் குறிப்புகள் மட்டும் தரப்பட்டுள்ளன.

1. கற்றவர்கள் - நல்லாசிரியர்கள் மூலம் ஞான நூல்கள் கற்றவர்கள். போற்றி - நம: என்னும் அருச்சனைக்குரிய சொல்லாக வணக்கம் என்ற பொருளைத் தந்தது. கனி - பயன். அற்றவர் - பற்றுகள் யாவும் விட்டவர். மருந்து - தேவாமிர்தம்.

2. ஈர் உரிவை - உரித்ததோல்.

3. ஏழ்பொழில் - ஏழு உலகங்கள்.

4. இயலும் - விளங்கும். மறி - மான் குட்டி. உன்னுதல் - சிந்தித்தல்.

5. துஞ்சிருள் - பிரபஞ்சம் யாவும் அடங்கும் பெரும் ஊழி.

6. சங்கரன் - தோஷமற்றதும், நித்யமானதுமான சுகத்தைச் செய்பவன். சதாசிவன் - உருவமும் அருவமுமாகிய அனுக்கிரக மூர்த்தி - சிவலிங்கத் திருஉருவம்.

7. அரும்பொருள் - கிடைத்தற்கரிய பொருள்.

8. உள்ளமாய் உள்ளத்தே நின்ருய் என்பது உயிர்க்குயிராய்க் கலந்து நிற்கும் நிலை. வானவர்கோன் தோள் துணித்தது - இது இந்திரன் முடிமேல் வளையெறிந்த திருவிளையாடலைக் குறிப்பது.

9. சாவாமே பேரின்பத்தையளித்தாய் என்பது குறிப்பு. சேவார்ந்த - எருது பொருந்திய.

10. பெண்ணுருவோடாணுருவாய் நின்ருய் என்பது அர்த்த நாரீச்வர ஸ்வரூபம். மற்றும் உலகில் பெண்ணுகவும் ஆணுகவும் நின்ற நிலை. ‘ஆணெலாம் இறைவன், பெண்ணெலாந் தேவி’ என்பது முன்னோர் வாக்கு.



 **சிவமயம்** 



# 17
# தீராப்பிணிகள் தீர்ந்துபோக



ஓம் யோகதக்ஷிணாமூர்த்தயே நம :

ஓம் வீணாதக்ஷிணாமூர்த்தயே நம :

## 1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

### திருநீலகண்டத் திருப்பதிகம்

(குளிர்சுரங்கள் நீங்க)

### கொடிமாடச் செங்குன்றூர்

*(திருச்செங்கோடு என்கிற பெயரில் வழங்கி வருகிறது. சேலம்—ஈரோடு மார்க்கத்தில் சங்கரிதுர்க்கம் நிலையத்திலிருந்து 7 மைல். சேலத்திலிருந்து நேர் பஸ் வசதியும் உண்டு. தேசப் படத்தில் 27 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)*

பண் - **வியாழக்குறிஞ்சி]** [1-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மஃதறிவீர்*
*உய்வினை நாடா திருப்பதும் உந்தமக் கூனமன்றே*
*கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும் நாமடியோம்*
**செய்வினை வந்தெமைத் தீண்டப்பெ றாதிரு நீலகண்டம்.** 1

*காவினை யிட்டுங் குளம்பல தொட்டும் களிமனத்தால்*
*ஏவினை யால்எயில் மூன்றெரித் தீரென் றிருபொழுதும்*
*பூவினைக் கொய்து மலரடி போற்றுதும் நாமடியோம்*
**தீவினை வந்தெமைத் தீண்டப்பெ றாதிரு நீலகண்டம்.** 2

*முலைத்தடம் மூழ்கிய போகங் களும்மற் றெவையும் எல்லாம்*
*விலைத்தலை யாவணங் கொண்டெமை யாண்ட விரிசடையீர்*
*இலைத்தலைச் சூலமுந் தண்டும் மழுவும் இவையுடையீர்*
**சிலைத்தெமைத் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம்.** 3

விண்ணுல காள்கின்ற விச்சா தரர்களும் வேதியரும்
புண்ணிய ரென்றிரு போதுந் தொழப்படும் புண்ணியரே
கண்ணிமை யாதன மூன்றுடை யீருங் கழலடைந்தோம்
**திண்ணிய தீவினை தீண்டப்பெ றுதிரு நீலகண்டம்.** 4

மற்றிணை யில்லா மலைதிரண் டன்னதிண் டோளுடையீர்
கிற்றெமை யாட்கொண்டு கேளாதொழிவதுந் தன்மைகொல்லோ
சொற்றுணை வாழ்க்கை துறந்துந் திருவடி யேயடைந்தோம்
**செற்றெமைத் தீவினை தீண்டப்பெ றுதிரு நீலகண்டம்.** 5

மறக்கு மனத்தினை மாற்றியெம் ஆவியை வற்புறுத்திப்
பிறப்பில் பெருமான் திருந்தடிக் கீழ்ப்பிழை யாதவண்ணம்
பறித்த மலர்கொடு வந்துமை யேத்தும் பணியடியோம்
**சிறப்பிலித் தீவினை தீண்டப்பெ றுதிரு நீலகண்டம்.** 6-7

கருவைக் கழித்திட்டு வாழ்க்கை கடிந்துங் கழலடிக்கே
உருகி மலர்கொடு வந்துமை யேத்துதும் நாமடியோம்
செருவில் அரக்கனைச் சீரி லடர்த்தருள் செய்தவரே
**திருவிலித் தீவினை தீண்டப்பெ றுதிரு நீலகண்டம்.** 8

நாற்ற மலர்மிசை நான்முகன் நாரணன் வாதுசெய்து
தோற்ற முடைய அடியும் முடியுந் தொடர்வரியீர்
தோற்றினுந் தோற்றுந் தொழுது வணங்குதும் நாமடியோம்
**சீற்றம தாம்வினை தீண்டப்பெ றுதிரு நீலகண்டம்.** 9

சாக்கியப் பட்டுஞ் சமணுரு வாகி யுடையொழிந்தும்
பாக்கிய மின்றி யிருதலைப் போகமும் பற்றும்விட்டார்
பூக்கமழ் கொன்றைப் புரிசடை யீரடி போற்றுகின்றோம்
**தீக்குழித் தீவினை தீண்டப்பெ றுதிரு நீலகண்டம்.** 10

பிறந்த பிறவியிற் பேணியெஞ் செல்வன் கழலடைவான்
இறந்த பிறவியுண் டாகில் இமையவர் கோனடிக்கண்
திறம்பயில் ஞானசம் பந்தன் செந்தமிழ் பத்தும்வல்லார்
நிறைந்த வுலகினில் வானவர் கோனொடுங் கூடுவரே. 11

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு**:—திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தற்பொழுது திருச்செங்கோடு என வழங்கும் கொடிமாடச் செங்குன்றூர் சென்று இறைவனை வணங்கி அங்கிருந்து புறப்பட்டு குடபுலத்துத் தலங்களைத் தரிசித்து திருநணா என்னும் தலம் இறைஞ்சி மீண்டும் கொடிமாடச் செங்குன்றூர் திரும்பி அங்கு உறையுங் காலத்தில் பனிக்காலம் வந்தணைய குளிர்சுரம் பரவி மக்களை வருத்தியது. திருஞானசம்பந்தருடன் உறையும் பரிசனங்களையும் அந்நாட்டில் அவர்கள் பயின்ற காரணத்தால் அக்குளிர் சுரம் பற்றியது.

அது கண்டு அந்நோய் தீர நமது ஞானசம்பந்தப் பிள்ளையார் "அவ்வினைக்கிவ்வினை" என்றெடுத்து "ஐயர் அமுது செய்தவெவ் விடம் முன் தடுத்தெம்மிடர் நீக்கிய வெற்றியினால் எவ்விடத்தும் அடியார் இடர் காப்பது நீலகண்டம்" என்றே பதிகம் பாடியருளினார். அப்பதிகத்தினில் திருநீலகண்டம் என்ற குறிப்பினால் ஆணை நிகழ அதன் காரணமாக அடியார்க்குமன்றி அந்நாடு முழுவதுமே குளிர்சுரம் நீங்கி நலம் பெற்றது. இன்றும் இத்திருப் பதிகத்தை நாள்தோறும் நியமமாகப் பாராயணம் செய்தால் சுரம் முதலிய கொடிய நோய்கள் பலவும் நீங்கப் பெறுதல் ஆன்றோர்கள் அனுபவத்தில் கண்ட உண்மை.

பொழிப்புரை :

1. முற் பிறவிகளில் நாம் செய்த வினைகளுக்கு ஏற்ப, இப்பிறவியில் நமக்கு இன்ப துன்பங்களாகிய வினைப்பயன்கள் ஆகின்றன என்று கூறுகின்ற அம்மொழியை மட்டும் அறிந்து கொண்டிருக்கின்றீர்கள். ஆனால் அவ்வினையினின்றும் உய்யும் வழியை நாடாதிருப்பது உங்களுக்குக் குற்றம் அல்லவா? அடியார்களாகிய நாம் கையாற் செய்யப்படும் சிவத்தொண்டுகளைச் செய்து எம்பெருமானின் திருவடிகளை வணங்குவோம். அப்படிச் செய்தால் முற்பிறவிகளில் செய்யப்பட்ட தீவினைகள் வந்து நம்மைத் தீண்டப்பெறா. இதற்குத் திருநீலகண்டத்தின்மீது ஆணை.

2. சிவார்ப்பணமாக நந்தவனங்கள் அமைத்தும், குளங்கள் பலவற்றைத் தோண்டியும், மற்றும் எம்பெருமானை அன்பு கனிகின்ற மனத்தால் அம்பினையெய்து மும்மதில்களையும் எரித்த பிரானே என்று இரவு, பகல் ஆகிய இருகாலந்தும் துதித்து பூக்களைக் கொய்து பெருமானின் மலரடிகளில் சாத்தி அடியவர்களாகிய நாம் வணங்குவோம். அவ்விதம் செய்வதால் தீவினைகள் வந்து தீண்டமாட்டா. இதற்குத் திருநீலகண்டத்தின்மீது ஆணை.

3. சிற்றின்ப நுகர்ச்சிகளும் மற்றும் அது போன்ற எல்லாமும் எம்மை மயக்கித் துன்புறுத்தாவாறு எம்மீது இரக்கம் கொண்டு எம்மை ஆளாகக் கொண்டருளிய விரிந்த சடைப்பெருமானே! இலையைப்போன்ற நுனியுடைய சூலமும், தண்டாயுதமும், மழுவும் ஆகிய படைக்கலங்களை உடையவரே! ஆரவாரம் செய்துகொண்டு வரும் தீவினைகள் எம்மைத் தீண்டமாட்டா. இதற்குத் திருநீலகண்டத்தின்மீது ஆணை.

4. விண்ணுலகத்தை ஆள்கின்ற வித்தியாதரர்களாலும், வேதத்தில் வல்லவர்களாலும் "புண்ணியப் பயனாக அடையப்படும் பெருமான்" என்று இரு காலங்களிலும் தொழுது வணங்கப்படுகின்ற புண்ணியமூர்த்தியே, இமையாக் கண்கள் மூன்று உடைய

வரே! உங்களுடைய திருவடிகளை யாம் சரண் அடைந்தோம். ஆகவே வலிமை மிக்க தீவினைகள் எங்களை வந்து தீண்டமாட்டா. இதற்குத் திருநீலகண்டத்தின்மீது ஆணை.

5. வேறோர் ஒப்புவமையில்லாத மலைபோன்ற திரண்ட வலிய தோள்களையுடையவரே! தாங்கள் எங்களை ஆளாக்கிக்கொண்டு பின் எங்கள் குறைகளைக் கேளாமல் போவதும் தங்கட்குப் பெருமையாகுமோ? சொல்லப்படுகிற துணைகள் பல உடைய இவ்வுலக வாழ்க்கையை நீத்து உமது திருவடிகளையே துணையாகக் கொண்டு சரணடைந்தோம். வருத்தம் உண்டாக்கி தீவினைகள் எம்மைத் தீண்டப் பெறா. இதற்குத் திருநீலகண்டத்தின்மீது ஆணை.

6. மறதியுடைய மனத்தின் தன்மையை மாற்றி எம் உயிரை வற்புறுத்திப் பிறப்பிலியாகிய பெருமானே! உமது அழகிய திருவடிகளின் கீழ்ப் பிழை ஏற்படாதவண்ணம் அப்போதே பறித்த மலர்களைக் கொடு வந்து உம்மை வணங்கிப் பணியும் அடியார்கள் நாங்கள். எனவே சிறப்பில்லாத் தன்மையவான இத்தீவினைகள் எங்களை வந்து அணுகமாட்டா. இதற்குத் திருநீலகண்டத்தின் மீது ஆணை.

8. உலகப் பொருள்களைக் கழித்து, வாழ்க்கையை வெறுத்து, உம்முடைய கழல் அணிந்த திருவடிகளுக்கே மனம் உருகி மலர்களைக் கொண்டு வந்து அடியார்களாகிய நாங்கள் உம்மை வணங்குகின்றோம். இராவணனை மிதித்து அடக்கிப் பின் அருள் செய்த பெருமானே! திருவற்ற இவ்விழிந்த தீவினைகள் எம்மை வந்து தீண்டப் பெறா. இதற்குத் திருநீலகண்டத்தின்மீது ஆணை.

9. பிரமதேவனும் திருமாலும் தாமே பெரியோம் என்று ஒருவர்க்கொருவர் வாது செய்து அழகுடைய உமது திருமுடியையும் திருவடியையும் தொடர்தற்கு அரியவராகத் திகழ்ந்தவரே! வினைகள் தோற்றுவிக்கும் காரணமாக நாங்கள் பிறக்க நேரிட்டாலும் நேரும். அடியோங்களாகிய நாங்கள் உம்மைத் தொழுது வணங்குகின்றோம். சீற்றம் மிக்க இத்தீவினைகள் எம்மைத் தீண்டமாட்டா. இதற்குத் திருநீலகண்டத்தின்மீது ஆணை.

10. புத்த மதத்தில் வீழ்ந்தும், சமணர்களாயும், உடைகளை விலக்கியும் நல்வினை இல்லாது இம்மை மறுமை ஆகிய இரு போகமும் அவைகளைப் பெறுதற்குரிய நல்ல துணையையும் சில மக்கள் இழந்துவிட்டார்கள். மணம் வீசுகின்ற கொன்றை மலர்கள் சூடிய சடைமுடியையுடையவரே! நாங்கள் உமது திருவடியைத் துதிக்கின்றோம். எனவே நரகத்திற் கேதுவாகிய தீவினைகள் எம்மை வந்து தீண்டப் பெறா. இதற்குத் திருநீலகண்டத்தின்மீது ஆணை.

11. மானிடராய்ப் பிறந்த இப்பிறவியிலேயே வழிபட்டு நமது செல்வனுகிய சிவபிரானின் திருவடிகளையடைதற்கும், அன்றி அளவில்லாத பிறவிகள் உண்டாகுமெனினும் அவைகளிலும் நமது பெருமானையே வணங்கும் பேறு பெறவும், தேவாதி தேவனுகிய நமது பெருமானின் திருவடிகளில் உறுதியுடன் பயிலும் திருஞான சம்பந்தன் பாடிய செம்மை நெறி சேர்க்கும் தமிழ்ப் பாடல்கள் பத்தும் வல்லவர்கள் இன்பம் நிறைந்த தேவலோகத்தில் இந்திர னுடன் சமமாக இருப்பார்கள்.

## 2. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர்

**(அபஸ்மாரம் (முயலகன்)—காக்கைவலி, பாரிச வாயு நீங்க)**

### திருப்பாச்சிலாச்சிராமம்

*(தற்பொழுது திருவாசி என்று வழங்கப்படுகிறது. திருச்சி விழுப் புரம் இருப்புப்பாதையில் பிட்சாண்டார் கோயில் நிலையத்தினின்றும் மேற்கில் 3 மைலில் உள்ளது. தேசப்படத்தில் 28 என்கிற எண்ணுல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)*

பண் - தக்கராகம்] [1-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

துணிவளர்திங்க டுளங்கிவிளங்கச் சுடர்ச்சடை சுற்றிமுடித்துப்
பணிவளர் கொள்கையர் பாரிடஞ்சூழ ஆரிடமும் பலிதேர்வர்
அணிவளர்கோல மெலாஞ்செய்துபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
மணிவளர்கண்டரோ மங்கையைவாட மயல்செய்வதோ இவர்
[மாண்பே. 1

கலைபுனைமானுரி தோலுடையாடை கனல்சுட ராலிவர் கண்கள்
தலையணிசென்னியர் தாரணிமார்பர் தம்மடிகள் ளிவரென்ன
அலைபுனல்பூம்பொழில் சூழ்ந்தமர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
இலைபுனைவேலரோ வேழையைவாட இடர்செய்வதோ இவரீடே. 2

வெஞ்சுடராடுவர் துஞ்சிருண்மாலை வேண்டுவர்பூண்பது
[வெண்ணுல்
நஞ்சடைகண்டர் நெஞ்சிடமாக நண்ணுவர் நம்மைநயந்து
மஞ்சடைமாளிகை சூழ்தருபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
செஞ்சுடர்வண்ணரோ பைந்தொடிவாடச் சிதைசெய்வதோ
[இவர்சீரே. 3

கனமலர்கொன்றை அலங்கல் இலங்கக் கனல்தருதூமதிக் கண்ணி
புனமலர்மாலை யணிந்தழகாய புனிதர்கொ லாமிவரென்ன

வனமலிவண்பொழில் சூழ்தருபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
மனமலிமைந்தரோ மங்கையைவாட மயல்செய்வதோ
இவர் மாண்பே. 4

மாந்தர்தம்பால்நறு நெய்மகிழ்ந்தாடி வளர்சடை மேற்
[புனல்வைத்து
மோந்தைமுழாக்குழல் தாளமொர்வீணை முதிரவோர் வாய்மூரிபாடி
ஆந்தைவிழிச்சிறு பூதத்தர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
சாந்தணிமார்பரோ தையலைவாடச் சதுர்செய்வதோ இவர்சார்பே. 5

நீறுமெய்பூசி நிறைசடைதாழ நெற்றிக்கண் ணுலுற்றுநோக்கி
ஆறதுசூடி ஆடரவாட்டி யைவிரற் கோவணஆடை
பாறருமேனியர் பூதத்தர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
ஏறதுஏறியர் ஏழையைவாட இடர்செய்வதோ இவர்ஈடே. 6

பொங்கிளநாகமொ ரேகவடத்தோ டாமைவெண் ணூல்புனை
[கொன்றை
கொங்கிளமாலை புனைந்தழகாய குழகர்கொ லாமிவரென்ன
அங்கிளமங்கையோர் பங்கினர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
சங்கொளிவண்ணரோ தாழ்குழல்வாடச் சதிர்செய்வதோ
[இவர்சார்வே. 7

ஏவலத்தால்விச யற்கருள்செய்து இராவண னையீடழித்து
மூவரிலும்முத லாய்நடுவாய மூர்த்தியை யன்றிமொழியாள்
யாவர்களும்பர வும்மெழில்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
தேவர்கள்தேவரோ சேயிழைவாடச் சிதைசெய்வதோ
[இவர்சேர்வே. 8

மேலதுநான்முக னெய்தியதில்லை கீழது சேவடிதன்னை
நீலதுவண்ணனு மெய்தியதில்லை யெனஇவர் நின்றதுமல்லால்
ஆலதுமாமதி தோய்பொழிற்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
பாலதுவண்ணரோ பைந்தொடிவாடப் பழிசெய்வதோ
[இவர்பண்பே. 9

நாணொடுகூடிய சாயினரேனும் நகுவர் அவரிருபோதும்
ஊணொடுகூடிய உட்குநகையா லுரைக ளவைகொளவேண்டா
ஆணொடுபெண்வடி வாயினர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
பூணெடுமார்பரோ பூங்கொடிவாடப் புனைசெய்வதோ இவர்
[பொற்பே. 10

அகமலிஅன்பொடு தொண்டர்வணங்க ஆச்சிராமத் துறைகின்ற
புகைமலிமாலை புனைந்தழகாய புனிதர்கொ லாமிவரென்ன
நகைமலிதண்பொழில் சூழ்தருகாழி நற்றமிழ் ஞானசம்பந்தன்
**தகைமலிதண்டமிழ் கொண்டிவையேத்தச் சாரகி**
**[லாவினைதானே. 11**

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**மணிகண்டீசர்**
**மாற்றறிவரதர்**
தேவி :—**பாலசுந்தரி**

**பதிக வரலாறு** :—திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருமாந்துறை முதலிய தலங்களைத் தொழுதுகொண்டு மழநாட்டுத் தலமாகிய திருப்பாச்சிலாச்சிராமத்தை நெருங்கி வந்தார்கள். அந்நாட்டு மன்னன் கொல்லிமழவன் என்பவன். அவன் அருமையாகப் பெற்றெடுத்த மகள் மிக்க அழகு வாய்ந்தவளாக இருந்தும் 'முயலகன்' என்னும் கொடிய நோயினால் பீடிக்கப்பட்டு வருந்தினாள். நோய் பற்றியபொழுது வேறு எவ்வகையாலும் தீர்வு காணாது சிவபெருமானின் திருவடியையே பற்றுக் கோடாகக் கொண்டு வாழும் தன்மையினன் ஆகையால், உணர்வழிந்து கிடக்கும் தன் புதல்வியை இறைவன் கோயிலில் திருமுன்பு இட்டு வைத்தான். அவ்வமயம் திருஞானசம்பந்தப் பெருமான் அப்பதியை நோக்கிவரும் செய்தியைச் சின்னங்களின் ஒலியால் கேட்டு மிகவும் மகிழ்ந்து உடனே நகரைத் தக்கவாறு அலங்கரிக்கச் செய்து தானும் நாயனார் எதிர் சென்று அணைந்தான். "பிள்ளையார் எழுந்தருளப் பெற்றேன்" என்று ஆனந்தம் பெருகி காதல் வெள்ள நீர் கண்ணினின்றும் பொழியத் திருமுத்தின் சிவிகையின் முன் வீழ்ந்தபோது திருஞானசம்பந்த வள்ளலார் 'எழுக' எனத் திருவாய்மலர்ந்தருளிப் பின் அவனுடன் அப்பதியணைந்து இறைவர் திருக்கோயிலுக்குச் சென்றார். அங்கு இறைவன் திருமுன்பு உணர்வற்றுக் கிடக்கும் காரிகையைக் கண்டு 'இது என்ன' என்று வினவ மழவனும் தன் பெண்ணுக்கு உற்றதைப் பிள்ளையார்க்கு உரைத்தவளவில், பெருமானார் மனமிரங்கி அந்நோய் தீரும் வண்ணம் அப்பாச்சிலாச்சிராமம் மேய செஞ்சடைப் பரம்பொருளை 'மணிவளர் கண்டரோ மங்கையை வாட மயல் செய்வதோ இவர் மாண்பு" என்று தணிக்க முடியாத பிணியினைத் தவிர்க்கும் தண்டமிழ்ப் பதிகம் பாடியருளினார். பதிகத்தின் கடைக்காப்பு பாடி முடித்தஉடன் மழவன் மகள். தனக்குற்ற பிணியினின்றும் விடுபட்டு 'கது'மென எழுந்து தந்தையின்பால் சார்ந்தாள். பெருமகிழ்ச்சியடைந்த மழவன் தன் மகளொடும் திருஞானசம்பந்தப் பெருமானாரை வணங்க, அவர் கங்கை தரித்த பெருமானை ஒன்றிய சிந்தையுடன் பணிந்தார். திருத்தொண்டரெல்லாம் ஆர்த்தார்கள். "தணிவில் பிணி தவிர்க்கும் தண்டமிழ்" எனத் தெய்வச் சேக்கிழார் பெருமானால் பன்னிரண்டாம் திருமுறை

யாகிய பெரிய புராணத்தில் பேசப்பட்டுள்ளதே இப்பதிகப் பலனை நன்கு விளக்குகிறது. முயலகன் என்பது மிகக் கொடிய நோய். அபஸ்மாரம் என்றும் வழங்கப்படுவது. இதனல் பீடிக்கப் பெற்றோர் உணர்வின்றிக் கிடப்பர். காக்கைவலி போன்ற வலிப்புகளாலும் பிறவாற்ருலும் நலிவு அடைவர். நடராஜப் பெருமானல் காலின்கீழ் அழுத்தி வைக்கப்பட்டிருக்கும் அரக்கன் இம்முயலகனேயாகும். இத்தலத்தில் நடராஜர் திருவடியின் கீழ் இருந்த முயலகனும் மறைந்துபோய் அதற்குப் பதில் ஒரு பெரும் பாம்பு உளது. இப்பதிகத்தினை உள்ளன்புடன் ஓதுவோர் பெறும் பயன் யாது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ ?

பொழிப்புரை :

1. பிறைச்சந்திரன் தலையில் விளங்க, ஒளி வீசுஞ் சடையினைச் சுற்றி முடித்து பாம்புகள் வளைந்து கிடக்கும் திருக்கரங்களையுடையவர். பூதகணங்கள் சூழ எல்லாரிடமும் பலி ஏற்பர். அழகிய வண்ணங் கோலங்கொண்டு திருப்பாச்சிலாச்சிராமத்தில் எழுந்தருளியிருக்கும் மணிகண்டப் பெருமானே இம்மங்கையை வாடும்படி மயல் செய்வது. இதுவோ இவர் பெருமை.

2. மான்தோல் மேலாடையாகவும், மற்றும் புலி, யானைத் தோல் உடையாகவும் உடையவர். சூரியன், சந்திரன், அக்னி ஆகியவர்களே இவர்க்குக் கண்கள். தலையினை அணியாகக் கொண்ட சிரத்தையுடையவர். மாலையணிந்த மார்புடையவர். தம்மடிகள் இவரேயென்று அலை வீசும் புனலும் பூம்பொழில்களும் சூழ்ந்த திருப்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற மூவிலைச் சூலத்தினையுடைய பெருமானே இம்மங்கையை வாட இடர் செய்வது. இதுவோ இவருடைய பெருமை.

3. உலகெலாந் துஞ்சும் பிரளய காலத்தில் கையில் அனலேந்தி யாடுவர். மாலை வேண்டுவர், அவர் பூண்பது பூணூல். நஞ்சு அடைந்த திருக்கண்டத்தையுடையவர். அடியாராகிய நமது நெஞ்சையே தனக்குரிய இருப்பிடமாக நம்மை விரும்பி வந்து நண்ணுவர். மேகங்கள் தவழ்கின்ற உயர்ந்த மாளிகைகள் சூழ்ந்த திருப்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற இந்த செம்மையான சுடர் போன்ற வண்ணமுடைய பெருமானே இப்பெண்ணை வாடும்படி வருத்துவது. இதுவோ இவர் புகழ்.

4. கொன்றை மாலை விளங்க பிறைச்சந்திரனை யணிந்து மேலும் நந்தவனங்களில் மலரும் மலர்மாலைகளும் அணிந்து அழகாக விளங்கும் புனிதர் இவர் என்று சொல்லும்படி அழகு மிக்க பொழில்கள் சூழ்ந்த திருப்பாச்சிலாச்சிராமத்து எழுந்தருளியிருக்கும் இரக்கம் மிக்க பெருமானே இம்மங்கையை வாட மயல் செய்வது. இதுவோ இவர் பெருமை.

5. அன்பர்களால் அபிடேகம் செய்யப்படும் நெய், பால் முதலியவற்றில் விருப்பமுடன் அபிடேகங் கொண்டு, கங்கையைச் சடைமேற் வைத்து மொந்தை, முழவம், குழல், தாளம், வீணை இவைகள் முழங்கக் கீதங்கள் பாடி ஆந்தை விழியுடைய பூதங்களை யுடைய பெருமானாகிய திருப்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற திருநீற்றுச் சாந்தணிந்த மார்பையுடைய பெருமானே இப் பெண்ணை வாடும்படி சாமர்த்தியஞ் செய்வது. இதுவோ இவருடைய புகழ்.

6. திருமேனியில் வெண்ணீறு பூசி, சடைகள் தாழ, காமன் எரிந்து போகும்படி நெற்றிக்கண்ணால் விழித்துப் பார்த்து, கங்கையைத் தலையில் சூடி. ஆடும் பாம்பினை ஆட்டி, ஐந்து விரற் கடையளவு கோவண உடையைத் திருமேனி சாத்திய பூதகணநாதரான திருப்பாச்சிலாச்சிராமத்து எழுந்தருளியிருக்கும் எருது ஏறும் பெருமானே இவ்வபலையான பெண்மணியை வாடும்படித் துன்பஞ் செய்வது இதுவோ இவருடைய பெருமை.

7. நாகம், ஆமையோடு ஒற்றையாடை பூணூல், கொன்றை மாலை முதலியவற்றைத் தரித்த அழகு மிக்க இளமையுடையவர் இவர் என்று சொல்லும்படி ஒரு பக்கத்தில் இளமங்கையினை உடையவரான திருப்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற சங்கினை யொத்த ஒளி வீசும் மேனியுடைய பெருமானே இப்பெண் வாடும் படி சதிர் செய்வது. இதுவோ இவருடைய தன்மை.

8. அம்பில் வலிமையால் அருச்சுனனுக்கு அருள் செய்து, இராவணனை வலிகுறையச் செய்து, மும்மூர்த்திகளுள்ளும் முதலும் நடுவுமாய் நின்ற மூர்த்தியாய சிவபெருமானைத் தவிர வேறு ஒன்றையும் பேசாதவள் இப்பெண். எல்லாரும் வணங்கிப் போற்றுகின்ற அழகு மிக்க திருப்பாச்சிலாச்சிராமத்துக் கோயில் கொண்டுள்ள தேவர்கட்கெல்லாம் தேவனாகிய பெருமானே இப் பெண் வாடும்படி துன்பஞ் செய்வது? இதுவோ இவரிடம் சேர்தலால் பெறும் பயன்.

9. வானத்திற் பறந்து திருமுடியைப் பிரமதேவன் சென்று கண்டதில்லை; பாதாளத்தில் சென்று திருமாலும் சேவடியைக் கண்டதில்லை என்னும்படியாக ஓங்கி நின்றதுமல்லாமல் சந்திரன் தவழ்கின்ற பொழில்கள் நிறைந்த திருப்பாச்சிலாச்சிராமத்தில் உறைகின்ற பால்போன்ற வண்ணமுடைய பெருமானே இப் பெண்ணை வாடும்படி மயங்கச் செய்வது? இதுவோ இவருடைய பெருமைக் குணம்.

10. தாம் நாணமுறவும் பிறயாவும் இழந்தவர்களாயினும் பிறரைப் பரிகசிப்பர். இருபோதும் உணவு கொள்கின்ற இவருடைய அஞ்சத்தக்க நகையால் அவருடைய உரைகளை யேற்றுக் கொள்ளவேண்டா. ஆணும் பெண்ணுமாய் வடிவுகொண்ட

திருப்பாச்சிலாச்சிராமத்து உறையும் பெருமானே இப்பூங்கொடி போன்ற பெண் வாடும்படிச் செய்வது. இதுவோ இவருடைய பெருந்தன்மை.

11. நெஞ்சில் நிறைந்த அன்போடு தொண்டர்கள் விளங்க திருப்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற மணம் பொருந்திய மாலைகள் தரித்து அழகாய் விளங்கும் புனிதர் இவராமென்னும்படி பொழில்கள் சூழ்ந்த சீகாழியிற்றோன்றிய நன்மை பயக்கும் தமிழ் பாடும் திருஞானசம்பந்தன் பாடிய தகுதி வாய்ந்த தண்டமிழாகிய இவைகளைக் கொண்டு இறைவனைத் துதிக்க வினைகள் சாராவாம்.

# 3. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

## திருநீற்றுத் திருப்பதிகம்

(வெப்பு நோய்—உஷ்ண ஜ்வரம் நீங்க)

## திருஆலவாய்

பண் - காந்தாரம்] [2-ஆம் திருமுறை

(இது மதுரை என்னும் பெயரில் மிகப் பிரசித்தமாய் வழங்கப்படும் தலம். மதுரை சந்திப்பு இரயில் நிலையத்திலிருந்து ஆலயம் சுமார் 1 மைல். தேசப்படத்தில் 29 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

திருச்சிற்றம்பலம்

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருஆல வாயான் திருநீறே. 1

வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு உண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 2

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 3

காண இனியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி அணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 4

பூச இனியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச இனியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருஆல வாயான் திருநீறே. 5

அருத்தம தாவது நீறு அவலம் அறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வானம் அளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 6

எயிலது அட்டது நீறு இருமைக்கும் உள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தால வாயான் திருநீறே. 7

இராவணன் மேலது நீறு எண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவம் அறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவ மாவது நீறு
அராவணங் குந்திரு மேனி ஆல வாயான் திருநீறே. 8

மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல உடம்பிடர் தீர்க்கும் இன்பந் தருவது நீறு
ஆலம துண்ட மிடற்றெம் மால வாயான் திருநீறே. 9

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங் கூடக்
கண்டிகைப் பிப்பது நீறு கருத இனியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளார் ஏத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்தும் ஆல வாயான் திருநீறே. 10

ஆற்றல் அடல்விடை யேறும் ஆலவா யான்திரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்ன னுடலுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**சொக்கலிங்கப்பெருமான்**
தேவி :—**அங்கயற்கண்ணி அம்மை (மீனாட்சி)**

**பதிகக் குறிப்பு** :—தாம் தொண்டருடன் மதுரையில் தங்கிய திருமடத்தில் சமணர் இட்ட தீயை "பையவே சென்று பாண்டியற் காகவே" எனத் திருஞானசம்பந்தர் பணித்திடவும் அத்தீ அரசனைப் பற்றிச்சென்று வெப்பு நோயாய் வருத்தியது. பின்னர் அதனை நீக்கச் சமணர்களால் இயலாது போகத் திருஞானசம்பந்தர் இத்திருப்பதிகம் பாடி பாண்டியன் உடலில் திருநீறு பூசி அப்பிணியை நீக்கியருளினார் என்பது பிரசித்தம்.

**பொழிப்புரை** :

1. மந்திரம் போல நினைத்ததைக் கொடுப்பது திருநீறு. தேவ லோகத்திருப்பவர்களும் பூசுவது திருநீறு. அழகு தருவதும் திரு நீறே. வேத ஆகமங்களில் சிறப்பாகப் பேசப்படுவது திருநீறு. சைவ சமயத்தில் இன்றியமையாததாய் உள்ளது திருநீறு. இத்தகைய சிறப்புக்கள் வாய்ந்தது சிவந்த பவளம் போன்ற உதட்டினையுடைய உமாதேவியை இடப் பாகத்தில் உடையவனான திரு ஆலவாய்ப் பெருமானின் திருநீறேயாகும்.

2. வேதத்தில் சிறப்பாகப் போற்றப்படுவது. கொடிய துயரைத் தீர்ப்பது. உண்மை ஞானமாகிய சிவஞானம் தருவது. அஞ்ஞானத்தை நீக்குவது. பிறர்க்கு எடுத்து ஓதக்கூடிய தகுதியுடையது. நித்தியமான பொருளாக என்றும் அழியாத பெருமையுடையது. இத்தகைய சிறப்புக்கள் வாய்ந்தது குளிர்ச்சி பொருந்திய நீர்வளம் மிகுந்த வயல்கள் சூழப்பட்ட திருவாலவாய்ப் பெருமானின் திருநீறேயாகும்.

3. மோட்சத்தையளிக்கவல்லது. முனிவர்கள் அணிவது. எப்போதும் அழியாத பொருளாய் இருப்பது. தக்கவர்கள் (தகைமைக் குணம் உடையோர்) புகழ்ந்து பேசுவது. சிவபக்தியைத் தருவது. வாழ்த்த மனதுக்கு இன்பத்தைக் கொடுப்பது. அணிமாதி அட்டமா சித்திகளையும் தரவல்லது. இத்தகைய சிறப்புக்கள் வாய்ந்தது திருஆலவாய்ப் பெருமானின் திருநீறேயாகும்.

4. பார்க்க அழகைக் கொடுப்பது. அணிந்துகொண்டவர்க்கு பொலிவு தருவது. விருப்பத்துடன் தன்னை அணிந்துகொள்பவர்க்கு எல்லாம் எல்லாப் பெருமைகளையும் அளிப்பது. மரணத்தைத் தவிர்ப்பது. நல்ல அறிவைக் கொடுப்பது. உயர்வு கொடுப்பது. இத்தகைய பெருமை வாய்ந்தது திருஆலவாய்ப் பெருமானின் திருநீறேயாகும்.

5. பூசுவதற்கு இனிமையானது. புண்ணியத்தை வளர்ப்பது. (பூசுவதே புண்ணியமாக உள்ளது). பெருமையை எடுத்துப் பேசுவோர்க்கெல்லாம் மனதில் மகிழ்ச்சியை உண்டாக்குவது. தவத்தில் மேம்பட்டவருடைய பற்றுகளையெல்லாம் அறவே

ஒழித்து வீடு பேறளிப்பது. அழகு கொடுப்பது. எல்லாத் தேசத் தாராலும் புகழ்ந்து பேசப்படுவது திருஆலவாய்ப் பெருமான் திருநீறேயாகும்.

6. உண்மையான செல்வமாக அமைவது. அணிந்துகொண் டோர் துன்பத்தைப் போக்குவது. வருத்தங்களைத் தணிப்பது. சுவர்க்க இன்பத்தைக் கொடுப்பது. (வானம்-சிவலோகம் எனவும் பொருள்படும்) எல்லாரும் ஒப்புக்கொள்ளத் தக்கதாய்ப் பொருத்த மாக உள்ளது. புண்ணியவான்களால் பூசப்படுவது. இத்தகைய பெருமைகள் உள்ளது, மாளிகைகள் நிறைந்த திருஆலவாய்ப் பெருமானின் திருநீறேயாகும்.

7. மும்மதில்களையும் எரித்தது. இம்மை மறுமை ஆகிய இரண்டுக்கும் உறுதி பயப்பது. விடாது பூசுவதற்குப் பயிலப்படு வது. சகல பாக்கியங்களாகவும் உள்ளது. நித்திரை மிகுதியாய் தபோகுணனும் இல்லாமல் காப்பது. சுத்த நிர்க்குணப் பொருளாய் விளங்குவது. இத்தகைய சிறப்புக்கள் பொருந்தியது, கூர்மை யைப் பொலிவிக்கின்ற சூலாயுதத்தையுடைய திருஆலவாய்ப் பெருமானின் திருநீறேயாகும்.

8. இராவணனாலும் அணிந்துகொள்ளப்பட்டது. எல்லோரா லும் எண்ணிப் பார்க்கும் பெருமையுடையது. பராசக்தியின் ஸ்வ ரூபமானது. பாவத்தையறுப்பது. மெய்ப்பொருளாக விளங்கு வது, இத்தகைய பெருமைகள் பொருந்தியது பாம்பு வளைந்து நின்று அணியாய் இருக்கும் திருவாலவாய்ப் பெருமானின் திரு நீறேயாகும்.

9. பிரம விட்டுணுக்களும் அறியாத பெருமையுள்ளது. தேவர்களுடைய உடம்பிலும் பூசப்பட்டது. உடற் பிணிகளை யெல்லாம் தீர்ப்பது. விடமுண்ட கண்டனாகிய எம் திருவாலவாய்ப் பெருமானின் திருநீறேயாகும்.

10. சமணர்களும் புத்தர்களும் கூடி நிற்க அவர்கள் கண்களைத் திகைக்கச் செய்யும் பேரொளியுடையது. தியானம் செய்ய மிக்க எளியது. எண்திசைகளிலும் விளங்கும் சிவமாகிய மெய்ப்பொருளைச் சார விரும்புபவர் போற்றும் தன்மையது. எல்லா அண்டங்களிலும் வாழ்பவர்கள் பணிந்து ஏத்தும் திரு ஆலவாய்ப் பெருமானின் திருநீறேயாகும்.

11. வலிமை மிக்க போர்த்திறன் மிக்க இடப வாகனமேறும் திருஆலவாய்ப் பெருமானின் திருநீற்றைப் போற்றி சீகாழியில் நிலவும் பூசுரனாகிய திருஞானசம்பந்தன், அதன் பெருமையைத் தெளிவாக்கி தென்னவனாகிய பாண்டியனின் தீய பிணிகள் தீரும் படி ஓதிய பத்து பாடல்களும் கற்று வல்லவர்கள் சகலமான நன்மையையும் பெற்றவர்கள் ஆவார்கள்.



அப்பர் சுவாமிகள்
திருஅதிகை

# 4. திருநாவுக்கரசு நாயனர்

## திருவதிகை வீரட்டானம்

### (வயிற்று நோய், குடர்நோய் நீங்க)

பண் - கொல்லி] [4-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*கூற்ருயினவாறு விலக் ககிலீர்*
*கொடுமை பலசெய் தனநா னறியேன்*
*ஏற்ரு யடிக்கே யிரவும் பகலும்*
*பிரியா துவணங் குவனெப் பொழுதும்*
*தோற்ரு தென்வயிற் றினகம் படியே*
*குடரோ டுதுடக் கிமுடக் கியிட*
*ஆற்றே னடியே னதிகைக் கெடில*
*வீரட் டானத் துறையம் மானே.* 1

*நெஞ்சம் முமக்கே யிடமா கவைத்தேன்*
*நினையா தொருபோ துமிருந் தறியேன்*
*வஞ்சம் மிதுவொப் பதுகண் டறியேன்*
*வயிற்ரே டுதுடக் கிமுடக் கியிட*
*நஞ்சா கிவந்தென் னைநலி வதனை*
*நணுகா மற்றுரந் துகரந் துமிடீர்*
*அஞ்சே லுமென்னீ ரதிகைக் கெடில*
*வீரட் டானத் துறையம் மானே.* 2

*பணிந்தா ரனபா வங்கள்பாற் றவல்லீர்*
*படுவெண் டலையிற் பலிகொண் டுழல்வீர்*
*துணிந்தே யுமக்காட் செய்துவா ழலுற்ருற்*
*சுடுகின் றதுசூ லைதவிர்த் தருளீர்*
*பிணிந்தார் பொடிகொண் டுமெய்பூ சவல்லீர்*
*பெற்றமேற் றுகந்தீர் சுற்றும்வெண் டலைகொண்*
*டணிந்தீ ரடிகே ளதிகைக் கெடில*
*வீரட் டானத் துறையம் மானே.* 3

*முன்னம் மடியே னறியா மையினன்*
*முனிந்தென் னைநலிந் துமுடக் கியிடப்*
*பின்னை யடியே னுமக்கா ளும்பட்டேன்*
*சுடுகின் றதுசூ லைதவிர்த் தருளீர்*

தன்னை யடைந்தார் வினைதீர்ப் பதன்றே
    தலையா யவர்தங் கடனு வதுதான்
அன்ன நடையா ரதிகைக் கெடில
    வீரட் டானத் துறையம் மானே. 4

காத்தாள் பவர்கா வலிகழ்ந் தமையாற்
    கரைநின் றவர்கண் டுகொளென் றுசொல்லி
நீத்தா யகயம் புகநூக் கியிட
    நிலைக்கொள் ளும்வழித் துறையொன் றறியேன்
வார்த்தை யிதுவொப் பதுகேட் டறியேன்
    வயிற்றோ டுதுடக் கிமுடக் கியிட
ஆர்த்தார் புனலா ரதிகைக் கெடில
    வீரட் டானத் துறையம் மானே. 5

சலம்பூ வொடுதூ பமறந் தறியேன்
    தமிழோ டிசைபா டல்மறந் தறியேன்
நலந்தீங் கிலுமுன் னைமறந் தறியேன்
    உன்னு மமென்னு வின்மறந் தறியேன்
உலந்தார் தலையிற் பலிகொண் டுழல்வா
    யுடலுள் ளுறுசூ லைதவிர்த் தருளாய்
அலந்தே னடியே னதிகைக் கெடில
    வீரட் டானத் துறையம் மானே. 6

உயர்ந்தேன் மனைவாழ்க் கையுமொண் பொருளு
    மொருவர் தலைகா வலிலா மையினல்
வயந்தே யுமக்காட் செய்துவா ழலுற்றால்
    வலிக்கின் றதுசூ லைதவிர்த் தருளீர்
பயந்தே யென்வயிற் றினகம் படியே
    பறித்துப் புரட்டி யறுத்தீர்த் திடநான்
அயர்ந்தே னடியே னதிகைக் கெடில
    வீரட் டானத் துறையம் மானே. 7

வலித்தேன் மனைவாழ்க் கைமகிழ்ந் தடியேன்
    வஞ்சம் மனமொன் றுமிலா மையினல்
சலித்தா லொருவர் துணையா ருமில்லைச்
    சங்கவெண் குழைக்கா துடையெம் பெருமான்
கலித்தே யென்வயிற் றினகம் படியே
    கலக்கி மலக்கிட் டுக்கவர்ந் துதின்ன
அலுத்தே னடியே னதிகைக் கெடில
    வீரட் டானத் துறையம் மானே. 8

பொன்போ லமிளிர் வருதார்மே னியினீர்
புரிபுன் சடையீர் மெலியும் பிறையீர்
துன்பே கவலே பிணியென் றிவற்றை
நணுகா மற்றுரந் துகரந் துமிடீர்
என்போ லிகளும் மையினித் தெளியா
ரடியார் படுவ திதுவே யாகில்
அன்பே யமையும் மதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே. 9

போர்த்தா யங்கொரா னேயினீ ருரிதோல்
புறங்கா டரங்கா நடமா டவல்லாய்
ஆர்த்தா னரக்கன் றனேமால் வரைக்கீழ்
அடர்த்திட் டருள்செய் தவது கருதாய்
வேர்த்தும் புரண்டும் விழுந்து மெழுந்தா
லென்வே தனேயா னவிலக் கியிடாய்
ஆர்த்தார் புனல்சூ ழதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**வீரட்டேசுவரர்** தேவி :—**திரிபுரசுந்தரி**

**பதிக வரலாறு** :—திருநாவுக்கரசு சுவாமிகள் சைவ சமயத்தில் தோன்றியிருந்தும், நம்பர் அருளாமையால் கொல்லாமை மறைந்துறையும் சமண் சமயம் புகுந்தார். அச்சமயத்தில் தருமசேனர் என்ற பெயருடன் வாழ்ந்து அச்சமயத்தைப் பரப்பி வந்தார். இவருக்காக உயிர் தாங்கிய இவரது தமக்கையாரான திலகவதியம்மையார் திருவதிகைவீரட்டானத்தில் தபோவனத்திருந்து சரியைத் தொண்டை வீரட்டானேசுவரர் ஆலயத்தில் நாளும் செய்து வந்தார். அதுகாலே தன் வழிபடு கடவுளாகிய சிவபெருமானிடம் தன் தம்பியின் நிலேயை மாற்றிச் சைவத்தில் சேர்ப்பிக்க வேண்டுமென்று தினமும் வேண்டினர். சிவபெருமானும் மறக்கருணேயால் அவருக்குக் கொடிய சூலே நோயைக் கொடுத்து வருந்தச் செய்தார். அவரும் தம் சமயத்தில் அந்நோய் தீராதது கண்டு ஒருநாள் விடியற்காலே திருவதிகைவீரட்டானம் சேர்ந்து தன் தமக்கையாரின் திருவடிகளில் வீழ்ந்து தன்னேக் காக்க வேண்டுமென்றார். அம்மையாரும் இரங்கி அவருக்குத் திருவாளன் திருநீற்றை ஐந்தெழுத்தை யோதிக்கொடுத்து அணியச் செய்து ஆலயத்துள் அழைத்துச் சென்று பெருமானே வணங்குமாறு பணித்தார். அவரும் அவ்வாறே இறைவன் திருவடியில் வீழ்ந்து எழுந்து நின்று வணங்கினவுடன் அவர் சூலே நோய் அடியோடு ஒழிந்தது. பெருமானே அரிய தமிழ்ப் பாடலால் பாடும் தகுதியைப் பெற்று

முதன் முதலாகப் பாடிய திருப்பதிகம் இக் "கூற்றாயினவாறு" என்பதாம்.

இதனை அன்பர்கள் நாளும் பக்தி சிரத்தையுடன் ஓதி வர வயிற்றுவலி நீங்குவது அனுபவ சித்தம்.

பொழிப்புரை :

1. கெடில நதிக்கரையில் உள்ள திருவதிகைவீரட்டானத்தில் கோயில் கொண்டுள்ள இறைவனே! இயமனை ஒத்து வந்த சூலை நோயினைப் போக்கி யருளுகின்றீர் இல்லை. இக்கொடிய சூலை நோய்க்குக் காரணமாகிய யான் செய்த முன்னை வினைகளை யான் அறியமாட்டேன். என்னை உம்முடைய அடியவனாக ஏற்றுக் கொண்டீர். உம்முடைய திருவடிகளையே நான் இரவும் பகலும் பிரியாது வணங்குவேன். வெளிக்குத் தோன்றாது எனது வயிற்றின் உள்ளிடத்தே குடரோடு கூடி முறுக்கித் துன்பப்படுத்தும் இந்நோயினைப் பொறுக்கும் ஆற்றல் இல்லேன்.

2. என்னுடைய நெஞ்சத்தினை உமக்கே உறைவிடமாக வைத்துவிட்டேன். உம்மை நினையாது ஒருபொழுதும் இருந்திருக்கவில்லை. இச்சூலை நோய்க்கு ஒப்பான கொடுமை பொருந்திய நோயினை நான் கண்டறிந்ததில்லை. விஷத்தைப்போலத் தோன்றிக் குடரோடு கலந்து முறுக்கும்படி வருத்தும் இந்நோயை நீக்கி ஒழியச் செய்கின்றீரில்லை. அஞ்சேல் என்றும் கூறியருளவில்லையே.

3. பணிந்தாரது பாவங்களைப் போக்கியருளும் வல்லமை உள்ளவர். வெண்டலையிலே பிச்சையேற்றுத் திரிகின்றவர். இறந்தவர்களுடைய சாம்பலைத் திருமேனியிலே பூசிக்கொள்ள வல்லவர். காளைமாட்டினை விரும்பி வாகனமாகக் கொண்டவர். தலை மாலையினைத் திருமேனி முழுவதும் அணிந்துகொண்டவர். இத்தகைய பெருமை கொண்ட கடவுளே! நீரே முழுமுதற் கடவுள் என்று துணிந்து உமக்கு ஆட்செய்யலுற்றேன். இச்சூலை நோய் என்னைச் சுடுகின்றது. இதனைப் போக்கியருள்வீராக.

4. என்னுடைய அறியாமை காரணமாக நீர் முன்னம் என்னை முனிந்தமையால், இச்சூலை நோய் அடியேனை வருத்தி முறுக்குகின்றது. பிறகு நான் உமக்கு அடியவனாக ஆயினேன். சுடுகின்ற இச்சூலை நோயைத் தவிர்த்து அருள்புரிவீராக. தம்மிடம் அடைக்கலம் புகுந்தவர்களுடைய தீவினைகளைத் தீர்ப்பது அன்றோ பெரியோர்களின் கடமையாகும்.

5. கரையில் நின்றவர்களாய் காவல் செய்கின்றவர்களுடைய பாதுகாப்பை யவமதித்து நீரில் இறங்கி முயற்சித்த காரணத்தால் ஆழத்தினை நீயே கண்டுகொள் என்று சொல்லி நீந்தி மிதந்தாலன்றி நிலைத்து நிற்கமுடியாத ஆழமுடைய குளத்திலே தூக்கி

அமிழ்த்திவிட நிலைகொள்ளும் வழித்துறை ஒன்றும் அறியேனு. இது ஒத்த வார்த்தை வேறு நான் கேட்டறியேன். வயிற்றினிடத்து குடரோடு கலந்து முறுக்கித் துன்புறுத்தும் சூலையைப் பொறுக்க வல்லேன் அல்லேன்.

6. அபிடேகம், மாலை சாத்துதல், தூபம் இவைகளை நான் மறந்தேனல்லேன். தமிழ்ப் பதிகத்தோடு இசை பாடுதலையும் மறந்தேனல்லேன். நன்மையிலும் தீமையிலும் உன்னை மறந்தேனல்லேன். உன்னுடைய நாமத்தை ஓதுவதையும் மறந்தேனல்லேன். இறந்தவர்களது தலையோட்டிலே பிச்சையேற்று திரிபவரே! என்னுடைய வயிற்றிலே பொருந்தி வருத்துகின்ற சூலை நோயினைப் போக்கியருள் செய்வீர். நான் அந்நோயினுல் மிகவும் துன்பம் அடைந்து வருந்துகின்றேன்.

7. என்னை நன்னெறிப்படுத்தும் காவலர் ஒருவர் இல்லாத காரணத்தால் மனை வாழ்க்கையாலும் அதற்குரியனவாகிய பொருள்களாலும், உயர்ந்தவனுகக் கருதினேன். பின் அவற்றை நீங்கி உம் வயப்பட்டு உமக்கு அடிமை செய்து வாழலுற்றும் இச்சூலை நோய் வருத்துகின்றது. அதனைத் தவிர்த்து அருள்கின்றீரில்லை. மேலும் அந்நோய் என் வயிற்றில் குடரினைப்பற்றி யிழுத்துப் புரட்டி அறுத்துத் துன்பம் செய்திட அடியேன் அதற்கு அஞ்சி அயர்ந்தேன்.

8. என்னுடைய மனம் ஆராய்ச்சியொன்றும் இலாமையினுல் மனை வாழ்க்கையைப் பெரிதாக மதித்துச் செருக்கடைந்தேன். துன்பம் நேர்ந்தபொழுது உம்மைத் தவிர வேறு துணையில்லை. வெண்ணிறம் பொருந்திய சங்கக்குழையை அணியாகக் கொண்ட திருச்செவியையுடையவரே! இச்சூலை நோயானது எனது வயிற்றினுள்ளே இறைச்சலோடு கலக்கி முறுக்கி உழக்கி என்னுயிரைக் கொள்ளை கொண்டு உண்ணுதலாலே நான் மிகவும் இளைத்தேன்.

9. பொன்னைப்போல ஒளி வீசும் மேனியினை உடையவரே; முறுக்கி விடப்பட்ட சடையினையுடையவரே! குறைந்து ஒரு கலையுடன் நின்ற பிறைச்சந்திரனைச் சிரசிலே உடையவரே! துன்பம், கவலை, நோய் எனப்பட்ட இவற்றை என்பால் சேராமல் அகற்றி ஒழித்து அருளுகின்றீர் இல்லை. உம்மைச் சரணுக அடைந்தவர்கள் படுவது இத்துயரமென்முல் என்போன்றவர்கள் உம்முடைய அருளைத் தெளிந்து உம்மையடையமாட்டார்கள். இருப்பினும் நான் செய்வதற்குரியதாக உள்ளது எஞ்ஞான்றும் என்னுடைய அன்பேயாகும்.

10. ஒரு யானையினுடைய வகிர்ந்து உரித்த தோலைப் போர்வையாகப் போர்த்துக் கொண்டனே! புறங்காட்டினையே அரங்கமாகக்கொண்டு நடமாடவல்லவரே! ஆரவாரித்து வந்த அரக்கனுகிய இராவணனைப் பெரிய கயிலாய மலைக்கீழ் நெருக்கிப்

பிறகு இரக்கத்தினுல் அவனுக்கு அருள் செய்த உமது தன்மையை இப்போது நினைக்கின்றீர் இல்லை. வியர்த்தும், புரண்டும், விழுந்தும், எழுந்தும், யான் படுகின்ற வேதனைகளை விலக்கி யருள் செய்யாமலிருக்கின்றீரே !

# 5. சுந்தரமூர்த்தி நாயனுர்

## திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும்

### (உடல் நோய் நீங்க)

**திருத்துருத்தி** :—குத்தாலம் என்ற பெயரில் வழங்கப்படுகிறது. மாயவரம்—தஞ்சாவூர் இரயில் மார்க்கத்தில் குத்தாலம் (குற்றுலம்) இரயில் நிலையத்திலிருந்து சுமார் அரை மைல். தேசப்படத்தில் 31 என்கிற எண்ணுல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

**திருவேள்விக்குடி** :—இதுவும் மாயவரம்—தஞ்சாவூர் இரயில் மார்க்கத்தில் குத்தாலம் (குற்றுலம்) இரயில் நிலையத்திலிருந்து சுமார் இரண்டு மைல். தேசப்படத்தில் 30 என்கிற எண்ணுல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

**குறிப்பு** :—காவிரியின் தென்கரையில் திருத்துருத்ியும் வடகரையில் திருவேள்விக்குடியும் எதிர் எதிராக உள்ளன.

பண் - காந்தாரம்] [7-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

மின்னுமா மேகங்கள் பொழிந்திழிந் தருவி
வெடிபடக் கரையொடுந் திரைகொணர்ந் தெற்றும்
அன்னமாக் காவிரி யகன்கரை உறைவார்
அடியிணை தொழுதெழும் அன்பராம் அடியார்
சொன்னவா றறிவார் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
என்னைநான் மறக்குமா றெம்பெரு மானை
**என்னுடம் படும்பிணி இடர்கெடுத் தானை.** 1

கூடுமா றுள்ளன கூடியுங் கோத்துங்
கொய்புன ஏனலோ டைவனஞ் சிதறி
மாடுமா கோங்கமே மருதமே பொருது
மலையெனக் குலைகளை மறிக்குமா றுந்தி
ஓடுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
பாடுமா றறிகிலேன் எம்பெரு மானைப்
**பழவினை உள்ளன பற்றறுத் தானை.** 2

கொல்லுமால் யானையின் கொம்பொடு வம்பார்
கொழுங்கனிச் செழும்பயன் கொண்டுகூட் டெய்திப்
புல்கியுந் தாழ்ந்தும் போந்து தவஞ்செய்யும்
போகரும் யோகரும் புலரிவாய் மூழ்கச்
செல்லுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
சொல்லுமா றறிகிலேன் எம்பெரு மானைத்
தொடர்ந்தடும் கடும்பிணித் தொடர்வறுத் தானே. 3

பொறியுமா சந்தனத் துண்டமோ டகிலும்
பொழிந்திழிந் தருவிகள் புன்புலங் கவரக்
கறியுமா மிளகொடு கதலியும் உந்திக்
கடலுற விளைப்பதே கருதித்தன் கைபோய்
எறியுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
அறியுமா றறிகிலேன் எம்பெரு மானை
அருவினை யுள்ளன ஆசறுத் தானே. 4

பொழிந்திழி மும்மதக் களிற்றின மருப்பும்
பொன்மலர் வேங்கையின் நன்மலர் உந்தி
இழிந்திழிந் தருவிகள் கடும்புனல் ஈண்டி
எண்டிசை யோர்களும் ஆடவந் திங்கே
சுழிந்திழி காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
ஒழிந்திலேன் பிதற்றுமா றெம்பெரு மானை
உற்றநோய் இற்றையே உறவொழித் தானே. 5

புகழுமா சந்தனத் துண்டமோ டகிலும்
பொன்மணி வரன்றியும் நன்மலர் உந்தி
அகழுமா அருங்கரை வளம்படப் பெருகி
ஆடுவார் பாவந்தீர்த் தஞ்சனம் அலம்பித்
திகழுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
இகழுமா றறிகிலேன் எம்பெரு மானை
இழித்தநோய் இம்மையே ஒழிக்கவல் லானே. 6

வரையின்மாங் கனியொடு வாழையின் கனியும்
வருடியும் வணக்கியும் மராமரம் பொருது
கரையுமா கருங்கடல் காண்பதே கருத்தாய்க்
காம்பீலி சுமந்தொளிர் நித்திலங் கைபோய்

விரையுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
உரையுமா றறிகிலேன் எம்பெரு மானை
**உலகறி பழவினை அறஒழித் தானை.** 7

ஊருமா தேசமே மனமுகந் துள்ளிப்
புள்ளினம் பலபடிந் தொண்கரை யுகளக்
காருமா கருங்கடல் காண்பதே கருத்தாய்க்
கவரிமா மயிர்சுமந் தொண்பளிங் கிடறித்
தேருமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
ஆருமா றறிகிலேன் எம்பெரு மானை
**அம்மைநோய் இம்மையே ஆசறுத் தானை.** 8

புலங்களை வளம்படப் போக்கறப் பெருகிப்
பொன்களே சுமந்தெங்கும் பூசல்செய் தார்ப்ப
இலங்குமார் முத்தினோ டினமணி இடறி
இருகரைப் பெருமரம் பீழ்ந்து கொண் டெற்றிக்
கலங்குமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
விலங்குமா றறிகிலேன் எம்பெரு மானை
**மேலைநோய் இம்மையே வீடுவித் தானை.** 9

மங்கையோர் கூறுகந் தேறுகந் தேறி
மாறலார் திரிபுரம் நீறெழச் செற்ற
அங்கையான் கழலடி அன்றிமற் றறியான்
அடியவர்க் கடியவன் தொழுவனா ரூரன்
கங்கையார் காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் சேர்த்திய பாடல்
தங்கையால் தொழுதும் நாவின்மேல் கொள்வார்
**தவநெறி சென்றம ருலகம்ஆள் பவரே.** 10

திருச்சிற்றம்பலம்

திருத்துருத்தி—சுவாமி பெயர் :—**முக்தாவதேச்வரர்**
தேவி :—**அமிர்தமுகிழாம்பிகை**

திருவேள்விக்குடி—சுவாமி பெயர் :—**கல்யாணசுந்தரர்**
தேவி :—**பரிமளசுகந்தநாயகி**

**பதிக வரலாறு** :—திருவொற்றியூரில் சங்கிலியாருடன் இனிது வாழ்ந்திருந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் வசந்த ருது வந்தணைந்து

தென்றற்காற்று வீசத் தென் திருவாரூர் நினைவு வரப்பெற்றவரா யினும் தாம் மகிழின்கீழ் செய்த சபதத்தினுல் திருவாரூர் செல்ல மாட்டாராய் மனம் மிக வருந்தினுர். பின் ஒரு நாள் திருவாரூர் தனைப் பெரிதும் நினைந்துருகி ஒற்றியூரனை வணங்கித் திருவாரூ ரினை நோக்கிப் புறப்பட்டவர், திருவொற்றியூர் எல்லை நீங்கியதும் இரு கண்களும் மறைய மூர்ச்சித்தார். பின் தெளிந்து சூள் மறந்த காரணத்தால் உற்றதிதுவெனத் தெளிந்து இறைவனைப் பாடியும் அருள் கிடைக்காமையால் திருமுல்லைவாயில் பணிந்து, திருஉளம் பூதூரில் ஊன்றுகோல் பெற்றுத் திருக்கச்சி ஏகம்பம் தொழுது இடக்கண்ணைப் பெற்றுப் பின்னும் திருப்பதிகள் வணங்கித் திருவாவடுதுறை வந்து சேர்ந்தார். "கங்கைவாழ் சடையானே, ஓர் கண்ணிலேன்; இங்கெனக்கார் உறவு" என்னும் பதிகத்தால் திருவாவடுதுறையானைப் பரவித் திருத்துருத்தியை யடைந்து விமலர்தாள் வணங்கி "அடியேன் மேல் உற்ற பிணி வருத்தம் ஒழித்தருள வேண்டும்" எனத் தொழுது வணங்கினுர். வணங்கின தொண்டர்க்கு அருள்புரிவாராய் இறைவர் இப்பிணி முற்றுந் தீர வடகுளத்துக்குளி என்று அருள சுந்தரரும் கரங்குவித்துத் தொழுது வடகுளத்தில் மூழ்கி எழுந்ததும் உடல் மேலுற்ற பிணி முற்றும் நீங்கிச் சுடர்விடும் மணியின் ஒளி பொருந்திய திருமேனியராய் ஆயினுர். கண்டவர்கள் வியப்பெய்தக் கரையேறி அண்டர் பிரான் கோயில்புக்குத் தொண்டர் எதிரே "மின்னுமா மேகம்" எனத் தொடங்கும் இப்பதிகம் பாடினுர். பன்னிரண்டாம் திரு முறையில் சேக்கிழார் பெருமான் "எண்டிசையும் அறிந்துய்ய ஏழிசையால் எடுத்திசைத்தார்" என்று இதனைக் கூறுகிறபடி இப்பதிகத்தை நாம் அறிந்து பிணி தீர்ந்து உய்வோமாக.

பொழிப்புரை :

1. மின்னுகின்ற பெரிய மேகங்கள் மழையைப் பொழிந்து அதனுல் பாய்ந்து வருகின்ற அருவிகள் ஓசையுடன் பாய்ந்து அலை களைக் கொணர்ந்து கரையோடு மோதுவிக்கின்ற அத்தன்மையான பெரிய காவிரி நதியின் அகன்ற கரையில் பல தலங்களில் எழுந் தருளியிருப்பவரும், திருத்துருத்தியிலும் திருவேள்விக்குடியிலும் வீற்றிருப்பவருமாகிய தலைவரும் அன்பர்களாகிய அடியவர்கள் வேண்டியவற்றை எல்லாம் அறிந்தவரும், என்னுடம்பினை வருத் திய பிணியாகிய கொடுமையை போக்கியருளியவருமான எம்பெரு மானைக் குற்றங்களுடையவனும், நாய்போலக் கடையனுமாகிய நான் மறக்குமாறு எங்ஙனம்? (மறக்கவியலாது என்றபடி).

குறிப்பு :—சொன்னவாறறிவார் என்பது திருத்துருத்தியில் இறைவன் பெயரையுங் குறித்தவாறு அமைந்தது.

2. கூடத்தக்கனவாய ஆறுகளுடன் கூடியும், அவைகளோடு கலந்தும், கொய்யும் பருவத்தில் உள்ள புனங்களில் உள்ள தினைக்

கதிர்கள், மலைநெல் இவைகளைச் சிதறியும் அருகாமையில் உள்ள பெரிய கோங்கம், மருதம் முதலிய மரங்களை மோதித் தள்ளியும், கரைகளை மலை தகர்ப்பதுபோல இடித்தும் ஓடுகின்ற பெரிய காவிரி யாற்றினது கரைக்கண் உள்ள திருத்துருத்தியிலும் திருவேள்விக் குடியிலும் உள்ளவராகிய தலைவரை என்னைத் தொடர்ந்து வருத் திய பழவினைகளாயினவற்றையறுத்தவரை எம்பெருமானைக் குற்றங் களுடையவனும், நாய்போலுங் கடையவனுமாகிய நான் பாடிப் புகழும் வகையை அறிந்திலேன்.

3. கொல்லும் தன்மையுடைய பெரிய யானையின் தந்தங் களையும், மணம் பொருந்திய கொழுவிய கனிகளின் சாற்றையும் கொண்டு, கூடுதலையடைந்து, தழுவியும், தாழ்ந்தும் போந்து தவஞ் செய்கின்ற போகிகளும், யோகிகளும் வைகறையிலே வந்து மூழ்குமாறு ஓடுகின்ற பெரிய காவிரிக்கரையில் திருத்துருத்தியி லும், திருவேள்விக்குடியிலும் வீற்றிருக்கின்ற அடிகளை, என்னைத் தொடர்ந்து துன்புறுத்திய கடும் பிணித் தொடர்பை அறுத்தவனை, எம்பெருமானை, குற்றங்கள் மிக்குடையேனும் நாய்போலும் கடை யேனும் ஆகிய யான் புகழும் வகையை அறிந்திலேன்.

4. சந்தனக் கட்டைகளுடன் அகிற்கட்டைகளையும் தள்ளி இறங்குகிற அருவிகள் புல்லிய புலங்களைக் கவர்ந்துகொள்ளச் சிறந்த மிளகுகளையும் வாழைகளையுந் தள்ளிக்கொண்டு சென்று கடலில் சேர்ப்பதையே கருத்திற்கொண்டுத் தன் இரு மருங்கிலும் சென்று அலை வீசுகின்ற காவிரியாற்றின் கரையின்கண் திருத்துருத்தியிலும், திருவேள்விக்குடியிலும் வீற்றிருப்பவராகிய தலைவரை அரிய வினைகளாக உற்றவற்றைத் தொலைத்தவரை எம்பெருமானைக் குற்றங்கள் மிக்குடையவனும், நாய்போலுங் கடையவனுகிய நான் அறியும் வகையை அறிகிலேன்.

5. பொழியப்பட்டுப் பாய்கின்ற மும்மதங்களையுடைய யானை யினது தந்தங்களையும், பொன்னிறமுள்ள வேங்கை மலர்களையும் தள்ளிக்கொண்டு வீழும் பல அருவிகளால் நீர் மிகவும் நிரம்பி எட்டுத் திக்கிலும் உள்ளவர்களும் வந்து நீராடுமாறு இங்கே சுழித்துப் பாய்கின்ற காவிரியாற்றின் கரையில் திருத்துருத்தியிலும் திருவேள்விக்குக்குடியிலும் உள்ளவராகிய தலைவரை, என்னைப் பீடித்த நோய் முழுவதையும் இன்றைய தினத்திலேயே முற்றும் நீக்கியவருமான எம்பெருமானைக் குற்றங்கள் மிக்குடையவனும் நாய்போற் கடையவனுமாகிய நான் இடைவிடாது போற்றுதலை ஒழிந்திலேன் (இடையறுது போற்றுவேன் என்றபடி).

6. புகழ்த் தன்மையையுடைய சந்தனக் கட்டைகளையும் அகிற் கட்டைகளையும் பொன்மணி ஆகிய இவற்றையும் வாரிக் கொண்டும் நல்ல மலர்களைத் தள்ளிக் கொண்டும் தன்னுல் அகழப் படுகிற பெரிய அரிய கரைகளையெல்லாம் மிக்க வளமுடையதாகச்

செய்து, நீராடுபவர்களது பாவத்தைப் போக்கி அவர்கள் குற்றத்தைக் கழுவித் திகழ்கின்ற காவிரிக் கரையின்கண் திருத்துருத்தியிலும் திருவேள்விக்குடியிலும் உள்ள தலைவரை, என்னைப்பற்றிய இழிந்த நோயை இப்பிறவியிலேயே ஒழிக்கவல்லானும், எம்பெருமானுமாணுனைக் குற்றம் மிக்குடையேனும் நாய்போற் கடையேனுமாகிய யான் இகழும் வகையை அறியமாட்டேன்.

7. அளவில்லாத மாங்கனிகளையும் வாழைக் கனிகளையும் வீழ்த்தியும், சாய்த்தும், மராமரங்களை முறித்தும் கரிய கடலைக் காண்பதையே கருத்தாய்க் காம்புகளோடு கூடிய மயிற்றோகைகளையும் சுமந்துகொண்டு ஒளிவிடுகின்ற முத்துக்கள் இருபுறங்களிலும் தெறிக்க விரைந்து ஓடுகின்ற பெரிய காவிரியாற்றின் கரையின்கண் திருத்துருத்தியிலும் திருவேள்விக்குடியிலும் உள்ளவராகிய தலைவரை, உலகறியும் என்னுடைய பழ வினையை முற்றிலும் ஒழித்தவனை, எம்பெருமானைக் குற்றம் மிக்கவனும் நாய்போலுங் கடையவனாகிய நான் துதிக்கும் வகையை அறிந்திலேன்.

8. ஊர்களில் உள்ளவர்களும் தேசங்களில் வாழ்பவர்களும் மனம் விரும்பி நினைத்தும் (நினைத்தபடி வந்து நீராடியும்) பல வகையான பறவைக் கூட்டங்கள் பல முழுகி எழுந்தும், அழகிய கரைகள் திரிய, நீர் நிறைந்து பெரிய கரிய கடலைக் காண்பதையே கருத்தாகக் கொண்டு இறந்த கவரிமான் மயிரைச் சுமந்து ஒளி மிக்க பளிங்குக் கற்களையுடைத்துச் செல்லுவதுமாகிய பெரிய காவிரியாற்றின் கரைக்கண் திருத்துருத்தியிலும் திருவேள்விக்குடியிலும் உள்ளவரும், தலைவரும், வரக்கடவதாகிய பிறவிகளில் வரும் துன்பமாகிய நோயினையும் இப்பிறப்பிலேயே களைந்தொழித்தவரும் ஆகிய எம்பெருமானை குற்றங்கள் மிக்குள்ளவனும் நாய்போலுங் கடையவனுமாகிய நான் அடையும் வழியை அறிந்திலேன்.

9. நிலங்களையெல்லாம் வளம்படச் செய்து எல்லாக் குற்றங்களும் நீங்க நீர் பெருகி பொற் கட்டிகளைச் சுமந்து எங்கும் ஆரவாரித்து, ஒளிவிடுகின்ற முத்தினோடு அதன் இனமான மற்ற மணிகளையும் எறிந்து இரு கரைகளிலும் உள்ள பெரிய மரங்களைப் பெயர்த்துக் கரையைத் தாக்கிக் கலங்கி யோடுகின்ற காவிரிக்கரையில் திருத்துருத்தியிலும் திருவேள்விக்குடியிலும் உள்ளவராகிய எம் தலைவரை, மேலைப் பிறவிகளில் வரக்கடவதாகிய துன்பங்களையும் இப்பிறவியிலே நீக்கியருளியவருமான எம்பெருமானைக் குற்றம் மிக்குடையேனும் நாய்போற் கடையேனுமாகிய யான் நீங்கும் வகையை அறிந்திலேன். (நீங்கமாட்டேன் என்பது கருத்து)

10. மங்கையை (உமாதேவியை) ஒரு பாகத்தில் வைத்துக் கொள்ளலை விரும்பி வைத்தும், இடபவாகனத்தை விரும்பி

ஏறியும், பகைவர்களுடைய திரிபுரங்களை நீறுபட அழித்த அழகிய கையையுடையவனுமான சிவபெருமானின் வீரக் கழல்களணிந்த திருப்பாதங்களைத் தவிர வேறு ஒன்றினை யறியாதவனும், அடியார்க்கடியனும் தொண்டனுமாகிய நம்பி ஆரூரன் கங்கை நதியை ஒத்த புனிதமுடைய காவிரிக்கரையின்கண் திருத்துருத்தியிலும் திருவேள்விக்குடியிலும் வீற்றிருக்கிற தலைவரைச் சேர்த்துப் பாடிய (தலைவர் தாள்களில் சேர்ப்பித்த) இப்பாடல்களைத் தங்கள் கையாற்றொழுது நாவில் கொள்பவர்கள் தவநெறியிற் சென்று பின்னர்ச் சிவலோகத்தை ஆள்பவர் ஆகுதல் உறுதி.

## 6. சுந்தரமூர்த்தி நாயனர்

### (கண்ணொளி பெருக)

### திருக்கச்சியேகம்பம்

(இது காஞ்சிபுரம் என்று வழங்கப்படும் பிரசித்தமான தலம். செங்கற்பட்டு—அரக்கோண மார்க்கத்தில் காஞ்சிபுரம் இரயில் நிலையத்திலிருந்து ஆலயம் சுமார் 1 மைல். தேசப்படத்தில் 32 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

பண் - தக்கேசி] [7-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

ஆலந் தானுகந் தமுதுசெய் தானை
ஆதி யையம ரர்தொழு தேத்தும்
சீலந் தான்பெரி தும்முடை யானைச்
சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
ஏல வார்குழ லாளுமை நங்கை
என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 1

உற்ற வர்க்குத வும்பெரு மானை
ஊர்வ தொன்றுடை யானும்பர் கோனைப்
பற்றி னார்க்கென்றும் பற்றவன் றன்னைப்
பாவிப் பார்மனம் பாவிக்கொண் டானை
அற்ற மில்புக ழாளுமை நங்கை
ஆத ரித்து வழிபடப் பெற்ற
கற்றை வார்சடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 2

திரியும் முப்புரம் தீப்பிழம் பாகச்
செங்கண் மால்விடை மேற்றிகழ் வானைக்
கரியி னீருரி போர்த்துகந் தானைக்
காம னைக்கன லாவிழித் தானை
வரிகொள் வெள்வளை யாளுமை நங்கை
மருவி ஏத்தி வழிபடப் பெற்ற
பெரிய கம்பனை எங்கள்பி ரானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 3

குண்ட லந்திகழ் காதுடை யானைக்
கூற்று தைத்த கொடுந்தொழி லானை
வண்ட லம்புமலர்க் கொன்றையி னானை
வாள ராமதி சேர்சடை யானை
கெண்டை யந்தடங் கண்ணுமை நங்கை
கெழுமி யேத்தி வழிபடப் பெற்ற
கண்டம் நஞ்சுடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 4

வெல்லும் வெண்மழு வொன்றுடை யானை
வேலை நஞ்சுண்ட வித்தகன் றன்னை
அல்லல் தீர்த்தருள் செய்யவல் லானை
அரும றையவை அங்கம்வல் லானை
எல்லை யில்புக ழாளுமை நங்கை
என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
நல்ல கம்பனை எங்கள்பி ரானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 5

திங்கள் தங்கிய சடையுடை யானைத்
தேவ தேவனைச் செழுங்கடல் வளரும்
சங்க வெண்குழைக் காதுடை யானைச்
சாம வேதம் பெரிதுகப் பானை
மங்கை நங்கை மலைமகள் கண்டு
மருவி யேத்தி வழிபடப் பெற்ற
கங்கை யாளனைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 6

விண்ண வர்தொழு தேத்தநின் றானை
வேதந் தான்விரித் தோதவல் லானை
நண்ணி னார்க்கென்றும் நல்லவன் றன்னை
நாளும் நாமுகக் கின்றபி ரானை
எண்ணில் தொல்புக ழாளுமை நங்கை
என்று மேத்தி வழிபடப் பெற்ற
கண்ணும் மூன்றுடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 7

சிந்தித் தென்றும் நினைந்தெழு வார்கள்
    சிந்தை யில்திக ழுஞ்சிவன் றன்னைப்
பந்தித் தவினைப் பற்றறுப் பானைப்
    பாலொ டானஞ்சும் ஆட்டுகந் தானை
அந்த மில்புக ழாளுமை நங்கை
    ஆத ரித்து வழிபடப் பெற்ற
கந்த வார்சடைக் கம்பனெம் மானைக்
    காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 8

வரங்கள் பெற்றுழல் வாளரக் கர்தம்
    வாலி யபுரம் மூன்றெரித் தானை
நிரம்பிய தக்கன் றன்பெரு வேள்வி
    நிரந்த ரஞ்செய்த நிட்கண் டகனைப்
பரந்த தொல்புக ழாளுமை நங்கை
    பரவி யேத்தி வழிபடப் பெற்ற
கரங்கள் எட்டுடைக் கம்பனெம் மானைக்
    காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 9

எள்க லின்றி யிமையவர் கோனை
    ஈச னைவழி பாடுசெய் வாள்போல்
உள்ளத் துள்கி யுகந்துமை நங்கை
    வழிபடச் சென்று நின்றவா கண்டு
வெள்ளங் காட்டி வெருட்டிட அஞ்சி
    வெருவி யோடித் தழுவ வெளிப்பட்ட
கள்ளக் கம்பனை யெங்கள்பி ரானைக்
    காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 10

பெற்றம் ஏறுகந் தேறவல் லானைப்
    பெரிய எம்பெரு மானென்றெப் போதும்
கற்ற வர்பர வப்படு வானைக்
    காணக் கண்ணடி யேன்பெற்ற தென்று
கொற்ற வன்கம்பன் கூத்தனெம் மானைக்
    குளிர்பொ ழில்திரு நாவலா ரூரன்
நற்றமி ழிவைஈ ரைந்தும் வல்லார்
    நன்னெ றியுல கெய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

**சுவாமி** பெயர் :—ஏகாம்பரநாதர் தேவீ :—காமாக்ஷி அம்மை
ஏலவார்குழலியம்மை

**பதிக வரலாறு** :—சுந்தரமூர்த்தி நாயனார் திருவொற்றியூரில் சங்கிலியார்க்கு மகிழடியில் செய்து கொடுத்த சூள் மறுத்து

திருவொற்றியூரை விட்டு நீங்கியதால் இரு கண்களும் மறையப் பெற்றுத் திருமுல்லைவாயில், திருவுளம்பூதூர், திருஆலங்காடு முதலிய தலங்களை வணங்கி திருக்கச்சி ஏகம்பம் சென்று ஏகம்ப நாதனைத் தொழுது வணங்கி "கடையானேன் எண்ணாத பிழை பொறுத்து இங்கு யான் எழிற்பவளவண்ணனாகிய உன்னைக் காணும்படி கண்ணினைக் கொடுத்தருள்வாய் என வேண்டினார். தழுவக் குழைந்த பெருமானும் சுந்தரர்க்கு இடக்கண்ணைக் கொடுத்தார். அம்மட்டுமோ! காமாக்ஷி அம்மை தழுவக் குழைந்த ஞான்று தம் உடலில் ஏற்றுக்கொண்ட முலைச்சுவட்டுக் கோலத்தையும் காட்டியருளினார். கீழே விழுந்து எழுந்து களித்துச் சுந்தரர் அப்பொழுது பாடியருளிய அருமைத் திருப்பதிகம் இது.

பொழிப்புரை :

1. விஷத்தினை விரும்பி உண்டவனை, உலகுக்கெல்லாம் முதல் வனாகிய பிரானை, தேவர்கள் வணங்கித் துதிக்கும் பெருமை மிகுதியும் உடையவனை, சிந்திப்பவர்களுடைய மனத்தினுள்ளிருப்பவனை, ஏலவார்க் குழலியாகிய உமையம்மை எந்நாளும் துதித்து வழி படப் பெற்ற காலகாலனை, திருவேகம்பத்துக் கோயில் கொண்ட எம் தலைவனைக் காணும்பொருட்டு அடியேன் கண் பெற்ற விதம் என்ன ஆச்சரியம்!

2. தன்னை யடைந்தோர்க்கு உதவும் பெருமானை, வாகன மாக ஓர் எருதினையுடையவனை, தேவர் பெருமானை, அடைந்த வர்கட்கெல்லாம் எந்நாளும் ஆதரவாக இருப்பானை, தன்னைத் தியானித்தவர் மனதைத் தன்னதாக்கிக் கொண்டவனை, குற்ற மில்லாத புகழுடைய உமையானவள் என்றும் விரும்பி வழிபாடு செய்யப்பெற்ற கற்றைச் சடைமுடியுடைய திருக்கச்சியேகம்பத்து எம் தலைவனைக் காணும்பொருட்டு அடியேன் கண் பெற்ற விதம் என்ன ஆச்சரியம்!

3. தம்மிச்சைப்படி உலாவிய முப்புரங்கள் தீத்திரளாக ஆகும்படி, செங்கண்மால் விடைமீது விளங்குபவனை, யானையின் உரித்த தோலைப் போர்த்து மகிழ்ந்தவனை, மன்மதனை நெருப்புக் கண்ணால் நோக்கி எரித்தவனை, வரிகளையுடைய வெள்ளிய வளையல்களையுடைய உமாதேவியார் துதித்து வழிபாடு செய்யப் பெற்ற பெரிய திருவேகம்பனை, எம்பிரானைக் காணும்பொருட்டு அடியேன் கண் பெற்ற விதம் என்ன ஆச்சரியம்!

4. குண்டலம் விளங்குகிற திருச்செவியை உடையவனை, இயமனை உதைத்த கொடிய தொழிலை உடையவனை, வண்டுகள் சப்தம் செய்கின்ற கொன்றை மாலையை உடையவனை, அரவும் மதியும் சேர்ந்த சடையினையுடையவனை கெண்டைமீன் போலும் அழகிய விசாலமான கண்களையுடைய உமாதேவியார் தழுவித்

துதித்து வழிபாடு செய்யப்பெற்ற திருவேகம்பனை, எம்பெருமானைக் காணும்படி அடியேன் கண்பெற்ற விதம் என்ன ஆச்சரியம்.

5. துஷ்டர்களை வெல்லும் வெள்ளிய மழுவினையுடையவனை, கடலிற் றோன்றிய விடத்தினை உண்ட திறமையாளனை, அல்லல்களை அகற்றி அருள் செய்ய வல்லவனை, அரிய மறைகள், அவற்றின் அங்கங்கள் ஆகியவற்றில் வல்லவனை வரம்பற்ற புகழினையுடைய உமாதேவியார் என்றும் துதித்து வழிபடப்பெற்ற நலத்தையே செய்யும் திருவேகம்பநாதனை, எம்பிரானைக் காணும்பொருட்டு அடியேன் கண் பெற்ற விதம் என்ன ஆச்சரியம்.

6. பிறைச்சந்திரன் தங்கிய சடையினை உடையவனை, தேவதேவனை, செழுங்கடலில் வளருகின்ற சங்கினால் செய்யப்பட்ட வெண்மையான குழையினை அணிந்த காதினையுடையவனை, சாம வேதத்தை மிகவும் விரும்புபவனை மலை மகளாகிய உமாதேவியார் மருவி வழிபட்ட கங்காதரனை திருவேகம்பனாகிய எம்பெருமானைக் காண அடியேன் கண் பெற்ற விதம் என்ன ஆச்சரியம்.

7. தேவர்கள் தொழும்படி நின்றவனை, வேதத்தினை விரித்து ஓத வல்லவனை. சரணடைந்தோர்க்கு எக்காலத்தும் நலத்தையே செய்கின்ற தன்மையுடையவனை எக்காலத்தும் நாம் விரும்புகிற பிரானை. எல்லையில்லாப் பெரும் புகழுடைய உமாதேவியார் என்றும் வணங்கி வழிபடப்பெற்ற முக்கண்ணுடையவனாகிய திருவேகம்பம் கோயில் கொண்ட எம் தலைவனைக் காணும்படி அடியேன் கண் பெற்ற விதம் என்ன ஆச்சரியம்.

8. ஆலோசித்து எந்நாளும் தியானித்து எழுபவர்களுடைய சிந்தையில் பிரகாசிக்கின்ற சிவபெருமானை, கட்டிய கர்மங்களின் கட்டினை யறுப்பவனை, தனிப் பாலபிடேகத்துடன் பஞ்ச கவ்ய அபிடேகம் விரும்பி ஏற்றுக்கொள்பவனை, முடிவற்ற புகழ் உடைய வளாகிய உமையம்மையார் விரும்பி வழிபடப்பெற்ற மணம் பொருந்திய நீண்ட சடையுடைய திருக்கச்சி ஏகம்பத்து எம் தலைவனைக் காணும்பொருட்டு அடியேன் கண் பெற்ற விதம் என்ன ஆச்சரியம்.

9. வரங்களைப் பெற்றுத் திரிந்த அசுரர்களுடைய முப்புரங் களை யெரித்தவனை, தக்ஷனது யாகத்தை அழித்த மிகுந்த கடுமை யுடையவனை, எங்கும் பரந்த பழம் புகழ் உடைய உமாபிராட்டி யார் பரவி ஏத்தி வழிபடப்பெற்ற எண்டோள்களுடைய திருக் கச்சியேகம்பனாகிய எம் தலைவனைக் காணும்பொருட்டு அடியேன் கண் பெற்ற விதம் என்ன ஆச்சரியம்.

10. இகழ்தலில்லாது தேவர்கட்கெல்லாந் தலைவனை, ஈசனை, வழிபடுபவளாகி உள்ளத்துள்ளே நினைத்து விரும்பி உமாதேவியார் பூசை செய்யச் சென்ற தன்மையைக் கண்டு வெள்ளத்தினைப்

பெருகச் செய்து பயமுறுத்த தேவியும் பயந்து ஓடித் தழுவ அவட்கு வெளிப்பட்டுக் காட்சியளித்த, திருமால் பூசித்த திருவேகம்பனை, எங்கள் தலைவனைத் தரிசிக்க அடியேன் கண் பெற்ற விதம் என்ன ஆச்சரியம்.

11. எருதினை விரும்பி ஏற வல்லவனை, பெரிய பெருமான் என்று எப்பொழுதும் கற்றவர்களால் துதிக்கப்படுபவனைக் காண அடியேன் கண் பெற்றது என்று எல்லார்க்குந் தலைவன், திருவேகம்பன் கூத்தப்பெருமான் ஆகிய எம்பெருமானைக் குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த திருநாவலூரில் பிறந்த ஆரூரனாகிய சுந்தரன் பாடிய நற்றமிழ் மாலையாகிய இப்பத்துப் பாடல்களும் ஓதவல்லவர் நன்னெறியால் அடையத்தக்க சிவலோகம் அடைவார்கள்.

## 7. சுந்தரமூர்த்தி நாயனர்

### (இதுவும் கண்ணொளி பெருகவேயாம்)

### திருவாரூர்

பண் - **செந்துருத்தி**] [7-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

மீளா அடிமை உமக்கே ஆளாய்ப்
பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று
முகத்தால் மிகவாடி
ஆளாய் இருக்கும் அடியார் தங்கள்
அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர்
வாழ்ந்து போதீரே. 1

விற்றுக் கொள்வீர் ஒற்றி அல்லேன்
விரும்பி ஆட்பட்டேன்
குற்றம் ஒன்றும் செய்த தில்லை
கொத்தை யாக்கினீர்
எற்றுக் கடிகேள் என்கண் கொண்டீர்
நீரே பழிப்பட்டீர்
மற்றைக் கண்தான் தாரா தொழிந்தால்
வாழ்ந்து போதீரே. 2

அன்றில் முட்டா தடையுஞ் சோலை
ஆரூர் அகத்தீரே
கன்று முட்டி உண்ணச் சுரந்த
காலி அவைபோல

என்றும் முட்டாப் பாடும் அடியார்
தங்கண் காணாது
குன்றில் முட்டிக் குழியில் விழுந்தால்
வாழ்ந்து போதீரே. 3

துருத்தி யுறைவீர் பழனம் பதியாச்
சோற்றுத் துறையாள்வீர்
இருக்கை திருவா ரூரே உடையீர்
மனமே யெனவேண்டா
அருத்தி உடைய அடியார் தங்கள்
அல்லல் சொன்னக்கால்
வருத்தி வைத்து மறுமை பணித்தால்
வாழ்ந்து போதீரே. 4

செந்தண் பவளந் திகழுஞ் சோலை
இதுவோ திருவாரூர்
எந்தம் அடிகேள் இதுவே ஆமாறு
உமக்காட் பட்டோர்க்குச்
சந்தம் பலவும் பாடும் அடியார்
தங்கண் காணாது
வந்தெம் பெருமான் முறையோ என்றால்
வாழ்ந்து போதீரே. 5

தினைத்தாள் அன்ன செங்கால் நாரை
சேருந் திருவாரூர்ப்
புனைத்தார் கொன்றைப் பொன்போல் மாலைப்
புரிபுன் சடையீரே
தனத்தால் இன்றித் தான்தாம் மெலிந்து
தங்கண் காணாது
மனத்தால் வாடி அடியார் இருந்தால்
வாழ்ந்து போதீரே. 6

ஆயம் பேடை அடையுஞ் சோலை
ஆரூர் அகத்தீரே
ஏயெம் பெருமான் இதுவே ஆமாறு
உமக்காட் பட்டோர்க்கு
மாயங் காட்டிப் பிறவி காட்டி
மறவா மனங்காட்டிக்
காயங் காட்டிக் கண்ணீர் கொண்டால்
வாழ்ந்து போதீரே. 7

கழியாய்க் கடலாய்க் கலனாய் நிலனாய்க்
கலந்த சொல்லாகி
இழியாக் குலத்திற் பிறந்தோம் உம்மை
இகழா தேத்துவோம்
பழிதான் ஆவ தறியீர் அடிகேள்
பாடும் பத்தரோம்
வழிதான் காணா தலமந் திருந்தால்
வாழ்ந்து போதீரே. 8

பேயோ டேனும் பிரிவொன் றின்னா
தென்பர் பிறரெல்லாம்
காய்தான் வேண்டிற் கனிதான் அன்றோ
கருதிக் கொண்டக்கால்
நாய்தான் போல நடுவே திரிந்தும்
உமக்காட் பட்டோர்க்கு
வாய்தான் திறவீர் திருவா ரூரீர்
வாழ்ந்து போதீரே. 9

செருந்தி செம்பொன் மலருஞ் சோலை
இதுவோ திருவாரூர்
பொருந்தித் திருமூ லட்டா னம்மே
இடமாக் கொண்டீரே
இருந்தும் நின்றுங் கிடந்தும் உம்மை
இகழா தேத்துவோம்
வருந்தி வந்தும் உமக்கொன் றுரைத்தால்
வாழ்ந்து போதீரே. 10

காரூர் கண்டத் தெண்டோள் முக்கண்
கலைகள் பலவாகி
ஆரூர்த் திருமூ லட்டா னத்தே
அடிப்பே ராரூரன்
பாரூர் அறிய என்கண் கொண்டீர்
நீரே பழிப்பட்டீர்
வாரூர் முலையாள் பாகங் கொண்டீர்
வாழ்ந்து போதீரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**வன்மீகநாதர்** தேவி :—**அல்லியங்கோதை**

**பதிக வரலாறு** :—திருக்கச்சி ஏகம்பனைப் பாடி இடதுகண் பார்வை பெற்ற சுந்தரமூர்த்தி சுவாமிகள் பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருவாரூர் அடைந்தார். அங்கு தியாகேசப்

பெருமானை 'மீளா அடிமை' என்னும் இத்திருப்பதிகம் பாடித் துதித்துத் தன் வலதுக் கண்ணையும் பெற்றார்; பிறகு தன்னிரு கண்களாலும் பரமனைப் பேரானந்தத்துடன் தரிசித்தார்.

**பயன்** :—கண் ஒளி குன்றியவர்கள் ஆலந்தானுகந்து என்னும் திருப்பதிகத்தையும் இத்திருப்பதிகத்தையும் பக்தி சிரத்தையுடன் ஓதினால் கண் ஒளி பெற்றுச் சிறப்புறுவார்கள் என்பது அனுபவ சித்தமான உண்மை. பயனடைந்தோர் இன்றும் பலர் உள்ளனர்.

**பொழிப்புரை** :

1. திருவாரூரில் எழுந்தருளியுள்ள பெருமானே! தேவரீருக்கு வழி வழியாய் அடிமையாயிருக்கும் அடியார்கள் தங்களுக்கு ஏற்பட்ட துன்பங்களைத் தெரிவித்தாலும், அவற்றைக் கேட்டு நீக்காமலிருப்பது அழகல்ல. எனினும் தேவரீர் நன்றாக வாழ்வீராக!

2. பெருமானே! தேவரீரது அடிமை யான். எனக்கு உரிமையொன்றுமில்லை. தேவரீர் என்னை எவ்வாறு வேண்டுமானாலும் நடத்திக்கொள்ளலாம். தெரிந்து ஒரு குற்றத்தையும் நான் செய்யவில்லை. அப்படி இருந்தும் என் கண் பார்வையை யிழக்கச் செய்தீர். எதற்காக தேவரீர் அவ்வாறு செய்தீர்? இதனால் எனக்கொன்றும் குறையில்லை. தேவரீரே பழிக்கு ஆளானீர்! நன்றாக வாழ்வீராக!

3. சோலை சூழ்ந்த திருவாரூரில் எழுந்தருளியுள்ளவரே! பசுவின் மடியை முட்டிக் கன்று பாலூட்டப் பால் சுரப்பதுபோல, என்றும் அடிமையாயுள்ள உண்மையடியார் தங்கண் பார்வை தெரியாது குன்றில் முட்டிக் குழியில் விழுவதைப் பார்த்துக் கொண்டிருப்பது அழகல்லவே! நன்றாக வாழ்வீராக!

4. திருத்துருத்தி, திருப்பழனம், சோற்றுத்துறை முதலிய இடங்களில் எழுந்தருளி யிருப்பினும், சிறப்பாகத் திருவாரூரையே சொந்த இடமாகக் கொண்டு வீற்றிருப்பவரே! உண்மையடியார் வருந்தினால் அதனைப் பார்த்துக்கொண்டிருக்கலாமா? நன்றாக வாழ்வீராக!

5. பூஞ்சோலை நிறைந்துள்ள திருவாரூரில் உள்ளவரே! உமக்கு அடிமைப்பட்டுச் சந்தம் நிறைந்த பாடல்களைப் பாடிக் கொண்டு வந்து உம் திருவடிகளில் சரணடைந்து தம் குறையைத் தெரிவித்தால் அதனை நீக்காமலிருப்பது அழகா? நன்றாக வாழ்ந்திருப்பீராக!

6. செங்கால் நாரைகள் சேரும் திருவாரூரில் இடங்கொண்டுள்ளவரே! கொன்றை மாலை யணிந்த சடையையுடைய

வரே! அடியார் மெலிந்து தன் கண் காணுமல் உம்மை வந்து வேண்டினுல் வாளா இருப்பது நியாயமா? நன்ருக வாழ்வீராக!

7. பறவைகள் நிறைந்த சோலைகளையுடைய திருவாரூரில் எழுந்தருளியுள்ளவரே! உமக்கு அடிமைப்பட்டவர்க்குத் துன்பத்தைக் கொடுத்து மயக்கி அவரைத் திருவடி மறவாதிருக்குமாறு செய்தும் அவர் கண்ணைக் கெடுத்தால், நீங்கள் நன்ருக வாழ்வீராக.

8. நல்ல குலத்தில் பிறந்து தேவரீருக்குப் பக்தராகிச் சதா சர்வ காலமும் தேவரீரையே இகழாமல் பாடிக்கொண்டிருந்தாலும், என் கண்ணைக் கெடுத்து நீரே பழிப்பட்டீர்! நன்ருக வாழ்வீராக!

9. பேயுடன் கூடியிருப்பினும் பிரிவு வேண்டும் என்றும், உம்மையே பாடிக்கொண்டிருந்தாலும், தேவரீர் துன்பத்தைப் போக்காமலும், வாயைத் திறவாமலும் வாளாவிருந்தால் நீரே நன்ருக வாழ்வீராக!

10. திருவாரூர் திருமூலட்டானத்தை யிடமாக் கொண்டீரே! தேவரீரை எப்போதும், நின்றும், இருந்தும், கிடந்தும், இகழாமல் தேவரீரையே வாழ்த்துகிருேம். அப்படியிருந்தும் என் வருத்தத்தை ஒழிக்காமல் வாளாவிருப்பது முறையா? நன்ருக வாழ்வீராக!

11. நீலகண்டத்தையுடைய திருவாரூர்த் திருமூலட்டானத்தில் எழுந்தருளியுள்ள பெருமானே! அடிமையாகிய நம்பியாரூரன் கண்ணை இவ்வுலகத்தவர் அறியக் கெடுத்தீர்! அதனுல் நீங்களே பழிக்கு ஆளானீர்கள்! ஆயினும் கருணை வடிவான அம்பிகையைத் திருமேனியில் வைத்திருப்பவரே தேவரீர் வாழ்வீராக!





# சிவமயம்





# 18
# மறுமை இன்பம் மகிழ்வுடன் பெற



ஓம் காலாந்தகமூர்த்தயே நம :

ஓம் காமதஹநமூர்த்தயே நம :

## 1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

### திருஅம்பர்மாகாளம்

(மாயவரம்—திருவாரூர் மார்க்கத்தில் பூந்தோட்டம் என்ற இரயில் நிலையத்தினின்றும் ஒரு மைல் சென்றால் இத்தலத்தையடையலாம் இது கோயில் மாகாளம் என்றும் வழங்கப்படுகிறது. தேசப்படத்தில் 33 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

பண் - குறிஞ்சி] [1-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

அடையார் புரமூன்று மனல்வாய் விழவெய்து
மடையார் புனலம்பர் மாகா ளம்மேய
விடையார் கொடியெந்தை வெள்ளைப் பிறைசூடும்
சடையான் கழலேத்தச் சாரா வினைதானே. 1

தேனார் மதமத்தம் திங்கள் புனல்சூடி
வானார் பொழிலம்பர் மாகா ளம்மேய
ஊனார் தலைதன்னிற் பலிகொண் டுழல்வாழ்க்கை
ஆனான் கழலேத்த வல்ல லடையாவே. 2

திரையார் புனலோடு செல்வ மதிசூடி
விரையார் பொழிலம்பர் மாகா ளம்மேய
நரையார் விடையூரு நம்பான் கழல்நாளும்
உரையா தவர்கண்மே லொழியா வூனம்மே. 3

கொந்தண் பொழிற்சோலைக் கோல வரிவண்டு
மந்தம் மலியம்பர் மாகா ளம்மேய
கந்தங் கமழ்கொன்றை கமழ்புன் சடைவைத்த்
எந்தை கழலேத்த விடர்வந் தடையாவே. 4

அணியார் மலைமங்கை யாகம் பாகமாய்
மணியார் புனலம்பர் மாகா ளம்மேய
துணியா ருடையினன் றுதைபொற் கழலுளும்
பணியா தவர்தம்மேற் பறையா பாவம்மே. 5

பண்டாழ் கடனஞ்சை யுண்டு களிமாந்தி
வண்டார் பொழிலம்பர் மாகா ளம்மேய
விண்டார் புரம்வேவ மேருச் சிலையாகக்
கொண்டான் கழலேத்தக் குறுகா குற்றம்மே. 6

மிளிரும் மரவோடு வெள்ளைப் பிறைசூடி
வளரும் பொழிலம்பர் மாகா ளம்மேய
கிளருஞ் சடையண்ணல் கேடில் கழலேத்தத்
தளரும் முறுநோய்கள் சாருந் தவந்தானே. 7

கொலையார் மழுவோடு கோலச் சிலையேந்தி
மலையார் புனலம்பர் மாகா ளம்மேய
இலையார் திரிசூலப் படையான் கழலுளும்
நிலையா நினைவார்மே னில்லா வினைதானே. 8

சிறையார் வரிவண்டு தேனுண் டிசைபாட
மறையார் நிறையம்பர் மாகா ளம்மேய
நறையார் மலரானும் மாலுங் காண்பொண்ணு
இறையான் கழலேத்த வெய்தும் மின்பம்மே. 9

மாசூர் வடிவின்னர் மண்டை யுணல்கொள்வார்
கூசா துரைக்குஞ்சொற் கொள்கை குணமல்ல
வாசார் பொழிலம்பர் மாகா ளம்மேய
ஈசா வென்பார்கட் கில்லை யிடர்தானே. 10

வெருநீர் கொளவோங்கும் வேணு புரந்தன்னுள்
திருமா மறைஞான சம்பந் தனசேணர்
பெருமான் மலியம்பர் மாகா ளம்பேணி
உருகா வுரைசெய்வா ருயர்வா னடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—காளகண்டேசுவரர் தேவி :—பட்சநாயகி

பதிக வரலாறு :—திருப்புகலூரை விட்டு நீங்கிய திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசு சுவாமிகளும் முதலில் நாவுக்கரசுகள் ஒரு தலத்துக்குச் செல்வது என்றும் பின்னர் அதே தலத்துக்கு திருஞானசம்பந்தரும் சிவிகை ஊர்ந்து செல்வது என்றும் முடிவு செய்தபடி தொடங்கிய யாத்திரையில் முன்னுறச் சென்றது, அம்பர் என்னும் திருப்பதியாகும், இதன்கண் உள்ள ஆலயம் மாகாளம் எனப்படும், சேர்த்து அம்பர் மாகாளம் என வழங்கப் படுகிறது. அங்கு இறைவனை மலர்தூவி வழிபட்டுப் பாடிய வண்டமிழ் மாலைகளுள் இது ஒன்று.

பொழிப்புரை :

1. சிவ பக்தியினின்றும் நீங்கினவர்களின் முப்புரங்களையும் நெருப்பின் வாயில் விழும்படி எய்து நீர்வளம் மிகுந்த அம்பர் மாகாளத்தில் கோயில் கொண்டுள்ள இடபக்கொடியுடைய எம் தந்தை, வெள்ளைப்பிறை சூடும் சடையினை யுடையவன் அவன் கழல்களைத் தொழ வினைகள் வந்து சாரா.

2. தேன் பொருந்திய ஊமத்த மலரும் பிறைச்சந்திரனும் கங்கையும் தலையில் சூடி வானுயர்ந்த சோலைகள் நிறைந்த அம்பர் மாகாளத்தைக் கோயிலாகக் கொண்டு, உலர்ந்த தலையில் பிச்சை யேற்று உழலும் வாழ்க்கை உடையோனை அவனுடைய பாதங்களைத் தொழுது வணங்கத் துன்பங்கள் வந்து சேரா.

3. அலைகள் பொருந்திய கங்கை நதியுடன் பிறைச்சந்திரனை யும் சூடி வாசம் மிகுந்த சோலைகள் கொண்ட திருஅம்பர் மாகாளத்தில் கோயில் கொண்டுள்ள வெள்ளை நிறமுடைய எருதினை வாகனமாகக் கொண்ட நம் பெருமானின் திருப்பாதங்களைத் தினந் தோறும் வணங்கித் துதிக்காதவர்களுடைய குற்றங்கள் ஒழிய மாட்டா. (துதிப்பவரது குற்றங்கள் ஒழியும் என்பது கருத்து.)

4. குளிர்ச்சி பொருந்திய நந்தவனங்களும், சோலைகளும், அழகிய வண்டுகளும், தென்றல் காற்றும் நிறைந்த திருஅம்பர் மாகாளத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ள மணம் வீசுகின்ற கொன்றை மாலையினைத் தம் சடையில் வைத்த எம்தந்தையாகிய சிவபெருமானின் பாதங்களை வணங்கித் துதிக்க துன்பங்கள் வந்து சாரா.

5. அழகிய மலைகளைத் தன் சரீரத்தில் பாகமாய்க் கொண்டு மணிகள் நிறைந்த நீர்ப்பெருக்கினையுடைய திருஅம்பர் மாகாளத்தில் கோயில் கொண்டுள்ள கோவண உடையானுடைய பொற்கழல்களைத் தினந்தோறும் பணியாதவர்களுடைய பாவங்கள் தொலைந்து போகா.

6. பழைய காலத்திலே ஆழமான கடல் நஞ்சினை உண்டு அதனால் துன்பமடையாமல் இன்பமேயுற்று வண்டுகள் பொருந்திய சோலைகளுடைய அம்பர் மாகாளத்தில் கோயில் கொண்டுள்ள மாற்றாருடைய முப்புரங்கள் வேகும்படியாக மேருவை வில்லாகக் கொண்டவனுடைய கழல்களை வணங்க குற்றங்கள் வந்து நம்மை யடையா.

7. விளங்குகின்ற பாம்போடு வெள்ளைப் பிறைச் சந்திரனைச் சூடி மேலும் மேலும் வளருகின்ற பொழில்களையுடைய திருஅம்பர் மாகாளத்தை உறைவிடமாகக் கொண்ட ஒளி வீசுகின்ற சடையையுடைய அண்ணலின் என்றும் அழிவில்லாத திருப்பாதங்களை வணங்க நம்மிடத்துள்ள நோய்களெல்லாம் மெலிந்து தொலையும். தவமும் நம்மை வந்தடையும்.

8. கொலை செய்தற்குரிய மழுவாயுதத்தோடு அழகிய வில்லை யும் கையிலேந்தி மலையினின்று வருகின்ற நீர் சூழ்ந்த திருஅம்பர் மாகாளம் மேவிய மூவிலைச் சூலப்படையானுடைய திருப்பாதங் களை நாள்தோறும் நிலையாக நினைப்பவரிடம் வினைகள் தங்கி நிற்கமாட்டா.

9. சிறகுகளையுடைய வண்டு தேனினையுண்டு இசைபாட வேதியர்கள் நிறைந்து உள்ள திருஅம்பர் மாகாளம் மேவிய, பிரம விட்டுணுக்கள் காண்பதற்கரிய இறைவனுடைய திருப்பாதங்களை வணங்க இன்பம் வந்து சாரும்.

10. அழுக்கு நிறைந்த மேனியினையுடைய சமணர்களும், மண்டை யோட்டிலே உணவு கொள்ளும் சாக்கியர்களும் கூசாமல் உரைக்கும் சொற்களிலே உள்ள கொள்கை நல்லனவல்ல. வாசனை பொருந்திய சோலைகளையுடைய திருஅம்பர் மாகாளத்தில் கோயில் கொண்டுள்ள 'ஈசா' என்று துதிப்பவர்களுக்கு இடர்கள் இல்லை.

11. யாவரும் அஞ்சுகின்ற ஊழி வெள்ளத்தால் உலகம் கொள்ளப்பட்டபொழுது தான்மிதக்கும் வேணுபுரம் என்னும் சீகாழியில் தெய்வத்தன்மை பொருந்திய மறைஞானசம்பந்தன் பாடலை எம்பெருமான் கோயில் கொண்டுள்ள திருஅம்பர் மாகா ளத்தைத் தொழுது மனமுருகிப் பாடுபவர்கள் உயர்ந்த வானு லகத்தை அடைவார்கள்.



# 8. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

## பஞ்சாட்சரத் திருப்பதிகம்

பண் - காந்தாரபஞ்சமம்] [3-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

துஞ்சலும் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமின் நாள்தொறும்
வஞ்சகம் அற்றடி வாழ்த்த வந்தகூற்று
அஞ்சஉ தைத்தன அஞ்செ ழுத்துமே. 1

மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன
செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ்செ ழுத்துமே. 2

ஊனிலு யிர்ப்பை ஒடுக்கி எண்சுடர்
ஞானவி ளக்கினை ஏற்றி நன்புலத்து
ஏனைவ ழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆனகெ டுப்பன அஞ்செ ழுத்துமே. 3

நல்லவர் தீயரெ னாது நச்சினர்
செல்லல் கெடச்சிவ முத்தி காட்டுவ
கொல்லந மன்தமர் கொண்டு போமிடத்து
அல்லல்கெ டுப்பன அஞ்செ ழுத்துமே. 4

கொங்கலர் வன்மதன் வாளி யைந்தகத்
தங்குள பூதமும் அஞ்ச வைம்பொழில்
தங்கர வின்படம் அஞ்சுந் தம்முடை
அங்கையில் ஐவிரல் அஞ்செ ழுத்துமே. 5

தும்மல் இருமல் தொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்
அம்மையி னுந்துணை அஞ்செ ழுத்துமே. 6

வீடுபி றப்பை யறுத்து மெச்சினர்
பீடைகெ டுப்பன பின்னை நாடொறும்
மாடுகொ டுப்பன மன்னு மாநடம்
ஆடியு கப்பன அஞ்செ ழுத்துமே. 7

வண்டம ரோதி மடந்தை பேணின
பண்டையி ராவணன் பாடி யுய்ந்தன
தொண்டர்கள் கொண்டு துதித்த பின்னவர்க்கு
அண்டம் அளிப்பன அஞ்செ ழுத்துமே. 8

கார்வணன் நான்முகன் காணு தற்கொணுச்
சீர்வணச் சேவடி செவ்வி நாடொறும்
பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட்கு
ஆர்வண மாவன அஞ்செ ழுத்துமே. 9

புத்தர்ச மண்கழுக் கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்கள் தெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வி னைப்பகைக்கு
அத்திர மாவன அஞ்செ ழுத்துமே. 10

நற்றமிழ் ஞானசம் பந்தன் நான்மறை
கற்றவன் காழியர் மன்னன் உன்னிய
அற்றமில் மாலையீ ரைந்தும் அஞ்செழுத்
துற்றன வல்லவர் உம்ப ராவரே. 11

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு :**—மறையனைத்தும் ஓதாதுணர்ந்த திருஞான சம்பந்தர்க்கு உபநயன காலத்தில் மறை நான்கும் தந்தோம் என்றனர் அந்தணர். அவர் முன்னே எண்ணிறந்த வேதங்களை ஓதினர் திருஞானசம்பந்தர். அந்தணர் யாவரும் அவரை வணங்கித் தமக்குற்ற ஐயங்களையெல்லாம் தீர்த்துக்கொண்டனர். மேலும் அவர்கள் தெளிவுறும் வண்ணம் மந்திரங்கட்கெல்லாம் முதன்மையானது திருவைந்தெழுத்தேயாகும் என்று அறிவுறுத்தும் வகையால் இத்திருப்பதிகத்தை யருளிச் செய்தார்.

**பொழிப்புரை :**

1. தூங்கும்போதும் விழித்துக்கொண்டிருக்கும்போதும் மனம் நைந்து உருகி நாள்தோறும் நினையுங்கள். வஞ்சகமில்லாமல் இறைவன் திருவடியை வாழ்த்திய மார்க்கண்டேயர் மேல் வந்த இயமனை உதைத்தன திருவைந்தெழுத்தேயாகும்.

2. மந்திரங்களாகவும், நான்கு வேதங்களாகவும் ஆகி தேவர்களுடைய சிந்தையினுள்ளும் நின்று அவர்களை ஆள்வன; எரியோம்பிச் செந்நெறி நிற்கும் வேதியர்கட்கு காலை, உச்சி, மாலை ஆகிய மூன்று சந்தி வேளைகளிலும் செபிக்க வேண்டிய திருமந்திரம் திருவைந்தெழுத்தேயாகும்.

3. உடம்பில் பிராணயாமத்தால் மூச்சையடக்கும் நிலையில் ஞான ஒளிச் சுடர் விளக்கினை யேற்றி நல்ல மெய்யறிவாகிய மற்றைய வழியைத் திறந்து ஏத்துவோர்க்கு இடர்களானவற்றைக் கெடுப்பன திருவைந்தெழுத்தேயாகும்.

4. நல்லவர்கள் தீயவர்கள் என்ற பேதம் இன்றி தன்னை விரும்பிச் செபித்தவருடைய துன்பங்கள் நீங்கி முத்தியடையும் மார்க்கத்தைக் காட்டுவன. எமதூதர்கள் கொல்லுவதற்குக் கொண்டு போமிடத்துங்கூட அங்கும் துன்பத்தைக் கெடுப்பன திருவைந்தெழுத்தேயாகும்.

5. மன்மத பாணங்கள் ஐந்து. பூதங்களும் ஐந்து. பாம்பின் படம் ஐந்து. கற்பகச் சோலைகள் ஐந்து. செபிப்போருடைய கைவிரல் ஐந்து. இவ்வண்ணம் ஐவகையாய்க் காணப்படும் யாவற்றுக்கும் காரணமானது திருவைந்தெழுத்தேயாகும்.

6. தும்மல் இருமல், முதலியன தொடர்ந்து வந்தபோதும் (இக்காலத்தும் உயிர் நீங்குவது உண்டு). கொடிய நரக வேதனை களை யனுபவிக்கும் வண்ணம் அவை வந்தபோதும், முந்தைய பிறவியில் செய்த வினைகள் வருத்த இப்பிறவியிற் சார்ந்த போதிலும், இப்பிறவியில் துணையாய் நிற்பது மட்டுமன்றி மறுமைத் துணையாக விருப்பனவும் திருவைந்தெழுத்தேயாகும்.

7. மரணம், மீண்டும் பிறப்பு இவற்றை யறுத்து இத்திரு மந்திரத்தைப் பாராட்டிச் செபிப்பவரது துன்பங்களைத் தவிர்ப் பன. துன்பங்களை நீக்கியபின் தினமும் செல்வங்கள் யாவுங் கொடுப்பன. நிலைபெற்ற நடனத்தையாடி மகிழ்வன திருவைந் தெழுத்துக்களேயாகும்.

8. வண்டுகள் விரும்பும் கூந்தலுடைய உமாதேவியால் பாராட்டிச் செபிக்கப்பட்டன. இராவணன் முற்காலத்தில் பாடித் துன்பம் நீங்கி தேர், வாள், நீண்ட ஆயுள் முதலியவைகளைப் பெற்று உய்யக் காரணமாயிருந்தன. தொண்டர்கள் மனதிற் கொண்டு துதித்தபின் அவர்க்கு அண்டங்களையெல்லாம் அரசாளக் கொடுப்பன திருவைந்தெழுத்தேயாகும்.

9. திருமாலும் நான்முகனும் காணுதற்கரிய சேவடியின் பெருமையை நாள்தோறும் இறைவனுடைய திருப்பெயரின் மேன்மையைப் பலகாலும் பேசிவரும் பக்தர்களுக்கு தினைத்தற் கிடமாயிருப்பன திருவைந்தெழுத்துக்களே.

10. புத்தர்களும் சமணர்களும் பேசித் திரியும் பொய் வார்த்தைகளை மனதிற் கொள்ளாத தெளிந்த சித்தத்தவர்களால்

உறுதியுடன் கொள்ளப்பட்டன. சகல சக்தியுடைய திருநீற்றை யணிபவர்மேல் வரும் பகைவர்க்கெல்லாம் அவர்களை எதிர்த்துக் கொல்லும் அம்பு போன்றது திருவைந்தெழுத்தேயாகும்.

11. நன்னெறி கூட்டுவிக்கும் தமிழ் பரப்பும் திருஞானசம்பந்தன், நான்கு மறைகளும் கற்றவன், சீகாழி மக்கள் தலைவன், மனத்தில் தியானித்துப் பாடிய கேடுகள் யாவையும் இல்லையாகச் செய்யக்கூடிய திருவைந்தெழுத்தின் பெருமையை யடக்கிய இம்மாலையின் பத்துப் பாசுரங்கள் கற்று ஓதவல்லவர் தேவர்களாக ஆவார்கள்.



 சிவமயம் 



# 19

# பிறப்பும் இறப்பும் அற்றுப் போக (மோக்ஷமடைய)



ஓம் லகுளேச்வரமூர்த்தயே நம : ஓம் பைரவமூர்த்தயே நம :

## 1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### திருப்பிரமபுரம்

### திருவெழுகூற்றிருக்கை

பண் - **வியாழக்குறிஞ்சி]** **[1-ஆம் திருமுறை**

*திருச்சிற்றம்பலம்*

*ஓருரு வாயினே மானாங் காரத்*
*தீரியல் பாயொரு விண்முதல் பூதலம்*
*ஒன்றிய விருசுட ரும்பர்கள் பிறவும்*
*படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினே*
*இருவரோ டொருவ னாகி நின்றனே*

*ஓரா னீழ லொண்கழ லிரண்டும்*
*முப்பொழு தேத்திய நால்வர்க் கொளிநெறி*
*காட்டினே நாட்ட மூன்றுகக் கோட்டினே*
*இருநதி யரவமோ டொருமதி சூடினே*
*ஒருதா ளீரயின் மூவிலேச் சூலம்*

*நாற்கான் மான்மறி யைந்தலே யரவம்*
*ஏந்தினே காய்ந்த நால்வாய் மும்மதத்*
*திருகோட் டொருகரி யீடழித் துரித்தனே*
*ஒருதனு விருகால் வளேய வாங்கி*
*முப்புரத் தோடு நானில மஞ்சக்*

*கொன்று தலத்துற வவுணரை யறுத்தனே*
*ஐம்புல னாலா மந்தக் கரணம்*
*முக்குண மிருவளி யொருங்கிய வானோர்*
*ஏத்த நின்றனே யொருங்கிய மனத்தோ*
*டிருபிறப் போர்ந்து முப்பொழுது குறைமுடித்து*

நான்மறை யோதி யைவகை வேள்வி
அமைத்தா றங்க முதலெழுத் தோதி
வரன்முறை பயின்றெழு வான்றனை வளர்க்கும்
பிரமபுரம் பேணினை
அறுபத முரலும் வேணுபுரம் விரும்பினை

இகலிய மைந்துணர் புகலி யமர்ந்தனை
பொங்குநாற் கடற்சூழ் வெங்குரு விளங்கினை
பாணிமூ வுலகும் புதையமேன் மிதந்த
தோணிபுரத் துறைந்தனை தொலையா விருநிதி
வாய்ந்த பூந்தராய் ஏய்ந்தனை

வரபுர மென்றுணர் சிரபுரத் துறைந்தனை
ஒருமலை யெடுத்த விருதிற லரக்கன்
விரல்கெடுத் தருளினை புறவம் புரிந்தனை
முந்நீர்த் துயின்றோ னான்முக னறியாப்
பண்பொடு நின்றனை சண்பை யமர்ந்தனை

ஐயுறு மமணரு மறுவகைத் தேரரும்
ஊழியு முணராக் காழி யமர்ந்தனை
எச்சனே ழிசையோன் கொச்சையை மெச்சினை
ஆறு பதமு மைந்தமர் கல்வியும்
மறைமுத னான்கும்

மூன்று காலமுந் தோன்ற நின்றனை
இருமையி னொருமையு மொருமையின் பெருமையும்
மறுவிலா மறையோர்
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணிய னறியும்

அனைய தன்மையை யாதலி னின்னை
நினைய வல்லவ ரில்லை நீணிலத்தே.

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு** :—சிவபாத ஹிருதயர் தமது பூசைக் காலத்து நாள்தோறும் பிள்ளையாரது புத்தி, முத்திகளைத் தரத்தக்க திருப்பதிகங்களை ஓதும் நியமமுடையவராய் இருத்தலையும், திருப்பதிகங்களும் நாளும் பெருகி எண்ணிறந்தவாதலின், அக்கருத்து அவர்க்கு முற்றுப் பெறுதல் அரிதாதலையும் அறிந்த பிள்ளையார், இத்திருவெழுகூற்றிருக்கையைத் திருவாய் மலர்ந்தருளித் தமது பிதாவுக்கு அருளி "இதனை ஓதின் எல்லாப் பதிகங்களையும் ஓதியபேறு உண்டாகும்" என்று கூறியருளினர்.

எனவே, அன்பர்கள் இதனைப் பொருளுணர்ந்து பக்தி சிரத்தையுடன் ஓதி வந்தால் எல்லாவிதமான இகபர லாபங்களைப் பெறலாம் என்பது உறுதி.



திருஞானசம்பந்தருக்குத்
திருமணம் நடந்த இடம்
(ஆச்சாள்புரம் கோயில்)



கல்யாண சம்பந்தர்
ஆச்சாள்புரம்

இத்திருப்பதிகம் ஒரு சித்திரக்கவி வகையைச் சேர்ந்தது. ஒன்று முதல் ஏழுவரை எண்கள் மாறி மாறி வருமாறு திருஞான சம்பந்த சுவாமிகள் இதனை யருளிச் செய்தார். பின்வரும் இம்மாதிரியான சித்திரக் கவிகளுக்கு இது மூல இலக்கியமாக விளங்கியது எனச் சேக்கிழார் சுவாமிகள் பாராட்டியுள்ளார்கள்.

பொழிப்புரை :

முழுமுதற் கடவுள் இறைவன். இவன் சிவபெருமான். இவனே படைத்துக் காத்து அழிக்க மும்மூர்த்திகளாயினன். இவனே கல்லாலின் நீழலிலிருந்து பிரமபுத்திரர் நால்வருக்கும் ஞானோபதேசஞ் செய்தான். பிறைச்சந்திரனைச் சடையில் சூடினன். மான், மழு, அக்னி, சூலம் முதலியவற்றைத் தரித்துள்ளான். திரிபுரசம்மாரஞ் செய்தான். சீகாழி என்னும் திவ்ய தலத்தினை மிக விரும்பி அதில் எழுந்தருளியுள்ளான். ஏனெனில், அங்கு மறையவர்கள் ஒழுக்கத்துடன் நான்கு வேதங்கள் ஆறு அங்கங்கள் மற்றுமுள்ள சாத்திரங்களை முறையாகக் கற்றுத் தெளிந்தவர்கள். சீகாழிக்குப் பன்னிரண்டு திருநாமங்களுண்டு. அவையாவன: (1) பிரமபுரம், (2) வேணுபுரம், (3) புகலி, (4) வெங்குரு, (5) தோணி புரம், (6) பூந்தராய், (7) சிரபுரம், (8) புறவம், (9) சண்பை, (10) சீகாழி, (11) கொச்சைவயம், (12) கழுமலம் என்பன. இப் பன்னிரு பெயர்களைக் கொண்ட பிரமபுரத்தில் எழுந்தருளியுள்ள பெருமானை இப்பதிகத்தால் ஏத்தி வழிபாடு செய்தல் அவரது திருப்பாடல்கள் அனைத்தையும் ஓதியதாகப் பலன் தரும்.

## 2. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### நமச்சிவாயத் திருப்பதிகம்

### திருநல்லூர்ப்பெருமணம்

(விழுப்புரம் — மாயவரம் மார்க்கத்தில் கொள்ளிடம் இரயில் நிலயத்தினின்றும் கிழக்கே 3 மைல். தற்பொழுது ஆச்சாள்புரம் என்று வழங்கப்படுகிறது. தேசப் படத்தில் 34 என்கிற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

பண் - கௌசிகம்] [3-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே. 1

நம்பு வாரவர் நாவி னவிற்றினுல்
வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொ ஞர்தில கம்முல குக்கெலாம்
நம்பன் நாமம் நமச்சி வாயவே. 2

நெக்கு ளார்வ மிகப்பெரு கிந்நினை ந்
தக்கு மாலைகொ டங்கையில் எண்ணுவார்
தக்க வானவ ராத்தகு விப்பது
நக்கன் நாமம் நமச்சி வாயவே. 3

இயமன் தூதரும் அஞ்சுவர் இன்சொலால்
நயம்வந் தோதவல் லார்தமை நண்ணினுல்
நியமந் தான்நினை வார்க்கினி யான்நெற்றி
நயனன் நாமம் நமச்சி வாயவே. 4

கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனும் இயம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையும் நீங்குவ ரென்பரால்
நல்லார் நாமம் நமச்சி வாயவே. 5

மந்த ரம்மன பாவங்கள் மேவிய
பந்த னையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமும் மல்குமால்
நந்தி நாமம் நமச்சி வாயவே. 6

நரக மேழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயினர் ஆயின் உருத்திரர்
விரவியே புகு வித்திடு மென்பரால்
வரதன் நாமம் நமச்சி வாயவே. 7

இலங்கை மன்னன் எடுத்த அடுக்கல்மேல்
தலங்கொள் கால்விரல் சங்கரன் ஊன்றலும்
மலங்கி வாய்மொழி செய்தவன் உய்வகை
நலங்கொள் நாமம் நமச்சி வாயவே. 8

போதன் போதன கண்ணனும் அண்ணல்தன்
பாதந் தான்முடி நேடிய பண்பராய்
யாதுங் காண்பரி தாகி அலந்தவர்
ஓதும் நாமம் நமச்சி வாயவே. 9

கஞ்சி மண்டையர் கையிலுண் கையர்கள்
வெஞ்சொல் மிண்டர் விரவில ரென்பரால்
விஞ்சை யண்டர்கள் வேண்ட அமுதுசெய்
நஞ்சுண் கண்டன் நமச்சி வாயவே. 10

நந்தி நாமம் நமச்சிவா யவெனும்
சந்தை யால்தமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யால்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாசம் அறுக்கவல் லார்களே. 11

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு**:—திருநல்லூர்ப்பெருமணம் என்னும் பதியில் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளின் திருமணம் முடிந்ததும் இந்த இல்லொழுக்கம் வந்து சார்ந்ததே! இவள் தன்னோடும் அந்தமில் சிவன் தாள் சேர்வன் என்னும் ஆதரவு பொங்க, உறவினரும் தொண்டர் கூட்டமும் சூழ அவ்வூர் ஆலயத்தை நோக்கி வந்தார். திருக்கோயிலுட் சென்று உன்னுடைய பாத நிழலில் சாரும் பருவம் வந்ததென்று பாடவும் இறைவன் "நீயும் பூவையன்னாளும் இங்குன் புண்ணிய மணத்தின் வந்தார் யாவரும் எம்பாற்சோதி இதனுள் வந்து எய்தும்" என்று மூவுலகும் ஒளியால் பொங்க ஒரு சோதி வடிவாக கோயில் உள்பட மேல் எழுந்து ஓங்கி அதனுள் ஒரு வாயிலையும் வகுத்துக் காட்டியருளினார். அப்போது திருஞானசம்பந்தர் நீண்ட சுடர் வடிவாய அப்பரமனைத் தொழுது போற்றி, இவ்வுலகமெல்லாம் உய்யும் வழியை அருளிச் செய்வாராய் "ஞான மெய்ந்நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொலாம்" என்று ஆனசீர் நமச்சிவாயத் திருப்பதிகத்தை வானமும் நிலனுங் கேட்க அருள் செய்து "இம்மணத்தில் வந்தோர் ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக" என்று அருளிச் செய்ய பிறவி வெள்ளத்திலேயழுந்திக் கிடந்து வரம்பு காணாது துயரக் கூட்டில் மயங்குவார்கள், இத்திருமணம் சேவிக்க வந்த சிறப்பினாலே தமது பிறப்பு நீங்க (பிறப்பிறப்பில்லாப் பேரின்ப நிலையடைய) அச்சோதியுட் புகுந்தனர். சிவபாதவிருதயர், திருநீலநக்க நாயனார், திருமுருக நாயனார், நம்பாண்டார் நம்பி, திருநீலகண்டயாழ்ப்பாணர். மற்றும் திருமணம் சேவிக்க வந்தோர்கள், திருவருள் துணை கூட்ட வீடுபெற வந்தோர்கள், திருமணத்தில் தொண்டு செய்ய வந்தோர்கள், தொண்டர்கள், பரிசனங்கள், சிவிகை சுமந்து செல்பவர்கள் யாவரும் இச்சோதியுட் புக்கு இறைவன் திருவருளில் கலந்தஉடன் திருஞானசம்பந்த மூர்த்திகளும் காதலியைக் கைப்பற்றிக்கொண்டு வலஞ் செய்தருளி "நாதன் எழில் வளர் சோதி நண்ணியதன் உட்புக்கு போதநிலை முடிந்த வழிப்புக்கொன்றி உடனானார்." பின்னர் சோதி மறைந்து பழையபடி இறைவனுடைய கோயிலாகத் தோன்றியது. இதனை

ஓதும் அன்பர்கள் சகல நலன்களும் இம்மையில் பெற்றுப் பெரு வாழ்வு வாழ்ந்து பின்னர் பிறப்பிறப்பில்லாப் பேரின்ப நிலையடைவர் என்பது உறுதி.

பொழிப்புரை :

1. உள்ளன்பு கொண்டு மனங்கசிந்து கண்ணீர் பெருகித் தன்னை செபிப்பவர்களை முத்தி நெறியாகிய நன்னெறிக்குக் கூட்டுவிப்பதும் நான்கு வேதங்களிலும் உண்மைப் பொருளாக விளங்குவதும் எல்லோர்க்கும் பதியாகிய சிவபெருமானின் நாமமாகிய 'நமச்சிவாய' என்ற திருவைந்தெழுத்தேயாகும்.

2. இறைவன் கழலையே நம்புபவர்கள் தங்கள் நாவினால் உச்சரித்தால் மணம் மிகுந்த புதிய மலர்களின் தேன்போல இனிமை பயப்பதும் இந்த உலகுக்கெல்லாம் செம்பொற்திலகம் போன்றதும் நம்பனாகிய பரமனின் திருநாமமாகிய 'நமச்சிவாய' என்ற திருவைந்தெழுத்தேயாகும்.

3. மன நெகிழ்ந்து பொங்கி எழும் அன்பு மேலும் பெருகி நினைத்துத் தமது கையில் உருத்திராக்க மாலை கொண்டு விதிப்படி எண்ணிச் செபிப்பவர்களைத் தக்கபடி தேவலோகத்தினராகச் செய்விப்பது சிவபெருமானுடைய திருநாமமாகிய 'நமச்சிவாய' என்ற திருமந்திரமேயாகும்.

4. இனிமையான சொற்களால் நயம்பட ஓதவல்லவர்களை எவரேனும் அண்டினால் அங்ஙனம் அண்டியவர்களையுங் கண்டு இயமன் தூதர் அஞ்சுவர். அத்தகைய சிறப்பு வாய்ந்தது யாதெனின் நியமமாக தியானிப்பவர்க்கு இனியவனும் நெற்றிக் கண்ணனுமான பரமசிவனின் திருநாமமாகிய 'நமச்சிவாய' என்ற திருவைந்தெழுத்தேயாகும்.

5. கொலைத்தொழில் உள்ளவர்களாக இருப்பினும், நற்குணமும், மற்றும் பல நன்மைகளும் இல்லாதவர்களாயினும் உச்சரிப்பார்களேயானால் எல்லாவிதமான தீங்குகளினின்றும் நீங்குவர் என்று மேலோர் கூறுவர். அத்தகையது எல்லார்க்கும் நல்லவராகிய சிவபிரானின் திருநாமமாகிய 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்தேயாகும்.

6. மந்தரமலை போன்ற பாவங்களைச் செய்த பந்தங்கள் உடையோரும் உச்சரிப்பார்களேயானால் அவர்களுடைய கொடிய வினைகள் சிதைந்து போகும். செல்வமும் பெருகும். அத்தகைய சிறப்பு கொண்டது சிவபிரானின் திருநாமமாகிய 'நமச்சிவாய' என்ற திருவைந்தெழுத்தேயாகும்.

7. ஏழு வகையான நரகமும் செல்ல வேண்டிய நிலையில் உள்ளவர் ஆயினும் உச்சரித்தார்களேயானால் அவர்களை உருத்திர

கணங்களோடு சேர்ந்து வசிக்கச் செய்யும் என்று பெரியோர் கூறுவர். அத்தகைய மந்திரம் வரந்தருவோனாகிய சிவபிரானின் திருநாமமாகிய 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்தேயாகும்.

8. இலங்கைக்கு மன்னனாகிய இராவணன் பெயர்த்தெடுக்க முயன்ற திருக்கயிலாய மலையின்மேல் எழுந்தருளியுள்ள சங்கரன் தன் கால் விரலை ஊன்றலும் அதனால் நெரிபட்டு அவன் கலங்கி வாய் விட்டரற்ற அவனுக்கும் உய்யும் வகையை அருளினது நன்மையைச் செய்வதையே இயல்பாகக் கொண்ட இறைவன் திருநாமமாகிய 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்தேயாகும்.

9. பிரமதேவனும் திருமாலும் சிவபெருமானின் திருமுடியையும் திருவடியையும் தேடுந்தன்மையை மேற்கொண்டவராய் திருமுடியையோ அல்லது திருவடியையோ காண்பது அரிதாகி வருந்தி அவர்கள் பின் ஓதி அருள் பெற்ற நாமம் 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்தேயாகும்.

10. தேவர்கள் வேண்ட அமுது செய்த நஞ்சினை உட்கொண்ட கண்டனாகிய சிவபெருமானின் திருநாமமாகிய 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்தையே புத்தர்களும் சமணர்களும் ஆகிய கொடுஞ் சொற்களையுடையோர் அடைந்திலர் என்று நல்லோர்கள் கூறுவர்.

11. சிவபெருமானது திருநாமமும் மந்திரமுமாகிய 'நமச்சிவாய' என்னும் சொல் முடிவால் தமிழ்வல்ல திருஞானசம்பந்தன் உரைத்த இப்பதிகத்தை மனத்தினால் மகிழ்ச்சி கொண்டு ஏத்த வல்லவர்கள் எல்லாரும் பந்தம், பாசம் ஆகியவற்றை அறுக்க வல்லவர்கள் ஆவார்கள். (பந்தமும் பாசமும் அற்றுப்போனால் கிட்டுவது பிறப்பிறப்பில்லாப் பேரானந்தமேயாகும்).



# 3. திருநாவுக்கரசு நாயனுர்

## திரு அங்கமாலை

## திருப்பூந்துருத்தி

(தஞ்சாவூர் இரயில் நிலையத்தினின்றும் சுமார் 8 மைல் தூரத்தில் உள்ளது இத்தலம். தேசப் படத்தில் 22 என்கிற எண்ணுல் குறிப்பிடப் பட்டிருக்கிறது.)

பண் - சாதாரி] [4-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

தலையே நீ வணங்காய் — தலைமாலை தலைக்கணிந்து
தலையாலே பலி தேருந் தலைவனைத் — தலையே நீ வணங்காய். 1

கண்காள் காண்மின்களோ — கடல் நஞ்சுண்ட கண்டன் றன்னை
எண்டோள் வீசி நின்றுடும் பிரான் தன்னைக் — கண்காள்
காண்மின்களோ. 2

செவிகாள் கேண்மின்களோ — சிவன் எம்மிறை செம்பவள
எரிபோல் மேனிப்பிரான் திறம் எப்போதுஞ் — செவிகாள்
கேண்மின்களோ. 3

மூக்கே நீ முரலாய் — முதுகாடுறை முக்கணனை,
வாக்கே நோக்கிய மங்கை மணுளனை — மூக்கே நீ முரலாய். 4

வாயே வாழ்த்து கண்டாய் — மதயானை யுரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும் பிரான்தன்னை — வாயே வாழ்த்து
கண்டாய். 5

நெஞ்சே நீ நினையாய் — நிமிர் புன்சடை நின்மலனை
மஞ்சாடும் மலை மங்கை மணுளனை — நெஞ்சே நீ நினையாய். 6

கைகாள் கூப்பித்தொழீர் — கடிமாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்பரையார்த்த பரமனைக் — கைகாள் கூப்பித்
தொழீர். 7

ஆக்கை யாற்பயனென் — அரன் கோயில் வலம் வந்து
பூக்கை யால்அட்டிப் போற்றியென்ஞதஇவ் — ஆக்கை
யாற்பயனென். 8

கால்க ளாற்பயனென் — கறைக் கண்டனுறை கோயில்
கோலக் கோபுரக் கோகர ணஞ்சூழாக் — கால்களாற் பயனென். 9

உற்று ராருளரோ — உயிர்கொண்டு போம்பொழுது
குற்றா லத்துறை கூத்தனல் லால்நமக் — குற்றார் ஆருளரோ. **10**

இறுமாந்திருப்பன் கொலோ — ஈசன் பல்கணத் தெண்ணப்பட்டுச்
சிறுமா னேந்திதன் சேவடிக்கீழ்ச் சென்றங் — கிறுமாந் திருப்பன்
கொலோ. **11**

தேடிக்கண்டு கொண்டேன் — திருமாலொடு நான்முகனும்
தேடித்தே டொணுத் தேவனை என்னுளே — தேடிக் கண்டு
கொண்டேன். **12**

*திருச்சிற்றம்பலம்*

**பதிக வரலாறு** :—திருநாவுக்கரசு சுவாமிகள் திருவையாற்றில் திருக்கயிலைக் காட்சியைத் தரிசித்த பின்னர் திருநெய்த்தானம் முதலிய பதிகளை வணங்கித் திருப்பூந்துருத்தியைச் சேர்ந்து திங்களும் ஞாயிறுந் தோயும் திருமடமொன்று செய்து அங்குத் தங்கித் திருத்தொண்டு புரிந்து வரும்போது பாடிய திருப்பதிகங்களில் இது ஒன்று. மனித உடலின் புறஉறுப்புக்களும் அகஉறுப்புக்களும் எல்லாம் சிவபெருமானை வழிபட்டு நலமடைவதற்காகவே படைக்கப்பட்டன. எனவே அவ்வுறுப்புக்கள் எவ்வாறு வழிபட வேண்டும் என்பதை அறிவுறுத்தும் பதிகம் இது. சேக்கிழார் பெருமான் தமது பெரிய புராணத்தில் இப்பதிகத்தைக் குறிப்பிடும் போது "செல்கதி காட்டிடப் போற்றுந் திருவங்கமாலையும்" எனப் போற்றியுள்ளார் எனின் இப்பதிகத்தின் பயனை அன்பர்கள் நன்கு தெரிந்துகொள்ளலாம்.

**இதன் பொருள்** :—வெளிப்படை. எனவே விரிவஞ்சி சிறு குறிப்புகள் மட்டும் தரப்பட்டுள்ளன.

1. தலைமாலை - பிரம விஷ்ணுக்களின் தலைகளாலாகிய மாலை; தலையாலே பலிதேரும் - பிரமனுடைய மண்டையோட்டிலே பிச்சை யேற்பவனை.

2. எண்டோள் - எட்டுத் தோள்கள்.

3. செம்பவளம் போன்றதும், எரியினை யொத்ததுமான திருமேனியுடையவன்.

4. முரலல் - மெல்லிய ஒலியால் போற்றுதல்.

6. மஞ்சு - மேகம்.

8. ஆக்கை - உடம்பு.

9. கோகரணம் - துளுவநாட்டில் பாடல் பெற்ற தலம்.

11. சிறுமானேந்தி - சிவபெருமான்.



பொற்ருமரைக்குளம்
மதுரை மீனுக்ஷி கோயில்



# சிவமயம்





20

சிவாபசாரம்
சாராது விலக



ஓம் ஆபதோத்தாரணமூர்த்தயே நம :

ஓம் வடுகமூர்த்தயே நம :

## நக்கீரதேவ நாயனர்

பெருந்தேவபாணி] [11-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

சூலபாணியைச் சுடர்தரு வடிவனை
நீலகண்டனை நெற்றியோர் கண்ணனை
பால்வெண் ணீற்றனை பரம யோகியை
காலனைக் காய்ந்த கறைமிடற் றண்ணலை
நூலணி மார்பனை நுண்ணிய கேள்வியை
கோல மேனியை கொக்கரைப் பாடலை
வேலுடைக் கையனை விண்டோய் முடியனை
ஞாலத் தீயினை நாதனைக் காய்ந்தனை
தேவ தேவனை திருமறு மார்பனை
கால மாகிய கடிகமழ் தாரனை
வேத கீதனை வெண்டலை யேந்தியை
பாவ நாசனை பரமேச் சுவரனை
கீதம் பாடியை கிளர்பொறி யரவனை
போதணி கொன்றையெம் புண்ணிய வொருவனை
ஆதி மூர்த்தியை யமரர்கள் தலைவனை
சாதி வானவர் தம்பெரு மான்றனை
வேத விச்சையை விடையுடை யண்ணலை
ஓத வண்ணனை யுலகத் தொருவனை
நாத னாகிய நன்னெறிப் பொருளினை

மாலை தானெரி மயானத் தாடியை
வேலை நஞ்சினை மிகவமு தாக்கியை
வேத வேள்வியை விண்ணவர் தலைவனை
ஆதி மூர்த்தியை யருந்தவ முதல்வனை
ஆயிர நூறுக் கறிவரி யானையேயே
உருவு தந்த பிறையணி சடையனை
மாசறு சோதியை மலைமகள் கொழுநனை
கூரிய மழுவனை கொலற்கருங் காலனைச்
சீரிய வடியாற் செற்றருள் சிவனை
பூதிப் பையனை புண்ணிய மூர்த்தியை
பீடுடை யாற்றைப் பிரானனி தலைவனை
நீடிய நிமலனை நிறைமறைப் பொருளினை
ஈசனை இறைவனை யிறில் பெருமையை
நேசனை நினைப்பவர் நெஞ்சத் துள்ளனை
தாதணி மலரனை தருமனை பிரமனை
காதணி குழையனை களிற்றி னுரியனை
சூழ்சடைப் புனலனை சுந்தர விடங்கனை
தார்மலர்க் கொன்றை தயங்கு மார்பனை
வித்தக விதியனை
தீதமர் செய்கைத் திரிபுர மெரித்தனை
பிரமன் பெருந்தலை நிறைய நாகக்
கருமன் செந்நீர் கபால நிறைத்தனை
நிறைத்த கபாலச் செந்நீர் நின்று
முறைத்த வுருவா ரையனைத் தோற்றினை
தேவருஞ் சுரருந் திறம்படக் கடைந்த
ஆர்வமு ணஞ்ச மமுத மாக்கினை
யீரமி னெஞ்சத் திராவ ணன்றனை
வீர மழித்து விறல்வாள் கொடுத்தனை
திக்கமர் தேவருந் திருந்தாச் செய்கைத்
தக்கன் வேள்வியைத் தளரச் சாடினை
வேதமு நீயே வேள்வியு நீயே
நீதியு நீயே நிமல நீயே
புண்ணிய நீயே புனித னீயே
பண்ணிய நீயே பழம்பொருளீயே
ஊழியு நீயே யுலகமு நீயே
வாழியு நீயே வரதனு நீயே

தேவரு நீயே தீர்த்தமு நீயே
மூவரு நீயே முன்னெறி நீயே
மால்வரை நீயே மறிகட லீயே
இன்பமு நீயே துன்பமு நீயே
தாயு நீயே தந்தையு நீயே
விண்முதற் பூத மைந்தவை நீயே
புத்தியு நீயே முத்தியு நீயே
சொலற்கருந் தன்மைத் தொல்லோய் நீயே (மதுரைக்)
கூட லாலவாய்க் குழகனாவது
அறியா தருந்தமிழ் பழித்தன னடியேன்
ஈண்டிய சிறப்பி னிணையடிக் கீழ்நின்று
வேண்டு மதுவினி வேண்டுவன் விரைந்தே.

வெண்பா

விரைந்தேன் மற்றெம் பெருமான் வேண்டியது வேண்டா
திகழ்ந்தேன் பிழைத்தே னடியேன்—விரைந்தென்மேல்
சீற்றத்தைத் தீர்த்தருளு தேவாதி தேவனே
ஆற்றவு நீசெய்யு மருள்.

திருச்சிற்றம்பலம்

**வரலாறு :**—இது நக்கீரதேவ நாயனாரால் மதுரையில் அருளிச் செய்யப்பெற்றது. இது பதினோராந்திருமுறையிலுள்ள நாற்பது பிரபந்தங்களுள் ஒன்று.

திருவாலவாய்ச் சுந்தரேசப்பெருமான் தருமி என்கிற ஆதி சைவனுக்குக் "கொங்கு தேர் வாழ்க்கை" எனத் தொடங்கும் பாசுரத்தை எழுதிக்கொடுத்து அக்காலத்து மதுரையை ஆண்ட சண்பகமாற பாண்டியன் சபைக்கு அனுப்பினார். அவ்வரசன் தன் மனத்தில் கொண்டிருந்த ஐயத்திற்கு இது விடையாக அமைந்தது. இதனைக் கண்டதும் அரசன் மகிழ்ந்து "தன் மனத்திலுள்ள சந்தேகத்தைத் தெளிவிப்பவர்களுக்கு ஒரு ஆயிரம் பொன் கொண்ட ஒரு பொற்கிழியை யளிப்பதாகக்" கூறிச் சங்க மண்டபத்தில் தொங்கவிடப்பட்டிருந்த பொற்கிழியை யறுத்து எடுத்துக் கொள்ளும்படித் தருமியைப் பணிக்க, அவ்வாறே, தருமியும் சங்க மண்டபம் சென்று அரசன் கட்டளையைத் தெரிவிக்க அனைவரும் ஒப்புக்கொண்டனர். ஆனால் நக்கீரதேவர் மட்டும் தருமி கொண்டு வந்த இறைவன் பாட்டில் பொருட்குற்றமிருப்பதாக ஆக்ஷேபித்து கிழியைக் கொடுக்க மறுத்தார். தருமியும் வருத்தத்துடன்

சுந்தரேசப்பெருமானிடம் சென்று நிகழ்ந்ததைச் சொல்ல இறைவனும் ஒரு புலவர் வேடத்துடன் சங்க மண்டபம் வந்து தம் பாட்டிற்குக் குற்றம் கூறியவர் யார் என்றார். நக்கீரரும் அஞ்சாது தானே கூறியதாகச் சொன்னார். இறைவன் தன் நெற்றிக்கண்ணைச் சிறிது திறந்து காட்ட அதற்கும் அஞ்சாது கீரன் "உடம்பெல்லாம் கண்ணைக் காட்டினாலும் தங்கள் பாட்டுக்குக் குற்றம் குற்றமே. செய்யுட்குற்றமில்லை. ஆனால் பொருட்குற்றமென்றார். இறைவன் நெற்றிக்கண் அனலால் காயப்பட்ட நக்கீரர் வெப்பத்தால் வாடி வருந்திப் பொற்றாமரைத் தீர்த்தத்தில் இறங்கிவிட்டார். பிறகு மற்றப் புலவர்கள் வேண்டுகோளுக்கிசைந்த பரமன் கருணையினால் கீரனைக் கரையேற்றிப் பொருளிலக்கணமும் அகத்தியரைக் கொண்டு உபதேசம் செய்வித்தார். பிறகு நக்கீரர் தாம் முன் பாடிய பாடல்களிலுள்ள பிழைகளைத் திருத்திக் கொண்டதுமல்லாமல், தான் இறைவனுக்குச் செய்த அபசாரத்தை நினைந்து வருந்தி இப்பதிகத்தைப் பாடிப் பரமனருள் பெற்றார்.

எனவே அன்பர்கள் இதனை பக்தி சிரத்தையுடன் ஓதிச் சிவாபராதத்தினின்றும் விடுபடுவார்களாக.

குறிப்பு :—பொருள் வெளிப்படை. ஆதலால் விரித்துப் பொருள் கூறவில்லை.





# சிவமயம்





# 21

# நாளும் கோளும் நலியாதிருக்க



ஓம் க்ஷேத்ரபாலகமூர்த்தயே நம :　　　　ஓம் வீரபத்ரமூர்த்தயே நம :

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### கோளறு திருப்பதிகம்

### திருமறைக்காடு

(வேதாரணியம் என்ற பெயரில் வழங்கப்படும் தலம். திருத்துறைப் பூண்டி—கோடிக்கரை மார்க்கத்தில் வேதாரணியம் இரயில் நிலையத்தினின்றும் அரை மைலில் உள்ளது ஆலயம். தேசப் படத்தில் 36 என்கிற எண்ணுல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

பண் - பியந்தைக்காந்தாரம்]　　　　[2-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

வேயுறு தோளிபங்கன் விடமுண்டகண்டன்
　　மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள்கங்கை முடிமே லணிந்தென்
　　உளமே புகுந்த அதனுல்
ஞாயிறு திங்கள் செவ்வாய்புதன் வியாழன் வெள்ளி
　　சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவை நல்லநல்ல
　　அடியா ரவர்க்கு மிகவே. 1

என்பொடு கொம்பொடாமை இவைமார் பிலங்க
　　எருதேறி ஏழையுடனே
பொன்பொதி மத்தமாலை புனல்சூடி வந்தென்
　　உளமே புகுந்த அதனுல்
ஒன்பதொ டொன்றொ டேழு பதினெட்டொ டாறும்
　　உடனய நாட்க ளவைதாம்
அன்பொடு நல்லநல்ல அவை நல்லநல்ல
　　அடியா ரவர்க்கு மிகவே. 2

உருவளர் பவளமேனி ஒளிநீ றணிந்து
உமையோடும் வெள்ளை விடைமேல்
முருகலர் கொன்றை திங்கள் முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
திருமகள் கலையதூர்தி செயமாது பூமி
திசை தெய்வ மான பலவும்
அருநெதி நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 3

மதிநுதல் மங்கை யோடு வடவா லிருந்து
மறையோது மெங்கள் பரமன்
நதியொடு கொன்றை மாலை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
கொதியுறு காலன் அங்கி நமனோடு தூதர்
கொடு நோய்க ளான பலவும்
அதிகுண நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 4

நஞ்சணி கண்டன் எந்தை மடவாள்த னோடும்
விடையேறும் நங்கள் பரமன்
துஞ்சிருள் வன்னி கொன்றை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
வெஞ்சின அவுணரோடும் உருமிடியும் மின்னும்
மிகையான பூத மவையும்
அஞ்சிடும் நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 5

வாள்வரி அதளதாடை வரிகோவ ணத்தர்
மடவாள் தனோடும் உடனாய்
நாண்மலர் வன்னி கொன்றை நதிசூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
கோளரி உழுவை யோடு கொலையானை கேழல்
கொடு நாகமோடு கரடி
ஆளரி நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 6

செப்பிள முலைநன் மங்கை ஒருபாகம் ஆக
விடையேறு செல்வன் அடைவார்
ஒப்பிள மதியும் அப்பும் முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
வெப்பொடு குளிரும்வாத மிகையான பித்தும்
வினையான வந்து நலியா
அப்படி நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 7

வேள்பட விழிசெய் தன்று விடைமேல் இருந்து
மடவாள் தனோடும் உடனாய்
வாண்மதி வன்னி கொன்றை மலர் சூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
ஏழ்கடல் சூழிலங்கை அரையன்ற னோடும்
இடரான வந்து நலியா
ஆழ்கடல் நல்லநல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 8

பலபல வேட மாகும் பரன்நாரி பாகன்
பசுவேறும் எங்கள் பரமன்
சலமக ளோடெருக்கும் முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
மலர்மிசை யோனும் மாலும் மறையோடு தேவர்
வருகால மான பலவும்
அலைகடல் மேருநல்ல அவை நல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 9

கொத்தலர் குழலியோடு விசையற்கு நல்கு
குணமாய வேட விகிர்தன்
மத்தமும் மதியும் நாகம் முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
புத்தரொ டமணை வாதில் அழிவிக்கும் அண்ணல்
திருநீறு செம்மை திடமே
அத்தகு நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 10

தேனமர் பொழில்கொ ளாலை விளைசெந்நெல் துன்னி
வளர்செம்பொ னெங்கும் நிகழ
நான்முக னாதியாய பிரமா புரத்து
மறைஞான ஞான முனிவன்
**தானுறு கோளும் நாளும் அடியாரை வந்து
நலியாத வண்ணம் உரைசெய்**
ஆனசொன் மாலை ஓதும் அடியார்கள் வானில்
அரசாள்வர் ஆணை நமதே. 11

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு** :—திருநாவுக்கரசு சுவாமிகளும் திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளும் சேர்ந்து செய்த யாத்திரையில் திருமறைக்காடு என்னும் வேதாரணியம் என்னும் தலத்தில் எழுந் தருளியிருக்கும்போது பாண்டிய நாட்டில் மதுரைமாநகரில் அக்

காலத்து அரசாட்சி நடத்திய கூன்பாண்டியர் வலிய ஊழ்வினை காரணமாக வேதப்பயனுஞ் சைவநன்னெறியை விட்டுச் சமண் சமயப் படுகுழியில் வீழ்ந்து ஆழ்ந்தார். மன்னவன் எவ்வழி மன்னுயிர் அவ்வழி என்பதற்கேற்ப அந்நாட்டு மக்களும் அவ்வாறேயாயினர். இதனல் மனங்கலங்கிய சிவநெறியிற்சிறந்த பாண்டிமாதேவியாகிய மங்கையர்க்கரசியாரும் மந்திரி குலச்சிறையாரும் திருஞானசம்பந்தமூர்த்திகள் நிகழ்த்திய அற்புதங்கள் யாவுமறிந்து அவர் தற்பொழுது வேதாரணியத்தில் எழுந்தருளியிருக்கின்ற செய்தியையும் கேட்டறிந்து அவரால் தம்மரசனையும் தம் நாட்டையும் மீண்டும் சைவநன்னெறியைத் தழுவுமாறு செய்யத் திருவருளால் விருப்பம் ஏற்பட அவர்பால் திருமுகத்துடன் சில பரிசனங்களையனுப்பினர். அரசியாரும் அமைச்சரும் விடுத்த பரிசனங்கள் மூலம் விஷயமறிந்த திருஞானசம்பந்தர் அவர்க்கருள் செய்து திருக்கோயிலுக்குச் சென்று சிவபெருமானை வணங்கி விடைபெற்றுத் திருக்கோபுரவாயிலுக்கு எழுந்தருளி திருநாவுக்கரசுகளிடம் செய்தி சொல்லித் தாம் மதுரை நகர் செல்லத் துணிந்து விடைகோரியபோது திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தப் பிள்ளையாரை நோக்கி, "பிள்ளாய்! சமணர் கொடுந்தொழிலில் வல்லவர். மேலும் நாள்களும் கோளும் இப்போது தங்கட்கு நலமில. எனவே, தாங்கள் இப்போது அங்கு எழுந்தருள அடியேன் இசையேன்" என்று கூற அதனைக்கேட்ட பிள்ளையார், "நாம் தொழுவது பரமன் கழல்கள் என்றால் நமக்கு எவ்வித கெடுதியும் நேராது. பாண்டி நாடு சென்று திருநீற்று நெறிபோற்றியிருக்கும் அவ்விருவரையும் சென்று கண்டு அந்நாட்டில் சமண் நிலையை அழிவித்துச் சைவநெறி வளர்த்தன்றி வேறொன்றுஞ்செய்யேன். இஃது உம்மாணை" என்று பதில்கூறி சிவபெருமானை உள்ளத்துக் கொண்டொழுகும் அடியார்களுக்கு நாள்களும் கோள்களும் ஒன்றும் இடர் செய்யா; அவை நல்லனவேயாகும் என்ற கருத்தை வலியுறுத்திய இத்திருப்பதிகத்தை உலகம் உய்ய அருளிச்செய்து பின் அப்பர் சுவாமிகள் இசைவையும் பெற்றுப் பாண்டி நாட்டிற்கு எழுந்தருளினர் என்பது வரலாறு.

குறிப்பு :—இத்திருப்பதிகத்தைப் பக்தி சிரத்தையுடன் ஓதினல் நாள்கள் கோள்கள் இவற்றால் வரும் இடையூறுகளை மட்டுந்தான் தீர்க்கலாம் என்று எண்ணவேண்டா. இப்பதிகபடனத்தால் யம பயம் நீங்கும். நெருப்பு, இடி, காற்று, மின்னல், பூத பிரேத பிசாசுகளால் வரும் துன்பம், துஷ்ட விலங்குகளால் ஏற்படும் ஆபத்துக்கள், வாத பித்த சிலேத்துமங்களால் உண்டாகும் கொடிய பிணிகள், அசுரகுணமுடைய மக்களால் வரும் பயங்கள், கடல் கொந்தளிப்பால் ஏற்படும் துன்பம் முதலிய யாவும் தொலைந்து போகும். யாத்திரை மேற்கொள்பவர்க்கும் இடையூறு ஏதும் இன்றி சுகமாய் முடியும். சிறப்பாகத் துன்பங்கள்

யாவுந்தொலைந்து இன்பமாய் வாழலாம் என்பது தான் அருள் நெறியொழுகும் அருந்தவத்தோர் கண்ட முடிவு.

பொழிப்புரை :

1. மூங்கில் போன்ற தோளையுடைய உமாதேவியை ஒரு பாகத்தில் கொண்டவரும், விடம் உண்டு கறுத்த கண்டத்தை யுடையவரும் ஆகிய சிவபெருமான் மிகச் சிறந்த வீணையை மீட்டிக் கொண்டும் குற்றமற்ற பிறைச்சந்திரனையும், கங்காநதியையும் சடையிலே அணிந்துகொண்டும் என்னுடைய உள்ளத்தில் புகுந்து தங்கியுள்ள காரணத்தினால் சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், குரு, சுக்கிரன், இராகு, கேது ஆகிய ஒன்பது கிரகங்களும் நலத்தையே செய்வன. சிவனடியார்களுக்கு குற்றமில்லாத மிக்க நலத்தையே செய்வனவாகும்.

2. எலும்பு, பன்றியின் கொம்பு, ஆமையின் ஓடு இவைகள் தமது மார்பில் அழகு செய்ய எருதின் மீது தேவியுடன் ஏறி பொன்னிறமுள்ள ஊமத்தம்பூ மாலையையும், கங்கா நதியையும் தலைமீது சூடிக்கொண்டு என்னுடைய உள்ளத்தில் புகுந்து தங்கியிருக்கும் காரணத்தால் அசுவனி முதலாக எண்ணினால் ஒன்பதாவது நட்சத்திரமாகிய ஆயில்யம், பத்தாவதாகிய மகம், பதினாறுவதாகிய விசாகம் பதினெட்டாவதாகிய கேட்டை, ஆறுவதாகிய திருவாதிரை அவைகளுடன் சேர்த்துச் சொல்லப்படுவனவாகிய பரணி, கார்த்திகை, பூசம், சித்திரை, சுவாதி, பூராடம், பூரட்டாதி என்னும் மற்றைய நாட்களும் அன்புடன் நல்லனவற்றையே செய்வனவாகும். சிவனடியார்களுக்கு மிகுந்த நல்லனவற்றையே செய்வனவாகும்.

3. அழகு வளர்கின்ற பவளத்தை யொத்த செம்மேனிமீது வெண்ணீற்றையணிந்துகொண்டு விடைமீது ஏறி கொன்றை மாலையையும், சந்திரனையும் சிரத்தின்மீது சூடிக்கொண்டு உமா தேவியுடன் சிவபெருமான் என் உள்ளத்தில் புகுந்து தங்கியிருக்கும் காரணத்தினால் திருமகள், கலைமகள், துர்க்கை, பூமிதேவி, மற்றும் எட்டுத் திக்குப் பாலகர்களும் பிற தெய்வங்களும் நல்லனவே யாகும். சிவனடியார்களுக்கு அவை மிகவும் நல்லனவேயாகும்.

4. கல்லால மரத்தின் கீழிருந்து வேதப்பொருளை நால்வர்க்கு உபதேசிக்கும் பெருமான், பிறைச்சந்திரனை யொத்த அழகிய நெற்றியையுடைய உமாதேவி, கங்கையுடன் கொன்றைமாலையைத் திருமுடியில் வைத்து என்னுடைய உள்ளத்திற் புகுந்து தங்கியிருக்குங் காரணத்தினால் கோபத்தையுடைய இயமனும், அக்கினியும், இயமதூதர்களும் மற்றும் கொடிய நோய்களும் நலத்தையே விளைவிப்பன. சிவனடியார்களுக்கு அவை மிகப் பெரிய நலத்தினையே விளைவிப்பனவாகும்.

5. நஞ்சை யணிந்த கண்டத்தையுடையவரும், எமது தந்தையும், உமாதேவியுடன் இடபத்தின்மீது ஏறுபவரும் ஆகிய நமக்குத் தலைவராகிய சிவபெருமான், வன்னியுடன் கொன்றை மாலையைத் தன் திருமுடியில் அணிந்துகொண்டு என் உள்ளத்தில் புகுந்து தங்கியிருக்கும் காரணத்தினால் கொடிய கோபத்தினை யுடைய அசுரர்களுடன் இடி, மின்னல், மற்றும் பூதங்களும் எல்லாம் அஞ்சிடும். நன்மையையே விளைவிக்கும். சிவனடியார் களுக்கு மிக்க நன்மையையே விளைவிப்பனவாகும்.

6. கோடுகளையுடைய புலித்தோல் ஆடையையும், வரிந்து கட்டிய கோவணத்தையுமுடைய சிவபெருமான் மணமுள்ள மலர் களுடன் வன்னி, கொன்றை, கங்கை இவற்றையும் திருமுடிமீது அணிந்துகொண்டு உமாதேவியுடன் ஒன்றாய் வந்து என் உள் ளத்திற் புகுந்து தங்கியிருக்கும் காரணத்தால் சிங்கம், புலி, கரடி, யானை, பன்றி, பாம்பு, மனிதக்குரங்கு ஆகியவைகள் நன்மை யையே செய்வன. சிவன் அடியார்கட்கு அவை மிக்க நன்மை யையே செய்வனவாகும்.

7. உமாதேவி ஒரு பக்கத்திலிருக்க இடபவாகனத்தில் ஏறி வரும் செல்வனாகிய சிவபெருமான் தம்மடியவர்கள் விரும்பும் பிறைச்சந்திரனையும், கங்கை நீரையும், திருமுடிமேலணிந்து கொண்டு என்னுள்ளத்தில் புகுந்து தங்கியிருக்கின்ற காரணத்தினால் வெப்பு, குளிர். வாதம், பித்தம் முதலியவற்றால் உண்டாகும் நோய்களும் மற்றும் தீவினைகளும் வந்து துன்புறுத்தா. அவைகள் நன்மையையே உண்டாக்கும். சிவனடியார்களுக்கு அவை மிகவும் நல்லனவேயாகும்.

8. மன்மதனை நெற்றிக்கண்ணால் எரித்து, உமாதேவியுடன் விடைமீது ஏறி சிவபெருமான் பிறைச்சந்திரனையும் வன்னியிலை யையும் கொன்றை மலர்களையும் திருமுடிமேல் அணிந்துகொண்டு என் உள்ளத்தில் புகுந்து தங்கியிருக்கும் காரணத்தினால் ஏழு கடல்கள் சூழ்ந்த இலங்கைக்கு அரசனான இராவணனுடன் மற்றும் ஆழம் மிக்க கடல்களும், பிற இடர்களும் வந்து துன்புறுத்தா. அவை மிக்க நல்லனவற்றையே விளைவிப்பனவாகும்.

9. பற்பல திருஉருவங்களைக் கொள்பவனும், அர்த்தநாரீச்சு வரனும், இடபவாகனத்தின்மீது ஏறுபவனும் ஆகிய எமது தலைவ னாகிய பரமசிவன், கங்கையுடன் எருக்க மலர்களையும் திருமுடியில் சூடி வந்து என் உள்ளத்தில் புகுந்து தங்கியிருக்கும் காரணத்தினால் பிரமதேவனும், திருமாலும் வேதங்களும், தேவர்களும், காலங் களும், கடலும், மேருமலையும் ஆகியவைனத்தும் நல்லனவே. சிவனடியார்களுக்கு அவை மிகுந்த நன்மையையே செய்வன வாகும்.

10. உமாதேவியுடன் வேட உருவில் வந்து அருச்சுனனுக்கு அருள்புரிந்த சிவபெருமான் ஊமத்தை மலரையும் பிறைச்சந்திரனையும் பாம்பினையும் தன் திருமுடிமேல் அணிந்துகொண்டு என்னுடைய உள்ளத்தில் புகுந்து தங்கியிருக்கும் காரணத்தினால் தெய்வத் தன்மையுடைய திருநீறானது புத்தரோடு சமணரையும் வாதத்தில் அழிவிக்கும். இது சிறந்த உறுதியாகும். அத்தகுதியினால் யாவும் நல்லனவேயாகும். சிவனடியார்களுக்கு மிகப் பெரிதும் நல்லனவேயாகும்.

11. தேன் ததும்பும் மலர்கள் நிறைந்த பூஞ்சோலைகளும், கரும்பு ஆலைகளும், விளையும் செந்நெற் பயிர்களும் நிறைந்து அதனால் சிறந்த செல்வவளம் மிக்கதும், பிரமதேவன் பூசித்து வழிபட்ட பிரமாபுரம் எனப்படுவதுமான சீகாழிப்பதியில் உதித்த வேதஞானமும், சிவஞானமும் ஒருங்கே பொருந்திய திருஞானசம்பந்தன் சூரியன் முதலிய நவக்கிரகங்களும், அசுவினி முதலிய இருபத்தியேழு நட்சத்திரங்களும், பிரதமை முதலிய பதினைந்து திதிகளும் சிவனடியார்களைச் சார்ந்து துன்புறுத்தாத வண்ணம் உரை செய்த பாமாலையை பக்தியுடன் ஓதும் அடியவர்கள் மேலுலகத்தில் ஆட்சி புரிவார்கள். இது நமது ஆணை.





திருவதிகை கோயில்
(தென்னுற்காடு ஜில்லா)

 **சிவமயம்** 



ஓம் அகோராஸ்தரமூர்த்தயே நம :

# 22
# எம்பெருமானின் திருவடிப் பெருமை



ஓம் தக்ஷயஜ்ஞஹதமூர்த்தயே நம :

## திருநாவுக்கரசு நாயனர்
### திருவடித் திருத்தாண்டகம்
### திருவதிகைவீரட்டானம்

[6-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

அரவணையான் சிந்தித் தரற்றும்மடி
அருமறையான் சென்னிக் கணியாமடி
சரவணத்தான் கைதொழுது சாரும்மடி
சார்ந்தார்கட் கெல்லாஞ் சரணமடி
பரவுவார் பாவம் பறைக்கும்மடி
பதினெண் கணங்களும் பாடும்மடி
திரைவிரவு தென்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. 1

கொடுவினையா ரென்றுங் குறுகாவடி
குறைந்தடைந்தார் ஆழாமைக் காக்கும்மடி
படுமுழவம் பாணி பயிற்றும்மடி
பதைத்தெழுந்த வெங்கூற்றைப் பாய்ந்தவ்வடி
கடுமுரணே றூர்ந்தான் கழற்சேவடி
கடல்வையங் காப்பான் கருதும்மடி
நெடுமதியங் கண்ணி யணிந்தானடி
நிறைகெடில வீரட்டம் நீங்காவடி. 2

வைதெழுவார் காமம்பொய் போகாவடி
வஞ்சவலைப் பாடொன் றில்லாவடி
கைதொழுது நாமேத்திக் காணும்மடி
கணக்கு வழக்கைக் கடந்தவ்வடி



திருநின்ற செம்மையே செம்மையாக்கொண்ட
திருநாவுக்கரசு நாயனுர்
(திருவாமூர் குருபூஜை அப்பர்)

நெய்தொழுது நாமேத்தி ஆட்டும்மடி
நீள்விசும்பை ஊடறுத்து நின்றவ்வடி
தெய்வப் புனற்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. 3

அரும்பித்த செஞ்ஞாயி றேய்க்கும்மடி
அழகெழுத லாகா அருட்சேவடி
சுரும்பித்த வண்டினங்கள் சூழ்ந்தவ்வடி
சோமனையுங் காலனையுங் காய்ந்தவ்வடி
பெரும்பித்தர் கூடிப் பிதற்றும்மடி
பிழைத்தார் பிழைப்பறிய வல்லவ்வடி
திருந்துநீர்த் தென்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. 4

ஒருகாலத் தொன்றாகி நின்றவ்வடி
ஊழிதோ றூழி உயர்ந்தவ்வடி
பொருகழலும் பல்சிலம்பும் ஆர்க்கும்மடி
புகழ்வார் புகழ்தகைய வல்லவ்வடி
இரு நிலத்தார் இன்புற்றங் கேத்தும்மடி
இன்புற்றார் இட்டபூ ஏறும்மடி
திருவதிகைத் தென்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. 5

திருமகட்குச் செந்தா மரையாமடி
சிறந்தவர்க்குத் தேனாய் விளைக்கும்மடி
பொருளவர்க்குப் பொன்னுரையாய் நின்றவ்வடி
புகழ்வார் புகழ்தகைய வல்லவ்வடி
உருவிரண்டு மொன்றோடொன் றொவ்வாவடி
உருவென் றுணரப் படாதவ்வடி
திருவதிகைத் தென்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. 6

உரைமாலை யெல்லா முடையவ்வடி
உரையா லுணரப் படாதவ்வடி
வரைமாதை வாடாமை வைக்கும்மடி
வானவர்கள் தாம்வணங்கி வாழ்த்தும்மடி
அரைமாத் திரையி லடங்கும்மடி
அகலம் அளக்கிற்பா ரில்லாவடி
கரைமாக் கலிக்கெடில நாடன்னடி
கமழ்வீரட் டானக் கபாலிய்யடி. 7

நறுமலராய் நாறும் மலர்ச்சேவடி
நடுவா யுலகநா டாயவ்வடி
செறிகதிருந் திங்களுமாய் நின்றவ்வடி
தீத்திரளா யுள்ளே திகழ்ந்தவ்வடி
மறுமதியை மாசு கழுவும்மடி
மந்திரமுந் தந்திரமும் ஆயவ்வடி
செறி கெடில நாடர் பெருமானடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. 8

அணியனவுஞ் சேயனவு மல்லாவடி
அடியார்கட் காரமுத மாயவ்வடி
பணிபவர்க்குப் பாங்காக வல்லவ்வடி
பற்றற்றார் பற்றும் பவளவ்வடி
மணியடி பொன்னடி மாண்பாமடி
மருந்தாய்ப் பிணிதீர்க்க வல்லவ்வடி
தணிபாடு தண்கெடில நாடன்னடி
தகைசார்வீ ரட்டத் தலைவன்னடி. 9

அந்தா மரைப்போ தலர்ந்தவ்வடி
அரக்கனையும் ஆற்ற லழித்தவ்வடி
முந்தாகி முன்னே முளைத்தவ்வடி
முழங்கழலாய் நீண்டஎம் மூர்த்தியடி
பந்தாடு மெல்விரலாள் பாகன்னடி
பவளத் தடவரையே போல்வானடி
வெந்தார் சுடலைநீ றாடும்மடி
வீரட்டங் காதல் விமலன்னடி. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**வீரட்டானேசுவரர்** தேவி :—**திரிபுரசுந்தரி**

**பதிக வரலாறு** :—திருநாவுக்கரசு சுவாமிகள் திருவதிகை வீரட்டானேசுவரரை வணங்கி அங்குத் திருத்தொண்டு செய்து கொண்டிருந்த நாட்களில் பாடியருளிய மனம் பரிவுறு செந்தமிழ்ப் பாட்டுக்களில் இதுவுமொன்று. இறைவனுக்குரிய பெருமைகள் யாவும் அவனது திருவடிக்கே உரியனவாகக் கூறப்பட்டுள்ள தாதலில் திருவடித்திருத்தாண்டகம் எனப்படும். இதனை உள்ளன் புடன் ஓதி இறைவனின் திருவடிப்பெருமையை உணர்வோமாக.

**பதிகப் பொருள்** :—வெளிப்படை : எனவே விரிவஞ்சி இன்றி யமையாக் குறிப்புக்கள் மட்டும் தரப்பட்டுள்ளன.

1. அரவணையான் - திருமால் ; அருமறையான் - பிரமதேவன் ; சரவணத்தான் - முருகன்.

2. குறுகா - சென்றடையாத ; குறைந்து - நலிந்து.

3. வைதல் - இன்னா கூறுதல் ; கணக்கு வழக்கு - பண்ணாலும் சொற்றொடர்களாலும் நிர்ணயித்துக் கூறமுடியாத பெருமை யுடையது.

4. அரும்பித்த செஞ்ஞாயிறு - உதயசூரியன் ; பெரும்பித்தர் - பேரன்பர்கள் ; பிழைத்தார் - தவறு செய்தவர்கள்.

5. ஒரு காலத்தொன்றாகி - ஒரு காலத்திலேயே மூவுருவமும் ஒன்றாகி நின்ற நிலை (ஏகபாத மூர்த்தி) ; பொருகழலும் பல் சிலம்பும் - அப்பனும் அம்மையுமாய நிலை.

6. திருமகட்குச் செந்தாமரை - இலக்குமிதேவியின் நிலை யான வாசஸ்தலம் ; (இறைவன் திருவடி செல்வத்துக்கு இருப் பிடம் என்பது கருத்து). உருவிரண்டு மொன்றோடொன்றொவ்வா - ஆணும் பெண்ணுமாய உருவம்.

7. உரையால் உணரப்படாத - மாற்றம் மனங்கழிய நின் றோன் (திருவாசகம்) ; அரை மாத்திரை - பிரணவத்தில் அரை மாத்திரையான மகர ஒற்று ; அகலம் - வியாபகம்.

8. தீத்திரள் - ஒளிப்பிழம்பு ; மந்திரம் - வேதம் ; தந்திரம் - ஆகமம்.

9. அணியனவும் சேயனவும் - அடியார்க்கு அணியன் ; அல்லார்க்குச் சேயன். பிணி - இங்குப் பிறவி நோய் குறித்தது ; தகைசார் - பெருமை பொருந்திய.

10. முந்தாகி - எல்லாவற்றிற்கும் முன்னேயாகி ; முன்னே முளைத்தல் - மற்றைய எல்லாப் பொருட்களின் தோற்றத்துக்கும் முன்னே தோன்றுதல் ; வெந்தார் நீறு - எரிக்கப்பட்டார் சாம்பல், இதனால் இறைவனின் அழிவின்றி நிற்கும் நிலையும் யாவும் அழிந்த பின் மீளத் தோன்றுவதற்கு முதலாக ஆகும் நிலையும் குறிக்கப் பட்டது.





# சிவமயம்







# 23

## பஞ்சக் கொடுமை பீடியாதிருக்க

ஓம் கிராதமூர்த்தயே நம :

ஓம் குருமூர்த்தயே நம :

## 1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### திருச்சோற்றுத்துறை

(இது திருச்சத்துறை என்றும் வழங்கப்படுகிறது. தஞ்சாவூர் இரயில் நிலையத்திலிருந்து திருவையாற்றுக்குப் போகும் மார்க்கத்தில் 7 மைல் சென்று திருக்கண்டியூர் என்ற தலத்தையடைந்து அங்கிருந்து தென் கிழக்காய் 2 மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம். தேசப் படத்தில் 37 என்ற எண்ணுல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

பண் - தக்கராகம்] [1-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

செப்ப நெஞ்சே நெறிகொள் சிற்றின்பம்
துப்ப னென்னு தருளே துணையாக
ஒப்ப ரொப்பர் பெருமான் ஒளிவெண்ணீற்று
அப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமே. 1

பாலும் நெய்யுந் தயிரும் பயின்றுடித்
தோலும் நூலுந் துதைந்த வரைமார்பர்
மாலுஞ் சோலை புடைசூழ் மடமஞ்ஞை
ஆலுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே. 2

செய்யர் செய்ய சடையர் விடையூர்வர்
கைகொள் வேலர் கழலர் கரிகாடர்
தைய லாளொர் பாக மாயஎம்
ஐயர் சோற்றுத் துறைசென் றடைவோமே. 3

பிணிகொ ளாக்கை யொழியப் பிறப்புளீர்
துணிகொள் போரார் துளங்கு மழுவாளர்
மணிகொள் கண்டர் மேய வார்பொழில்
அணிகொள் சோற்றுத் துறைசென் றடைவோமே. 4

பிறையும் அரவும் புனலுஞ் சடைவைத்து
மறையும் ஓதி மயானம் இடமாக
உறையுஞ் செல்வம் உடையார் காவிரி
அறையுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே. 5

துடிக ளோடு முழவம் விம்மவே
பொடிகள் பூசிப் புறங்கா டரங்காகப்
படிகொள் பாணி பாடல் பயின்றாடும்
அடிகள் சோற்றுத் துறைசென் றடைவோமே. 6

சாடிக் காலன் மாளத் தலைமாலை
சூடி மிக்குச் சுவண்டாய் வருவார்தாம்
பாடி யாடிப் பரவு வாருள்ளத்
தாடி சோற்றுத் துறைசென் றடைவோமே. 7

பெண்ணோர் பாகம் உடையார் பிறைச்சென்னிக்
கண்ணோர் பாகங் கலந்த நுதலினார்
எண்ணா தரக்கன் எடுக்க ஊன்றிய
அண்ணல் சோற்றுத் துறைசென் றடைவோமே. 8

தொழுவா ரிருவர் துயரம் நீங்கவே
அழலா யோங்கி அருள்கள் செய்தவன்
விழவார் மறுகில் விதியால் மிக்களம்
எழிலார் சோற்றுத் துறைசென் றடைவோமே. 9

கோது சாற்றித் திரிவார் அமண்குண்டர்
ஓதும் ஓத்தை யுணரா தெழுநெஞ்சே
நீதி நின்று நினைவார் வேடமாம்
ஆதி சோற்றுத் துறைசென் றடைவோமே. 10

அந்தண் சோற்றுத் துறைஎம் ஆதியைச்
சிந்தை செய்ம்மின் அடியா ராயினீர்
சந்தம் பரவு ஞான சம்பந்தன்
வந்த வாறே புனைதல் வழிபாடே. 11

திருச்சிற்றம்பலம்

**சுவாமி பெயர் :—தொலையாச்செல்வர்**
**ஓதவனேசுவரர்**

**தேவி :—ஒப்பிலாவம்மை**
**அன்னபூரணி**

**பதிகவரலாறு** :—திருஞானசம்பந்த சுவாமிகள் திருக்கண்டியூர் வீரட்டம் தொழுது பின் திருச்சோற்றுத்துறை என்னும் தலத்தினைத் தரிசிக்கத் திருவுளங்கொண்டு எழுந்தருளுகின்ற போது பாடியருளிய ஒப்பில்லா வண்டமிழ்மாலை இது எனப் பன்னிரண்டாம் திருமுறையாகிய பெரிய புராணம் கூறுகின்றது. அருளாளன் என்னும் அந்தண அன்பர்க்கு அட்சயபாத்திரம் அளித்துப் பஞ்ச காலத்தில் அடியார்கட்கு அன்னமிட்டுக் காத்த தலம். பஞ்சகாலத்தில் அன்னமிட்டுக் காக்கும் ஆற்றலைத் தவத்தால் பெற்றுப் பசிநோய் நீங்கப் பெருஞ்சோறளித்ததாக தேவி பாகவதம் போன்ற நூல்களில் கூறப்படும் கௌதமமுனிவர் தவஞ் செய்த இடமாகையால் கௌதமாச்ரமம் எனவும் வழங்கப்படும். இத்தகைய தல மகிமைகளையும் இறைவன், இறைவி திருப்பெயரையும் மனதில் கொண்டு இத்திருப்பதிகத்தைப் பக்தியுடன் பாராயணம் செய்யும் அன்பர்கள் பஞ்சக்கொடுமைகளினால் பாதிக்கப் படமாட்டார்கள். இறைவன் திருவருள் துணை நின்று காக்கும் என்பது உறுதி.

**பொழிப்புரை :**

1. இல்வாழ்வானுக்குரியதாக தரும நூல்களில் விதித்தபடி ஐம்பொறிகளால் நுகரப்படும் சிற்றின்பத்தையும் 'தான்' என்ற அகங்கார உணர்வு இன்றி 'இறைவன் அருளையே துணையாகக் கொண்டு நுகர்கின்றேன்' என்று சொல்ல எம்பெருமான் அதனையும் ஒப்புவர். அப்படிப்பட்ட பெருமான் ஒளி வீசுகின்ற வெண்ணீற்று அப்பர் உறையும் திருச்சோற்றுத்துறையைச் சென்று அடைவோம்.

2. பால், தயிர், நெய் இவைகளால் அபிஷேகஞ் செய்து கொண்டு, தோலாடையும், பூணூலும் தரித்த மலைபோன்ற மார்புடையவர். உயரத்தினால் பிரமிப்பை உண்டாக்குகின்ற சோலைகள் சூழ்ந்த, மயில்கள் நடமாடுகின்ற திருச்சோற்றுத்துறை சென்றடைவோம்.

3. சிவந்த திருமேனியுடையவர். செஞ்சடையுடையவர். இடபவாகனத்தின்மீது ஏறுவர். கையில் சூலம் உடையவர். வீரக்கழல்கள் அணிந்த கால்களையுடையவர். சுடுகாட்டில் நடிப்பவர். ஓர் பாகத்தில் அம்மையை உடைய எம்முடைய தலைவருடைய திருச்சோற்றுத்துறை சென்றடைவோம்.

4. நோயுற்ற உடலை ஒழிக்கவே இப்பிறப்பினையுடையவர்களே! துணிவு கொண்ட போரினையுடையவரும் விளங்குகின்ற மழுவாயுதத்தையுடையவரும் மணிகண்டப் பெருமானுமாகிய சிவபெருமான் மேவியதும் பொழில்களால் அழகு செய்யப்படுவதுமாகிய திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோம்.

5. பிறைச்சந்திரனையும், பாம்பையும், கங்கைநீரையும், சடைமீது வைத்து, வேதத்தினையும் ஓதி மயானமே இடமாக வசிக்கின்ற செல்வத்திற்சிறந்தவர் உறைகின்ற காவிரி மோதுகின்ற திருச்சோற்றுத்துறையினைச் சென்றடைவோம்.

6. உடுக்கை ஒலியோடு முழவ ஒலியும் சேர்ந்து பேரொலி செய்ய, சாம்பலைப் பூசி சுடுகாட்டையே நடன மேடையாகக் கொண்டு பாட்டின் தாளத்திற்கேற்பப் பயின்றாடும் நம்மடிகள் விரும்பி எழுந்தருளியிருக்கும் திருச்சோற்றுத்துறையினைச் சென்றடைவோம்.

7. இயமன் மாளும்படி உதைத்து, கபால மாலைகளைத் தரித்து மிக்க கம்பீரமாய் வருபவர், பாடியாடிப் பரவுவார் உள்ளத்தில் ஆடுபவருடைய திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோம்.

8. ஒரு பாகத்திலே பெண்ணையுடையவர். தலையில் பிறையினையுடையவர். நெற்றிக்கண்ணர். சிறிதும் பெருமான் திறத்தை யெண்ணாது கயிலை மலையினையெடுத்த இராவணன் வலிகெடக் கால் விரலால் ஊன்றிய பெருமையிற்சிறந்த சிவபெருமானது திருச்சோற்றுத்துறையினைச் சென்றடைவோம்.

9. இறைவன் திருமுடியும் அடியுங்காணாது வருந்திப் பின் தொழுத பிரமனும் திருமாலும் அடைந்த துயரம் நீங்கும்படி சோதியாய்த் தோன்றி அருள் செய்த பரமன் திருவிழாக்கள் பொருந்திய வீதிகளுடையதும், வேதநெறி மிகுந்ததுமான திருச்சோற்றுத்துறையினைச் சென்றடைவோம்.

10. குற்றமுடைய வார்த்தைகளையே சொல்லித்திரிகின்ற சமணர்கள் ஓதுகின்ற அவரது நூலைச் சிறிதும் மதியாது ஏ நெஞ்சமே! நீ எழுவாயாக. வேத ஆகம நெறியின்கண் நின்று நினைப்பவர்களது நினைவுக்கேற்ப உருக்கொண்டு அவர்கட்கருளும் ஆதிமுதல்வனாகிய சிவபெருமானின் திருச்சோற்றுத்துறையினைச் சென்றடைவோம்.

11. அடியார்களாயினீர்! அழகிய குளிர்ச்சி பொருந்திய திருச்சோற்றுத்துறை மேவிய ஆதிமுதல்வனைத் தியானஞ்செய்யுங்கள். இசையுடன் பரவுகின்ற திருஞானசம்பந்தன் திருஉளத்தே இறைவனருளால் வந்தவாறேயமைந்த இப்பதிகத்தைப் பாடுதலே அதற்குரிய வழிபாடாகும்.

குறிப்பு :—“அப்பர் சோற்றுத்துறை, ஐயர் சோற்றுத்துறை” என்பவை அப்பர்—ஐயர் விரும்பி எழுந்தருளியிருக்கும் திருச்சோற்றுத்துறை என்று பொருள் தருவதேயல்லாமல் அப்பராகிய சோற்றுத்துறை ஐயராகிய சோற்றுத்துறை, அதாவது சோறு பெறும் துறை என்றதொரு பொருளும் தருதல் காண்க.

# 2. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

## திருவிருக்குக்குறள்

## திருவீழிமிழலை

(மாயவரம்—திருவாரூர் மார்க்கத்தில் பூந்தோட்டம் இரயில் நிலையத்தினின்றும் சுமார் 6 மைல். தேசப் படத்தில் 38 என்கிற எண்ணுல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

பண் - குறிஞ்சி] [1-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

வாசி தீரவே, காசு நல்குவீர்
மாசின் மிழலையீர், ஏச லில்லையே. 1

இறைவ ராயினீர், மறைகொள் மிழலையீர்
கறைகொள் காசினை, முறைமை நல்குமே. 2

செய்ய மேனியீர், மெய்கொள் மிழலையீர்
பைகொள் அரவினீர், உய்ய நல்குமே. 3

நீறு பூசினீர், ஏற தேறினீர்
கூறு மிழலையீர்,பேறு மருளுமே. 4

காமன் வேவவோர், தூமக் கண்ணினீர்
நாம மிழலையீர், சேம நல்குமே. 5

பிணிகொள் சடையினீர், மணிகொள் மிடறினீர்
அணிகொள் மிழலையீர், பணிகொண் டருளுமே. 6

மங்கை பங்கினீர், துங்க மிழலையீர்
கங்கை முடியினீர், சங்கை தவிர்மினே. 7

அரக்கன் நெரிதர, இரக்க மெய்தினீர்
பரக்கு மிழலையீர், கரக்கை தவிர்மினே. 8

அயனு மாலுமாய். முயலு முடியினீர்
இயலு மிழலையீர், பயனு மருளுமே. 9

பறிகொள் தலையினர், அறிவ தறிகிலார்
வெறிகொள் மிழலையீர், பிறிவ தரியதே. 10

காழிமாநகர், வாழி சம்பந்தன்
வீழி மிழலைமேல், தாழு மொழிகளே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—நேத்திரார்ப்பணேசர் தேவி :—சுந்தரகுசாம்பிகை
வீழியழகேசுவரர்

**பதிக வரலாறு :—** திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும், திருநாவுக்கரசு சுவாமிகளும், திருவீழிமிழலையில் தங்கியிருந்தபோது பெரும் பஞ்சம் உண்டாயிற்று. அது காரணத்தால் உயிர்கள் பசியால் வாடின. அடியார்களும் வருத்தமடைந்தனர் நாயன்மார்கள் இருவரும் "கண்ணுதலான் திருநீற்றுச் சார்வினோர்க்கும் கவலை வருமோ" எனக் கருத்திற்கொண்டார்கள். அன்றிரவு துயிலும்போது பெருமான் கனவில் தோன்றி, "உலகியல்பு நிகழ்ச்சியால் அணைந்த இத்திய பசி நோய் உம்மை வருத்தாது என்றாலும் உம்மைச் சார்ந்த அடியார் வாட்டம் தீர நிதமும் பீடத்தின் கிழக்கும் மேற்குமாக ஒவ்வோர் காசு உமக்கு அளித்து வருவோம். இப்பஞ்ச காலம் தீர்ந்ததும் காசளிப்பதும் தவிர்ந்து போகும்" என அருளி அதன்படியே காசருள, அதுகொண்டு அடியார் ஆயினோர் எல்லாருடைய பசியும் நீக்கி வந்த காலத்து திருஞானசம்பந்தர் வட்டம் கொடுத்து மாற்ற வேண்டிய காசு பெற்றதால் தம் திருமடத்தில் அமுதூட்டத் தாமதமாவதையும், திருநாவுக்கரசர் மடத்தில் வாசியில்லாக் காசு பெற்றதால் காலத்தில் அமுதூட்டல் நிகழ்தலையும் கண்டு ஈசனை இப்பதிகத்தால் ஏத்தி வாசியில்லாக் காசு பெற்று காலத்தில் அடியார்கள் அமுதுண்ணச் செய்து பஞ்சக் கொடுமையைப் போக்கியருளினர். பின்னர் சில காலங்கழிந்து மழை பெய்து ஆறுகள் நீர் நிலைகள் நிரம்பி பஞ்சமும் தொலைந்தது. இறைவர் காசளிப்பதும் நின்றது. இப்பதிகத்தைப் பத்தியுடன் ஓதினால் இறைவர் அருளால் பஞ்சப்பிணி பாதியாது தவிர்க்கலாம் என்பது உறுதி.

**பொழிப்புரை :**

1. குற்றமற்ற திருவீழிமிழலையில் கோயில் கொண்டவரே! வட்டம் தேவையில்லா நல்ல காசு அளிப்பீர். அதனால் உமக்கு நிந்தனை ஏதுமில்லை.

2. எங்களுக்குத் தலைவராக ஆயினீர். வேதம் நிறைந்த திருவீழிமிழலை யமர்ந்தவரே! குற்றமில்லாத காசினை முறைமையாக அளிப்பீராக!

3. சிவந்த திருமேனியுடையவரே! உண்மைத் தன்மை பொருந்திய திருவீழிமிழலையமர்ந்தவரே! படம் கொண்ட பாம்பையுடையவரே! அடியார்கள் உய்யும்படி அருள்வீராக.

4. திருநீறு பூசினீர். இடபவாகனத்தினின்மீது ஏறினீர். யாவரும் புகழ்ந்து கூறும் திருவீழிமிழலையுடையீர், காசுடன் மோட்சப்பேறும் அளியும்.

5. மன்மதன் எரிந்து போம்படி விழித்த புகையுடன் கூடிய தீக்கண்ணையுடையவரே! புகழ்பெற்ற திருவீழிமிழலையுடையவரே! எங்கட்கு பாதுகாப்பை யருளும்.

6. பிணித்துக் கட்டப்பட்ட சடைமுடியுடையவரே! நீல கண்டத்தையுடையவரே! அழகிய திருவீழிமிழலையுடையவரே! எங்கள் பணியை ஏற்றருளும்.

7. உமாதேவியைப் பாகத்தில் உடையவரே! உயர்ந்த திருவீழிமிழலையுடையவரே! கங்கை தரித்த முடியுடையவரே! எங்கள் துன்பத்தை தீர்த்தருளும்.

8. இராவணனை நெருக்கிப்பின் அவன்பால் இரக்கம் கொண்டீர். புகழ் பரந்து விளங்கும் திருவீழிமிழலையுள்ளவரே! காசின் மதிப்பைக் குறைத்தலைத் தடுத்து அருள்புரிவீர்.

9. பிரம விஷ்ணுக்களால் தேடப்படும் திருமுடியுடையீர். அடியார்க்கு அருளவல்ல மிழலையுடைய பெருமானே! பலனைச் செய்யுங்கள்.

10. மயிர் பறிக்கப்பட்ட தலையுடைய சமணர்கள் அறிய வேண்டிய உண்மை ஞானத்தை அறியமாட்டார்கள். மணம் மிகுந்த திருவீழிமிழலையுடையீர், உம்மை விட்டுப் பிரிவது அரிய காரியம் ஆகும். (பிரிவது என்பது எதுகை நோக்கி பிறிவது என்று திரிந்து வந்தது).

11. சீகாழிப்பதியில் வாழும் சம்பந்தன் திருவீழிமிழலை மேல் தாழ்ந்து வணங்கி இசைத்த மொழிகளை வல்லவர்கள் எல்லா நன்மையும் எய்துவார்கள்.



 **சிவமயம்** 



# 24

## அரனருளும் அடியாரருளும் பெற



ஓம் அச்வாருடமூர்த்தயே நம :

ஓம் கஜாந்திகமூர்த்தயே நம :

## சுந்தரமூர்த்தி நாயனர்

### திருவெண்ணெய்நல்லூர்

(இத்தலம் விழுப்புரம்—விருத்தாசலம் மார்க்கத்தில் திருவெண்ணெய்நல்லூர் ரோட் என்ற இரயில் நிலயத்தினின்றும் 3 மைல். தேசப் படத்தில் 39 என்கிற எண்ணல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

பண் - இந்தளம்] [7-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அத்தாவுனக் காளாயினி அல்லேனென லாமே. 1

நாயேன்பல நாளும்நினைப் பின்றிமனத் துன்னைப்
பேயாய்த்திரிந் தெய்த்தேன்பெற லாகாவருள் பெற்றேன்
வேயார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆயாவுனக் காளாயினி அல்லேனென லாமே. 2

மன்னேமற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னைப்
பொன்னேமணி தானேவயி ரம்மேபொரு துந்தி
மின்னார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அன்னேயுனக் காளாயினி அல்லேனென லாமே. 3

முடியேனினிப் பிறவேன்பெறின் மூவேன்பெற்ற மூர்த்தீ
கொடியேன்பல பொய்யேயுரைப் பேனைக்குறிக் கொள்நீ



சுந்தரமூர்த்தி நாயனுர் (உற்சவமூர்த்தி)
திருவெண்ணெய்நல்லூர் (தென்னுற்காடு ஜில்லா)

செடியார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்
டுறையுள்
அடிகேள் உனக் காளாயினி அல்லேனென லாமே. 4

பாதம்பணி வார்கள்பெறும் பண்டம்மது பணியாய்
ஆதன்பொருள் ஆனேனறி வில்லேனரு ளாளா
தாதார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆதீயுனக் காளாயினி அல்லேனென லாமே. 5

தண்ணார்மதி சூடீதழல் போலுந்திரு மேனீ
எண்ணார்புரம் மூன்றும்எரி யுண்ணநகை செய்தாய்
மண்ணார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்
டுறையுள்
அண்ணாவுனக் காளாயினி அல்லேனென லாமே. 6

ஊனாயுயிர் ஆனாயுடல் ஆனாய்உல கானாய்
வானாய்நில னானாய்கட லானாய்மலை யானாய்
தேனார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆனாயுனக் காளாயினி அல்லேனென லாமே. 7

ஏற்றார்புரம் மூன்றுமெரி யுண்ணச்சிலை தொட்டாய்
தேற்றாதன சொல்லித்திரி வேனோசெக்கர் வானீர்
ஏற்றாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆற்றாயுனக் காளாயினி அல்லேனென லாமே. 8

மழுவாள்வல னேந்தீமறை யோதீமங்கை பங்கா
தொழுவாரவர் துயராயின தீர்த்தலுன தொழிலே
செழுவார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்
டுறையுள்
அழகாவுனக் காளாயினி அல்லேனென லாமே. 9

காரூர்புனல் எய்திக்கரை கல்லித்திரைக் கையால்
பாரூர்புகழ் எய்தித்திகழ் பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆரூரனெம் பெருமாற்காள் அல்லேனென லாமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—**தடுத்தாட்கொண்டநாதர்**
தேவி :—**வேற்கண்மங்கையம்மை**

**பதிக வரலாறு** :—திருக்கயிலையினின்றும் இறைவனாணையால் நீங்கிய ஆலாலசுந்தரர் பூவுலகில் சுந்தரராகத் திருநாவலூரில்



வழக்கு வென்ற அம்பலம்
திருவெண்ணெய்நல்லூர் (தென்னாற்காடு ஜில்லா)

ஆதிசைவ குலத்தில் தோன்றி வளர்ந்து எல்லாக் கலைகளையும் கற்றுணர்ந்து உபநயனமும் செய்துகொண்டு திருமணப் பருவம் வந்த காலத்தில் இவரது பெற்றோர்கள் புத்தூர் சடங்கவி சிவாசாரியர் பெண்ணை இவருக்கு மணம் செய்விக்க எண்ணிப் பெண் பேசித் திருமணத்திற்கு ஏற்பாடு செய்தார்கள். இவர் நிலவுலகத்திற்கு வருமுன்னர், கயிலாயநாதனை நோக்கி "நான் பூவுலகில் பிறந்து மனித நிலையில் மயங்க நேர்ந்தால் தேவரீர் வந்து தடுத்து ஆட்கொள்ள வேண்டும்" என்று வேண்டி வந்தார். அதன்படித் திருக்கயிலையில் இவர் கண்டு விரும்பிய அநிந்திதை, கமலினி என்ற இவர்களை யன்றி வேறு ஆதிசைவர் மகளை மணக்க நேர்ந்ததால் இறைவன் எழுந்தருளி வந்து இவ்விவாகத்தைத் தடுத்து இவரை, ஆட்கொண்டார். அப்போது பித்தன் என்று ஆண்டவனை இவர் ஏசினதால் பித்தனே என்று தொடங்கித் தம்மைப் பாடுமாறு ஆண்டவன் பணித்த காலை இவர் திருவாய்மலர்ந்தருளிய திருப்பதிகம் இது ஆகும். இது பெரிய திருப்பதிகம் எனச் சேக்கிழார் சுவாமிகள் பாராட்டியுள்ளதால் இதன் பெருமை விளங்கும். இப்பதிகத்தை ஓதுபவர்களையும் **எம்பெருமான் தன் பணியில் ஆளாக்கிக்கொள்வான்** என்பது திண்ணம்.

பொழிப்புரை :

1. பித்தனே! பிறையை அணிந்தவனே! எம்பெருமானே! அருளாளனே! எவ்வகையாலும் மறவாமல் நினைக்கின்றவனாகிய என்னுடைய மனத்திலே உன்னை இருத்தினாய். பெண்ணையாற்றின் தென்புறத்தில் உள்ள திருவெண்ணெய்நல்லூரில் திருவருட்டுறை என்னுமாலயத்தில் எழுந்தருளியுள்ள தந்தையே! முன்னமேயே உமக்கு ஆளாகிய யான் இனியும் உமதடிமையல்ல என்று சொல்லவுங் கூடுமோ?

2. நாய்போல்பவனாகிய யான் நெடுநாட்களாகவும் மனதில் உம் நினைவு இல்லாமல் பேய்போலத் திரிந்து இளைத்தேன். இப்பொழுது பெறுதற்கரிய பேறு பெற்றேன். மூங்கில்கள் நெருங்கப்பெற்ற பெண்ணையாற்றின் தென்கரையில் திருவெண்ணெய்நல்லூரில் அருட்டுறை என்னுமாலயத்தில் உறையும் தாயை நிகர்த்தவனே! முன்னமே உமக்கு அடிமையாகிய யான் இனியும் உம்மடிமையல்ல என்று சொல்லவுங் கூடுமோ?

3. இறைவனே! உன்னை என் மனதிலே மறவாது நினைக்கின்றேன். பொன்னையும், மணியையும், வைரத்தையும் மோதித் தள்ளி மின்னுதலையுடைய பெண்ணை நதியின் தென்புறத்திலேயுள்ள திருவெண்ணெய்நல்லூரில் அருட்டுறை என்னுமாலயத்தில் உறையும் அன்னை போல்பவனே! முன்னமேயுமக்கு அடிமையாகிய யான் இனி உம்மடிமையல்லேன் என்று கூறலுங் கூடுமோ?

4. இடபத்தை வாகனமாகக் கொண்டவரே! அடியேன் இனி இறக்கமாட்டேன்; பிறக்கமாட்டேன். பிறந்தாலும் மூப்படைய மாட்டேன். எப்பொழுதும் பொய்யே பேசிக்கொண்டிருக்கும் கொடியவனாகிய என்மேல் பற்று வைத்து அடியேனைக் காத்தருள் வீராக! செடிகள் நிறைந்த கரையினையுடைய பெண்ணையாற்றின் தென்பால் உள்ள திருவெண்ணெய்நல்லூரில் அருட்டுறை என்னு மாலயத்தில் உறையும் பெருமானே! முன்னமேயே உமக்கடிமை யாகிய யான் இனி உம்மடிமையல்லேன் எனக் கூறவுங் கூடுமோ?

5. மூடனாகிய யான் அறிவில்லாதவன். அருளாளனே! உன்னுடைய பாதங்களை வணங்குவோர் பெறுதற்குரிய பொருள் எதுவோ அதை எனக்கு அருள்புரிவீராக. பூந்துகள் நிறைந்த பெண்ணை நதியின் தென்பால் உள்ள திருவெண்ணெய்நல்லூர் அருட்டுறையுள் எழுந்தருளியுள்ள முதல்வனே! உனக்கு முன்ன மேயே அடிமையாகிய யான் இனியும் அல்லேன் என்று கூறுதல் கூடுமோ?

6. குளிர்ச்சி பொருந்திய பிறைச்சந்திரனைச் சூடியவனே! நெருப்புபோன்ற திருமேனியுடையவனே! முப்புரங்களையும் நெருப்பு உண்ணும்படிச் சிரித்தவனே! திருவெண்ணெய்நல்லூரில் அருட்டுறையென்னுமாலயத்தில் கோயில் கொண்டுள்ள எல் லோர்க்கும் மூத்தவனே! முன்னமேயே உமக்கடிமையாகிய யான் இனியும் உமதடிமையல்லேன் என்று கூறுதலுங் கூடுமோ?

7. தசையாகி ஜீவனாய், உடம்பானாய், உலகமானாய், ஆகாயமாகி பூமியானாய், கடலானாய், மலையானாய், தேன் பொருந்திய பெண்ணைநதியின் தென்பால் திருவெண்ணெய்நல்லூர் அருட்டுறையுள் அமர்ந்த இடபவாகனக் கடவுளே! முன்னமேயே உமக்காளாகிய நான் இனியும் அல்லேன் எனக் கூறுதலுங் கூடுமோ?

8. பகைவரது மூன்று புரங்களும் நெருப்பு உண்ணும்படி வில்லைப் பிடித்தவனே! செவ்வானத்தின் நிறத்தை ஏற்றவனே! தெளிவில்லாத சொற்களைச் சொல்லி இனியும் திரிவேனோ? பெண்ணை நதியின் தென்பால் உள்ள திருவெண்ணெய்நல்லூரில் அருட்டுறையென்னுமாலயத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெரு மானே. முன்னமேயே உமக்காளாகிய யான் இனியும் அல்லேன் என்று கூறலுங் கூடுமோ?

9. வலது புறத்தில் மழுவேந்தியவனே! வேதங்களை யருளிச் செய்தவனே! வணங்குவோர்களுடைய துன்பங்களைத் தீர்த்தல் உன்னுடைய தொழிலேயாகும். திருவெண்ணெய்நல்லூரில் அருட் டுறையென்னும் ஆலயத்தில் எழுந்தருளியிருக்கின்ற அழகனே! முன்னமேயே உமக்காளாகிய யான் இனியும் உமதடிமை அல்லேன் என்றலுங் கூடுமோ?

10. மேகத்தினின்றும் விழுகின்ற நீரினால் நிரம்பி அலைக ளாகிய கரங்களைக் கொண்டு கரையைத் தோண்டி உலகமெங்கும் பரவிய புகழையடைந்து பல பெரிய மணிகளைக் கொழித்துச் சிறப்புப் பொருந்திய பெண்ணை நதியின் தென்கரையில் உள்ள திருவெண்ணெய்நல்லூரில் அருட்டுறை என்னும் ஆலயத்துள் எழுந்தருளியுள்ள எம்பெருமானுக்கு ஆரூரனாகிய யான் அடிமை யல்லேன் என்றலுங் கூடுமோ? (கூடாது என்றபடி)

## 2. சுந்தரமூர்த்தி நாயனார்

### திருத்தொண்டத்தொகை

பண் - கொல்லிக்கௌவாணம்] [7-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

தில்லைவாழ் அந்தணர்தம் மடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 1

இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தற் கடியேன்
ஏனாதி நாதன்றன் அடியார்க்கும் அடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற் கடியேன்
கடவூரிற் கலயன்றன் அடியார்க்கும் அடியேன்
மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ் சாறன்
எஞ்சாத வாட்டாயன் அடியார்க்கும் அடியேன்
அலைமலிந்த புனல்மங்கை ஆனாயற் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 2

மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்
முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினால் எறிந்த
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 3

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கும் அடியேன்
பெருமிழலைக் குறும்பற்கும் பேயார்க்கும் அடியேன்
ஒருநம்பி அப்பூதி அடியார்க்கும் அடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கற் கடியேன்
அருநம்பி நமிநந்தி அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 4

வம்பறா வரிவண்டு மணம்நாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணா
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்
ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்
நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்
நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கற்கும் அடியேன்
அம்பிரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 5

வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே
மறவாது கல்எறிந்த சாக்கியற்கும் அடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டற் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவாற்கும் அடியேன்
கடற்காழிக் கணநாதன் அடியார்க்கும் அடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோன் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 6

பொய்யடிமை இல்லாத புலவர்க்கும் அடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்
மெய்யடியான் நரசிங்க முனையரையற் கடியேன்
விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தற் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோன் அடியார்க்கு மடியேன்
ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 7

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்கும் காரிக்கும் அடியேன்
நிறைக்கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்
துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன்
அறைக்கொண்ட வேல்நம்பி முனையடுவாற் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 8

கடல்சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைதன் அடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதள்மேல் அரவாட ஆடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு மடியேன்
அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 9

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 10

மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கும் அடியேன்
தென்னவனாய் உலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூரர்க்கோன்
அன்னவனாம் ஆரூரன் அடிமைகேட் டுவப்பார்
ஆரூரில் அம்மானுக் கன்பரா வாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் :—வன்மீகநாதர் தேவி :—அல்லியங்கோதையம்மை

பதிக வரலாறு :—சுந்தரமூர்த்தி சுவாமிகள் நங்கை பரவையாரை மணந்து திருவாரூரில் இனிது எழுந்தருளியிருந்த காலத்து ஒருநாள் திருக்கோயிலுக்குள் செல்லும்போது தேவாசிரியன் மண்டபத்துள்ள அடியார்களைக் கண்ணுற்று "இவர்க்கு நான் அடியேனாக ஆகும் நாள் எந்நாள்" என்று பரமர் தாள் பரவிச் சென்றார். அடியவர்க்கடியனாவேன் என்னும் ஆதரவு மிகக் கூறிச் சென்று வணங்கிப் புக்க நம்பி ஆரூரர் தம்மெதிரில் எதிர்காணும்படி காட்டிப் பரமர் நிற்கக் கண்டு திருப்பாதங்களைத் துதித்து வணங்கினார். அங்ஙனந்தொழுத நம்பிக்கு இறைவர் அடியார்களின் வழித்தொண்டையெல்லாம் உணரும்படி நல்கி அவர்களது பெருமையையும் அறிவுறுத்தியருளினார். "ஏதந்தீர் நெறியைப் பெற்றேன்" என்று பணிந்த நம்பியாரூரரைப் பரமர் "நீதியால் அவர்கள் தம்மைப் பணிந்து நீ நிறை சொன்மாலை கோதிலா

வாய்மையாலே" பாடெனப் பணிக்க நம்பியும் மீண்டும் வணங்கி, "இன்னவாறின்ன பண்பென்றேத்துவேன்! அதற்கு நான் யார்? பன்னு பாமாலை பாடும் பரிசெனக்கருள் செய்" என வேண்டினார். இறைவரும் "தில்லைவாழ் அந்தணர்தம் மடியார்க்கும் அடியேன்" என்று அடியெடுத்துக் கொடுக்கச் சுந்தரர் திருவருளை மேற்கொண்டு திருக்கூட்டத்தைச் சார்ந்து தொழுது அடியார்கள் ஒவ்வொருவரையும் தனித் தனியாக எடுத்தோதி அவர்க்கு அடியேன்; அவர் அடியார்க்கும் அடியேன் என்று ஆர்வத்தால் இத்திருத்தொண்டத்தொகைப் பதிகத்தைப் பாடிப் பணிந்தார். சேக்கிழார் பெருமான் தம் பெரியபுராணமாகிய பன்னிரண்டாந் திருமுறையில்,

*தொல்லைமால் வரைபயந்த தூயாள்தன் திருப்பாகன்*
*அல்லல்தீர்ந் துலகுய்ய மறையளித்த திருவாக்கால்*
*"தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன் என்று*
*எல்லையில்வண் புகழாரை எடுத்திசைப்பா மொழி" என்றார்.*

என்று கூறுவதிலிருந்து அல்லல் தீர்ந்துலகுய்ய மறையளித்த திருவாக்கால் அடியெடுத்துக் கொடுக்கப்பட்டு பாடப்பட்டதாகலின் இத்திருப்பதிகப் பயனும் அல்லல் தீர்ந்து உலகுய்தலேயாம் என்பதே அவருடைய திருவுள்ளக்கருத்து என்று புலனாகிறது. மேலும் அதே பெரியபுராணப் பிரமாணத்தின்படி சுந்தரரது திருவவதாரத்தின் சிறப்புப் பயனே இத்திருத்தொண்டத்தொகை என்பதும் புலனாகிறது. எனவே நாடோறும் இதனை ஓதி அரனார் அருளும் அடியார் அருளும் ஒருங்கே பெற்று அல்லல் தீர்ந்து உலகு உய்வதாக.

பொழிப்புரை :

இத்திருப்பதிகம் சுந்தரர் உள்பட அறுபத்திமூன்று தனியடியாரையும் ஒன்பது தொகையடியாரையும் குறிக்கின்றது. நாயன்மார்களின் பெயர்கள் மிகவுந் தெளிவாகப் பதிகத்தில் கூறப்பட்டுள்ளபடியால் இப்பதிகத்திற்கு விரிவஞ்சிச் சில குறிப்புக்கள் மட்டுந் தரப்பட்டுள்ளன.

1. தில்லைவாழந்தணர் - தில்லை மூவாயிரவர் (தொகையடியார்); இல்லையே என்னாத - தம்மிடம் உள்ளது எதுவாயினும் சிவனடியார்க்கு அதை இல்லை என்று சொல்லாத. குன்றை - செங்குன்றூர் (மலை நாட்டிலுள்ளது)

2. இலைமலிந்தவேல் - இலைபோன்ற கூர்மை பொருந்திய வேல்; எஞ்சாத - தன் தொண்டுக்கு முட்டுப்பாடு உற்றதும்தான் எஞ்சியிருக்க விரும்பாது கழுத்தினை அறுத்துக்கொள்ள முற்பட்ட.

3. மும்மை - திருநீறு, உருத்திராக்கம், சடைமுடி ஆகிய சிவ சின்னங்கள் மூன்று.

4. திருநின்ற செம்மை - நீங்காது என்றும் நிலேத்த திருவாகிய செம்பொருள்.

5. வம்பு - மணம்; அறு - நீங்காத; நாட்டம் மிகு - இறைவனருளால் கண் பார்வை உண்டாகப்பெற்ற.

6. வார்கொண்ட - கச்சணிந்த; கார்கொண்ட - மேகம் போன்ற; ஆர்கொண்ட - கூர்மையுடைய.

7. துஞ்சிய - இறைவனடி சேர்ந்த.

8. கறைக்கண்டன் - நீலக்கறையுடையகண்டன், சிவபெருமான்; காப்பு - பாதுகாப்பு.

9. காடவர் கோன் - பல்லவ அரசன்; மடல் - பூவிதழ்; புடைசூழ்ந்த புலியதள் - அரையிலே ஆடையாக சுற்றப்பட்ட புலித்தோல்; ஆடி - ஆடுபவஞகிய பரமசிவன்; அடல் - வெற்றி.

10. இப்பாடல் முழுமையும் தொகையடியார்களேக் குறிக்கும். இதில் குறித்த எழுவருடன், தில்லேவாழந்தணர், பொய்யடிமையில்லாத புலவர் சேர்த்து மொத்தம் தொகையடியார்கள் ஒன்பது.

11. மறைநாவன் - எப்பொழுதும் வேதமோதும் நாவினேயுடையவன்.

## 3. திருமூலதேவ நாயனுர்

### திருமந்திரம்

[10-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை யீசனே
நண்ணறி யாமல் நழுவுகின் ருர்களே. 1

திருச்சிற்றம்பலம்

பொருள் :—ஆண்டவனே வழிபட எண்ணுவார்க்குக் காசு பணம் அதிகம் செலவில்லாமல் கொஞ்சம் நீரால் அவனே அபிடேகித்துச் சில புட்பங்களால் அவனே யலங்கரித்து வழிபட்டால், ஆண்டவன் அதற்கிரங்கி யவர்களுக்கு நிரம்ப திருவருள் புரிவான். இதனே எத்தனேயோ மக்கள் அறியாமலும் வழிபடாமலும் வாளா பொழுதினேக் கழிக்கின்ருர்களே எனத் ]ெ ந மூலர் வருந்துகிருர்.

இதனை உணர்ந்தேனும் இனியாவது மக்கள் ஆண்டவனை வழிபடுவார்களாக!

திருச்சிற்றம்பலம்

சிவசிவ என்கிலர் தீவினையாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே.

திருச்சிற்றம்பலம்

**பொருள்:**—பரமேசுவரனது எண்ணற்ற பெயர்களுள் 'சிவ' என்ற இந்நாமமே எல்லாவற்றிற்கும் மேலானது, "சிவனெனும் நாமம் தனக்கே உடையவன்" என்றார் அப்பர் சுவாமிகளும், 'சிவம்' என்னும் சொல்லுக்கே மங்களம் என்பது பொருள். தானும் மங்கள வடிவினன். தன்னை யடைந்தோர்க்குச் சர்வ மங்களங்களையும் செய்பவன். இத்தகைய திவ்யமான திருநாமத்தைச் சதா சர்வ காலமும் பக்தி சிரத்தையுடன் சொல்லிக் கொண்டேயிருந்தால் நம் தீவினை குறையும். இதனை யறியாமல் மக்கள் வாளா பொழுதுபோக்குகின்றார்களே என்கிறார் திருமூலர். இத்திருநாமத்தைச் சொன்னால் தேவ பதவியும் கிட்டித் தேவரேயாய்விடுவான். கடைசியில் மோக்ஷத்தையும் இது அளிக்கும். எனவே, இத்தகைய திருமந்திரத்தை நாம் நாளும் ஓதி உய்வோமாக.

# 4. சேந்தனார்

## திருப்பல்லாண்டு

பண் - பஞ்சமம்] [9-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

பாலுக்குப் பாலகன் வேண்டியழுதிடப் பாற்கடலீந்த பிரான்
மாலுக்குச்சக்கர மன்றருள்செய்தவன் மன்னியதில்லை தன்னுள்
ஆலிக்குமந்தணர் வாழ்கின்றசிற்றம் பலமேயிடமாகப்
பாலித்துநட்டம் பயிலவல்லானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

திருச்சிற்றம்பலம்

**இதன் பொருள்:**—உபமன்யு என்னும் இருடிகுமாரர் பால் வேண்டியழுதுப் பின் தாய் சொற்படி சிவபெருமானைக் குறித்துத் தவஞ் செய்ய அவருக்குப் பாற்கடலையே அளித்த பெருமான், திருமாலின் பூசைக்கு மகிழ்ந்து அவருக்குச் சக்கராயுதத்தைக் கொடுத்தவன், நிலைபெற்றிருக்கின்ற தில்லைச்சிதம்பரத்தில் மறை

ஒலிக்கின்ற அந்தணர்கள் வாழ்கின்ற திருச்சிற்றம்பலத்தையே இடமாகக் கொண்டு நடனம் ஆட வல்லவனுக்கு பல்லாண்டு கூறுவோம் என்றவாறு.

## 5. பெரிய புராணம்

[12-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

என்றும் இன்பம் பெருகும் இயல்பினுல்
ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை :

எக்காலத்திலும் இன்பத்தை வளரச் செய்கின்ற தன்மையினுல் ஒரே பொருளாகிய பரமசிவனைக் காதலித்துத் தொண்டு செய்து அதனுல் உள்ளம் ஓங்கிட மன்றுளாடிய பெருமானுடைய அடியார்களுடைய மேலான புகழ் இவ்வுலகம் முழுவதும் பரவி நின்றது.

வாழ்த்து

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

சுபம்.





# சிவமயம்





## அனுபந்தம் 1

# சிவாலய வழிபாடு



ஓம் ஜலந்தரவதமூர்த்தயே நம :

ஓம் ஏகபாதத்ரிமூர்த்தயே நம :

குறிப்பு : பக்தர்களுக்குப் போதிய, அவகாசம் இருக்கும்போது, கீழே தரப்பட்டுள்ள முறைப்படி ஆலயங்களில் வழிபடுவது சாலவும் நன்று.

**கோயிலுக்குச் செல்லும் முறை :**



சிவாலயத்துக்குச் சென்று ஆண்டவனை வழிபட்டு அவனருளைப் பெறவிரும்பும் மெய்யன்பர்கள் காலையில் எழுந்து நீராடி, தோய்த்துலர்ந்த ஆடைகளை அணிந்து கொண்டு நெற்றியிலும் உடலிலும் விதிப்படி திருநீறும் உருத்திராக்கமும் அணிந்து கொண்டு சாந்தமான மனத்துடன் செல்ல வேண்டும். கோயிலுக்குச் செல்லும் முன்னர் தாம் இல்லத்தில் செய்யவேண்டிய நித்திய கர்மானுஷ்டானங்களைச் செய்து முடித்துக்கொள்ள வேண்டும்.

**வழிபாட்டு முறை :**

முதலில் கோயில் கோபுரத்தைக் கண்ட உடனே அதனைத் தூலலிங்கமாக வழிபட்டுப் பின்னர் கோயிலுக்குள் செல்லவேண்டும். துவஜஸ்தம்பம் எனப்படும் கொடி மரத்தின் அருகில் நிலத்தில் விழுந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்யவேண்டும்.



பின்னர் எழுந்து மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்த சிவபுராணம் என்ற திருவாசகப் பகுதியை ஓதிக்கொண்டே

ஆலயத்தை ஒருமுறை வலம் வரவேண்டும். கொடி மரத்துக்கு முன்னுள்ள பலிபீடம் நந்தி தேவரிடம் நின்று வணங்கித் தோத்



திரஞ் செய்து அவர் அனுமதியுடன் உள்ளே செல்ல வேண்டும். பிறகு ஆலய விநாயகப்பெருமானை வணங்கித் தோத்திரஞ் செய்தல் வேண்டும். விநாயகர் சந்நிதியில் மட்டும் தான் அன்பர்கள் சிரத்தில் இரண்டு கைகளாலும் குட்டிக்கொண்டு இரு கைகளையும் பிடித்துக்கொண்டு மூன்று முறை தோப்புக்



கரணம் போடவேண்டும். மற்றைய மூர்த்திகளின் சந்நிதியில் இவ்விதமான வணக்கம் செய்தல் கூடாது.

அதன்பின் ஆலயத்தின் மூலஸ்தான மூர்த்தியின் முன் நின்று இரு கைகளாலும் வணங்கிப் பன்னிரு திருமுறைப் பாடல்களை ஓதுதல் வேண்டும்; இயலாதவர்கள் குறிப்பாகப் பஞ்சபுராணம் என்று வகுக்கப்பட்டுள்ள வற்றையாவது ஓதி வணங்கவேண்டும். பின்னர் அம்பாள் சந்நிதியில் நின்று தேவிக்குரிய பாடல்களைப் பாடி வணங்க வேண்டும். அப்படியே உற்சவ மூர்த்திகளையும் வழிபட்டு ஆலயத்தை இரண்டாம் முறையாக வலம் வரவேண்டும். வரும்போது நடராஜப்பெருமான் சிவகாமசுந்தரி ஆகிய சந்நிதிகளில் உரிய துதி



களால் வணங்கிப் பிறகு பிராகாரத்துள்ள சமயாசாரிய மூர்த்திகள் நால்வர், அறுபத்துமூவர், சேக்கிழார் பெருமான் ஆகிய மூர்த்திகளையும் வழிபட்டுப் பின்னர் முருகப்பெருமானின் சந்நிதியடைய வேண்டும். உலகுய்யத் தோன்றிய ஒரு திருக்குமரனை உள்ளமுருகப் பாடித் துதித்து அவன் திருவருள் பெற்று இரண்டாம் முறை வலத்தை முடித்துக்கொள்ள வேண்டும்.

மூன்றும் முறையில் வலம் வரும்போது தக்ஷிணாமூர்த்தி சந்நிதியின் முன் நின்று பாடலோதி வணங்கி அமர்ந்து திருவைந்தெழுத்தை (ஜப உபதேசம் பெற்றவர்கள்) ஜபம் செய்ய வேண்டும். பின்னர் துர்க்கை சந்நிதி வணக்கத்தையும் முடித்துக் கொண்டு கடைசியாய்ச் சண்டேச்வரரையடைய வேண்டும்.

சிவத்தியானபரராய் இருக்கும் அவரை மெல்லக் கைதட்டி எழுப்பி அவர்க்குரிய துதிப்பாடலை ஓதி "பெருமானே, அடியேன் இன்று இவ்வாலயத்துக்கு வந்து பெரியோர்கள் விதித்த முறைப்படி சிவ தரிசனத்தைச் செய்து முடித்துக்கொண்டேன். இதற்கு உரிய பலனைத் தேவரீர் அடியேற்கு அருளிச் செய்யவேண்டும். அடியேன் அபுத்தி பூர்வமாக ஏதேனும் தவறிழைத்திருப்பின் அவற்றைப் பொறுத்தருள வேண்டும்" என்று பிரார்த்தனை செய்துகொள்ள வேண்டும். சண்டேச்வரர் சிவ நிர்மால்யங்களைப் பெறும் அதிகாரம் உடையவராகையால் நிர்மால்யங்களை அங்கு விட்டுவிட வேண்டும். அவர்மீது நூல் போடுவதும் கையிலுள்ள விபூதி குங்குமங்களையெறிவதும் பெரும் அபசாரம் ஆகும். அவர் எழுந்தருளியிருக்கும் மண்டபத்தை ஒருபோதும் வலம் வரக்கூடாது.

கடைசியாகக் கொடி மரத்தருகில் வந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்யவேண்டும். எழுந்து அதன் அருகில் உட்கார்ந்து சிவநாம ஜபம் செய்யலாம். கொடிமரத்தின் முன்னர்த் தவிர வேறு எந்த மூர்த்திகளின் சந்நிதியிலும் எட்டுறுப்பு நிலந்தோயப் பூமியில் விழுந்து வணங்குதல் கூடாது. இது பெரியோர்களால் விதிக்கப்பட்டுள்ள தொன்று தொட்டுள்ள முறை.

பின்னர் சற்று நேரம் மௌனமாக அமர்ந்து கண்களை மூடிக் கொண்டு ஆலயத்துள்ளே தரிசித்த மூர்த்திகளை அகக்கண்முன் கொண்டு வந்து நிறுத்தித் தரிசிக்க முயற்சி செய்தல் வேண்டும். சிவத்தியானமாகவே சிவநாம உச்சாடனத்துடன் இல்லம் திரும்ப வேண்டும்.

திரும்பும்போது ஆலயத்தின் வாயிலில் சற்று உட்கார்ந்து பின் எழுந்து செல்லவேண்டும். ஏன்? சிவாலயங்களில் ஏழு சிரஞ்சீவிகள் தங்கியிருந்து சிவதரிசனஞ் செய்பவர்களை அவர்கள் வீடுவரைப் பின் தொடர்ந்து வந்து மரியாதை செய்கிறார்களாம். அதற்காக அவர்களை வணங்கி "நீங்கள் இருங்கள், நாங்கள் சென்று வருகிறோம்" என்பது தத்துவம்.

**கோயிலில் செய்யத் தகாதவை :**

1. கோயிலை வேகமாக வலம் வருதல் கூடாது. கர்ப்பிணிகள் நடப்பதுபோல மெதுவாக வலம் வர வேண்டும்.

2. எவருடனும் வீண் வார்த்தைகள் பேசக்கூடாது.

3. தாம்பூலந் தரித்துக்கொண்டு கோயிலுக்குள் செல்லக் கூடாது.

4. சட்டையணிந்துகொண்டோ, அல்லது போர்த்துக் கொண்டோ செல்லலாகாது. மேல் வேட்டியை இடுப்பில் கட்டிக் கொள்வதுதான் சிறந்த முறை.

5. மூர்த்திகளைத் தொடுதலோ மூர்த்திகளின் திருவடிக்கருகில் கர்ப்பூரம் ஏற்றுதலோ கூடாது.

6. கோயிலில் உள்ள திருவிளக்குகளைக் கையால் தூண்டவோ தூண்டிய கையைச் சுவரில் துடைக்கவோ கூடாது. அதனைத் தலையிலும் தடவிக்கொள்ளக்கூடாது.

7. சுவாமிக்கு நிவேதனம் ஆகும்போது பார்த்தல் கூடாது.

8. விபூதி, சந்தன அபிஷேகம் தவிர சுவாமிக்கு இதர திருமஞ்சனம் ஆகும்போது பார்க்கக்கூடாது.

9. கோயிலுக்குள்ளேயோ மதிற்புறங்களிலேயோ எச்சில் துப்புதல், மலசலங் கழித்தல் முதலியன அவசியம் கூடாது.

10 சண்டையிடுதல், மயிர்கோதி முடித்தல், சூதாடுதல், சிரித்தல், காலை நீட்டிக்கொண்டு படுத்துக்கொள்ளுதல், சுவாமிக்கும் பலிபீடத்துக்கும் குறுக்கே போதல், சுவாமிக்கும் நந்திக்கும் குறுக்கே போதல், சிவநிர்மாலியங்களைத் தாண்டுதல், மிதித்தல், ஸ்தூபி, துவஜஸ்தம்பம், பலிபீடம், விக்கிரகம் ஆகியவற்றின் நிழலை மிதித்தல் ஆகியவைகளைச் செய்தல் சிவாபராதம் ஆகும் என்பர் ஆன்றோர்.

உடலழுக்கு நீங்கக் குளிக்கப் போகும் ஒருவன் சேறு பூசிக்கொண்டு வருவது மதியீனம் அல்லவா? அதுபோலப் பெரும் சிவபுண்ணியத்தைச் செய்யப் போகும்போது நாம் அறியாமையால் பாவத்தைத் தேடிக்கொள்ளக்கூடாது. எனவே, அன்பர்கள் மேற்கூறிய குற்றங்களைக் கவனித்தும், பெரியோர்கள் சம்பிரதாயமாக வழிபட்டு வருகிற முறைகளையனுசரித்தும் ஆலய வழிபாட்டினைச் செய்து பெரும் புண்ணியம் பெறவேண்டும் என்பதே எமது பேரவா.

கீழ்க்கண்ட சில தொண்டுகளையும் இயன்றவரை செய்யலாம்.

1. ஆலயப் பிராகாரங்கள், கோபுரங்கள், மதிற்சுவர்கள் முதலியவற்றில் உள்ள புல்பூண்டுகளை உழவாரம் கொண்டு அகற்றலாம்.

2 கோயில்களில் உள்ள குப்பைகளைத் திருவலகினால் அகற்றிச் சுத்தஞ் செய்யலாம்.

3. பெண்கள் சாணத்தால் மெழுகிப் பச்சரிசி மாவினால் கோலம் போடலாம்.

4 அவரவர் சக்தியின் அளவு நெய், எண்ணெய், இலுப்பை நெய் முதலியவற்றால் தீபங்களை ஏற்றி வைக்கலாம். "விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்" என்பது அப்பர் அருள் வாக்கு.

5. ஆலயத்திலுள்ள நந்தவனங்களைப் போஷித்து புஷ்பம் பறித்து மாலைகள் தொடுத்துக் கொடுத்தும் உதவலாம். இப்படிப் பட்ட தொண்டுகள் சரியை எனப்படும்.

இறைவன் சந்நிதியில் பூசை செய்யும் சிவாசாரியர்களைப் பரமேச்வரனாகவே பாவித்து அவர்கள் கையால் திருநீறு பெற்றுப் பெருவாழ்வு வந்ததென மகிழ்ந்து பூசிக்கொள்ள வேண்டும். இலௌகிகத்தில் எவ்வளவு உயர்ந்தவராயினும்கூட எவரும் சிவாசாரியர்களை அவமதித்துப் பேசுவதோ, அதிகாரஞ் செய்து அதட்டிப் பேசுவதோ கூடாது. அது மிக்க அபசாரமாகும். அவர்கள் திருவுள்ளக் கருத்துக்கு மாறுபாடாக எதையும் செய்யக்கூடாது. அவர்களைக் கொண்டு இறைவனுக்கு அபிஷேகம், அர்ச்சனை, பூஜை, மற்றும் விசேஷ திருவிழாக்கள் முதலியவற்றை நடத்திக்கொள்ள வேண்டும். "முப்போதும் திருமேனி தீண்டுவார்க்கு அடியேன்" என்ற சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருவாக்குக்கு மாறுதல் இல்லாது நடந்துகொள்ள வேண்டும்.

இப்படி முறைப்படி வழிபட்டால் சிவாலய வழிபாடு சிறந்த பலனைத்தரும் என்பதில் ஐயமும் உண்டோ?

ஆயினும் இம்மாதிரி விரிவான வழிபாட்டினைத் தினசரி நடத்தப் போதிய அவகாசம் இந்நாட்களில் கிடைப்பது அரிது ஆகையால், வாரம் ஒருமுறையாவது இத்தகைய வழிபாட்டினை நடத்தலாம். சில பக்தர்கள் ஒன்றுகூடி வழிபாட்டுக் குழுவாக அமைத்துச் சிறப்பாக இத்தகைய வழிபாடு நிகழ்த்திச் சைவ சம்பந்தமான சொற்பொழிவுகளும் நடைபெறச் செய்யலாம்.

இத்தகைய விரிவான வழிபாடு நடத்தப் போதிய அவகாசம் இல்லையெனில் என் செய்வது? வழிபாட்டையே விட்டுவிடுவதா? அது அபசாரமன்றோ? எனவே சுருக்கமாகவேனும் ஆலயத்தினைத் தினசரி தொழுதேயாகவேண்டும். துவஜஸ்தம்பத்தினிடம் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து 3 முறைகளுக்குக் குறையாமல் பிரதக்ஷிணம் செய்து அந்தந்த சந்நிதிகளில் இரு கரங்களையும் சிரத்தின்மீது கூப்பி வணங்கிவிட்டுப் பின் மறுபடியும் துவஜஸ்தம்பத்தின் முன் நமஸ்காரம் செய்துவிட்டு வீடு திரும்பலாம். இறையருள் நிச்சயம் கிடைக்கும்.

"ஆலயந் தொழுவது சாலவும் நன்று"

— ஔவையார்.

[குறிப்பு:—இவ்விஷயம் கயப்பாக்கம் திரு. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் காலஞ்சென்ற திரு. K. C. நாகலிங்க முதலியார் அவர்கள் விருப்பப்படி எழுதித் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலயத்தின் சார்பில் வெளிவந்த சிறுநூலைத் தழுவி எழுதப்பெற்றது.]

## சிவாலய வழிபாட்டுத் தோத்திரங்கள்

*சிவாலய மூர்த்தி வழிபாடுகளின்போது ஓதவேண்டிய தோத்திரங்கள் இங்குக் கொடுக்கப்பட்டுள்ளன. அன்பர்கள் அவகாசத்தையனுசரித்து இவைகளுடன் வேறு உரிய தமக்குத் தெரிந்த துதிகளேயும் சொல்லலாம். ஆனுல் அவைகள் வேத, ஆகம, புராணங்களில் உள்ளவையாகவோ அல்லது சைவ சமய ஆசார்யர்கள் அருளிச்செய்த திருமுறைகளாகவோ அல்லது ஆதி சங்கரர் முதலிய மற்றுமுள்ள ஆசார்ய புருஷர்கள். அருளாளர்கள் அருளிச் செய்தவைகளாகவோ இருக்கவேண்டும். செந்தமிழோ அல்லது சம்ஸ்க்ருதத்திலோ இருக்கலாம். மயக்க அறிவுள்ள சாதாரண மக்களாற் பாடப்பெற்ற பாடல்களைப் பாடக்கூடாது. நவீனமான சினிமா, நாடகமெட்டுக்களில் திருமுறைப் பாடல்களை யமைத்துப் பாடக்கூடாது. இது அபசாரம்.*

**சிவாலயத்தை முதன் முறையாக வெளிப் பிராகாரத்தை, பிரதக்ஷிணஞ் செய்யும்போது பாட வேண்டியது.**

**மாணிக்கவாசகப் பெருமான் அருளிய**

# சிவபுராணம்

## (திருவாசகம்)

[8-ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க*
*இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க*
*கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க*
*ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க*
*ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க*
*வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க*
*பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க*
*புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க*
*கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க*
*சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க*
*ஈசனடிபோற்றி எந்தை யடிபோற்றி*
*தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி*
*நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி*
*மாயப் பிறப்பறுக்கு மன்ன னடிபோற்றி*
*சீரார் பெருந்துறைநந் தேவனடி போற்றி*
*ஆராத இன்பம் அருளு மலைபோற்றி*
*சிவன்அவன்என் சிந்தையுள் நின்ற அதனுல்*
*அவன்அரு ளாலே அவன்தாள் வணங்கிச்*

சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பனியான்
கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழல் இறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்இறந்து எல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டுஇன்று வீடுற்றேன்
உய்யஎன் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா வெனஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னும்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவுஇறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பில்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள் கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே

மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வ முதே அளவிலாப் பெம்மானே
ஓரா தா ருள்ளத் தொளிக்கு மொளியானே
நீரா யுருக்கியென் னாருயிராய் நின்றானே
இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேன் எம்மையா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்

2. நந்திதேவர் துதி :

(இவரை வணங்கி விடை பெற்றுக் கொண்டு தான் ஆலயத்துள் செல்ல வேண்டும்.)



வந்திறை அடியில் தாழும்
வானவர் மகுடகோடி
பந்தியின் மணிகள் சிந்த
வேத்திரப் படையால் தாக்கி

அந்தியும் பகலும் தொண்டர் அலகிடும் குப்பை யாக்கும்
நந்தியெம் பெருமான் பாத நகைமலர் முடிமேல் வைப்பாம்.



3. **விநாயகர் துதி:**

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க
வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான் —
விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம்
தன்மையினல்
கண்ணில் பணிமின் கனிந்து.

4. சிவபெருமான் திருமுன் பாடவேண்டிய பஞ்சபுராணம்:

## (அ) தேவாரம் — அப்பர் சுவாமிகள்

திருச்சிற்றம்பலம்



பேராயிரம் பரவி வானோ ரேத்தும்
பெம்மானைப் பிரிவிலா அடியார்க்
கென்றும்
வாராத செல்வம் வருவிப் பானை
மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னைத்
திரிபுரங்கள் தீயெழத்திண் சிலைகைக்
கொண்ட
போரானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி
னேனே.

திருச்சிற்றம்பலம்

## (ஆ) திருவாசகம்—மாணிக்கவாசகப் பெருமான்

திருச்சிற்றம்பலம்

அன்றே என்றன் ஆவியும்
உட லும் உடைமை எல்லா மும்
குன்றே அனையாய் என்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ

இன்றோர் இடையூ றெனக்குண்டோ
எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ இதற்கு நாயகமே.

திருச்சிற்றம்பலம்

## (இ) திருவிசைப்பா—கருவூர்த்தேவர்

திருச்சிற்றம்பலம்

நையாத மனத்தினனை நைவிப்பான் இத்தெருவே
ஐயாநீ உலாப்போந்த அன்றுமுதல் இன்றுவரை
கையாரத் தொழுதருவி கண்ணாரச் சொரிந்தாலும்
செய்யாயோ அருள்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே.

திருச்சிற்றம்பலம்

## (ஈ) திருப்பல்லாண்டு—சேந்தனார்

திருச்சிற்றம்பலம்

சீரும் திருவும் பொலியச்
சிவலோக நாயகன் சேவடிக்கீழ்
ஆரும் பெறாத அறிவுபெற்றேன்
பெற்றதார் பெறுவா ருலகில்
ஊரும் உலகும் கழற
உழறி உமைமண வாளனுக்காட்
பாரும் விசும்பும் அறியும்
பரிசுநாம் பல்லாண்டு கூறுதுமே.

திருச்சிற்றம்பலம்

## (உ) பெரியபுராணம்—சேக்கிழார் சுவாமிகள்

திருச்சிற்றம்பலம்

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

திருச்சிற்றம்பலம்

5 அம்பாள் துதி:



சுரும்புமுரல் கடிமலர்ப்பூங் குழல்போற்றி
உத்தரியத் தொடித்தோள் போற்றி
கரும்புருவச் சிலைபோற்றி கவுணியர்க்குப்
பால்சுரந்த கலசம் போற்றி
இரும்புமனம் குழைத் தென்னை எடுத்தாண்ட
அங்கயற்கண் எம்பி ராட்டி
அரும்புமிள நகை போற்றி ஆரண நூ
புரஞ்சிலம்பும் அடிகள் போற்றி.

6. நடராஜப் பெருமான்:

திருச்சிற்றம்பலம்

ஆதியாய் நடுவும் ஆகி
அளவிலா அளவும்ஆகிச்
சோதியாய் உணர்வும் ஆகித்
தோன்றிய பொருளும்
ஆகிப்
பேதியா ஏகம் ஆகிப்
பெண்ணுமாய் ஆணும்
ஆகிப்
போதியா நிற்கும் தில்லைப்
பொதுநடம் போற்றி!
போற்றி!!





கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி
அற்புதக் கோல நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோம மாகும் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடம்செய்கின்ற பூங்குழல் போற்றி! போற்றி!!

திருச்சிற்றம்பலம்

7. சிவகாமசுந்தரி:

பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய இருள்நீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றின் ஒளிவிளங்க
அரந்தைகெடப் புகலியர்கோன் அமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி.

8. நால்வர் துதி:





பூழியர்கோன்
வெப்பொழித்த
புகலியர்கோன்
கழல்போற்றி

ஆழிமிசைக்
கன்மிதப்பில்
அணைந்தபிரான்
அடிபோற்றி





வாழிதிரு
நாவலூர்
வன்தொண்டர்
பதம்போற்றி

ஊழிமலி
திருவாத
வூரர்திருத்
தாள்போற்றி.

9. சேக்கிழார் சுவாமிகள்—அறுபத்துமூவர்



தில்லைவா ழந்தணரே
முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத்
தொகையடியார் பதம்போற்றி
ஒல்லையவர் புராணகதை
உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச்
சேக்கிழார் அடிபோற்றி.

10. முருகக்கடவுள் :

ஆடும் பரிவேல் அணிசே வலெனப்
பாடும் பணியே பணியா யருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியா னைசகோ தரனே.



விழிக்குத் துணைதிரு மென்மலர்ப்
பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனு
நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு
தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங்
கோடன் மயூரமுமே.

நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே
நீவந்த வாழ்வைக்கண் டதனாலே,
மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே,
வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே
வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா,
நாலந்த வேதத்தின் பொருளோனே
நாடினென்று மார்தட்டும் பெருமாளே.

[குறிப்பு :—" மணமாகாத கன்னிப்பெண்கள் இத்திருப்புகழைத் தினமும் பக்தி சிரத்தையுடன் படனம் செய்தால் விரைவில் திருமண மாகும். இது உறுதி" என்பர் ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகள்.]

மூவிரு முகங்கள் போற்றி
முகம்பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற
இராறு தோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள்
மலரடி போற்றி யன்னான்
சேவலும் மயிலும் போற்றி
திருக்கை வேல் போற்றி போற்றி.

பன்னிரு கரத்தாய் போற்றி
பசும்பொன்மா மயிலாய் போற்றி
முன்னிய கருணை ஆறு
முகப்பரம் பொருளே போற்றி
கன்னியர் இருவர் நீங்காக்
கருணை வாரிதியே போற்றி
என்னிரு கண்ணே கண்ணுள்
இருக்குமா மணியே போற்றி.

காக்கக் கடவியநீ காவா(து) இருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா — பூக்கும்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடம்காண் இரங்காய் இனி.



11. தட்சிணாமூர்த்தி :

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்க ளுல்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமா யல்லதுமா யிருந்ததனை
யிருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்.



12. துர்க்கை :

நாயகி நான்முகி நாரா யணிகை நளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதிநச்சு
வாயகி மாலினி வாராகி சூலினி மாதங்கியென்
றாயகி யாதிஉடையாள் சரணம் அரணமக்கே,

தனம்தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வறியா
மனம்தரும் தெய்வவடிவும் தரும்நெஞ்சில் வஞ்சமில்லா
இனம்தரும் நல்லன எல்லாம்தரும் அன்பர் என்பவர்க்கே
கனம்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே.

13. சண்டேசுரர் :



பொன்னங் கடுக்கை முடிவேய்ந்த
புனிதற் கமைக்கும் பொருளன்றி
மின்னுங்கலன் ஆடைகள் பிறவும்
வேறு தமக்கென் றமையாமே
மன்னுந் தலைவன் பூசனையின்
மல்கும் பயனை அடியார்கள்
துன்னும்படி பூசனை கொள்ளும்
தூயோன் அடித்தாமரை தொழுவாம்.

14. வாழ்த்து :

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம் அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

## காமகோடியின் கருணைமொழி

முன்பு லஞ்சம், பொய் எல்லாம் இவ்வளவு இருந்ததில்லை. ஜனநாயகம் வந்தபிறகு இப்பொழுது லஞ்சம், பொய் முதலியவை நிறையக் காண்கின்றன.

ஆண்டவன் அருளால்தான் உலகம் நடக்கிறது என்பதை மனத்துள் கொண்டால்தான் இவை விலகும். பக்தி இல்லாமல் கல்விப் பயனில்லை. இப்பொழுதுள்ள கெடுதலெல்லாம் பக்தியற்ற கல்வியால் விளைந்தவைதாம்.

நம் தவறுகளை உணர்ந்து ஆண்டவனிடம் சொல்லி மன்னிப்புக் கேட்கவேண்டும். நம் மக்கள் திருந்தி, தெய்வ பக்தி, அநுஷ்டான ஒழுக்கம் ஆகியவற்றைக் கடைப்பிடித்து வந்தால் உலகையே ஜயித்துவிடமுடியும். நாம் ஒழுக்கத்துடனும் அநுஷ்டானத்துடனும் இருந்தால்தான் நமது பெருமை உலகில் பிரகாசிக்கும்,

— "கல்கி", 28—4—68



# சிவமயம்





## அனுபந்தம் 2

## சிக்கிரத்தில் பலனளிக்கும்

### சிவாஷ்டோத்தர சதநாம ஸ்தோத்ரம்



ஓம் த்ரிபாதத்ரிமூர்த்தயே நம:

ஓம் ஏகபாதமூர்த்தயே நம:

**( ஸ்காந்த மஹா புராணத்துள்ளடங்கியது )**

*பார்வத்யுவாச—*

*ஶரீரார்த4மஹம் ஶம்போ4: யேந ப்ராப்ஸ்யாமி கேஶவ |*
*ததி3தா3னீம் மமாசக்ஷ்வ ஸ்தோத்ரம் ஶீக்4ர ப2லப்ரத3ம் ||*

*நாராயண உவாச —*

*அஸ்தி கு3ஹ்யதமம் கௌ3ரி நாம்நாமஷ்டோத்தரம் ஶதம் |*
*ஶம்போ4ரஹம் ப்ரவக்ஷ்யாமி பட2தாம்ஶீக்4ரகாமத3ம் ||*

*அஸ்ய ஶ்ரீஶிவாஷ்டோத்தரஶதநாம ஸ்தோத்ர மஹா மந்த்ரஸ்ய, நாராயணரிஷி:, அநுஷ்டுப் ச2ந்த: ஸதா3ஶிவோ தே3வதா, மம, ஸதா3ஶிவப்ரஸாத3 ஸித்3யர்தே2 ஜபே விநியோக3: ||*

**த்4யானம்**

*த4வளவபுஷமிந்தோ3ர் மண்ட3லே ஸந்நிவிஷ்டம்*
*பு4ஜக3வலயஹாரம் ப4ஸ்மதி3க்3தா4ங்க3 மீஶம் |*
*ஹரிணபரஶுபாணிம் சாருசந்த்3ரார்த4மௌளிம்*
*ஹ்ருத3யகமலமத்4யே ஸந்ததம் சிந்தயாமி ||*

**ஸ்தோத்ரம்**

*ஶிவோ மஹேஶ்வர: ஶம்பு4; பிநாகீ ஶஶிஶேக2ர: |*
*வாமதே3வோ விரூபாக்ஷ: கபர்தீ3 நீலலோஹித: ||* 1

*ஶங்கர: ஶூலபாணிஸ்ச க2ட்வாங்கீ3 விஷ்ணுவல்லப4: |*
*ஶிபிவிஷ்டோம்பி3காநாத2: ஶ்ரீகண்டோ2 ப4க்தவத்ஸல: ||* 2

*ப4வ: ஶர்வ: த்ரிலோகேஶ: ஶிதிகண்ட2: ஶிவாப்ரிய: |*
*உக்3ர: கபாலீ காமாரி: அந்த4காஸுரஸூத3ன: ||* 3

க3ங்கா3த4ரோ லலாடாக்ஷ : காலகால : க்ருபாநிதி4 : |
பீ4ம : பரஶுஹஸ்தஸ்ச ம்ருக3பாணிர் ஜடாத4ர : || 4

கைலாஸவாஸீ கவசீ கடோ2ர : த்ரிபுராந்தக : |
வ்ருஷாங்கோ வ்ருஷபா4ரூடோ4 ப4ஸ்மோத்3தூ4ளித விக்3ரஹ : || 5

ஸாமப்ரிய : ஸ்வரமய : த்ரயீமூர்திரநீஶ்வர : |
ஸர்வஜ்ஞ : பரமாத்மாச ஸோம ஸூர்யாக்3னிலோசந : || 6

ஹவிர்யஜ்ஞமய : ஸோம : பஞ்சவக்த்ர : ஸதா3ஶிவ : |
விஶ்வேஶ்வரோ வீரப4த்ரோ க3ணநாத2 : ப்ரஜாபதி : || 7

ஹிரண்யரேதா து3ர்த4ர்ஷோ கிரீ3ஶோ கி3ரிஶோநக4 : |
பு4ஜங்க3பூ4ஷ ணோ ப4ர்கோ3 கி2ரித4ந்வா கி3ரிப்ரிய : || 8

க்ருத்திவாஸா : புராராதி : ப4க3வாந் ப்ரமதா2தி4ப : |
ம்ருத்யுஞ்ஜய : ஸூக்ஷ்மதநு : ஜக3த்3வ்யாபீ ஜ3கத்3கு3ரு : || 9

வ்யோமகேஶோ மஹாஸேந ஜநக : சாருவிக்ரம : |
ருத்3ரோ பூ4தபதி : ஸ்தா2ணு : அஹிர்பு3த்4ன்யோ தி3க3ம்ப3ர : || 10

அஷ்டமூர்திரநேகாத்மா ஸாத்விக : ஶுத்3த4விக்3ரஹ : |
ஶாஶ்வத : க2ண்ட3பரஶு : அஜ : பாஶவிமோசக : || 11

ம்ருட3 : பஶுபதிர்தே3வ : மஹாதே3வோவ்யயோ ஹரி : |
பூஷத3ந்தபி4த்3 அவ்யக்3ரோ த3க்ஷாத்4வரஹரோ ஹர : || 12

ப4க3நேத்ரபி4த்3 அவ்யக்த : ஸஹஸ்ராக்ஷ : ஸஹஸ்ரபாத் |
அபவர்க3 ப்ரதோ3நந்த : தாரக : பரமேஶ்வர : || 13

பலச்ருதி

ஏதத3ஷ்டோத்தரம் நாம்நாம் ஶதமாம்நாய ஸம்மிதம் |
ஶங்கரஸ்ய ப்ரியா கௌ3ரீ ஜப்த்வா ஶம்பு4ப்ரஸாத3த3ம் || 1

த்ரைகால்யமன்வஹம் தே3வீ வர்ஷமேகம் ப்ரயத்நத : |
அவாப ஸா ஶரீரார்த4ம் ப்ரஸாதா3ச்சூ2லபாணிந : || 2

ய : த்ரிஸந்த்4யம் படே2ந்நித்யம் நாம்நாமஷ்டோத்தரம் ஶதம் |
ஶதருத்3ர த்ரிராவ்ருத்யா யத்ப2லம் லப4தே நர : || 3

தத்ப2லம் ப்ராப்நுயாந்நித்யம் ஏகாவ்ருத்யா ந ஸம்ஶய : |
ஸக்ருத்3வா நாமபி4 : பூஜ்ய குலகோடிம் ஸமுத்3த4ரேத் || 4

பி3ல்வபத்ரை : ப்ரஶஸ்தைஸ்ச புஷ்பைஸ்ச துளஸீத3ளை : |
திலாக்ஷதை3ர்யஜேத்3யஸ்து ஜீவந்முக்தோ ந ஸம்ஶய : || 5

மேற்கொடுக்கப்பட்டுள்ள ஸ்காந்த மஹா புராணத்துள் ளடங்கிய இந்த சிவ அஷ்டோத்தர ஶத நாமஸ்தோத்ரம் மிகச் சிறந்தது. ஒரு சமயம் பார்வதி தேவியானவள் இறைவனின் பாதி சரீரத்தைத் தான் பெற வேண்டித் தன் சஹோதரரான ஸ்ரீமந்நாராயணனிடம் இதற்கான உபாயத்தை வேண்டினள். உடனே நாராயணமூர்த்தியானவர் பார்வதிதேவியைப் பார்த்துக் கூறியதாவது: "கௌரியே! அத்தகைய ஸ்தோத்ரம் ஒன்று, மிகவும் ரஹஸ்யமானது உள்ளது. சம்புவினுடைய நூற்றெட்டுத் திருநாமங்களடங்கிய சிவ அஷ்டோத்தர சதநாம ஸ்தோத்ரம் எனப்படும் அத்தோத்திரம் படிப்பவர்களுக்குத் தாமதம் இல்லா மல் அவர்களின் சகல விருப்பங்களேயும் அளிக்கக்கூடியது. அதை உனக்கு நான் உபதேசிக்கிறேன்" என்று உபதேசித்தார்.

இந்த ஸ்தோத்ர மஹாமந்திரத்துக்கு நாராயணன் ரிஷி. இது 32 எழுத்துக்கள் கொண்ட அநுஷ்டுப் என்ற சந்தத்தால் அமைந்த தாகும். ஸதாசிவமூர்த்தியின் பிரஸாதத்துக்காக இதனை ஜபிக் கிறேன் என்று ஸங்கல்பம் செய்துகொண்டு இதனை ஜபிக்க ஆரம் பித்தாள் கௌரிதேவி. "தவளவடிஷம்" என்று தொடங்கும் தியான ஸ்லோகத்தால் அப்பெருமானை அகத்தில் நிறுத்தி சிவன் முதல் பரமேச்வரன் வரையுள்ள 108 நாமங்களடங்கிய இந்த வேதங்களுக்குச் சமானமானதான, வேதம்போல படிக்க வேண்டிய, உயர்ந்த ஸ்தோத்ரத்தை ஒருவருஷ காலம் பிரதிதினமும் மூன்று ஸந்த்யா காலங்களிலும் ஜபித்து சம்புவின் பிரசாதத்தைப் பெற்றுப் பாதி சரீரத்தை அடைந்தாள். இதனை பிரதி தினமும் காலை, நண்பகல், மாலை ஆகிய மூன்று வேளைகளிலும் படிப்பவன் "சதருத்ரீயம்" என்ற வேத மந்திரத்தை மூன்று தடவை ஜபம் செய்வதனால் உண்டாகும் பலனை இதனுடைய ஒரு தடவை ஜபத் தால் பெறுகிறான். இதில் தினை அளவும் சந்தேகமில்லை. இந்த நாமங்களினால் ஒருமுறை பரமேச்வரனுக்கு அர்ச்சனை செய்கிறவ னுடைய கோடி குலம் நற்கதியை அடைந்துவிடுகிறது. நல்ல பில்வ தளங்களினாலோ புஷ்பங்களாலோ, துளஸீ தளங்களாலோ எள்ளு கலந்த அட்சதைகளாலோ இந்த நாமங்களைச் சொல்லிப் பரமேஶ் வரனை அர்ச்சிப்பவன் ஸகல துக்கங்களினின்றும் விடுபட்டு ஜீவன் முக்தனாக ஆகிவிடுவான். இது நிச்சயம்.

இத்தகைய இவ்வரிய தோத்திரத்தை பாலர்கள், ஸ்த்ரீகள் பெரியோர்கள் ஆகிய யாவரும் ஜபிக்கலாம். ஆலயங்களில் பிரதக்ஷிணம் செய்யும்பொழுதோ அல்லது சிவபெருமான் திரு முன்போ அல்லது வீட்டிலோ இதனை ஜபிக்கலாம். அர்ச்சனை செய்ய வசதியாக நாமாவளியும் தனியாகக் கொடுக்கப்பட் டுள்ளது. வீட்டில் சிவ பூஜை இல்லாதவர்கள் ஆலயத்தில் சிவாசாரியர்களைக் கொண்டு இந்த அர்ச்சனையை நடத்திக் கொள்ளலாம். பக்தர்கள் பயனடைய வேண்டும் என்பதே எமது பேரவா.

## சிவாஷ்டோத்தரசத நாமாவளி

ஓம் சிவாய நம:
ஓம் மஹேச்வராய நம:
ஓம் சம்பவே நம:
ஓம் பிநாகிநே நம:
ஓம் சசிசேகராய நம:
ஓம் வாமதேவாய நம:
ஓம் விரூபாக்ஷாய நம:
ஓம் கபர்திநே நம:
ஓம் நீலலோஹிதாய நம:
ஓம் சங்கராய நம: 10
ஓம் சூலபாணயே நம:
ஓம் கட்வாங்கிநே நம:
ஓம் விஷ்ணுவல்லபாய நம:
ஓம் சிபிவிஷ்டாய நம:
ஓம் அம்பிகாநாதாய நம:
ஓம் ஸ்ரீகண்டாய நம:
ஓம் பக்தவத்ஸலாய நம:
ஓம் பவாய நம:
ஓம் சர்வாய நம:
ஓம் த்ரிலோகே(கீ)சாய நம: 20
ஓம் சிதிகண்டாய நம:
ஓம் சிவாப்ரியாய நம:
ஓம் உக்ராய நம:
ஓம் கபாலிநே நம:
ஓம் காமாரயே நம:
ஓம் அந்தகாஸுரசூதநாய நம:
ஓம் கங்காதராய நம:
ஓம் லலாடாக்ஷாய நம:
ஓம் காலகாலாய நம:
ஓம் க்ருபாநிதயே நம: 30
ஓம் பீமாய நம:
ஓம் பரசுஹஸ்தாய நம:
ஓம் ம்ருகபாணயே நம:
ஓம் ஜடாதராய நம:
ஓம் கைலாஸவாஸிநே நம:
ஓம் கவசிநே நம:
ஓம் கடோராய நம:
ஓம் த்ரிபுராந்தகாய நம:
ஓம் வ்ருஷாங்காய நம:
ஓம் வ்ருஷபாரூடாய நம: 40
ஓம் பஸ்மோத்தூளித விக்ரஹாய நம:
ஓம் ஸாமப்ரியாய நம:
ஓம் ஸ்வரமயாய நம:
ஓம் த்ரயீமூர்த்தயே நம:
ஓம் அனீச்வராய நம:
ஓம் ஸர்வஜ்ஞாய நம:
ஓம் பரமாத்மநே நம:
ஓம் ஸோமஸூர்யாக்னி லோசநாய நம:
ஓம் ஹவிஷே நம:
ஓம் யஜ்ஞமயாய நம: 50
ஓம் ஸோமாய நம:
ஓம் பஞ்சவக்த்ராய நம:
ஓம் ஸதாசிவாய நம:
ஓம் விச்வேச்வராய நம:
ஓம் வீரபத்ராய நம:
ஓம் கணநாதாய நம:
ஓம் ப்ரஜாபதயே நம:
ஓம் ஹிரண்ய ரேதஸே நம:
ஓம் துர்தர்ஷாய நம:
ஓம் கிரீசாய நம: 60
ஓம் கிரிசாய நம:
ஓம் அனகாய நம:
ஓம் புஜங்கபூஷணாய நம:
ஓம் பர்காய நம:
ஓம் கிரிதந்வனே நம:
ஓம் கிரிப்ரியாய நம:

ஓம் க்ருத்திவாஸஸே நம:
ஓம் புராராதயே நம:
ஓம் பகவதே நம:
ஓம் ப்ரமதாதிபாய நம: 70
ஓம் ம்ருத்யுஞ்ஜயாய நம:
ஓம் ஸூக்ஷ்மதனவே நம:
ஓம் ஜகத்வ்யாபிநே நம:
ஓம் ஜகத்குரவே நம:
ஓம் வ்யோமகேசாய நம:
ஓம் மஹாஸேனஜனகாய நம:
ஓம் சாருவிக்ரமாய நம:
ஓம் ருத்ராய நம:
ஓம் பூதபதயே நம:
ஓம் ஸ்தாணவே நம: 80
ஓம் அஹிர்புத்ந்யாய நம:
ஓம் திகம்பராய நம:
ஓம் அஷ்டமூர்த்தயே நம:
ஓம் அனேகாத்மனே நம:
ஓம் ஸாத்விகாய நம:
ஓம் சுத்தவிக்ரஹாய நம:
ஓம் சாச்வதாய நம:
ஓம் கண்டபரசவே நம:
ஓம் அஜாய நம:
ஓம் பாசவிமோசகாய நம: 90
ஓம் ம்ருடாய நம:
ஓம் பசுபதயே நம:
ஓம் தேவாய நம:
ஓம் மஹாதேவாய நம:
ஓம் அவ்யயாய நம:
ஓம் ஹரயே நம:
ஓம் பூஷதந்தபிதே நம:
ஓம் அவ்யக்ராய நம:
ஓம் தக்ஷாத்வரஹராய நம: 100
ஓம் ஹராய நம:
ஓம் பகநேத்ரபிதே நம:
ஓம் அவ்யக்தாய நம:
ஓம் ஸஹஸ்ராக்ஷாய நம:
ஓம் ஸஹஸ்ரபாதே நம:
ஓம் அபவர்கப்ரதாய நம:
ஓம் அனந்தாய நம:
ஓம் தாரகாய நம:
ஓம் பரமேச்வராய நம: 108

## காஞ்சி காமகோடி பீடம்
## ஸ்ரீ ஜகத்குரு ஸ்வாமிகளின் அவா

ஒவ்வொரு நாளும் ஆயுள் பர்யந்தம் காலையில் எழுந்ததும் பல் துலக்கி நெற்றியில் விபூதி இட்டுக்கொண்டு ஸூர்ய மண்டலத்தில் சிவபிரானை த்யானித்து பாவங்களைப் போக்கும் சிவ நாமத்தை 11 தடவை சொல்லி ஸூர்யனுக்கு நமஸ்காரம் செய்ய வேண்டும்.

**நமாமி சிவம் அவ்யயம்**





# சிவமயம்





## அனுபந்தம் 3

மார்க்கண்டேயர் அருளிய

# ஸ்ரீ சந்த்ர சேகராஷ்டகம்



ஓம் கௌரீவரப்ரதமூர்த்தயே நம:

ஓம் சக்ரதாநஸ்வருபமூர்த்தயே நம:

சந்த்3ரசேக2ர சந்த்3ரசேக2ர சந்த்3ரசேக2ர பாஹிமாம் |
சந்த்3ரசேக2ர சந்த்3ரசேக2ர சந்த்3ரசேக2ர ரக்ஷமாம் ||

ரத்னஸாநுஶராஸநம் ரஜதாத்3ரிஶ்ருங்க3 நிகேதநம்
ஶிஞ்சிநீக்ருதபந்நகே3ஶ்வரமச்யுதாநல ஸாயகம் |
க்ஷிப்ர த3க்3த4புரத்ரயம் த்ரித3ஶாலயைரபி4வந்தி3தம்
சந்த்3ரசேக2ர மாஶ்ரயே மம கிம் கரிஷ்யதி வையம: || 1

பஞ்சபாத3ப புஷ்பக3ந்தி4 பதா3ம்பு3ஜத்3யவஶோபி4தம்
பா2லலோசன ஜாதபாவக த3க்3த4மநமத2 விக்3ரஹம் |
ப4ஸ்மதி3க்3த4கலேப3ரம் ப4வநாஶநம் ப4வமவ்யயம்
சந்த்3ரசேக2ரமாஶ்ரயே மம கிம் கரிஷ்யதிவை யம: || 2

மத்தவாரணமுக்2ய சர்ம க்ருதோத்தரீயமநோஹரம்
பங்கஜாஸந பத்3மலோசந பூஜிதாங்க்4ரி ஸரோருஹம் |
தே3வஸிந்து4 தரங்க3ஸீகர ஸிக்தஶுப்4ர ஜடாத4ரம்
சந்த்3ரசேக2ர மாஶ்ரயே மம கிம் கரிஷ்யதி வை யம: || 3

யக்ஷராஜஸக2ம் ப3க3ாக்ஷிஹரம் பு4ஜங்க3விபூ4ஷணம்
சைலராஜஸுதாபரிஷ்க்ருத சாருவாம கலேப3ரம் |
க்ஷ்வேளநீளகளம் பரஶ்வத2தா4ரிணம் ம்ருக3தா4ரிணம்
சந்த்3ரசேக2ர மாஶ்ரயே மம கிம் கரிஷ்யதி வை யம: || 4

குண்ட3லீக்ருதகுண்ட3லீஶ்வரகுண்ட3லம் வ்ருஷவாஹநம்
நாரதா3தி3முநீஶ்வரஸ்துத வைப4வம் பு4வனேச்வரம் |
அந்த4காந்தக மாஶ்ரிதாமர பாத3பம் சமநாந்தகம்
சந்த்3ரசேக2ர மாஶ்ரயே மமகிம் கரிஷ்யதி வை யம: || 5

பே4ஷஜம் ப4வரோகி3ணாமகி2லாபதா3மபஹாரிணம்
த3க்ஷயஜ்ஞ விநாசநம் த்ரிகு3ணாத்மகம் த்ரிவிலோசநம் |
பு4க்திமுக்திப2லப்ரத3ம் ஸகலாக4ஸங்க4 நிப3ர்ஹணம்
சந்த்3ரசேக2ர மாஶ்ரயே மம கிம் கரிஷ்யதி வை யம: || 6

ப$^{4}$க்தவத்ஸலமார்சிதாம் நிதி$^{4}$மக்ஷயம் ஹரித$^{3}$ம்ப$^{3}$ரம்
ஸர்வபூ$^{4}$தபதிம் பராத்பர மப்ரமேயமநுத்தமம் |
ஸோமவாரிநபூ$^{3}$ஹுதாஸந ஸோமபாநி க$^{2}$லாக்ருதிம்
சந்த்$^{3}$ரசேக$^{2}$ரமாஶ்ரயே மம கிம் கரிஷ்யதி வை யம: || 7

விஶ்வஸ்ருஷ்டி விதா$^{4}$யிநம் புநரேவபாலநதத்பரம்
ஸம்ஹரந்த மபி ப்ரபஞ்சம் அசேஷலோகநிவாஸிநம் |
க்ரீட$^{3}$யந்த மஹர்நிசம் கணநாத$^{2}$யூத$^{2}$ஸமந்விதம்
சந்த்$^{3}$ரசேக$^{2}$ர மாஶ்ரயே மம கிம் கரிஷ்யதி வை யம: || 8

ம்ருத்யுபீ$^{4}$தம்ருகண்டுஸூநு
க்ருதஸ்தவம் ஶிவஸந்நிதெ$^{4}$ள
யத்ர குத்ர ச ய: படே$^{2}$ந்ந
ஹிதஸ்ய ம்ருத்யுப$^{4}$யம் ப$^{4}$வேத் |
பூர்ணமாயுர ரோக$^{3}$தா மகி$^{2}$லார்த்த$^{2}$
ஸம்பத$^{3}$மாத$^{3}$ராத்
சந்த்$^{3}$ரசேக$^{2}$ர ஏவதஸ்ய
த$^{3}$த$^{3}$ாதி முக்திமயத்னத: || 9

மிருகண்டு புத்திரரான மார்க்கண்டேயர் இந்தத்தோத்திரத்தைச் சிவ சந்நிதியில் பாடினுர் என்பது பின்வரும் கந்தபுராணத் திருப்பாடலாலும் தெரிகிறது.

*அந்தக் காலத் தெம்முயிர் காப்பா னரனுண்டால்*
*வந்தக் கூற்ற னென்செய்வ னென்னு வடதொன்னூற்*
*சந்தப் பாவிற் போற்றுதல் செய்தே தனிநின்ற*
*மைந்தற் கானூஉ வெம்பெரு மானு மகிழ்வுற்ருன்.*

— கச்சியப்பர்

மார்க்கண்டேயரைக் காப்பாற்ற சிவபிரான் இலிங்கத்தினின்றும் தோன்றி யமனை உதைத்தருளிய அந்தத் தருணத்தில் "என்னுருயிரைக் காக்க எம்பெருமானுகிய பரமேச்வரன் இருக்கையில் என்னைக் கவர வந்த யமன் என்செயக் கடவன்" என்று வடமொழியில் பாடிய சந்தப்பாவினுல் துதித்து நின்ற அம்மிருகண்டு புத்திரனைக் கண்டு எம்பெருமானும் மகிழ்வுற்ருன் என்பது இப்பாடலின் பொருள். அங்ஙனம் மகிழ்ந்து மார்க்கண்டேயருக்கு என்றும் பதினுறு வயதுடைய சிரஞ்சீவித்வத்தையருளிச் செய்தான் என்பது ஸுப்பிரசித்தம். "வடதொன்னூற்சந்தப்பா" என்பது இந்த சந்த்ரசேகராஷ்டகமேயாகும் என்பது பெரியோர்கள் கருத்து. நம்முடைய சமயாசாரியர்களும் தம்முடைய அருட் பாடல்களில் பலவிடங்களில் இந்த வரலாற்றையமைத்துப் பாடியுள்ளது திருமுறைகளை நன்கு படித்தவர்களுக்கு இனிது விளங்கும். எனவே இந்தத் தோத்திரமும் இங்கு அனுபந்தமாகக் கொடுக்கப்பட்டுள்ளது. இதனைக் குழந்தைகள் முதல் பெரியோர் வரை மனப்பாடம் செய்து ஆலயத்தில் சந்த்ரசேகரர் சந்நிதியில் ஓத வேண்டும். மற்று எங்கும் ஓதலாம்.

**சந்த்ரசேகரப் பெருமான் திருவடியே சரணம்.**



# சிவமயம்





## அனுபந்தம் 4

### ஆதிசங்கர பகவத் பாதர்கள் அருளிய

# சிவானந்தலஹரி

(சில பொறுக்கு மணிகள்)



ஓம் கௌரீலீலாஸமத்விநமூர்த்தயே நம :      ஓம் விஷாபஹரணமூர்த்தயே நம :

ஷண்மதஸ்தாபனுசார்யரான ஸ்ரீமத் ஜகத்குரு ஆதிசங்கர பகவத் பாதர்கள் அருளிய சிவ ஸ்தோத்ரங்களில் மிகவும் சிறந்தது சிவானந்தலஹரி. படிப்பவர்களை மேலான சிவானந்த வெள்ளத்தில் திளைக்க வைப்பது. இதனைப் பக்தியுடன் ஓதுபவர்கள் உலகில் சகல செல்வங்களும் வித்யை, வாக்குவன்மை யாவும் பெற்று மிக்க கீர்த்தியுடன் வாழ்ந்து பின்னர் மோக்ஷ சாம்ராஜ்யத்தையுமடைவார்கள். இதில் ஒரு பாடலையாவது காதால் கேட்பவன் சிவபக்தி இல்லாதவனுயினுங்கூட சிறந்த சிவபக்தனுகிவிடுவான் என்பது உறுதி. இத்தகைய அரிய ஸ்தோத்ர ரத்னத்தின் சாரம் என்று பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷி 10 சுலோகங்களைப் பொறுக்கியெடுத்து உலகினுக்கு உபகாரஞ் செய்துள்ளார்கள். அவைகளை நினைவு வைத்துக்கொள்ள அவற்றின் முதலெழுத்துக்களைக் கொண்டு பின்வரும் சுலோகத்தையே செய்தருளினுர்கள்.

அங்-பக்-ஜன-கடோ-வக்ஷ : நர-குஹா-கபீ-வடு :
ஆத்ய தஸ சிவாநந்தலஹரீ ஸ்லோக சூசிகா.

அவர்கள் அருளிய அந்த வரிசைப்படி அந்த சுலோகங்களை நேயர்கள் படித்துப் பேறு பெற வேண்டுமெனப் பிரார்த்தித்து இங்குப் பிரசுரிக்கிறோம்.

### 61-வது ஸ்லோகம்

அங்கோலம் நிஜபீ$^{3}$ஜ ஸந்ததிரயஸ் காந்தோ பலம் ஸூசிகா
ஸாத்$^{4}$வீ நைஜவிபு$^{4}$ம் லதா க்ஷிதிருஹம் ஸிந்து$^{4}$ : ஸரித்$^{3}$வல்லப$^{4}$ம் |
ப்ராப்னோதீஹ யதா$^{2}$ ததா$^{2}$பஶுபதே : பாதா$^{3}$ ரவிந்த$^{3}$த்$^{3}$வயம்
சேதோவ்ருத்திருபேத்ய திஷ்ட$^{2}$திஸதா$^{3}$ ஸா ப$^{4}$க்திரித்யுச்யதே || 1

76-வது ஸ்லோகம்

ப4க்திர்மஹேஶ பத3 புஷ்கரமாவஸந்தீ
காத3ம்பி3நீவ குருதே பரிதோஷ வர்ஷம் |
ஸம்பூரிதோ ப4வதி யஸ்ய மனஸ்தடாக :
தஜ்ஜந்ம ஸஸ்ய மகி2லம் ஸப2லம் ச நான்யத் || 2

83-வது ஸ்லோகம்

ஜநநம்ருதியுதாநாம் ஸேவயா தே3வதாநாம்
ந ப4வதி ஸுக2லேஶ : ஸம்ஶயோ நாஸ்தி தத்ர |
அஜநிமம்ருதரூபம் ஸாம்ப3மீஶம் ப4ஜந்தே
ய இஹ பரமஸௌக்2யம் தே ஹி த4ந்யா லப4ந்தே || 3

6-வது ஸ்லோகம்

க4டோ வா ம்ருத்பிண்டோ3ऽப்யணுரபிச தூ4மோऽக்3னிரசல :
படோ வா தந்துர்வா பரிஹரதி கிம் கே4ரஶமநம் |
வ்ருத2ா கண்ட2க்ஷோப4ம் வஹஸி தரஸா தர்கவசஸா
பத3ாம்போ4ஜம் ஶம்போ4ர் ப4ஜ பரம ஸௌக்2யம் வ்ரஜஸுதீ :|| 4

65-வது ஸ்லோகம்

வக்ஷஸ்தாட3ந ஶங்கயா விசலிதோ வைவஸ்வதோ நிர்ஜரா :
கோடீரோஜ்ஜ்வல ரத்நதீ3ப கலிகா நீராஜநம் குர்வதே |
த்ருஷ்3ட்வா முக்தி வதூ4ஸ்தநோதி நிப்4ருதாஶ்லேஷம்
ப4வானீபதே
யச்சேதஸ்தவ பாத3 பத்3மப4ஜநம் தஸ்யேஹ கிம் து3ர்லப4ம் || 5

10-வது ஸ்லோகம்

நரத்வம் தே3வத்வம் நக3வந ம்ருக3த்வம் மஶகதா
பஶுத்வம் கீடத்வம் ப4வது விஹக3த்வாதி3 ஜநநம் |
ஸதா3 த்வத்பாத3ாப்3ஜ ஸ்மரண பரமானந்த3லஹரீ
விஹாராஸக்தம் சேத்3த்4ருதய மிஹ கிம் தேந வபுஷா || 6

12-வது ஸ்லோகம்

கு3ஹாயாம் கே3ஹே வா ப3ஹிரபி வனேவாऽத்ரிஶிக2ரே
ஜலேவா வஹ்னௌ வா வஸது வஸதே : கிம்வத3 ப2லம் |
ஸதா3 யஸ்யை வாந்த : கரணமபிஶம்போ4 தவ பதே3
ஸ்தி2தம் சேத்3யோகோ3ऽஸௌ ஸ ச பரமயோகீ3 ஸ ச ஸுகீ2 || 7

### 9-வ்து ஸ்லோகம்

க$^3$பீ$^4$ரேகாஸாரே விஶதி விஜனேகே$^4$ார விபிநே
விஶாலே சைலேச ப்$^4$ரமதி குஸுமார்த$^2$ம் ஜட$^3$மதி : |
ஸமர்ப்யைகம் சேத : ஸரஸிஜமுமாநாத$^2$ ப$^4$வதே
ஸுகே$^2$நாவஸ்தா$^2$தும் ஜன இஹ நஜாநாதி கிமஹோ || 8

### 11-வது ஸ்லோகம்

வடுர்வா கே$^3$ஹீவா யதிரபி ஜடீவா தத$^3$தரோ
நரோ வா ய : கஶ்சித் ப$^4$வது ப$^4$வ கிம்தேந ப$^4$வதி |
யதீ$^3$யம் ஹ்ருத் பத்$^3$மம் யதி$^3$ ப$^4$வத$^3$தீ$^4$நம் பஶுபதே
ததீ$^3$யஸ்த்வம் ஶம்பே$^4$ா ப$^4$வஸி ப$^4$வப$^4$ாரம் ச வஹஸி || 9

### 91-வது ஸ்லோகம்

ஆத்$^3$யா வித்$^3$யா ஹ்ருத்$^3$க$^3$தா நிர்க$^3$தாஸீத்
வித்$^3$யா ஹ்ருத்$^3$யா ஹ்ருத்$^3$க$^3$தா த்வத் ப்ரஸாதாத் |
ஸேவே நித்யம் ஶ்ரீகரம் த்வத் பதா$^3$ப்$^3$ஜம்
ப$^4$ாவே முக்தேர் ப$^4$ாஜநம் ராஜமௌலே || 10

## SIVA LINGAS AND THEIR EFFECTS

Siva lingas can be improvised on any of the following 13 materials :—river-sand, rice, cooked rice, clay, cowdung, butter, rudraksha (a berry); sandal-paste, the sacred knot made with kusa grass, flower-garland, cane-sugar, and the oil lamp. The effect of worshipping Siva in the above lingas are respectively as follows: Moksha; prosperity; longevity; purity of soul; destruction of sickness; excellent health; Rudrahood; destruction of all sins; lustre; good fortune; enjoyment in life; satisfaction in life; Union with Siva. Of all such lingas, worship of earthen linga bestows all one's desires

— *The Bhavan's Journal, 10—3—1968*

 சிவமயம் 



ஓம் கருடாந்திகமூர்த்தயே நம :

# அனுபந்தம் 5

# ஸகல ஸம்பத்துக்களையும் அளிக்கும் சிவ விரதங்கள்



ஓம் ப்ரஹ்மசிரச்சேதமூர்த்தயே நம :

உலகில் ஸகல ஜனங்களுக்கும் எல்லாவிதமன விருப்பங்களும் நிறைவேறக்கூடிய சிறந்ததான சிவவிரதங்கள் இங்கு கூறப்படுகின்றன.

## 1. ஸோமவார விரதம்

முதலில் கார்த்திகை ஸோமவாரத்தன்று இதனை ஆரம்பிப்பது உத்தமம். சூர்யோதயத்துக்குமுன் எழுந்து, சிவபெருமானைத் தியானித்து, ஸ்நாநஞ்செய்து, பஸ்ம, ருத்ராக்ஷங்களை அணிந்து கொண்டு, ஸந்த்யா வந்தனம் முதலிய அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு, பிறகு சிவபூஜை செய்யவேண்டும். பின்னர் சிவபக்தர்களையும், பதிவ்ரதைகளான ஸ்த்ரீகளையும் பார்வதீபரமேஸ்வரர்களாகப் பாவித்து, பூஜித்து, அவர்களுக்கு அறுசுவை உண்டி செய்வித்து, தான் அன்று ஒரே தடவை சாப்பிட வேண்டும். சிவ பூஜை இல்லாதவர்கள் சிவாலயத்தில் சிவலிங்கமூர்த்திக்கு அபிஷேக ஆராதனைகள் சிவாசாரியர்கள் மூலம் நடத்திவைத்துப் பிறகு பிராம்மண போஜனம் செய்வித்து, இந்த விரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். இந்த ஸோமவார விரதத்தினால் பாபங்கள் கெட்டு, ஸகல சௌக்கியங்களும் நமக்குக் கிடைக்கும். புத்திரன் இல்லாத குறை நீங்கும். இந்த விரதத்தைப் பிரதி ஸோமவாரமும் (திங்கட்கிழமையும்) அனுஷ்டிக்க வேண்டும்.

## 2. திருவாதிரை விரதம்

இந்த விரதம் ஸகலமங்களங்களுக்கும் காரணமானது. மார்கழி மாதத்தில் திருவாதிரை நன்னாளில் ஆனந்த தாண்டவ மூர்த்தியை ஹ்ருதயத்தில் தியானம் செய்து, ஸ்நாநஜபங்களை முடித்துக் கொண்டு, சிவாலயத்திற்குச் செல்லவேண்டும். அங்கு சிவலிங்க மூர்த்திக்கு அபிஷேக ஆராதனைகளைச் செய்து தீபங்களை நிறையு

ஏற்றவேண்டும். நடராஜமூர்த்திக்கு அபிஷேக அர்ச்சனைகள் செய்வித்து, நெய்யினால் தீபங்கள் ஏற்றவேண்டும். பின்னர், வீடுதிரும்பி அன்று முழுதும் உபவாசம் இருந்து மறுநாள் சூரியோதயத்தில் எழுந்து, ஸ்நாநஜபங்கள் செய்து முடித்து, சிவனடியார்களுக்குப் போஜனம் செய்வித்து, அவர்களின் ஆக்ஞையைப் பெற்றுக்கொண்டு தான் சாப்பிடவேண்டும். இந்த விரதத்தை அனுஷ்டிப்பவன் சிறந்த மஹாத்மாவாகிறான். போகம், மோக்ஷம் இரண்டும் அவனுடைய ஆதீனத்தில் இருக்கும். இந்த திருவாதிரை தினத்தில் சம்புவானவர் ஆனந்த தாண்டவம் யாவரையும் ரக்ஷிப்பதற்காகப் புரிவதால் இந்த விரதம் மிகவும் சிறந்தது. மிக மகிமை வாய்ந்த யோகியான வியாக்ரபாதர், இந்த விரத அனுஷ்டானத்தினால் நடராஜப்பெருமானுடைய திருக் கூத்தைத் தரிசித்துச் சிறந்த முனிவரான உபமன்யுவைப் புத்திர ராக அடைந்தார்.

## 3. உமாஹேஶ்வர விரதம்

இந்த விரதம் கார்த்திகை மாதத்தில் பௌர்ணமியன்று அனுஷ்டிக்கத்தக்கது. இந்த தினத்தில் ஸ்நானம் ஜபம் முதலிய நித்ய கர்மானுஷ்டானங்களை முடித்துக் கொண்டு, தங்கம் அல்லது வெள்ளியினால் உமாமஹேஶ்வரருடைய பிரதிமையைச் செய்து, பார்வதிபரமேஶ்வரர்களைப் பூஜை செய்யவேண்டும். பிறகு ஆலயத்திற்குச் சென்று அங்கு மகாலிங்க மூர்த்திக்கு அபிஷேக அர்ச்சனைகளைச் செய்யவேண்டும். தனது சக்திக்கு ஏற்றபடி, சிவ பக்தர்களான பிராம்மணர்களுக்குத், தானங்கள் கொடுக்க வேண்டும். பிறகு சிவபக்தர்களுடன் ஒருவேளை உண்ணலாம். பழவகைகளையோ, அல்லது விரதபங்கம் ஏற்படாத பக்ஷிய வகைகளையோ புசிக்கவேண்டும் இந்த விரதத்தின் மகிமையை நியமத்துடன் சிரவணம் செய்யவேண்டும். உமாமஹேஶ்வரப் பிரதிமையை சிறந்த சிவபக்தருக்குத் தானம் செய்ய வேண்டும். இந்த பெரிய விரதத்தை அனுஷ்டிக்கிறவர்களின் வீட்டுவாயிலில் நவநிதிகளும் காத்திருக்கும். பிறப்பிறப்பற்ற பேரானந்த நிலையும் அதிசுலபமாகக் கைகூடும். மஹாவிஷ்ணுவும் கிருஷ்ணாவதாரத்தில் சிவபெருமானுக்கு மிகப் பிரியமுள்ளதான இந்த சிவவிரதத்தைத் தன் மனைவிகளுடன் அனுஷ்டித்துப் பல புத்திரர்களை அடைந்தார். மேலும், இந்த விரதத்தின் மகிமை வாக்கிற்கு அடங்காதது. அனுஷ்டிக்க முடியாதவர்களும் இந்த விரத மகிமையைக் கேட்டும் இதைப் படித்துமே புண்ணியத்தை அடையலாம்.

## 4. சிவராத்திரி விரதம்

சிவராத்திரி ஐவகைப்படும். அவை நித்யசிவராத்திரி, மாதசிவ ராத்திரி, யோக சிவராத்திரி, பக்ஷசிவராத்திரி, மஹா சிவராத்திரி என்பன.

1. நித்ய சிவராத்திரியாவது, ஒவ்வொரு மாதத்திலேயும் வரும் வளர்பிறை, தேய்பிறை, சதுர்த்தசி நாட்கள்.

2. மாதசிவராத்திரியாவது, ஒவ்வொரு மாதத்திலும் கிருஷ்ண பக்ஷ சதுர்த்தசியாகும்.

3. யோக சிவராத்திரியாவது, சோமவாரத்தோடு அமாவாசை சேர்ந்து வருவதாகும்.

4. பக்ஷ சிவராத்திரியாவது, மாகப்ரதமாதி சிவராத்திரி எனப் படும். இது மாகமாதத்தில் சுக்லபக்ஷப்ரதமை முதல் த்ரயோதசி வரை சங்கல்பம் செய்துகொண்டு, ஒருவேளை உணவு உண்டு சதுர்த்தசி தினத்தில் காலையிலெழுந்து, மஹாலிங்கத்தின் உருவை உடையவரான பரமேஶ்வரனை ஹ்ருதய கமலத்தில் தியானித்து, அன்று இரவு நான்கு ஜாமங்களிலும் பூஜை செய்வதாகும்.

5. மஹா சிவராத்திரியாவது, மாசிமாதம் க்ருஷ்ண பக்ஷம், சதுர்த்தசி தினத்தில் வருவது. அன்றைய தினத்துக்கு முன்னுள் இரவே பட்டினி கிடந்து சிவராத்திரி தினத்தன்று, காலையில் நீராடி, நித்யகர்மங்களை முடித்துக்கொண்டு, சிவாலய தரிசனம், சிவபுராண படனம், சிரவணம் செய்துகொண்டு உணவின்றி இருக்கவேண்டும். அன்று இரவு நித்திரை இல்லாமல் நான்கு ஜாமங்களிலேயும் சிவ லிங்க பூஜை செய்யவேண்டும். சிவபூஜை இல்லாதவர்கள் ஆலயங் களுக்குச் சென்று அங்கு நடைபெறும் 4 கால பூஜைகளையும் தரி சித்து அனுஷ்டிக்கவேண்டும். மறுநாட்காலை அருணோதயத்துக்குப் பின் நீராடி, நித்ய கர்மங்களை முடித்துக்கொண்டு, அடியார்களுட னும் உறவினர்களுடனும், அன்னத்தைப் (பாரணை) புசிக்க வேண்டும். நான்கு ஜாமங்களிலும் சிவாலயத்திற்குச் சென்று தரிசனம் செய்ய இயலாதவர்கள் லிங்கோத்பவ காலம் எனப்படும் இரண்டாவது ஜாமத்திலாவது தவறாது சிவதரிசனம் செய்ய வேண்டும்.

பூர்வத்தில் ஒரு சமயம், மஹா சம்ஹார காலத்தில் எல்லா உலகங்களும் உயிர்களும் ஒடுங்கி, எங்கும் இருள்மயமாகி இருந்தபோது, உமாதேவியார் தன்னுடைய ஹ்ருதய கமல பீடத்தில் பரமேஶ்வரனைப் பூஜித்தாள். பிறகு, உலக சிருஷ்டி யானது மீண்டும் உண்டானபோது, தேவியானவள் கருணைநிதி யான மஹேஶ்வரரை நமஸ்கரித்து, "இறைவரே! நான் இருளில் தங்களைப் பூஜை செய்துகொண்டிருந்தபடியால் இவ்விரவில் நான்கு யாமங்களிலும் பகவானுன தங்களைப் பூஜை செய்கிறவர் களுக்கு எல்லாப் பலன்களும் உண்டாகட்டும். பரத்திலும் அவர் களுக்கு மோக்ஷம் கிடைக்கட்டும். சிவராத்திரி விரதம் என்று பெயரும் உண்டாகட்டும்" என்று வேண்டினாள். பரமேஶ்வரனும் அந்த வரத்தை அனுக்கிரஹித்தார்.

முன்பு ஒருசமயம் பிரம்ம, விஷ்ணுக்கள் இருவரும் சர்வேஸ்வரனுன ஜ்யோதி மகாலிங்கத்தின் அற்புதமான அடிமுடிகளைக் காணமுடியாததால் அவ்விருவர்களும் சிவராத்திரியன்று இரவில் ஸ்ரீமஹேஸ்வரனைப் பூஜித்தார்கள். பகவான் அவர்கள் முன்னிலையில் சிவலிங்கத்தினின்றும் தோன்றி, அவர்களுடைய குற்றத்தை மன்னித்து, அவர்களுக்கு வேண்டிய வரங்களையளித்தார். பரமேச்வரன் அவ்விருவர் முன்னுலும் ஜோதிர்லிங்கமாக நிகரற்ற காந்தியுடன ஆவிர்பபவித்ததும் சிவராத்திரியில் நடு இரவிலேயாகும். ஆகையால், இவ்விரதத்தின் மகிமையை யாவரே சொல்லவல்லார்? மஹேஸ்வரனின் பெருமை எவ்வாறு வாக்கு, மனம் இவைகளுக்கு விஷயமாகாததோ, அதேபோல இவ்விரதத்தின் மகிமையும் மனத்திற்கும், வாக்கிற்கும் எட்டாததேயாகும். இந்த மஹா விரதத்தின் மகிமையை எவர்கள் படிக்கிருர்களோ, கேட்கிருர்களோ, அவர்கள் இந்த உலகில் தெய்வபக்தி உள்ளவர்களான புத்திரர்களைப் பெற்று, முடிவில் மோக்ஷத்தையும் அடைவார்கள்.

## 5. கேதார விரதம்

ஸகல மங்களங்களுக்கும் காரணமான இந்த கேதார விரதம் புரட்டாசி மாதத்தில் சுக்ல பக்ஷ அஷ்டமியில் ஆரம்பித்து, 21 நாட்கள் அனுஷ்டிக்கப்படவேண்டும். முடிவு தினத்தில் நியமத்துடன் போஜனம் செய்யவேண்டும். இந்த விரதத்தை அனுஷ்டிக்கிறவன் இந்நிலவுலகில் ஸௌக்யமாக வாழ்ந்து, முடிவில் மோக்ஷமடைவான்.

## 6. கல்யாண விரதம்

இந்த விரதம் பங்குனி மாதத்தில் சுக்ல பக்ஷத்தில் உத்தர நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் அனுஷ்டிக்கப்பட வேண்டும். அன்று காலையில் எழுந்து, கல்யாண திருக்கோலத்தில் பார்வதீ பரமேஸ்வரர்களைத் தியானித்து நீராடி, விபூதி, ருத்திராக்ஷதாரியாய் சிவபெருமானைப் பூஜிக்கவேண்டும். சிவபூஜை இல்லாதவனும் தங்கத்தினுல் பார்வதி பரமேஸ்வரர்களுடைய உருவங்களைச் செய்து, அவைகளைப் பூஜிக்கவேண்டும். பிறகு விவாஹ முறைப்படி திருக்கல்யாணம் செய்விக்கவேண்டும். வேத வித்துக்களும், சிவ பக்தர்களுமான பிராம்மணர்களைப் பத்தினி ஸஹிதமாகப் பூஜித்து, நிறைய தானங்கள் செய்யவேண்டும். அவர்களுக்குச் சிறந்த முறையில் அன்னம் அளிக்கவேண்டும். ஆலயத்திற்கும் சென்று வழிபட்டு, வீடு திரும்பி, இரவில் சிவபக்தர்களான சிறந்த பிராம்மணர்களோடு பழவகைகள், பாயஸம், முதலியவைகளைப் புசிக்க வேண்டும். அன்று இரவு தருப்பைமீது சயனித்து, காலையில் எழுந்து, ஸ்நாநம் முதலிய அனுஷ்டானங்களை முடித்துக்

கொண்டு அந்த இரண்டு பதுமைகளை சிவபக்தர்களான பிராம்மணர்களுக்கு தானமளிக்கவேண்டும். அன்றும் ஒருவேளைதான் புசிக்கலாம். ஸகல பாபங்களையும் போக்கக்கூடிய இந்த விரதத்தை இவ்விதமாக எவன் அனுஷ்டிக்கிறானோ, அவன் சிவபெருமானுக்கு மிகவும் பிரியமுள்ளவனாக ஆகிறான். போகம், மோக்ஷம் என்னும் இரண்டும் அவனுக்கு அதிசுலபமாக ஆகின்றன.

## 7. சூல விரதம்

இந்த விரதம் தை மாதம் அமாவாசையில் நடத்தவேண்டியது. பார்வதி தேவியோடு கூடியதும், அழகான அங்கங்கள் அமையப் பெற்றதும், சூலத்தைத் தரித்ததும், தங்கத்தாலோ வெள்ளியாலோ செய்யப்பட்டதுமான சிவபெருமானின் விக்ரஹத்தை வைத்துக்கொண்டு, அபிஷேக, நிவேதனங்கள் செய்து, பகலில், ருத்ராக்ஷ மாலைகளைத் தரித்த பிராம்மணருக்குத் தானங்கள் செய்யவேண்டும். சிவாலய வழிபாடு முறைப்படி செய்து, பிராம்மணர்களுக்கு அறுசுவை உண்டியளிக்கவேண்டும். அன்று இரவு உபவாஸமிருந்து, மறுநாள் காலையில் கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, மீண்டும் பூஜை செய்து, அப்பிரதிமையைத் தன் குருவிற்குத் தானம் செய்து, அடியார்களுடன் கூட உணவருந்தவேண்டும். இவ்விரதத்தை இவ்விதமாக அனுஷ்டிக்க வேண்டும். எந்த மனிதர்கள் இவ்விரதத்தை இந்தமாதிரி அனுஷ்டிக்கிறார்களோ, அவர்கள் சத்ருக்களை எல்லாம் ஜயித்து, தீராத பெரிய வியாதிகளெல்லாம் நீங்கி, பூரண ஆயுளை அடைந்து, வம்சத்தை விருத்தி செய்யும் பல புத்திரர்களையுமடைந்து முடிவில் சிவஸாயுஜ்யத்தை அடைகிறார்கள்.

## 8. விருஷப விரதம்

இந்த விரதம், வைகாசி மாதத்தில் சுக்லபக்ஷ அஷ்டமியில் அனுஷ்டிக்கப்பட வேண்டும். அன்று அதிகாலையில் எழுந்து, சுத்தம் செய்துகொண்டு, வ்ருஷபவாகனரான ஸ்ரீபரமேஶ்வரனைத் தியானித்து, ஸ்நானம் செய்து, ஸந்தியாவந்தனம் செய்து, பின்பு தங்கம் அல்லது வெள்ளியினால் செய்யப்பட்டதும், பார்வதிதேவியுடன் ரிஷபத்தின்மீது வீற்றிருக்கும்படிச் செய்யப்பட்டதுமான பிரதிமைக்கு பஞ்சாமிர்தத்தால் அபிஷேகம் செய்து, பாயஸம் முதலியன நைவேத்யம் செய்யவேண்டும். சிறந்த பிராம்மணருக்கு தானமளித்து, பின் சிவாலயத்துக்குச் சென்று சிவபெருமானைத் தரிசித்து, சிறிது காணிக்கை செலுத்தி, வீடு திரும்பி, சிவ பக்தி மிக்க பிராம்மணர்களுடன் சுத்தான்னம், சர்க்கரைப் பொங்கல், அப்பம் முதலிய பணியாரங்கள், கனி வர்க்கங்களுடன் உண்ண வேண்டும். இரவில் சிவபுராணங்களைக் கேட்டு, பின்னர் வெறுந் தரையில் படுத்து உறங்கவேண்டும். மறுநாட்காலை எழுந்து நித்ய

கர்மாக்களை முடித்துக்கொண்டு, அப்பிரதிமையை சிவபக்தரும், வித்துவானுமான பிராம்மணருக்குத் தாணமளிக்கவேண்டும். எவர்கள் இவ்வாறு இவ்விரதத்தை அனுஷ்டிக்கிறார்களோ, அவர்கள் ஆயுள், தனம், கல்வி, ஆரோக்யம், அஷ்ட ஐச்வர்யங்கள் இவைகளனைத்தையும் அடைகிறார்கள்.

குறிப்பு:—இந்த விரதங்களை அனுஷ்டிக்கப் போதிய செல்வ வசதியில்லாதவர்களும் இவற்றின் மகிமைகளை வாசித்துக் கேட்டால் க்ஷேமத்தை அடைவார்கள்.

---

## காமகோடியின் கருணைமொழி

## மகா சிவராத்திரி

ஈசனுடைய திருநாளே மகா சிவராத்திரி. உருவமற்ற முழு முதற் கடவுள் பக்தர்களின் பிரார்த்தனைக்கு இணங்கி, அரூபத்துக்கும் ஸ்வரூபத்துக்கும் இடையே உள்ள ஜோதிர்லிங்கமாகக் காட்சி அளித்த நன்னாளே இந்த மகா சிவராத்திரி. இந்தப் புனிதமான தினம் பிரார்த்தனைக்கும் தியானத்துக்கும் சிறந்த நாள். அன்று நடுநிசியில் பரமசிவன் லிங்கோத்பவராகத் தோன்றுகிறார். இந்தத் திருநாளுக்குச் சரியாக 180 நாட்களுக்கு முன் தட்சணாயனத்தில் அஷ்டமி நடுநிசியில் மகாவிஷ்ணு பூர்ணாவதாரமான கிருஷ்ணாவதாரம் செய்வது குறிப்பிடத்தக்கது.

நம்மைப் போஷித்து முடிவில் நம்மை ஆட்கொள்ளும் இந்தக் கருணாமூர்த்தியின் நினைவாக இந்நாள் முழுதும் உபவாசம் இருந்து நித்திரை இல்லாமல் சிவத்தியானம் செய்யவேண்டும். பிறப்பில்லாத பரமசிவன் பக்தர்களின் அன்புக்குச் செவிசாய்த்துப் பிறக்கும் நடுநிசியில் அவரை நினைத்து அவருடைய திருநாமங்களை ஜபித்துக் கருணைக்குப் பாத்திரமாகவேண்டும். அவரைத் தியானம் செய்தாலும் செய்யாவிட்டாலும் தமது சொரூபத்தில் நம்மை அவர் அரவணைத்துக்கொள்வார். ஆனால் சிந்தனா சக்தியையும் அறிவையும் மற்ற இந்திரிய கலாபங்களையும் அளித்த அவரை நாம் நாள்தோறும் நினையாதிருந்தாலும் இந்நன்னாளிலாவது நினைத்து அவரது அருள் விலாசத்துக்குப் பாத்திரமாக வேண்டும்.

— "கல்கி", 25—2—1968

# சிவமயம்



## அனுபந்தம் 6

## சிவ சின்னங்கள்



ஓம் கூர்மஸம்ஹாரமூர்த்தயே நம : ஓம் மத்ஸ்யஸம்ஹாரமூர்த்தயே நம :

**வி**பூதி, ருத்ராக்ஷம், வில்வம், ஸ்படிகலிங்கம் பஞ்சாக்ஷரம் ஆகிய ஐந்தும் சிவ சின்னங்கள்.

1. **விபூதி** :—விபூதி என்னும் பதம் மேலான ஐஶ்வர்யம் என்ற பொருளைக் கொண்டது. இதை இறைவனும் தன் உடம்பில் பூசிக்கொண்டிருக்கிறார்.

*" கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை*
*மங்காமற் பூசி மகிழ்வரே யாமாகில்*
*தங்கா வினைகளும் சாரும் சிவகதி*
*சிங்காரமான சிவனடி சேர்வரே "*

என்பது திருமூலர் திருமந்திரம் " நீறில்லா நெற்றி பாழ் " என்பது ஔவையின் வாக்கு. ஸகல உலகங்களும் அழிந்தாலும், தான் அழியாது நிற்கும் பரமசிவனைப்போல, எல்லாப் பொருள்களும் எரிந்து பஸ்மமாகியும் அந்த பஸ்மம் எரிந்து அழிவதில்லை. எனவே, பஸ்மா சிவஸ்வரூபத்தை விளக்குகிறது.

*" பஜனாத் ஸர்வ பாபக்நம் ஸ்மரணாச்ச சிவம் கரம் |*
*பஸ்மசேதி ஸமாக்யாதம் புக்திமுக்தி பலப்ரதம் " ||*

*ய இதம் தாரயேத் பஸ்ம மந்த்ரிதம் விதிவந் நர : |*
*காங்க்ஷிதாந்யஸ்ய சித்யந்தி நஶ்யந்தித்து நிதான்யபி ||*

*யதா தேவஸ்ய மாஹாத்ம்யம் துர்ஜ்ஞேயம் பார்வதீபதே : |*
*ததைவ பஸ்மந : ப்ரோக்தம் வேதவேதாங்க பாரகை : ||*

— ஸ்காந்தம், உபதேசகாண்டம்

**இதன் பொருள்** :—தரித்தமாத்திரத்தில் எல்லாப் பாவங்களையும் போக்கவல்லதும், ஸ்மரண மாத்திரத்தில் மங்களத்தைச் செய்வதுமான இதற்கு பஸ்மா எனப் பெயருண்டாயிற்று. இது போகம், மோக்ஷம் ஆகிய இரண்டு பலன்களையும் அளிக்கவல்லது. விதிப்படி

தயார் செய்யப்பட்ட பஸ்மத்தை எந்த மனிதன் தரிக்கின்றனோ, அவனுடைய ஸகல பாபங்களும் அழிந்து, எல்லா விருப்பங்களும் சித்தியாகின்றன. 'எப்படி பார்வதிகாந்தனை மஹாதேவனுடைய மாஹாத்ம்யம் அறிவதற்கு அருமையானதோ, அங்ஙனமே பஸ்மாவினுடைய மகிமையும்' என்று வேத வேதாங்க பாரகர்கள் கூறுகிறார்கள்.

இத்தகைய பஸ்மா யாவராலும் எப்பொழுதும் அணியத் தகுந்தது. மூன்று பட்டையாகவும், உத்தூளணமாகவும் தரிக்கத் தக்கது. இவ்விரண்டு முறையும் வேதங்களால் விதிக்கப்பட்டுள்ளது. பஸ்மாவைக் கையில் எடுத்து வைத்துக்கொண்டு ஜலத்துடன் சேர்த்துக் குழைத்து, தலை, நெற்றி, கழுத்து, மார்பு, வயிறு இரு பக்கங்கள் இரு கைகள், கைகளின் மத்திய பாகம், இரு மணிக்கட்டுகள், முதுகு, கழுத்தின் பின்புறம் ஆகிய 15 இடங்களிலும், திரிபுண்டரமாக விபூதி தரிப்பவர்கள் யாவராயினும், அவர்கள் சிவஸ்வரூபமாகவே ஆகிறார்கள். விபூதியை மந்திரத்துடனே, மந்திரமில்லாமலோ தரிக்கலாம். வேறு மந்திரம் ஒன்றும் பயிற்சி இல்லாதவர்கள், "சிவ சிவ" என்று கூறிக்கொண்டே முதலில் உத்தூளணமாக நெற்றி முதலிய சகல அங்கங்களிலும் பூசிக்கொண்டு, பின்னர் திரிபுண்டரமாகவும் தரிக்க வேண்டும். இந்த விபூதியின் பெருமையை ஜாபால உபநிஷத், ஸ்வேதாஸ்வதர உபநிஷத், காலாக்னிருத்ர உபநிஷத், அதர்வசிரோபநிஷத் முதலியவைகள் விரிவாகக் கூறுகின்றன. இவற்றின் கருத்தைத் திரட்டி நமது சமயாசாரியமூர்த்தியான திருஞானசம்பந்தப்பெருமான் திருநீற்றுத் திருப்பதிகத்தில் கூறியுள்ளார். அந்தத் திருப்பதிகத்தை ஓதியும் திருநீறு தரித்துக் கொள்ளலாம். அப்படித் தரித்துக்கொண்டால், உடற்பிணி மட்டுமின்றி, பிறவிப்பிணியும் தீரும் என்பது ஒருதலை.

2. **ருத்ராக்ஷம்** :—ருத்ராக்ஷம் என்ற பதம் ருத்ரனுடைய நேத்ரம் என்று பொருள்படுகிறது. ருத்ராக்ஷத்தைத் தரிப்பதை மஹாவிரதம் என்று முனிவர்கள் கூறுகிறார்கள். ஆயிரம் ருத்ராக்ஷங்களைத் தரிப்பவன் தேவர்களாலும் நமஸ்கரிக்கப்படும் பெருமையையடைந்து, ருத்ரனுக்கு ஒப்பாகிறான். 1000 கிடைக்காவிடில் இரண்டு தோள்களிலும் பதினாறு பதினாறு, சிகையில் ஒன்று, இரண்டு கைகளிலும் பன்னிரண்டு, கழுத்தில் முப்பத்திரண்டு, ஒவ்வொரு காதிலும் ஆறு ஆகத் தரிக்கலாம். ருத்ராக்ஷத்தைச் சிவலிங்கமாகவே பூஜித்துப் பலனடையலாம். இயற்கையாகவே துளையுடன் கூடிய இந்த ருத்ராக்ஷமும், பஸ்மமும் முக்கியமான சிவசின்னங்கள். இவைகளைத் தரிப்பவர்களைச் சிவபெருமானாகவே வணங்கவேண்டும் என்பது, "நேய மலிந்தவர் வேடமும் ஆலயந் தானும் அரனெனத் தொழுமே" என்ற சிவஞானபோதச் சூத்திரத்திலும் வற்புறுத்தப்படுகிறது.

3. வில்வம் :—சிவார்ச்சனையில் பில்வதளம் மிகவும் அவசியமானது. வறுமையைத் தொலைத்து விருப்பங்களை எல்லாம் நிறைவேற்றும் இந்த பில்வதளத்தினால் பூஜை செய்தால் பரமேஶ்வரன் மிக்க திருப்தியடைகிறார். பில்வதளத்தை அதனுடைய பின்புறம் சிவலிங்கத்தின்மீது படும்படியாக வைக்கவேண்டும்.

ஏகஞ்சபில்வம் சலிலஞ்சகிஞ்சித் ஸமர்ப்பணம் சங்கரமூர்த்னி பக்த்யா |
அமந்த்ரகம் வாபி ஸமந்த்ரகம்வா ஸவம்ஸ கோட்யா சிவலோக மேதி ||

ஒரு தளம் வில்வத்தையோ சிறிது ஜலத்தையோ மந்திரத்துடனோ மந்திரமில்லாமலோ அர்ப்பணித்தால் கோடி வம்சங்களுடன் சிவலோகமடைகிறான். அதனால் மூன்று தளங்களாக இருக்கிற ஒரு வில்வத்தையாவது சிவார்ப்பணம் செய்யவேண்டும். ஒரு பில்வ பத்திரத்தைக் கொண்டே ஆயிர நாம அர்ச்சனைகளையும் செய்யலாம்.

4. ஸ்படிகலிங்கம் :—இறைவன் சுத்த ஸ்படிக பிரகாச ஸ்வரூபியாக மனதிலே தியானிக்கப்பட வேண்டும். அது சித்தத்தைச் சுத்தமாக்குகிறது. ஸ்படிகம்போல மனம் நிர்மலம் ஆகிறது.

5. பஞ்சாக்ஷரம் :—வேதங்களில் பிரதானமானது யஜுர் வேதம். அதில் உள்ள ஏழு காண்டங்களில் நான்காவது காண்டத்தில் ஸ்ரீருத்ர மந்திரம் உள்ளது. இந்த ஸ்ரீருத்ரத்தில் நெற்றிக்குத் திலகம்போல இருக்கிறது பஞ்சாக்ஷர மந்த்ரம். நம: சிவாய என்பதே பஞ்சாக்ஷரமெனப்படும். இந்த பஞ்சாக்ஷரத்திலும் சிவ என்ற இரண்டு எழுத்துக்கள் முக்கியமானவை. இதன் பெருமையை சிவபுராணங்கள் விஸ்தாரமாகக் கூறி உள்ளன. விஷ்ணுவின் அவதாரங்களைக் கூற வந்த ஸ்ரீமத் பாகவதத்தில் சிவநாமாவின் பெருமை கூறப்படுகிறது. 'சிவ' என்ற இரண்டு எழுத்துக்களை மனிதர்களிலே யார் சொன்னாலும் ஒரு முறை சொன்னாலும் அவர்களுடைய பாவங்களெல்லாம் நாசமாகிவிடுகின்றன. அந்த இரு எழுத்துக்களையும் தூஷிப்பவர்கள் அமங்களத்தையே அடைகிறார்கள். தாக்ஷாயணி தக்ஷனைப் பார்த்து "என்ன பாவம்! நீ சிவனை த்வேஷிக்கிறாய், உனக்கு அமங்களமே வந்து சேரும்" என்று கூறுகிறாள்.

நம்முடைய சமயாசாரியர்களெல்லாம் நமச்சிவாயத் திருப்பதிகங்களில் இந்த மந்திரத்தின் பெருமையை நன்கு கூறியுள்ளார்கள். எனவே நாம் தகுந்த குருவினையடைந்து பஞ்சாக்ஷர மந்த்ர உபதேசம் பெற்று ஆயுள் பரியந்தம் இந்த ஜபத்தைச் செய்ய வேண்டும். "சிவ" என்கிற இரண்டு எழுத்துக்களையாவது தினசரி நூற்றியெட்டு முறை மரண பரியந்தம் ஜபிக்கவேண்டும்.

பஞ்சாக்ஷரம் மஹாமந்த்ரம் பஞ்சபாதக நாசனம் |
பரஸ்ய வாசகம் லப்த்வா ஸத்குரோர் நியமாச் சுசி : ||
ஜப்யத் யநுதினம் மர்த்யஸ்ஸ தன்யோ லோகபாவன : |
நதஸ்ய பாபகந்தோபி தர்ஸனாத் பாபஹாரிண : |

— ஸ்காந்தம, உபதேசகாண்டம

பஞ்சமஹா பாதகங்களை நாசம் செய்வதும் பரமாத்ம ஸ்வ ரூபத்தை விளக்குவதுமான இந்த பஞ்சாக்ஷர மஹா மந்த்ரத்தை யார் ஸத்குருவினிடமிருந்து உபதேசம் பெற்று சுத்தமாயிருந்து கொண்டு நியமத்துடன் பிரதிதினம் ஜபம் செய்கின்றனோ அவன் மிகவும் பாக்யசாலியும் உலகத்தைப் பாவனம் ஆக்குகிறவனாகவும் ஆகிறான். அவனைத் தரிசித்தாலேயே பாவங்கள் அழிந்து போகின்றன. அவனுக்குப் பாபம் சிறிதளவும் கிடையாது.

## ஸ்ரீ மேதா தக்ஷிணாமூர்த்தி

நீர்வளம், நிலவளம் நிறைந்த சோழநாட்டில் புனிதப் பொலிவுக்குப் பெயர் பெற்ற நகரம் மாயூரம். அந்நகரின் நடுவிலே அலங்காரம் போல அமைந்துள்ளது காவிரி நதி. அந்தக் காவிரி நதியில் அங்கு பல கட்டங்கள் அமைந்திருந்த போதிலும் "விருஷப கட்ட"த்துக்கு மக்கள் வழங்கும் சிறப்பு தனித்தன்மை வாய்ந்தது. சாபமொன்றின் காரணமாக மண்ணுலகை அடைந்த விருஷபர் இறைவன் மேதா தக்ஷிணாமூர்த்தியை வழிபட்டு சாபம் நீங்கியதாக வரலாறு. விருஷபருக்கு அருள் புரிந்து, ஞானோபதேசம் வழங்கிய மேதா தக்ஷிணாமூர்த்தி காவிரியின் வடகரையில் வதான்யேச்வரர் ஆலயத்தில்



காட்சி தந்து கடாக்ஷம் செய்கிறார். தொன்றுதொட்டு இவ்வாலயத்தில் உறைந்துள்ள இறைவருக்குக் கார்த்திகைக் கடை வியாழனன்று மாபெரும் அளவில் அபிஷேகப் பெருவிழா நடைபெற்று வருகிறது. வதான்யேச்வரர் மேற்குமுக ஸ்வயம்புலிங்க வடிவிலே விளங்குகிறார். சிறிய அளவில் தோன்றினும், சிறப்பும் தெய்வ சாந்நித்யமும் முழு அளவில் மணம் வீசும் கோவில் இது. தெய்வீகப் பேரவைத் தலைவரான தருமபுரம் ஆதினகர்த்தரவர்களின் ஆதரவால் கோலாகலமாக இவ்வாண்டும் கார்த்திகைக் கடை வியாழனன்று சிறப்பாக நடக்கிறது. ஸ்ரீ மேதா தக்ஷிணாமூர்த்தியின் அருளும், கருணையும் மக்கள் இன்னல்களைத் தீர்க்குமாக.

நன்றி — "மித்திரன்", 10—11—67







# அனுபந்தம் 7

# சிவபக்திப் பிரவாஹம்



ஓம் வராஹஸம்ஹாரமூர்த்தயே நம : ஓம் ப்ரார்த்தநாமூர்த்தயே நம :

(ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகளின் அருள்மொழிக் கோவை)

## 1. ஆலய வணக்கம்

ஆலயங்களில் உள்ள மூர்த்திகளுக்கு நிவேதனமும் காணிக்கை செலுத்துவதும் எல்லாவற்றையும் படைத்த பரம்பொருளுக்கு நன்றி செலுத்துவதற்கு அறிகுறியாகச் செய்யப்படுபவைகளே. மனிதனால் ஒரு சிறு புல்லைக்கூட ஸ்ருஷ்டிக்கமுடியாது. எனவே நாம் உட்கொள்ளுவதை அல்லது அணிவதை முதலில் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யாமலிருப்பது நன்றியற்ற செய்கையாகும். சிறந்தனவற்றைத்தான் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும். எல்லாருமே வீட்டில் பூஜை செய்து ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்ய இயலாது. அதனால் ஆலயங்கள் ஏற்பட்டன.

## 2. பக்தி

பக்தியே முக்திக்குப் பூர்வாங்கம். எப்படி காந்தக் கல்லோடு ஊசி போய் ஒட்டிக்கொள்கிறதோ, பதிவிரதையின் மனமானது நாதனிடத்தில் போய்க் கவிந்துகொள்கிறதோ, கொடியானது மரத்தைப் போய் அணைத்துக்கொள்கிறதோ, நதியானது மகா சமுத்திரத்தோடு போய்க் கலந்துவிடுகிறதோ அப்படி இந்த மனசினுடைய விருத்தியானது எங்கும் போகாமல் எல்லாக் காலத்தும், காலத்ரயங்களிலும் நமக்குப் பந்துவாக இருக்கிற, நாம் எத்தனை அபசாரங்களைப் பண்ணினாலும் நம்மை க்ஷமித்துக் கொண்டு—ஒவ்வொரு க்ஷணமும் நினைத்துப் பார்த்தால் தெரியும்—நம்முடைய அபசாரங்களையும் நினைத்துப் பார்த்து, நமக்கு ஈசுவரன் தவிர வேறு எதையுமே நினைக்க வேண்டாமென்று தோன்றும்—நமக்கு அனுக்கிரகம் செய்கிற பரமாத்மாவினிடத்தி லேயே தன்னை யறியாமல் போய் நிற்கவேண்டும். அதற்குக்

காரணமே இருக்கக்கூடாது. காரணம் என்று வந்தால் வியாபாரம் ஆகிவிடும். பக்தியானது ஏதோ ஒன்றுக்கு ஒன்று கொடுப்பது போல், 'செல்வத்தைக் கொடு, பக்தி செய்கிறேன்' என்பதுபோல் ஒன்றுக்கொன்று பரிமாறிக்கொள்வது வியாபாரம் ஆகிவிடும். அப்படி இல்லாது எதையுமே நினைக்காது சதா ஈச்வரனிடத்தில் போய்ச் சேருவதையே நினைத்துத் தன்னை அறியாமல் ஓடுகிற சித்த விருத்தி இருக்கிறதே அதற்குத்தான் பக்தி என்று பெயர்.

## 3. மனத்தூய்மை

துணி அழுக்கு இல்லாமல் இருந்தால் போதாது. உடம்பு அழுக்கு இல்லாமல் இருந்தால் போதாது. வீடு அழுக்கு இல்லாமல் இருந்தால் போதாது. நம் மனம் அழுக்கு இல்லாமல் இருக்க வேண்டும். அதற்கு அம்பாளுடைய சரணாரவிந்தத் தியானம் தான் வழி.

## 4. விபூதிதாரணம்

உலகத்தில் பச்சையாக ஓர் இலை இருக்கிறது. மஞ்சளாக ஒரு துணி இருக்கிறது. இப்படி அநேகம் வஸ்துக்கள் அநேக வர்ணங்களில் இருக்கின்றன. அந்த வஸ்துக்களில் எதைக் கொண்டு வந்து நெருப்பில் போட்டாலும் அது கரியாகிவிடுகிறது. எந்தப் பொருள் எந்த வர்ணமாக இருந்தாலும் கருகிக் கறுப்பாகிவிடுகிறது. 'கறுப்பு ஒன்றுதான் எல்லாப் பொருட்களுக்கும் ஸ்வபாவ நிறமோ, பாக்கி நிறம் எல்லாம் அவை பூசிக்கொண்ட சாயமோ?' என்று தோன்றுகிறது. ஆனால் 'ஒரு வஸ்துவின் சாயம் கறுத்துப் போயிற்று' என்று சொல்லுகிறதுதான் வழக்கம் ஏன்? கருகிக் கறுப்பான இந்தப் பண்டங்களையும் இன்னொரு முறை அக்கினியில் ஸ்புடம் போட்டால் அவை அனைத்தும் நீற்றுப் போகின்றன. இப்படி நீறு ஆகிவிட்டபோது எல்லாம் வெளுப்பு. சாயம் வெளுத்தும் போய்விடுகிறது.

இந்த உலகமே பலவிதமான சாயங்களைப் பூசிக்கொண்டிருப்பதுதான். அந்தச் சாயங்கள் யாவும் போனபின் எஞ்சியிருப்பது உண்மைப் பொருளான ஒன்றுதான். அதுதான் ஆண்டவன். உண்மை என்பது வெண்மை நம் உடம்பில் உள்ள பொருளெல்லாம் சாயம். அதில் உண்மையை நிலைப்படுத்திக் கொள்வதற்காக வெண்மையான திருநீற்றைப் பூசச் சொன்னார்கள்.

## 5. சிவசின்னங்களின் பயன்

வெளியே நாம் செய்கிற சில ஸம்ஸ்காரங்களினால் உள்ளே சில சில நன்மைகள் உண்டாகின்றன. இவை எல்லாம் வெளி வேஷம் என்று நினைத்தால் வெறும் வேஷமாகவே போய்விடுகின்றன. 'ஆத்மார்த்தமாக ஜீவனைப் பரிசுத்தம் செய்துகொள்வ

தற்காகவே விபூதி, ருத்ராக்ஷம் போன்ற சின்னங்களை அணி கிறேன்' என்று நினைத்தால் உண்மையிலேயே உள்ளே பரிசுத்தம் ஏற்படுகிறது. புறச் சின்னங்களும் ஆத்மாவுக்குப் பயன்படு கின்றன.

## 6. சிவ சின்னங்கள்

சகல வஸ்துக்களும் அழிந்தாலும் கடைசியில் தான் ஒன்று மட்டும் சத்தியமாக இருக்கிற பஸ்மத்தை நெற்றியிலும், ஸ்வபாவ மாகத் துவாரங்களுடனும் முகங்களுடனும் சிருஷ்டிக்கப்பட்டிருக் கிற ருத்ராக்ஷத்தைக் கழுத்திலும், சாக்ஷாத் மஹாலக்ஷ்மியின் வாசஸ்தலமாகிய வில்வத்தைச் சிரஸிலும், வேதத்தின் மத்திய மணிக்கு—நடுநாயகமணிக்கு—ஒப்பாக விளங்குகிற 'சிவ' என்னும் இரண்டு அக்ஷரத்தை நாக்கிலும், சுத்த ஸ்படிகப் பிரகாச மகா லிங்கத்தை உள்ளத்திலும் தரித்துக்கொண்டு ஜன்மசாபல்யத்தை அடையவேண்டும்.

## 7. "சிவ" நாமாவின் பெருமை

பாபத்தை ஒரே க்ஷணத்தில் துவம்ஸம் பண்ணும் ஒரு வஸ்து உண்டு. அந்த வஸ்துவைப் பல இடங்களுக்குப் போய்த் தேட வேண்டாம். இரண்டு எழுத்துக்களாலான பெயர் அது. ஸகல வேதங்களுக்கும் மத்தியில் இருப்பது அது. அதுவே வேதங்களின் ஜீவரத்னம் கோயிலில் மஹாலிங்கம்போலவும், தேஹத்தில் உயிர்போலவும் அது வேதங்களின் மத்தியில் இருக்கிறது. அதை வாக்கினால் சொல்லவேண்டும். யார் சொல்லவேண்டும்? மனித னாகப் பிறந்தவன் சொல்லவேண்டும். ஊமையாக இல்லாத எவனும் சொல்லலாம். அதைச் சொல்லுவதற்காகத்தான் நாக்கு இருக்கிறது. மனிதன் அதைச் சொல்லாவிட்டால் 'நாக்கினால் செய்யக்கூடியதை இவன் செய்யவில்லை. இவனுக்கு நாக்கு கொடுத் தது பிரயோஜனமில்லை' என்று பரமேச்வரன் திரும்பி வாங்கி விடுவான். ஆகையால் எல்லோரும் அதைச் சொல்லியாக வேண்டும். அதை ஒருதரம் சொன்னால் போதும். வேறொரு கார்யத்துக்கு நடுவிலும் சொல்லலாம். சொன்னால் அந்த க்ஷணத்தி லேயே அது பாபத்தைப் போக்கிவிடும். ("சிவ" என்ற நாமமே அது.)

பரமேச்வரனை நாம் நேரில் பார்த்து நமஸ்காரம் பண்ண வேண்டாம். அவருடைய நாமாவே போதும். நமக்கு நன்றாகத் தெரிந்தது அது. நம்முடைய மதத்தில் பாப பரிஹாரத்துக்கு சுலபமான மார்க்கம் இந்த நாமஸ்மரணந்தான். பிரதோஷ காலத்தில் இந்த நாமாவைச் சொன்னாற்போதும். பரமேச்வரன் ஓங்காரம் ஸ்வரூபப் பிரம்மமும் ஓங்காரந்தான்.

## 8. ஹரநாமம்

'ஹரஹர மஹாதேவ' என்ற நாமாவளி ஜனங்களை ஒருமைப் படுத்திவிடுகிறது. தேசத்தை ஒருமைப்படுத்தவும் அதுதான் வழி. லோகத்தை ஒருமைப்படுத்தவும் அதுதான் வழி...பிரபஞ்சத்தில் ஹரஹர நாம ஸப்தம் நிறைந்துவிடின் துவேஷம் ஒழிந்து போகும்.

## 9. ஹரநாமம் துயர்தீர்க்கும்

'ஹரஹர' என்று சொல்வதால் துயர் தீருமென்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். துயரை நீக்க நாம் வக்கீல்கள், டாக்டர்கள் முதலிய பலரை யோசிக்கிறோம். துயரைத் தீர்க்க நம் பெரியோர்கள் சொல்லியிருக்கும் உபாயத்தையும் மதிப்போம்.

## 10. ஈசுவர மஹிமை

இக்காலத்தில் நவீன சாஸ்த்ரங்களைக் கற்றவர்கள் அநேக விசித்ரமான வஸ்துக்களைச் செய்கிறார்கள். ஆனால் ஸ்ருஷ்டியிலுள்ள வஸ்துக்களை வைத்துக்கொண்டுதான் அவர்கள் வேறு வஸ்துக்களைச் செய்ய முடிகிறது. ஈச்வரன் ஸ்ருஷ்டித்த இவ்வாழையிலையை அவர்கள் செய்யமுடியாது. ஈச்வரனுடைய வல்லமையை இந்த ஒரு விஷயமே காட்டுகின்றது.

## 11. ஏழை பங்காளன்

ஈச்வரன் பரம சுலபன். ஏழை பங்காளன். ஈச்வரானுக்ரஹம் பெற்ற நாயன்மார்களில் பல பேர் சாதாரணமாக இருந்தவர்கள். மீன் பிடிக்கிறவன், வண்ணான் இப்படி அறிவில்லாதவர்களாக யிருந்தவர்களும்கூட ஈச்வர பக்தி பண்ணி ஈச்வரனுடைய அனுக்ரஹத்தால் மோக்ஷத்தைப் பெற்றிருக்கிறார்கள். எல்லோராலும் சுலபமாக ஆராதிக்கக்கூடியவன் ஈச்வரன். அவனை நினைத்து மனம் கரையவேண்டும். நம் ஜன்மா சபலமாகிடும்.

## 12. ஈச்வரனின் கருணை

ஈச்வரன் நமக்கு நல்லது கொடுப்பது அவனுடைய ஸ்வபாவமான கருணை. துன்பத்தைக் கொடுப்பது அதைவிட கருணை. ஒரு காரணத்திற்காக நமக்குக் கொடுக்கிற அருள் அது. நாம் கொஞ்சந்தான் பார்க்கிறோம். அதற்கு முந்தித் தெரியாது; பிந்தித் தெரியாது. முந்தியும் பிந்தியும் அப்போதைக்கு நடக்கிற விஷயங்களையும் தெரிந்துகொண்டு திரிகாலங்களையும் பார்த்தால் நமக்குக் கெடுதலே ஆண்டவன் செய்வதில்லை என்று தெரியும். எல்லாக் காலத்திலும் நமக்குப் பந்துவாக சகாயமாக இருப்பவன்

அம்மையப்பன் ஒருவன்தான். அவனைக் காட்டிலும் உலகில் நமக்கு வேறு பந்து இல்லை.

'உற்றார் யாருளரோ உயிர்கொண்டு போம்பொழுது
குற்றாலத் துறைகூத்த னல்லால் நமக்குஉற்றார் யாருளரோ?'

என்று அப்பர் பாடுகிறார்.

## 13. உலகத்தின் தாய் தந்தையர்:

வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தெள வாகர்த்தப்ரதிபத்தயே |
ஜகத: பிதரௌ வந்தே பார்வதீ பரமேஶ்வரௌ ||

ஜகத்துக்கெல்லாம் தாய் தகப்பனாராகிய பார்வதீ பரமேச்வரர்களை நான் நமஸ்காரம் பண்ணுகிறேன் என்று மஹாகவியாக இருக்கும் காளிதாஸர் தாம் இயற்றிய காவ்யமான ரகுவம்சத்தில் முதல் மங்களச் சுலோகத்தில் சொல்லுகிறார். பார்வதீ பரமேசுவரர்கள் எப்படி இருக்கிறார்கள்? ஒருவருக்கு ஒருவர் இணைபிரியாமல் இருக்கிறார்கள் ஒரே ஸ்வரூபத்தில் பிரிக்கமுடியாமல் இணைந்து இருக்கிறார்கள். அது எப்படி என்றால் பசு என்று இபபோது நான் ஒரு வார்த்தை சொல்லுகிறேன். ப+சு என்று இரண்டு எழுத்துக்களைச் சொன்னேன். இந்த இரண்டு எழுத்தைச் சொன்னவுடனே உங்களுக்கு ஓர் உருவம் தோன்றுகிறது பசுமாடு ஞாபகம் வருகிறது. ப+சு என்று எழுதினால் இரண்டு எழுத்துக்கள்தான். அவை சில கோடுகளே. காதாலே கேட்கிற ஒரு சப்தம் என்று சொல்லலாம் இதற்கும் பசு மாட்டுக்கும், இந்த வார்த்தைக்கும் அதன் அர்த்தத்துக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது. இந்த வார்த்தையைச் சொன்னவுடன் அந்த வஸ்து நினைவுக்கு வருகிறது. அல்லது அதைக் கண்டவுடன் இந்தச் சொல் நினைவுக்கு வருகிறது. பசு என்பது வாக்கு. அதன் அர்த்தமாகிய உருவம் மாடு. இந்த இரண்டையும் பிரிக்க முடியவில்லை. அப்படியே சாக்ஷாத் அம்பாளும் பரமேஶ்வரனும் ஒரே ஸ்வரூபத்தில் அர்த்தநாரீஶ்வரர் கோலத்தில் இணைந்திருக்கிறார்கள். அவர்களுக்கு நமஸ்காரம்.

ஜகத்குரு சேவடிகளே சரணம்.



 சிவமயம் 



அநுபந்தம் 8

ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள்
பாடிய

# கோவூர் பஞ்சரத்னம்



ஓம் ரக்தபிக்ஷாப்ரதாநமூர்த்தயே நம :

ஓம் சிஷ்யபாவமூர்த்தயே நம :

## கோவூர்

(இது சென்னைக்கு மேற்கே சுமார் 12 மைல் தொலைவில் குன்றத்தூருக்கு அண்மையிலிருக்கிறது. தேசப்படத்தில் 40 என்ற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது).

## திருவையாறு

(இது தஞ்சாவூரிலிருந்து சுமார் 7 மைல்கள்—பஸ் வசதி உண்டு—தேசப்படத்தில் 41 என்ற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது).

1

இராகம்—பந்துவராளி] [தாளம்—ரூபகம்

பல்லவி

சம்போ மஹாதேவ சங்கர கிரிஜா ரமண (சம்போ)

அநுபல்லவி

சம்போ மஹாதேவ சரணாகதஜந ரக்ஷக
அம்போருஹலோசன பதாம்புஜ பக்திம்தேஹி (சம்போ)

சரணம்

பரமதயாகர ம்ருகதர ஹரகங்காதர தரணீ
தரபூஷண த்யாகராஜவர ஹ்ருதய நிவேச
ஸுரப்ருந்த கிரீடமணி வரநீரா ஜிதபத கோ
புரவாஸ ஸுந்தரேச கிரீச பராத்பர பவஹர (சம்போ)

2

இராகம்—ஸஹானு] [தாளம்—ஆதி

பல்லவி

ஈ வஸுத நீ வம்டி தைவமு நெம்து காநரா. (ஈ வஸுத)

அனுபல்லவி

பாவுக முகல்கிவர் தில்லு
கோவூரி ஸுந்தரேச கிரீச (ஈ வஸுத)

சரணம்

ஆஸசே அரநிமிஷ முநீபுர வாஸமொநர ஜேயுவாரினி மதி
வேஸட லெல்லனு தொலகிம் சிதந ராஸுல நாயுவுனு
பூஸுர பக்தியுதே ஜமுந நொா ஸகி புவநமம்து கீர்திகல்க ஜேஸெ
தாஸவரத தியாகராஜ ஹ்ருதயநி வாஸசித் விலாஸ ஸுந்தரேச
(ஈ வஸுத)

3

இராகம்—கல்யாணி] [தாளம்—ரூபகம்

பல்லவி

நம்மி வச்சின நந்நு—நயமுகானு ப்ரோவவே நினு (நம்மி)

அனுபல்லவி

கொம்மனி வரமுல நொஸ்கே கோவூரி ஸுந்தரேச (நம்மி)

சரணம்

வேத புராணாகம சாஸ்திராதுலு குமிகூடி
பாதமுலனு கனஜாலக பதி மாலிவேட
நாதரூப ஸௌந்தர்ய நாயகி பதேபேத
வாதரஹித தியாகராஜ வரத ஸுந்தரேச்வர நினு (நம்மி)

4

இராகம்—கரஹரப்ரிய] [தாளம்—ஆதி

பல்லவி

கோரி ஸேவிம்ப ராரே—கோர் கெலீடேர. (கோரி)

அனுபல்லவி

ஸ்ரீரமணி கர மௌ கோ
வூரி ஸுந்தரேச்வருனி. (கோரி)

சரணம்

ஸுருலு வெயிவந் நெ பங்காரு விருலசே பூஜிம் சக பூ
ஸுருலு ஸனகாதி மௌநி வருலு நுதிம் பக
ஸிருலித்து நதி கொலுவை யுண்டு ஸ்ரீ ஸௌந்தர்ய நாயிகா
வருநி ஸ்ரீதியாகராஜ வரதுனி பரமாத்முனி ஹருனி (கோரி)

5

இராகம்—சங்கராபரணம] [தாளம்—ஆதி

பல்லவி

ஸுந்தரேச் வருனி ஜூசி
ஸுருல ஜூட மனஸு வச்சுனு (ஸுந்த)

அனுபல்லவி

அந்த முகலவர காசிகிஸ மான
மைன கோபுர மந்து வெலயுமா. (ஸுந்த)

சரணம்

1. சரண முலநு பங்காரு நூபுரமுலு
கரமுல ரவகங் கணயுக முலுநீ
கரமுக முந கஸ்தூரி திலகமு
பெரயுசு நுண்டு லாவண்ய முகல (ஸுந்த)
2. ஒகசோ ப்ரம் மாதிஸுருலு
ஒகசோ நிர்ஜர வாரதரு ணுலு
ஒகசோ தும்புரு நாரதா துலு
ஒகசோ பக்து லெல்ல பாடு (ஸுந்த)
3. ராஜராஜு னிகி செலிகாடைன
ராஜ சேகருனி கோபுர நிலயுநி
ராஜ ஸகுண ரஹிதுநி ஸ்ரீ தியாக
ராஜ பூஜிதுநி ரஜிதகிரீ சுனி (ஸுந்த)

பதிக வரலாறு:—"திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்" என்பது ஆளுடை நம்பிகளின் (சுந்தரமூர்த்தி நாயனர்) அருள் வாக்கு. தன்னகத்தே பிறந்தவர்க்கெல்லாம் அத்துணைச் சிறப்பும் முத்தியும் அளிப்பது திருவாரூர். அங்குத் தோன்றியவரே சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரும சிறந்த ராமபக்தருமான ஸ்ரீ தியாகராஜர். அவரைத் தியாகய்யர் என்றும் தியாகப்பிரம்மம் என்றும் வழங்குவதுண்டு. பல திருக்கோயில்களை வணங்கிவிட்டுக் காஞ்சிமாநகர் சேர்ந்து அங்குத் தன் தந்தையுடன் கல்வி பயின்ற உபநிஷத் பிரம்மம் என்ற பெரியாருடன் தங்கியிருந்தார். அவரது கீர்த்தனைகள்மூலம் அவரது புகழ் நாடெங்கும் பரவியிருந்த காலம் அது.

அங்ஙனம் இருக்கத் தொண்டை நன்னாட்டிலே கோபுரம் (கோ+புரம்) என்றும் ஒரு பெயருடைய கோவூர் என்ற சிறந்த சிவத்தலத்திலே சிவநெறிச் செல்வராயும், "ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது ஊதியமில்லை உயிர்க்கு" என்ற வள்ளுவனாரின் வாய்மைக்கு இலக்கியமாக வாழ்வு நடத்தி வந்த பண்பாளருமான திரு. சுந்தர முதலியார் என்பவர் வசித்து வந்தார். தமது ஊர்ப்பெருமானாகிய சுந்தரேசப்பெருமானை நாயன்மார்கள் போன்ற பேரருளாளர்கள் யாரும் பாடவில்லையே என்ற பெரியதோர் மனக்குறை அச்செல்வரை மிகவும் வருத்தியது. (இந்நாளில் எவரேனும் செல்வர்கள் இங்ஙனம் வருந்துகிறார்களா என்பது கவனித்தற்குரியது).

இந்நிலையில் ஸ்ரீ தியாகராஜருடைய கீர்த்தனங்களின் பெருமையையும், அவரது பக்தித் திறத்தையும் தமது ஆசிரியராகிய உபநிஷத் பிரம்மத்தினிடமிருந்து அறிந்துகொண்ட திரு. சுந்தர முதலியார், தியாகராஜரைக் கொண்டு தமது நெடுநாளைய மனக்குறையைப் பூர்த்தி செய்துகொள்ள விரும்பினார். திருவருளும் துணை நிற்கத் தம்முடன் ஒருங்கு கல்வி பயின்றவரும், ஸ்ரீ தியாகராஜருடைய பிரியத்துக்குப் பாத்திரமானவரும், கோவூர் சமஸ்தான வித்துவானுமாகிய வீணை குப்பய்யர் என்ற நல்லார் ஒருவருடன் திருக்கச்சிமாநகரணைந்து தியாகப்பிரம்மத்தைத் தரிசித்தார். வீணை குப்பய்யர் தியாகய்யரிடம் முதலியாரின் கள்ளங்கபடற்ற வெள்ளை உள்ளம், அவ்வுள்ளம் நிறைந்த கடவுட்பக்தி, அக்காரணம் பற்றிய மனக்குறை முதலியவற்றை விண்ணப்பித்தார். உபநிஷத் பிரம்மமும் மிகவும் வற்புறுத்திச் சொல்லத் திரு சுந்தர முதலியாரின் மனக்குறை பூர்த்தியாகும் செவ்வியும் தோன்றியதனால் ஸ்ரீ தியாகராஜர் கோவூர் செல்ல உடன்பட்டுக் காஞ்சியை நீங்கிச் சென்னையடைந்து அங்கு மக்களை தன் கானத்தினால் பக்தி பரவசர்களாகச் செய்து பின் கோவூர் சேர்ந்தார். திருக்கோயிலையடைந்து சௌந்தராம்பிகையுடன் வீற்றிருந்து பக்தர்களுக்கருளும் பரம கருணாநிதியான சுந்தரேசப்பெருமானைக் கண்ணாரக் கண்டு கையாரக் கும்பிட்டு, வாயாரப்பாடிப் பெருமகிழ்வெய்தினார். அங்ஙனம் பாடியதே கோவூர் பஞ்சரத்னம் எனப் பிரசித்தி பெற்ற ஐந்து கீர்த்தனைகளாகும். கோவூர் சுந்தர முதலியாரின் மனக்குறையைச் சுந்தரேசப்பெருமான் இங்ஙனம் போக்கியருளினான். தன்னடியார்களின் குறைகள் யாதாயினும் அவற்றைத் தீர்த்து வைக்கும் பிரான் அல்லவா? எனவே இவ்வரலாறும் இக்கீர்த்தனங்களும் நம்முடைய குறைகளையும் போக்கும் என்பதில் ஐயமுமுண்டோ?

சக்கரவர்த்தித் திருமகனாகிய இராமபிரானிடமே மிகவும் ஈடுபாடு கொண்டு அவனது கல்யாண குணங்களைக் கீர்த்தனைகளாகப் பாடிப் பரவசமுற்று வந்த தியாகப்பிரம்மம் கோவூரில்

சுந்தரேசப் பெருமானாகிய சிவபெருமானுரைப் பாடியது ஒரு சாமானிய நிகழ்ச்சியல்ல. புகழுக்கோ அன்றிப் பணத்துக்கோ பாடுபவரல்ல பேரருட்செல்வராகிய தியாகய்யர். திருவாரூர்ச் சிவபெருமானின் திருவருளால் தோன்றி அத்திருநாமமே பெற்ற அவர் பின்னர் மிகச் சிறந்ததொரு சிவத்தலமாகிய திருவையாற்றில் முத்தியடையப் போவதற்கு இதை ஒரு சூசகமாகக் கொள்ளலாம் அல்லவா ?

சுந்தர முதலியாரின் மனக்குறையை முடித்துச் சுந்தரேசப்பெருமானின் திருவருள் பெற்றுத் தியாகராஜர் பிரியா விடைபெற்றுச் செல்லும்போது நாகலாபுரம் என்னுமிடத்தில் கள்வர்கள் சூழ்ந்து கொண்டனர். அப்போது தியாகராஜர் அமர்ந்திருந்த பல்லக்கில் அவரறியாது கோவூர் சுந்தர முதலியார் ஸ்ரீராமநவமி போன்ற விழாக்களுக்காக வைத்திருந்த ஓராயிரம் வராகன் பணமிருந்தது. "ராமபிரானுக்கு வைக்கப்பட்ட பணமாயின் அவனே காத்துக் கொள்ளட்டும்" என்று தியானத்தில் ஆழ்ந்தார் தியாகராஜர். ஸ்ரீ இராமபிரானும் இளவலும் வில் வீரர்களாய்த் தோன்றி காவல் காத்துப் புலர்ந்ததும் மறைந்தார்கள். இராமலக்ஷ்மணர்களின் அருட்பார்வையால் ஊனம் நீங்கி ஞானம் பெற்ற கள்வர்கள் தியாகராஜரை வணங்கி ராம நாமத்தின் பெருமை உபதேசிக்கப்பட்டு நன்னெறியில் செலுத்தப்பட்டனர்.

பரந்தாமனின் பெருங்கருணையைப் பாமாலைகளாற்பாடிப் பல காலம் பக்தி வெள்ளம் பெருக்கிய தியாகராஜர் முத்தியடையும் தருணம் கூடியதும் திருவையாறு வந்து சேர்ந்தார். இத்திருவையாறுதான் எத்துணைச் சிறப்பினது. அப்பர் சுவாமிகளுக்குத் திருக்கயிலாயக காட்சியைக் காட்டப் பெருமான் இத்தலத்தையே தெரிந்தெடுத்தார் எனில் மற்றும் உரைக்க வேணுமோ ?

திருச்சிற்றம்பலம்

மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடுப டாம லையா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்;
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.

திருச்சிற்றம்பலம்

இது அப்பர் சுவாமிகள் தாங்கண்ட கயிலைக் காட்சியைப் பாடிய பதிகத்தில் ஒரு திருப்பாசுரம். "ஐயாறே ஐயாறே யென்பீராகில் அல்லல் தீர்ந்தமருலகம் ஆளலாமே" என்ற அவருடைய மற்றொரு திருவாக்கும் திருவையாற்றின் சிறப்பைப் பேசுகிறது. மேலும்,

திருச்சிற்றம்பலம்

"புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி யறிவழிந்திட்
டைம்மேலுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென் றருள்செய்வான் அமருங்கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர மழையென்றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி முகில்பார்க்குந் திருவையாறே"

திருச்சிற்றம்பலம்

என்ற ஆளுடைப் பிள்ளையாரின் அருள்வாக்கும் திருவையாறு முத்தித் தலம் என்பதை வலியுறுத்துகிறது. கோவூர் சிவபெருமானைப் பாடித் திருவருள் பெற்றத் தியாகராஜர், சிறந்த சிவத்தலமான திருவையாற்றில் பிறப்பிறப்பில்லாப் பேரின்பம் நுகர இறைவனோடு இரண்டறக் கலந்தார்.

இப்பஞ்சரத்னக்கீர்த்தனைகள் இன்று சங்கீத வித்வான்களால் பெரிதும் விரும்பிப் பாடப்படுகின்றன. சங்கீத ஞானம் உள்ளவர்கள் இதனைக்கற்றுப் பாடலாம். அல்லாதவர் பிறர் பாடக் கேட்டு மகிழலாம். பாடினுங் கேட்பினும் பொருளுணர்ந்து செய்தலே பயனைத் தருமாகலின் இதன் தமிழ்ப் பொருளும் ஈண்டுக் கொடுத்துள்ளோம். பக்தர்களுக்குப் பயனுள்ளதாக இது அமையக் கோவூர் சுந்தரேசப் பெருமான் கிருபை பாலிப்பாராக!

[பதிப்பாசிரியர் குறிப்பு:—கோவூர் ஸ்ரீ சுந்தரேசுவர சுவாமி தேவஸ்தானத்தால் 24-5-1964-ல் பிரசுரிக்கப்பட்ட "ஸ்ரீ தியாகராஜர் கோவூர் வருகை நினைவு நூல் வெளியீடு" என்னும் நூலிலுள்ள வரலாற்றைத் தழுவி பதிக வரலாறு எழுதப்பட்டுள்ளது. கீர்த்தனைகளும் தமிழ்ப் பொருளும் இப்புத்தகத்தினின்றே எடுத்துப் பிரசுரிக்கப்பட்டுள்ளன; இம்முயற்சிக்கு ஊக்கமளித்துப் புத்தகப் பிரதியும் அன்புடனளித்த அத்தேவஸ்தான நிர்வாக அதிகாரி திரு. T. சிதம்பரம் அவர்கட்கும் மற்றும் தேவஸ்தான அறங்காவலர்கட்கும் எமது நன்றி உரித்தாகுக.]

## கோவூர் திருமேனிச்சரம்

### (ஆலயம் பற்றிய சில குறிப்புகள்)

இத்தலம் செங்கற்பட்டு மாவட்டத்தில் ஸ்ரீபெரும்புதூர் வட்டத்தில் சென்னைக்கு மேற்கில் சுமார் 12 மைல் தொலைவில் பெரிய புராணம் பாடிய சேக்கிழார் பெருமானின் அவதாரத் தலமாகிய குன்றத்தூருக்கு அண்மையில் உள்ளது. நீர் வளம், நில வளம் மிக்கு ஏனைய ஊர்களுக்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறது. அழகிய நான்கு மாடவீதிகள், நடு நாயகமாக விளங்குந் திருக்கோயில், அக்கோயிலில் ஸ்ரீ சௌந்தராம்பிகை சமேத ஸ்ரீசுந்தரேசப் பெருமான் காட்சியளிக்கும் தோற்றம் ஆகியவைகள்

இவ்வூரின் புகழை விளக்குகின்றன. தற்சமயம் இது 'மாதிரி கிராம மாக' அரசியலாரால் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

நமது பிரதிநிதி இக்கோவூர்ப் பெருமான் அருள் பெறச் சென்ற சமயம் ராஜகோபுரத் திருப்பணி நடைபெற்றுக்கொண்டிருந்தது. இத்திருப்பணிக்கு ரூ. 1,60,000 ஆகிறதென்றும், வெளியார் யாரிடமும் நன்கொடை கேட்காமல் தேவஸ்தான வருவாயி லிருந்தே இத்திருப்பணி நடைபெறுவதாகவும் நிர்வாக அதிகாரி திரு. T. சிதம்பரம் கூறினர். திருப்பணி நடைபெற்றுவரும் இவ்வெழுநிலைக் கோபுரத்தில் ஸ்ரீ தியாகராஜரின் கதை உருவமும் அமைக்கப்படும் என்றும் கூறினர். சுமார் 6 மாத காலங்களில் (1968 மே முதல்) திருப்பணி முடிந்துவிடலாம் எனக் கருதப்படு கிறது. திரு. சிதம்பரம் போன்ற ஊக்கமுள்ள இளைஞர் நிர்வாக அதிகாரியாயிருக்கும்போது இன்னும் சீக்கிரமாகவே இத்திருப்பணி பூர்த்தியானாலும் அதிசயப்படுவதற்கில்லை. இத்திருப்பணி முடிந்த தும் இவ்வாலயத்தைச் சார்ந்த பூதேவி—ஸ்ரீதேவி சமேத ஸ்ரீகருணா கரப் பெருமானின் திருக்கோயிற்றிருப்பணியும் எடுத்துக்கொள்ளப் படும் என்று நிர்வாக அதிகாரி கூறினர். ஸ்ரீ கருணாகரப்பெருமான் ஆலயமும் சீர்பெற சுந்தரேசப்பெருமான் திருவருள் துணை நிற்ப தாக!

ஸ்ரீ சுந்தரேசப்பெருமான் ஆலயம் மிக அழகியது. சோழர் காலத்துக் கோயில் என்பதை 'கஜப்ருஷ்டம்' (யானை படுத்திருக் கும் நிலை) என்ற நிலையில் அமைந்துள்ள கர்ப்பக்கிரஹம் மேல் ஸ்தூபி ஆகியவை நினைவுபடுத்துகிறது. ஓங்கார வட்ட வடிவமாக அமைந்துள்ளதாகவும் கொள்ளலாம். கலியாண மண்டபத்தில் கோவூர் பஞ்சரத்னம் சலவைக் கல்லில் பொறித்து வைத்திருப்பது போற்றற்குரியது. தியாகய்யர் திருவிழாவும் மிகச் சிறப்புடன் நடைபெற்று வருகிறது.

"காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய், நீள் நாகம் அணிந்தார்க்கு நிகழ் குறியாம்" சிவலிங்கம் மிக்க அழகியதாய் செவ்வொளி வீசிச் சுந்தரேசப்பெருமான் என்ற திரு நாமத்துக்கு விளக்கஞ் செய்கிறது. பஞ்சரத்னம் ஐந்தாவது திருப் பாடலில் ஸ்ரீதியாகராஜர் "அழகு மிகுந்த சுந்தரேசனைக் கண்ட கண்கள் வேறு தெய்வங்களைக் காண ஒருப்படுமோ" என்று கூறியதன் உண்மையை இப்பெருமானை ஒருமுறைத் தரிசித்தால் உணரலாம். நாயகன் நாமத்துக்கு ஏற்ப நாயகி சௌந்தராம்பிகை எனப் பெயர் கொண்டு அழகுடன் காட்சியளிக்கிறாள். சிவநேசச் செல்வர்காள்! வாருங்கள்! கோவூர் செல்வோம் தொலையாச் செல்வனாகிய சுந்தரேசப் பெருந்தகையைப் பெண்ணில் நல்லா ளாம் சௌந்தராம்பிகையுடன் வழிபட்டு இம்மண்ணினில் நல்ல வண்ணம் வாழ வாருங்கள்.

பூஜகர் சிவஶ்ரீ நடராஜ சிவாசாரியார் வருகின்ற சேவார்த்தி களுக்கு மிக்க பரிவுடன் தரிசனஞ் செய்து வைத்து, அருச்சனையாதி களை அருமையாய் நிகழ்த்தி வருபவர் ஒவ்வொருவரும் நாம் சிவ னருள் பெற்றுவிட்டோம் என்று மனமகிழும்வண்ணம் திருவருளைப் பெற்றுத் தானே சிவஸ்ரூபமாகத் திகழ்ந்து திருநீறளித்து அனுப்பு கின்றார். அவரது அருளும் பெறுவோம், வாருங்கள்.

[குறிப்பு —மேலும் விவரம் தேவையுள்ளவர்கள் ஸ்ரீ சுந்தரேச்வர ஸ்வாமி தேவஸ்தானம் கோவூர், சென்னை—56 என்ற விலாசத்துக்கு எழுதலாம். சென்னையிலிருந்து பேருந்து வண்டிகள் நிறையச் செல் கின்றன. பிராட்வே நிலையத்தினின்றும் 88, 88C, 88D எண்ணுள்ள பேருந்து வண்டிகள் நேராகச் செல்கின்றன.]

## பஞ்சரத்னக் கீர்த்தனைகளின் தமிழ் உரை

### பாடல் 1

பல்லவி

இன்பத்திற்கு இருப்பிடமானவனே!
தேவர்களுக் கெல்லாந் தலைவனாக உள்ளவனே!
மங்களத்தைச் செய்பவனே! மலைமகளின் மணாளனே!

அனுபல்லவி

நும்மிடம் அடைக்கலம் புகுந்தவனைக் காப்பவனே!
தாமரை மலர்போன்ற கண்களை உடையவனே!
நும் திருவடியில் பக்தியை அருள்வீராக!

**சரணம்**

கருணைவள்ளலே! மானேந்தியவனே!
தியாகராஜனின் ஹ்ருதயத்தில் வசிப்பவனே!
பிரளயகாலத்தில் உலகை யழிப்பவனே!
கங்கையை முடியிற் சூடியவனே!
பூமியைத் தாங்கும் ஆதிசேடனை அணியாகக் கொண்டவனே!
தேவர்கள் வணங்குங்கால் அவர்களின் ஒளிமிக்கக்
கிரீடங்களில் பதித்த இரத்தினங்களின் ஒளியே
தீபாராதனைபோல் விளங்கும் திருவடியை உடையவனே!
கோபுர க்ஷேத்திரத்தில் வீற்றிருக்கும் ஸௌந்தரேசனே!

### பாடல் 2

பல்லவி

இவ்வுலகில் நின்னைப்போன்ற தெய்வம் வேறெங்கும் காணேன்.

அனுபல்லவி

மங்கலமாகச் செழித்தோங்கும் கோவூர்ப்
பதியில் எழுந்தருளியுள்ள ஸௌந்தரேசப் பெருமானே!

*சரணம்*

உன்னிடம் அன்புகொண்டு அரைநிமிஷமேனும்
உன்னுடைய புண்ணிய க்ஷேத்திரத்தில் தங்குவோரின்
இடர்கள் யாவும் தீர்த்துப் பொருட் செல்வமும்
அருட்செல்வமும் தருவதோடு
நீண்டவாழ்நாளும், நல்லோரிடத்து அன்பும்
அருளும் உலகத்திலே தலைசிறந்தபுகழும் ஆகிய
இவையனைத்தும் தருபவனே !
தியாகராஜனின் உள்ளக்கோயிலில்
என்றும் நிலைபெற்றவனே ! ஸௌந்தரேசப் பெருமானே !

## பாடல் 3

*பல்லவி*

உன்னை நம்பிவந்த என்னை ஆதரித்துக் காப்பாற்றுக !

*அனுபல்லவி*

ஏற்றுக்கொள் என்றுவரங்களை அருளும்
கோவூரிலுள்ளஸௌந்தரேசனே !

*சரணம்*

ஸௌந்தர்ய நாயகியின் பதியாக உள்ளவனே !
வேதங்களும், புராணங்களும், ஆகமங்களும், சாத்திரங்களும்
நின்திருவடியைக் காணமுடியாமல்
பிரார்த்தித்து வேண்ட,
இசைஒலி வடிவமாக உள்ளவனே ! தியாகராஜனுக்கு
பேதவாதங்களை அறியாதவரம் கொடுப்பவரே !

## பாடல் 4

*பல்லவி*

நாம்நினைத்த காரியங்கள் நிறைவேற வழிபட வாருங்கள்

*அனுபல்லவி*

கோவூரின் அழகுத் தெய்வமாக உள்ள
ஸ்ரீ ஸௌந்தரேசப் பெருமானை

*சரணம்*

தேவர்கள் ஆயிரக்கணக்கான பொன்மலர்களால்
ஆண்டவனைப் பூஜிக்கவும் ஸனகாதி முனிவர்கள் துதிக்கவும்
வரங்கள் அருள்வேன் என்று சொல்லும்
ஸௌந்தர்ய நாயகியின் மணாளனைத்
தியாகராஜனுக்கு நல்வரம் நல்கும் பரமாத்மாவை

பாடல் 5

பல்லவி

அழகு மிகுந்த ஸுந்தரேசனைக் கண்டகண்கள்
வேறு தெய்வங்களைக் காண ஒருப்படுமோ?

அனுபல்லவி

அழகு மிகுந்ததும் தூயகாசிக்கு ஒப்பானதுமான
சிறந்த கோவூரில் கோயில் கொண்டிருப்பவனே!

சரணம்

1. நின் திருவடிகளில் பொற்சதங்கைகளும்
கைகளில் நவரத்ன அணிகளும்
அழகு பொருந்திய முகத்தில் கஸ்தூரி
திலகமுங் கொண்டு எழிலுடன் விளங்கும்

2. ஒருபுறம் அயன் முதலான தேவர்களும்
ஒருபுறம் அன்னநடை வாய்ந்த தேவப் பெண்களும்
ஒருபுறம் தும்புரு நாரதர் முதலியோரும்
ஒருபுறம் பக்தர்களின் இனிய இசையும்

3. குபேரனின் நண்பரான இராஜ சேகரனுன கோபுரத்தில்
கோயில் கொண்டுள்ளவனே! ராஜஸகுண மற்றவனே!
தியாகராஜனல் வழிபடப் பட்டவனே!
வெள்ளியங் கிரியிலுள்ளவனே!

## திரியம்பக க்ஷேத்திரம்

[இது மஹாராஷ்டிர மாகாணத்திலிருக்கும் நாஸிக் என்ற நகரிலிருந்து மேற்கே 18 மைல் தூரத்தில் உள்ளது.]

புண்ணிய நதிகள் ஏழினுள் கோதாவரியும் ஒன்று. வற்ருத ஜீவ நதியாகிய கோதாவரி உற்பத்தி ஸ்தானத்தில் வற்ருத ஆனந்தத்தினை அளிக்கும் முக்கண்ணப்பன் (திரியம்பகன்) கோயில்கொண்டுள்ள தலமே திரியம்பகம் எனப்படுவது. இது ஆதிசங்கரர் பாடிய பன்னிரண்டு ஜோதிலிங்கங்களில் ஒன்று. அச்சிவலிங்கத் திருவுருவத்தில் பிரம்மா, மஹாவிஷ்ணு, மஹேஶ்வரன் மூவரும் உள்ளனர். பாரத தேசத்தின் வேதத்தைப் பிரமாணமாகக் கொண்ட மக்களுக்கு மூன்று கண்களைப் போன்ற மும்மூர்த்திகளும் இச்சிவலிங்கத்தில் இடம் பெற்றுள்ளதாலும் இது திரியம்பகம் எனப் பெயர் பெற்றது போலும்!



# சிவமயம்





## அனுபந்தம் 9

திருஞானசம்பந்த சுவாமிகள்
அருளிய



# திருமயிலைத் திருப்பதிகம்

பண் - சீகாமரம்] [2 - ஆம் திருமுறை

*திருச்சிற்றம்பலம்*

*மட்டிட்ட புன்னை யங் கானல் மடமயிலைக்*
*கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரம்அமர்ந்தான்*
*ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்*
*கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்.* 1

*மைப்பயந்த ஒண்கண் மடநல்லார் மாமயிலைக்*
*கைப்பயந்த நீற்றான் கபாலீச் சரம்அமர்ந்தான்*
*ஐப்பசி ஓண விழாவும் அருந்தவர்கள்*
*துய்ப்பனவுங் காணாதே போதியோ பூம்பாவாய்.* 2

*வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்*
*துளக்கில் கபாலீச் சரத்தான்தொல் கார்த்திகைநாள்*
*தளத்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்*
*விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்.* 3

*ஊர்திரை வேலை யுலாவும் உயர்மயிலைக்*
*கூர்தரு வேல்வல்லார் கொற்றங்கொள் சேரிதனில்*
*கார்தரு சோலைக் கபாலீச் சரம்அமர்ந்தான்*
*ஆதிரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய்.* 4

*மைப்பூசும் ஒண்கண் மடநல்லார் மாமயிலைக்*
*கைப்பூசு நீற்றான் கபாலீச் சரம்அமர்ந்தான்*
*நெய்ப்பூசும் ஒண்புழுக்கல் நேரிழையார் கொண்டாடும்*
*தைப்பூசங் காணாதே போதியோ பூம்பாவாய்.* 5

*மடலார்ந்த தெங்கின் மயிலையார் மாசிக்*
*கடலாட்டுக் கண்டான் கபாலீச் சரம்அமர்ந்தான்*
*அடல்ஆனே றூரும் அடிக ளடிபரவி*
*நடமாடல் காணாதே போதியோ பூம்பாவாய்.* 6

மலிவிழா வீதி மடநல்லார் மாமயிலைக்
கலிவிழாக் கண்டான் கபாலீச் சரம்அமர்ந்தான்
பலிவிழாப் பாடல்செய் பங்குனி யுத்திரநாள்
ஒலிவிழாக் காணாதே போதியோ பூம்பாவாய். 7

தண்ணா அரக்கன்தோள் சாய்த்துகந்த தாளினான்
கண்ணார் மயிலைக் கபாலீச் சரம்அமர்ந்தான்
பண்ணார் பதினெண் கணங்கள்தம் அட்டமிநாள்
கண்ணாரக் காணாதே போதியோ பூம்பாவாய். 8

நற்றா மரைமலர்மேல் நான்முகனும் நாரணனும்
உற்றாங் குணர்கிலா மூர்த்தி திருவடியைக்
கற்றார்க ளேத்துங் கபாலீச் சரம்அமர்ந்தான்
பொற்றாப்புக் காணாதே போதியோ பூம்பாவாய். 9

உரிஞ்சாய வாழ்க்கை அமணுடையைப் போர்க்கும்
இருஞ்சாக் கியர்க ளெடுத்துரைப்ப நாட்டில்
கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரம்அமர்ந்தான்
பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய். 10

கானமர் சோலைக் கபாலீச் சரம்அமர்ந்தான்
தேனமர் பூம்பாவைப் பாட்டாகச் செந்தமிழான்
ஞானசம் பந்தன் நலம்புகழ்ந்த பத்தும்வலார்
வானசம் பந்தத் தவரோடும் வாழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி :—கபாலீசுவரர் தேவி :—கற்பகவல்லி

பதிகவரலாறு :—திருமயிலையில் வாசஞ்செய்த சிவநேசச் செட்டியாரின் மகள் பூம்பாவையென்பாள் அரவந்தீண்டி இறந்து போனாள். திருஞானசம்பந்தர்க்கென்றே அம்மங்கை நல்லாளை யாவரும் அறியச் செப்பியிருந்தபடியால் தாம் துயருறுதற்கில்லையென இடரொழிந்து ஒரு குடத்தினில் என்பையும் சாம்பலையும் பெய்து வைத்துக கன்னிமாடத்தில் காப்புடன் அமைத்தார். இங்ஙன மிருக்கத் திருஞானசம்பந்தர் திருவொற்றியூர் வந்தடைந்த செய்தி யறிந்த சிவநேசர் அவர்பால் செல்ல அப்பொழுது திருஞானசம்பந்தரும், ஒற்றியூர் நீங்கி திருமயிலை நோக்கி வரக்கண்ட சிவநேசர் அவரது திருவடியில் வீழ்ந்திறைஞ்சினார். பின்னர் சிவநேசர் செயல் அடியவர் சொல்லக் கேட்ட திருஞானசம்பந்தர் திருமயிலைக் கபாலீச்சரம் அடைந்து தேவதேவனை வணங்கிப் பின் என்புக்குடத்தினைக் கொணரச் செய்துத் தம்பிரான் கருணையைக் கருதி அருள் பார்வை செலுத்தி பூம்பாவை எனும் நாமஞ்செப்பி " மண்ணினில் பிறந்தார் பெறும் பயன் மதிசூடும் அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல், கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு

கண்டார்தல் உண்மையாமெனில் உலகர் முன் வருக'' என உரைக்கும் இத்திருப்பதிகம் பாடியவளவில் பதிகத்துள்ள ''போதியோ'' என்னும் மெய்த்திருவாக்கெனும் அமுதம் அக்குடத்துள்ளே எலும்பு உடம்பினுள்ளே பொருந்த வந்து வந்து உருவமாய்க் கூடியது. நீங்கிப்போன பிராண வாயு, வடிவு, பொலிவு ஆகிய யாவும் நிரம்பி அக்குடத்தினின்றும் எழும் முன்னர் 10-வது பாடலாகிய சமண் பாட்டினைச் செப்பும்பொழுது அக்குடம் உடைந்து தாமரைமுகை இதழ் அவிழ அதனின்றும் எழுகின்ற திருமகளைப்போன்று பூம்பாவையார் எழுந்தார் என்பது வரலாறு. திருமயிலைக் கபாலீச்சுவரரை வழிபடும்போது இத்திருப்பதிகத்தை ஓதிக்கொண்டே வழிபடுவது நலன்களையெல்லாம் நல்குமாகையால் அன்பர்கள் பொருட்டு இப்பதிகத்தையும் ஈண்டுக் கொடுத்துள்ளோம்.

---

## காமகோடியின் கருணைமொழி

சமூகத்துக்கோ, ராஜ்யத்துக்கோ, ஒரு வர்க்கத்துக்கோ தலைவர்களாக இருப்பவர்கள் சமய அநுஷ்டானங்களையும் ஆசாரணைகளையும் புறக்கணிக்கலாகாது. தனிப்பட்ட முறையில் அவர்களுக்கு சமயச் சடங்குகள் தேவையாக இல்லாதிருக்கலாம். ஆன்மிகத்தில் அவர்கள் முன்னேற்றம் கண்டு சமய அநுஷ்டானங்களைப் பின்பற்றும் அவசியத்தைக் கடந்திருக்கலாம். என்றாலும் அவர்கள் அநுஷ்டானங்களை விட்டு விட்டால், இந்த அநுஷ்டானங்களின் உதவியை உண்மையாகப் பெறவேண்டிய நிலையிலுள்ள மற்ற மக்களும் இவற்றை அலட்சியம் செய்யத் தொடங்கி விடுவர். இதனால் தலைவர்கள் மக்களுக்குத் தவறான உதாரணம் காட்டியதாகவே ஆகும். மக்கள் எந்த நிலையில் இருக்கிறார்களோ அங்கிருந்தே அவர்களை முன்னுக்கு அழைத்துச் செல்லவேண்டியது தலைவர்களின் கடமையாகும்.



— ''கல்கி'', 14—7—1968



ஸ்ரீ சித்திரகுப்தன் ஆலயம்
(பெரிய காஞ்சிபுரம்—நெல்லுக்காரத் தெரு)



# சிவமயம்





## அனுபந்தம் 10
## சிவனருள் பெற்ற சித்திரகுப்தன்



*தொழுது தூமலர் தூவித் துதித்துநின்*
*றழுது காமுற் றரற்றுகின் றாரையும்*
*பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்*
*எழுதுங் கீழ்க்கணக் கின்னம்பர் ஈசனே.*

— திருநாவுக்கரசு நாயனர்

சிவபெருமான் ஜீவர்கள் செய்யும் காரியங்களைக் கணக்கெழுதுகிறார் என்று அப்பர் சுவாமிகளின் அருள் வாக்கு கூறுகின்றது. கீழ்க் கொடுத்துள்ள ஆங்கில வாசகமும் இக்கருத்தை வலியுறுத்தும்.

"The ledger of Almighty is strictly kept and every one of us has the balance of his operations paid over to him at the end of every minute of his existence."

அகில உலகினுக்கும் மூலகாரணராய சிவபெருமான் ஏடும் எழுத்தாணியும் கொண்டு தாமே கணக்கெழுதுவதில்லை. அதற்காக ஒரு தேவதையைப் படைக்க எண்ணினார். இவ்வெண்ணத்துடன் ஒரு சித்திரம் வரைந்து, அதற்கு உயிரூட்ட, அதனின்றும் தோன்றியவனே சித்திரகுப்தன். சித்திரத்தினின்றும் தோன்றியமையால் சித்திரபுத்திரன் என்ற பெயர் உண்டானதாகத் தெரிகிறது. மீண்டும் இவன் சிவபெருமான் திருவருளால் காமதேனுவிடம் புத்திரனாய்ப் பிறந்து சித்திரகுப்தன் என்னும் நாமம் பெற்றான். சிவபெருமான் இவனிடம் மனிதர்களுடையவும் தேவர்களுடையவுமான செயல்கள் பற்றிய கணக்குகளை எழுதும் பணியை ஒப்படைத்தார். சித்திரபுத்திரன் என்று வழங்கப் பட்டாலும் சித்திரகுப்தன் என்ற பெயரே பிரசித்தமாக வழங்கப் படுகிறது. சித்திரம் என்றால் ஆச்சரியமான என்று பொருள்படும். குப்தம் என்பது ரகசியம் என்ற பொருளைத் தரும். எனவே, சித்திர குப்தனின் கணக்குகள் மிகவும் ஆச்சரியமான முறையில், ரகசியமாக வைக்கப்பட்டுள்ளன என்பது தெரிய வருகிறது.

இந்தச் சித்திரகுப்தன் யமதர்மராஜன் முன்னிலையில் பூத உடலைத் துறந்து வரும் உயிர்களின் பாப புண்ணியங்களைத் தன்னுடைய ஏட்டிலிருந்து படிக்கிறான் என்பதும் அத்தீவினை, நல்வினைகளுக்கேற்ப நரக, சொர்க்காதிகளை ஜீவர்கள் அடைகிறார்கள் என்பதும் ஹிந்துக்களின் நம்பிக்கை.



தேவியுடன் சித்திரகுப்தர்
(உற்சவர்—பெரிய காஞ்சிபுரம்)

நவக்ரகங்களில் ஒன்ருன கேதுவுக்கு இச்சித்திரகுப்தன் அதி தேவதை எனவும், கேதுதசை, கேதுபுத்தி, கேது அந்தரம் முதலியவைகளால் துன்புறுபவர்கள் சித்திரகுப்தனை வழிபட வேண்டும் என்றும் காஞ்சிமா நகரில் நெல்லுக்கார வீதியில் உள்ள சித்திரகுப்தன் ஆலயத்தில் எழுதப்பட்டுள்ளது. தென் இந்தியா முழுவதிலும் சித்திரகுப்தனுக்காக அமைந்த ஆலயம் இது ஒன்றே என்று கூறப்படுகிறது. சித்திராபௌர்ணமி தினத்தன்று சித்திர குப்தனுக்காக ஸ்திரீகள் நோன்பு இருப்பதை அனைவரும் அறிவர். அன்று உப்பில்லா உணவு கொள்வது மிகவும் முக்யமாகும். இத்தினம் காஞ்சி சித்திரகுப்தன் ஆலயத்திலும் வெகுவாகக் கொண்டாடப்படுகிறது. இவ்வாலயத்தில் எழுதப்பட்டுள்ள பின் வரும் பாடலும் இதனை விளக்குகின்றது.

"சித்திரைப் பருவந்தன்னில் உதித்த நற்சித்ரகுப்தன்
அத்தினம் அவரைஉன்னி அருச்சனைக் கடன்களாற்றில்
சித்தியும் பெறுவர்பாவந் திருமேஎமன் தன்னூரில்
இத்திறன் அறிந்தே யன்னோன் இரங்குவான் அறங்கன் சொற்றே."

சித்திரகுப்தனின் தேவி பிரபாவதி என்றும் கர்ணிகை என்றும் கூறப்படுகிருள். மூலவர் அமர்ந்த நிலையில் காணப்படுகிருர். தேவியுடன் கூடிய உற்சவமூர்த்தியின் உருவப்படம் எதிர்ப்பக்கத்தில் பிரசுரிக்கப்பட்டுள்ளது. பூமியிலிருந்து கிடைக்கப்பெற்றதாகக் கூறப்படும் ஒரு சித்திரகுப்தனின் செப்புப் படிமமும் இவ்வாலயத்தில் உள்ளது. நமது பிரதிநிதி 2-6-1968-ல் இவ்வாலயத்துக்குச் சென்று, பல விஷயங்களை நேரில் அறிந்துகொண்டு, இந்நூல் அச்சிட்ட பாரங்களை சித்திரகுப்தன் முன் வைத்து, அவனருள் பெற்ருர். மீண்டும் 23-6-68-ல் நமது பிரதிநிதிகள் இவ்வாலயத்தை வழிபட்டார்கள்.

கருணீகர்கள் என்று கூறப்படும் கணக்குப் பிள்ளைகள் இக்கோவிலின் முன்னேற்றத்தில் சிரத்தை காட்டுவதாகத் தெரிகிறது. தாங்களும் கிராமக்கணக்கு எழுதுவதால் கணக்கெழுதும் சித்திரகுப்தனிடம் ஈடுபட்டுள்ளனர் போலும்! ஆறுமுகசாமி என்பவர் பூஜகர் இல்லாத நேரத்திலும் சேவார்த்திகள் ஏமாற்ற மடையாமலிருக்க தீபாராதனை முதலியன நடத்துகிருர்.

சித்திரகுப்தன் சிவனருள் பெற்று ஜீவர்களின் நல்வினை தீவினைகளைக் கணக்கெழுதுவதால், நாமும் அச்சித்திரகுப்தனைத் தரிசனம் செய்வோம்.

"All those things shall be laid bare in the scales and in the books on the day of the great Judgment."
— *Anon.*



## ஞான மோக்ஷகாரகன் கேது

(அதிதேவதை —சித்திரகுப்தன்)

### கேது ஸ்துதி

தூம்ரவர்ணம் த்விபாஹும் ச
கேதும் ச விக்ருதாநநம் |
க்ருத்ராஸனகதம் நித்யம்
த்யாயேத் ஸர்வ பலாப்தயே ||

பலாஶ புஷ்ப ஸங்காஶம்
தாரகா க்ரஹ மஸ்தகம் |
ரௌத்ரம் ரௌத்ராத்மகம் கோரம்
தம்கேதும் ப்ரணமாம்யஹம் ||

---

## காமகோடியின் கருணைமொழி

அந்நிய நிலத்தில் மேயக்கூடாது என்பதற்காகப் பசுவைக் கட்டிப் போடுகிறோம். அந்த நிலத்தின் பயிர் சேதம் ஆகாமல் இருக்கவேண்டும் என்பதற்காக மட்டும் கட்டிப் போடுவதில்லை. பசு அடிபடாமல் இருக்கவேண்டும் என்று அதைக் காக்கவே கட்டிப் போடுகிறோம். இவ்வாறே எல்லா சமயக் கட்டுப்பாடுகளும் நாம் பிறருக்கு இன்னல் விளைவிக்காமல் காப்பாற்றுவதோடு நம்மைக் காப்பாற்றிக் கொள்ளவும் விதிக்கப்பட்டவை. முக்கியமாக, நம்மை நம்மிடமிருந்தே காப்பாற்ற விதிக்கப்பட்டவை.

— "கல்கி", 7—7—1968

 **சிவமயம்** 




## அனுபந்தம் 11

# திருக்கடிக்குளம் என்னும் கற்பகநாதர்குளம் ஸ்தல வரலாறு

*"கற்றவர் விழுங்குங் கற்பகக்கனி..."*

— திருவிசைப்பா

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரிய பெருமான் உலகினர் தன்னை உணர்ந்து ஓதிப் பயன்பெறும் பொருட்டுத் தன் கருணையினால் உருவினுக்கும் அருவினுக்கும் ஒரு குறியாம் சிவலிங்க மூர்த்தமாக நிலவுலகில் எழுந்தருளி உள்ளான். இங்ஙனம் பெருமான் எழுந்தருளியுள்ள இடங்கள் திருக்கோயில்கள் எனப் படும். இத்திருக்கோயில்களைகளையே அரன் என்று வழிபட வேண்டுமென்பது ஞான சாத்திரத் துணிபு இத்தகைய திருக் கோயில்களிற் பலவற்றை நாயன்மார்களும் மற்றும் சில அருளா ளர்களும் பாடிப்பரவி வழிபட்டு உலகினர்க்கு உய்யுந்நெறியைக் காட்டியுள்ளார்கள். இவைகள் பாடல்பெற்ற தலங்கள் எனப் படும். இவைகள் தம்மை வழிபடுவார்களின் மாசுகளை கழுவுவ தாலும் மூவகைத்தாகிய (ஆதிதைவதம், ஆதிபௌதிகம், ஆத் யாத்மிகம்) தாபங்களைத் தணிப்பதாலும் தடாகங்களுக்கு ஒப்பா கின்றன. இவற்றுள் தடாகம் என்று பொருள்படுகிற குளம் என்பதையே தன் பெயரில் கொண்ட திருக்கடிக்குளம் எனப்படும் கற்பகநாதர்குளம் என்னும் தலம் முத்தமிழ் விரகனும் நான்மறைத் துணைவனுமான திருஞானசம்பந்தமூர்த்திகளால் பாடிப் பரவி வழிபட்ட தலங்களில் ஒன்றாகும்.

வான்பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரி பாய்தலால் சோற்றுவளம் மிக்க சோழநாட்டில் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த திருத்துறைப்பூண்டி வட்டத்திலே உள்ளது திருக்கடிக் குளம் என்னும் இத்தலம். இது கற்பகநாதர்குளம் என்றும் கற்பகநாதர் கோவில் என்றும் வழங்கப்படுகிறது. இது மாய வரம்—அறந்தாங்கி இருப்புப்பாதையிலுள்ள பாண்டி என்னும் புகைவண்டி நிலயத்திலிருந்து தென்திசையில் சுமார் ஐந்து மைல் தூரத்திலுள்ளது. திருத்துறைப்பூண்டியிலிருந்தும் தில்லைவளாகம் என்னும் தலத்திலிருந்தும் இவ்வூர்க்குச் செல்லலாம். (தேசப்படத் தில் 42 என்ற எண்ணால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.)

'கடிகொள் பூம்பொழில் சூழ்தரு கடிக்குளம்'
'கார்கொள் பூம்பொழில் சூழ்தரு கடிக்குளம்'
'கரும்பு கார்மலி கொடிமிடை கடிக்குளம்'
'கனமலி கடலோதம் வந்துலவிய கடிக்குளம்'

எனப் புகழ்ந்து பாடியுள்ளார்.

'மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாய்த் தொடங்கினோர்க்கு வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே' என்பது தாயுமானாரின் திருவாக்கு. எனவே இத்தலத்து மூர்த்தி, தல, தீர்த்த விசேடங்களை முறையே சுருக்கமாகக்காண்போம்.

1. **மூர்த்தி விசேடம்** :—இத்தலத்து இறைவர் திருநாமம் கற்பகநாதர் அல்லது கற்பகேசுவரர் எனப்படும். கற்பகவிருக்ஷம் வேண்டுவார்க்கு வேண்டுவதெல்லாம் ஈயும் என்பது பிரசித்தம். இக்கடிக்குளக் கற்பகநாதனும் வேண்டுவார்க்கு வேண்டுவ தெல்லாம் ஈயவல்லனன்றோ! கற்பகவிருக்ஷத்திற்கு கேட்டதைக் கொடுக்கும் சக்தியினை அளித்த இப்பெருமான் அத்திருநாமத் தையே தாமும் பூண்டுள்ளார். கற்பகவிருக்ஷம் எட்டுக் கிளைகளை உடைத்தாதல்போல இக்கற்பகலிங்கமும் மிக அரிய எட்டுப் பட்டை வடிவுள்ளதாய் அமைந்துள்ளது. கற்பகத்தைச் சுற்றி யுள்ள காமவல்லி போன்றும் செம்பொன் மலைமீது படர்ந்துள்ள மரகதக் கொடி போன்றும் சிவபிரானிடத்தே திகழ்கின்ற உமா தேவியார் அழகின் வடிவமாய் இருப்பதால் சௌந்தர நாயகி என்றும், என்றும் மாறாத இளமைக் கோலத்தினளாதலால் பாலசௌந்தரி என்றும் திருநாமம் பூண்டு எழுந்தருளி தம்மை வழிபடுவாரது குறைகளையெல்லாம் போக்குகின்றாள். இத்தலத்து விநாயகரும் கற்பகவிநாயகர் என்றே பெயர் பெற்றுள்ளனர். இவர் சிவபிரானைப் பூஜித்து மாம்பழம் பெற்றதாகக் கூறப்படு கிறது. இக்கற்பகக் களிறு தன்னை வழிபடுவோர்க்குச் சகல சித்தி களையும் அளிக்கக் காத்துக்கொண்டிருக்கிறது.

2. **தலச்சிறப்பு** :—இத்தலம் அகத்தியர் போன்ற இருடியர் களின் தொடர்பினைப் பெற்றுள்ளது. திருஞானசம்பந்த மூர்த்திகள் பாண்டி நாட்டில் சமண் இருளை அகற்றி சிவ ஒளி பெருக்கச் செல்லுகையில் இத்தலத்தைச் சூழ்ந்து எங்கும் சிவலிங்க மயமாக விளங்குதலைக் கண்டு இங்கு போந்து கற்பகநாதனைக் கனிந்துருகிப் பாடிச் சென்றார். 'கண்ணார்ந்த திருநுதலார் மகிழ்ந்த கடிக்குளம் இறைஞ்சி' என்பது தொண்டர்சீர் பரவு வாரின் திருவாக்கு. இத்தலத்தைச் சுற்றிலும் பல புண்ணியத் தலங்கள் உள்ளன. திருஇடும்பாவனம், தில்லைவிளாகம், கோயி லூர், திருத்துறைப்பூண்டி, வேதாரணியம் என்பன அவற்றுள் சில. எனவே இத்தலத்தைத் தரிசிக்கும் அன்பர்கள் மற்றைய தலங் களையும் தரிசிக்கும் வாய்ப்பினைப் பெறுகிறார்கள்.

இத்தலத்தில் கோதண்டராமப் பெருமானும் எழுந்தருளியுள்ளார். இராமபிரான் இராவணனை வதஞ்செய்ய அதற்குரிய மந்திர சக்தியினைப் பெறும்பொருட்டு வேதாரணியத்திலிருந்து திருஉசாத்தானம் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபிரானிடம் சென்றடைந்தனர்; அங்ஙனம் செல்லும்போது இடையிலே தங்கிச் சென்ற தலங்களில் இத்திருக்கடிக்குளத் தலமும் ஒன்று எனக் கூறப்படுகிறது. இதனை நினைவுறுத்துவதே இங்குள்ள விஷ்ணு ஆலயமும் அதிலுள்ள கோதண்டராமர் சீதாப்பிராட்டி இலக்குமணர் அனுமன் ஆகியோருடைய உருவச் சிலைகளும்.

3. **தீர்த்தச் சிறப்பு :**—திருக்கடிக்குளம் என்னும் பெயரைக் கொண்டு தீர்த்த மகிமையை உணரலாம். விநாயக தீர்த்தம் என்னும் பெயருடன் விளங்குகிறது இப்புண்ணிய தீர்த்தம். இத்தீர்த்தத்தில் ஒரு மகானுடைய எலும்புகள் இடப்பட்டன வென்றும் அந்நாள் முதல் அவைகள் செந்தாமரை மலர்களாக நாடோறும் மலர்ந்து இக்குளத்தினை அழகு படுத்துகின்றன என்றுங் கூறப்படுகிறது. இம்மலர்கள் இறைவனின் திருவடிகளிற் சேர்ப்பிக்கப்படுகின்றன. இப்புண்ணிய தீர்த்தம் முழுகுவோரது புறமாசுகளைக் கழுவுவதுபோல அகமாசுகளையும் கழுவிப் புனிதமாக்குகின்றது.

**முடிவுரை :**—இத்தகைய மூவகைச் சிறப்பும் வாய்ந்த இத்திருக்கடிக்குளத்தின் ஆலயத் திருப்பணி பூர்த்தியாகி 28—1—1943-ல் மஹாகும்பாபிஷேகம் நடைபெற்றது. இதற்கு இறைவன் திருவருள் சூக்ஷ்மமாய்த் தூண்ட பெருமளவுக்குத் தூலகாரணமாய் இருந்தது இந்த 'லிப்கோ' ஸ்தாபனத்தின் ஸ்தாபகர் என்பதை சற்றுப் பெருமையுடனேயே கூறுகிறோம். இவருடைய குடும்பத்துக்கும் பல ஆச்சர்யமான அருட்செயல்கள் நிகழ்வது அவ்வம்பிகையிடத்து வைத்த மாறாத பக்தியினாலேயேயாம் என்பதைக் கூறவும் வேண்டுமோ. எனவே சிவ பக்தர்கள் இக்கற்பகத்தைக் கண்ணாரக் கண்டு வாயாரப் பாடி கையாரக் கும்பிட்டுத் தாம் கோரிய வரங்களையெல்லாம் பெறவேண்டும் என்பது எம்முடைய அவா.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருப்பதிகத்தில் ஒரு பாசுரத்தைக் கீழே தந்து இக்கட்டுரையை முடிக்கின்றோம்.

திருச்சிற்றம்பலம்

பொடிகொள் மேனிவெண் நூலினர்; தோலினர்; புலியுரி யதளாடை
கொடிகொள் ஏற்றினர்; மணிகிணின் எனவருகுரைகழல் சிலம்பு ஆர்க்கக்
கடிகொள் பூம்பொழில் சூழ்தரு கடிக்குளத்து உறையுங்கற் பகத்தைத்தம்
முடிகள் சாய்த்துஅடி வீழ்தரும் அடியரை முன்வினை மூடாவே.

திருச்சிற்றம்பலம்



# சிவமயம்





## அனுபந்தம் 12



சென்னை—மாம்பலம் (தியாகராய நகர்)
சிவ-விஷ்ணு ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும்

# ஸ்ரீ கேதாரீச்வரர் துதி

### திருமுருக கிருபானந்தவாரியார் பாடியது

### சிவஸ்துதி

எண்சீர்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

*தருவளரும் சதமகனார் தாழ்ந்து போற்றத்*
*தண்புனல்கா விரிதந்த தரும மூர்த்தி*
*மருவளருங் கொன்றையணி வரத மூர்த்தி*
*மலைவில்லார் வணங்குமலை வில்லாக் கொண்ட*
*குருவளருங் குணக்குன்றம் : குன்றம் ஈன்ற*
*குழலுமையை ஒருபாகங் கொண்ட சோதி*
*திருவளரும் மாம்பலம்வாழ் கேதா ரேசன்*
*திருவடி சேர்ந்தார் பிறவி சேரார் தாமே.* 1

*சீருலவு தேவர்தொழு தேவ தேவன்*
*சிந்திப்பார் வினைதீர்க்குஞ் சிறந்த தேவன்*
*காருலவு மணிகண்டன் : கண்டன் பாய்மார்க்*
*கண்ட னிறைஞ் சிடவருள்செய் கால காலன்*
*ஏருலவும் திரிசூலம் ஏந்தும் ஈசன்*
*ஏகாந்த நலமருள்செய் இனிய நம்பன்*
*தாருலவு மாம்பலம்வாழ் கேதா ரேசன்*
*தாள்சார்வார் மறுபிறவி சாரார் தாமே.* 2

*இலைமலிந்த ஆலின்கீழ் இருந்து நால்வர்க்(கு)*
*எட்டரிய மவுனநிலை ஈந்த ஐயன்*
*அலைமலிந்த கடல் துயின்றோன் அருகில் நிற்க*
*அன்பர்தமக் கருள்செய்யும் அமலமெய்யன்*
*தலைமலிந்த தார் வேய்ந்த தலைவன் ; வேதன்*
*தலையாலே பலிதேரும் சாந்த மூர்த்தி*
*கலைமலிந்த மாம்பலம்வாழ் கேதா ரேசன்*
*கால்கண்டார் கருவதனைக் காணார் தாமே.* 3

பொற்புலவு புருகூதன் புதல்வன் போற்றப்
　　பொருபடைகள் தருவரத புனித மூர்த்தி
அற்புலவும் அடியவர்க்காய் ஆரூர் தன்னில்
　　அரிவையிடம் இரவினில்தூ தணைந்த ஐயன்
வெற்புலவும் வேலவனை விபுதர்க் கீந்த
　　வேதாந்த சித்தாந்த விமல வேந்தன்
கற்புலவு மாம்பலம்வாழ் கேதா ரேசன்
　　கதிபெற்றார் நிதிபெற்றுக் களிப்பார் தாமே. 4

சிறையார்ந்த புள்ளுருவத் தேவும் மாலும்
　　தேடரிய திருவாளன் தேவ தேவன்
கறையார்ந்த மணிகண்டன் : காழி மைந்தன்
　　கவிக்கினிது செவிசாய்த்த கருணை யாளன்
நிறையார்ந்த மகளிர்களும் வேத மோது
　　நீதியரும் பூதியரும் நிறைந்து நின்ற
மறையார்ந்த மாம்பலம்வாழ் கேதா ரேசன்
　　மலர்த்தாளை வாழ்த்துபவர் வாழ்வார் தாமே. 5

வரலாறு :—இத்திருப்பாடல்கள் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களால் பாடப்பெற்று 13-9-1963-ல் வெளியிடப்பட்டது. சிவ-விஷ்ணு ஆலயம் எனப் பிரசித்தி பெற்றுத் திகழும் இவ்வாலயத்தில் உள்ள ஸ்ரீ கேதாரேச்வர் என்ற திருநாமத்துடன் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கம் ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகளால் அனுக்ரஹித்துக் கொடுக்கப்பட்டது. ஆதிசங்கரர் ஐந்து லிங்கங்களை ஸ்தாபித்தது போல அவரது அபராவதாரமான நமது ஜகத்குரு அவர்களும் இச்சிவலிங்கத்தை ஸ்தாபிக்க அருள் செய்தார்போலும்! சுமார் 18 ஆண்டுகளாகப் பிரதி சிவராத்திரியிலும் அகண்ட அதிருத்ர, மஹாருத்ர ஜபம் ஹோமங்கள் நடைபெறுவது இவ்வாலயத்துக்கேயுரிய தனிச் சிறப்பு. இத்தலப் பாடலையும் சில விவரங்களையும் உதவிய இவ்வாலய நிர்வாகக் குழுத் தலைவர் ஸ்ரீமான் V. சின்னஸ்வாமி ஐயர் அவர்கட்கு நன்றி செலுத்திப் பக்தர்களின் நலனுக்காக இப்பாடல்களை ஈண்டுக் கொடுத்துள்ளோம்.




# சிவமயம்




## அனுபந்தம் 13



# இறைவன் எங்கும் நிறைந்தவன்

*" உலகெலாம் தானாய் நின்று*
*ஒண்பர வெளியில் ஆடி*
*இலகுசிற் றம்ப லத்தில்*
*இனிதுற நடனம் ஆடி*
*அலகிலா மறைச்சி ரத்தில்*
*அருநடம் ஆடு மாபோல்*
*அலைமனக் குகையின் கண்ணும்*
*ஆடுவான் கழல்கள் போற்றி "*

— **வித்துவான் ந. சுப்பிரமணியன்**

**உ**லகெலாம் பரமன் உருவம். அப்பரமன் இயல்பாகவே கருணை உள்ளவன்; எல்லையிலாக் களிப்பால் துவாதசாந்தப் பெரு வெளியில் ஆநந்த நடனமாடும் அருள் வள்ளல்; அவ்வாறே சிற்றம்பலத்தும் (சிதம்பரம்) 'என்று வந்தாய்?' என்று இன்முகம் காட்டி வினவுவது போன்ற சிறந்த தோற்றத்தோடு இடக்கால் எடுத்துத் தாண்டவமாடும் தனிப்பெருந்தெய்வம்; வேதங்கள் எல்லாம் அநாதி காலந்தொட்டு ஆராய்ந்தும் அதன் முடிவுக்கு எட்டாது அப்பால் நின்று ஆடும் ஆரண முதலோன்; அத்தகைய எம்பெருமான் நிலையில்லாது அலைபாயும் தன்மை உடையதும் அஞ்ஞான இருள் நிறைந்ததுமாகிய மனக்குகையினிடத்தும் ஒளி பெருகும் வண்ணம் நிருத்தமிடுகிறான். அவ்விறைவனது பாதங் களைப் போற்றி வாழ்வோம்.

துவாதசாந்தப் பெருவெளியில் நடமிடும் நாதன் திசைகளே தனக்கு ஆடைகளாய்—திகம்பரனாய்—தன்னோடு இரண்டறக் கலக் கும் முனிபுங்கவர்களுக்கே புலனாவான்; இதற்கொரு குறியாக உஜ்ஜயினி க்ஷேத்திரத்தில் திறந்த வெளியில் கோயில் கொண்டுள் ளான்; 'மனிதப் பிறவியும் வேண்டும்' என்று நாயன்மார்களும் விரும்புமாறு யாவருக்கும் அருள் புரிவான் சிதம்பரநாதன். அப்பிரானைக் கோயில்தோறும் தரிசனம் செய்து மக்கள் பெரும்

பேறு எய்துகின்றனர். உள்ளத்துறு களங்கமெல்லாம் ஒழிப்பான் வேண்டி இருதயத்தில் நிலையாய் வீற்றிருக்கும் வெற்றிக்கு ஓர் அடையாளமாய், குகையிடங் கொண்ட பெருமானுய், அமர் நாத்தில் விளங்குகிறுன்.

ஆகவே, உஜ்ஜயினியில் உள்ள திறந்தவெளிக் கோயிலைப் பற்றியும் அமர்நாத்தில் உள்ள குகைக்கோயிலைப்பற்றியும் சிறு குறிப்புகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

"தென்னுடுடைய சிவனே போற்றி!" என்ற பொன்மொழி ப்ரகாரம் தென்னுட்டில் திருக்கோயில்கள் பலவற்றில் அவனைத் தரிசிப்போம். உஜ்ஜயினி போன்ற தலங்களில் திறந்த வெளியில் தரிசித்து புனிதமடைவோம். அமர்நாத்போன்ற குகைகட்கும் போய் அவன் அருள் கிடைக்க ப்ரார்த்தித்து வருவோமாக. பாரத தேசம் முழுவதும் "அவனைத்" தேடித்தேடி போவோம்!

# அ. திகம்பரக் கோவில்

மத்தியப் பிரதேசத்தில் உஜ்ஜயினி நகரின் நகர்ப்புறத்தில் க்ஷிப்ரா நதி தீரத்தில் ஒரு பண்டைச் சிவன் கோவில் உள்ளது. பல நூற்றுண்டுகட்குமுன் நல்லநிலையில் இருந்த இக்கோவில் 13-ஆம் நூற்றுண்டில் சிதிலமடைந்தது; மீண்டும் 18-ஆம் நூற்றுண்டில் இரண்டாம் ஜயசிங் மகாராஜாவால் புதுப்பிக்கப் பட்டது. மூல விக்ரஹம் உக்ர ரூபத்தில் இருக்கிறது. பக்தர் கட்குப் பரமானுக்ரஹம் புரியும் பரமன் எனக் கொண்டாடி நாற்றிசையினின்றும் அடியார் இங்குக் கூட்டம் கூட்டமாக வருகின்றனர்.

கோவில் ஒரு திறந்தவெளிக் கோவில். மூலவரைச் சுற்றி நான்கு மிக அழகான வேலைப்பாடமைந்த கருங்கற்றூண்கள் காட்சி அளிக்கின்றன. சுவாமிக்கு மிக அருகில் ஒரு மிகப் பெரிய மரம் இருக்கிறது. இது கோவில் முழுவதும் பந்தல் போட்டது போல் படர்ந்து காணப்படுகிறது. அது ஆண்டு முழுவதும் பல வகையான புஷ்பங்களைத் தருவதால் அதற்குப் பெயரிலி மரம் என்ற பெயர் வழங்குகிறது. இம்மரத்தில் பன்னீராண்டுக்கு ஒரு முறை ஒரே இரவில் திடீரென்று காய்த்தும் பழுக்கும் ஒரே பழத்தைத் தேவர்கள் எம்பிரானுக்கு நிவேதனம் செய்கிறுர்கள் என்பது ஐதீகம்.

வேண்டுவார் வேண்டுவன யாவும் உவந்து அளிக்கும் பெருமான் ஆகையால் இத்தலத்துப் பரமன் நாமம் **சித்தேஸ்வரன்** என்பதாம். திசைகளை எல்லைகளாக நிற்கும் இக்கோவிலைத் **திகம்பரக் கோவில்** எனல் பொருந்தும்.

# ஆ. அமர்நாத் குகைக் கோவில்

நம்மனோரை என்றென்றும் காக்கும் சிவபிரான் எங்கும் உளான். கோயிலிலும் உளான். முன் அத்யாயத்தில் கூறியபடி, பரந்த வெளிகளிலும் உளான். குகைகளிலும் உளான். இதை நிருபிக்க இக்கட்டுரையைச் சிவபக்தர்கட்கு ஸமர்ப்பிக்கிறோம்.

ஒவ்வொரு ஆண்டும் ஆகஸ்டு மாதத்தில் ஏராளமான பக்தர்கள் அமர்நாத் யாத்திரையை மேற்கொள்கிறார்கள். அமர்நாத் ஹிமாலயத்தில் ஸ்ரீநகரிலிருந்து வடகிழக்கில் 96 மைல் தூரத்தில் ஒரு பெரிய பனியாற்றங் கரையில் அமைந்துள்ளது.



பனிக்கட்டி உருவில் காட்சியளிக்கும் சிவலிங்கம்

அமர்நாத் கடல் மட்டத்திலிருந்து 14,000 அடி உயரத்தில் இருக்கிறது. அங்கு 150 அடி உயரமுள்ள ஒரு குகையினுள் சிவலிங்கம் பனிக்கட்டி உருவில் காட்சியளிக்கிறது. இச்சிவலிங்கம் வளர்பிறையில் வளர்ந்தும் தேய்பிறையில் தேய்ந்து குறைந்தும் காணப்படுகிறது பரமன் திருவிளையாடல் பனி முழுதும் கரைந்து மீண்டும் லிங்க உருவிலேயே வளர்கிறது.

அமர்நாத்திற்குச் செல்பவர்கள் பஹல் காம் என்னுமிடம் வரை மோட்டாரில் செல்லலாம். அதற்குப் பிறகு கோவேறு கழுதை, டோளிகள் முதலியவற்றின் மூலம் செல்லவேண்டும். உடல் வலிமை மிக்கவர்கள் நடந்து செல்லலாம். அடுத்த கட்டம் சந்தன்வாரி என்னும் இடம். அவ்விடத்தில் கட்டாயம் தங்கி மறுநாள்தான் பயணத்தைத் துவக்கவேண்டும். ஏனெனில் அதற்குப்பின் மலை மிகவும் செங்குத்தாய் இருக்கிறது. முதல் நாள் ஓய்வு கொண்டாலன்றி அம்மலைமீது ஏறிச் செல்லமுடியாது.

செல்லும் வழியில் சக்திமுனை, சேஷநாகம் ஆகிய இடங்களைக் கடந்து செல்ல வேண்டும். சுற்றிலும் மலை சூழ்ந்த ஏரியில் பனியாறு ஒன்று வந்து சேரும்போது நாகமொன்று படமெடுத்து ஆடுவதுபோன்று காணப்படுவதால் அவ்விடம் சேஷநாகம்

என வழங்கப்படுகிறது. அவ்வேரியில் ஸ்நாநம் செய்தபின் பக்தர்கள் **பஞ்சத்ராணி** என்ற இடத்தை அடைவர். அங்கு **பஞ்சத்ராணி** நதியில் நீராடி ஓய்வு கொண்டபின் மறுநாள் விடியற் காலம் புறப்பட்டு அமர்நாத் செல்வர். செல்லும் வழியில் சிறிய பனியாறு ஓடுகிறது. அவ்வாற்றில் இறங்கியே செல்லவேண்டும். அமர்நாத் குகையின் ஒரு புறத்திலிருந்து அது உற்பத்தி ஆகிறது. அதனை **அமர்கங்கா** என்று பக்தர்கள் புகழ்வர். அதில் நீராடி பனி யுருவாய் காக்ஷியளிக்கும் பரமனைப் பணிந்து அவன் புகழ்பாடி அன்றே திரும்பிவிடுவர். அமர்நாத்தில் இரவு நேரத்தில் தங்க முடியாது.

அமர்நாத்திலிருந்து வேறுவழியாக—ஓர் ஒற்றையடிப்பாதை— நடந்து சந்தன்வாரியை அடைவர். அங்கிருந்து பஹல்காமுக்கு வருவர். இதுவரை யாவரும் ஒன்றுகவே வரல்வேண்டும். பின்னர் அவரவர் இடங்கட்குப் பிரிந்து செல்வர்.



## ஸ்படிகலிங்கம் பிரதிஷ்டை

புதுச்சேரி, டிச, 10— புதுச்சேரி பக்தர் ஒருவரால் அளிக் கப்பட்ட அபூர்வ விலை மதிப்பில்லா ஸ்படிக லிங்கம் ஸ்ரீ மணக்குடி விநாயகர் ஆலயத்தில் லெப். கவர்னர் ஸ்ரீ ஜட்டி முன்னிலையில் நேற்று மாலை பிரதிஷ்டை செய்யப் பட்டது. கார்த்திகை கடைசி சோமவாரமாகிய நேற்று 108 சங்காபிஷேக மகோற்சவமும், ஸ்ரீ விநாயகருக்கும் ஸ்படிக லிங்கத்திற்கும் நடைபெற்றது.

—"தினமணி", 14—12—1968




# சிவமயம்




## அனுபந்தம் 14

# தாமதம் வேண்டா

*" உறங்குவது போலும் சாக்காடு உறங்கி*
*விழிப்பதும் போலும் பிறப்பு "* — குறள் - 339

என்பதற்கிணங்க உலகம் நிலையில்லாதது. எந்நேரத்தில் என்ன நிகழும் என்பதை யாரும் அறுதியிட்டுரைத்தல் இயலாது. மின்னல் மின்னும்; ஒளிப்பிழம்பாய்க் காட்சி அளிக்கும்; உள்ளத்தை அள்ளும் எழிலுடன் திகழும்; ஆனால் அதன் ஆயுள் ஒரு கணமே. அத்தகைய மின்னல்போன்றதே வாழ்வு; ஒருகணத்தில் இருந்தஇடம் தெரியாமல் மறையும்; ஆகவே, வாழ்க்கையில் நாம் செய்யவேண்டிய கடமைகளை உடனுக்குடனே விரைந்து செய்யவேண்டும். 'இந்நேரம் தப்பினால் எந்நேரம் வாய்க்கும்' என்ற அச்சம் நமக்கு எப்போதும் இருந்துகொண்டே இருக்க வேண்டும். உயிர்களுள் சிறந்த மக்களாய்ப் பிறந்த நாம் அண்ட சராசரங்களுக்கும் தலைவனாகிய ஆண்டவனை எப்போதும் மனத்தகத்தே இருத்தி வணங்கல் வேண்டும். ஆண்டவனை வழிபட வாழ்த்த—யாருக்கு மனம் உண்டோ அவனே மனிதன். அவ்வாறு வழிபடாதார் மனிதப் பிறவியினின்று வேறுபட்டவராவர்; தமக்கு அளிக்கப்பட்ட சிறந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளத் தவறியவர் ஆவர். .இதனாலேயே, 'இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ?' என்ற கவலையோடு ஆண்டவன் அடியார்களுள் தலை சிறந்த பெரியார்கள்,

*" மின்னின் நிலையில*
*மன்னுயிர் யாக்கைகள்*
*என்னு மிடத்து, இறை*
*உன்னுமின் நீரே "*

எனப் பொருள்பொதிந்த அருளுரைகளைத் தெளிய அருளினர். அதாவது கடவுளை வழிபடுதலில் அசிரத்தை. காலஹரணம் கூடவே கூடாது என்பதை வலியுறுத்துகிறது மேற்கண்ட பொன்னான மொழி.

அருளாலும் அனுபவத்தாலும் ஆன்ற பெரியோர்கள் அருளியவை ஆன்மீக நிலையை உயர்த்திப் பேரின்ப வாழ்வளிக்கப் பெருந்துணையாய் — வழிகாட்டியாய் — அமைந்தவை. பேரின்பத்துக்கே

வழிகாட்டும் அவை உலகியலுக்குச் சிறந்த வழிகாட்டி என்பதில் ஐயமேது? ஆகவே, அவர் கூறியவை உலகியலுக்கும் நன்கு பொருந்தும். நம் கடமைகளை — செய்யவேண்டிய அறத்தை — பின்னொருகால் செய்துகொள்ளலாம் எனத் தள்ளிப்போடுவது அறியாமையாகும். பின்னொருகால் நமக்குச் சமயம் வாய்க்குமோ? ஆகவே, 'இன்னே செய்க' என்பதைத் தாரக மந்திரமாகக் கொண்டு செயல்படவேண்டும். தாமதம் — சோம்பல் — நம்மைக் கெடுக்கும் பகைவர் நம்மைக் கண்டு எள்ளி நகையாடும் நிலையை உண்டாக்கும். விரைந்து செயலாற்றும் தன்மையோ பெருஞ் செல்வமும் புகழும் அளிக்கும். இதனாலேயே வள்ளுவர்,

"மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு"— குறள் - 610

என்றார்.

ஆகவே நாம் நம் நிலையை உணரவேண்டும்; அருள்பூத்துப் பரமானந்தக் கனிபழுத்துக் குழைமென்னும் குன்றேறி நின்ற சான்றோர்கள் வாக்கைப் போற்றி வழுவாது கடைப்பிடித்து வருதல் வேண்டும்.



திருஞானசம்பந்தரைக் கவுணியர்கோன் என்று பெரிய புராணம் கூறுகிறது. கவுணியர் என்பது யாரைக் குறிக்கிறது?

— சுந்தரம், திருவானைக்காவல்

அந்தணர்களின் கோத்திரங்களில் ஒன்று கவுண்டின்ய கோத்திரம். அதில் தோன்றினவர்களைக் கவுண்டின்யர் என்பது வழக்கம்; அதுவே கவுணியர் எனத் திரிந்தது. சம்பந்தப் பெருமான் கவுண்டின்ய கோத்திரத்தில் தோன்றினவர்.

— "கலைமகள்", டிசம்பர் 1968

உ
சிவமயம்

# அனுபந்தம் 15

# புலால் மறுத்தல்

"அன்பே சிவம்" என்பர். ஏனெனில் அன்பு மிக, மிக அருள் பெருகும். 'அன்பு' என்பது நம்முடன் தொடர்புடையாரிடத்தே நாம் காட்டும் பரிவு. ஆனால் அருள் என்பதோ 'இயல்பாகவே எவ்வுயிரிடத்தும் உண்டாகும் ஒப்பற்ற கருணை.' இதனால்தான் "அருள் என்னும் அன்பு ஈன் குழவி" (குறள்-757) என்றார் வள்ளுவர். இத்தகைய அருள் பெருக முதற்படி புலால் உண்ணாதிருத்தலே. ஓர் உயிர் தன் உயிர் காத்துக்கொள்ள அஞ்சி ஓடும்போது அதன் மனநிலையை உணரக்கூடியவர் ஒரு போதும் கொலை புரியத் துணியார். உயிர்கள் யாவும் பரமனது வெவ்வேறு உருவங்களே. அவற்றைப் பயமுறுத்தி வருத்தி வலையிட்டுப் பிடித்துச் சித்திரவதை செய்து கொன்று புசிப்பது அன்பின்பால் படுமோ? அவ்வாறு செய்பவர் அறமுணர்ந்தவரோ? இத்தகைய நியதியைக் கைகொள்பவர் மனிதரே அல்ல. இத்தகையோரைக் கண்டு மனம் வெம்பி வெறுத்தே, அனுபூதி மிகுந்த அறப் பெரியார்கள்,

> "மறுக்கி வல்வலைப் படுத்திக் குமைத்திட்டுக் கொன்றுண்பர்,
> அறப்பொருளை அறிந்து ஓரார் இவையென்ன உலகியற்கை?"

என மறுகுவாராயினர்.

புலால் உண்ணுதல் மிகவும் கொடிது. தின்னும்பொருட்டுக் கொலைபுரிதல் நிறுத்தப்படுமாயின் விலைக்காகப் புலால் விற்பவர் இரார்.

> "கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
> எல்லா உயிரும் தொழும்" — குறள் - 260

என்பது பொய்யாமொழியன்றோ?

ஒரு வீட்டில் ஒருவர் இறந்தால் அத்தெருவில் வசிப்பவர்கூட ஈமச் சடங்குகள் முடியும்வரை உண்ணார். ஆனால் பிணத்தையே இலையிலிட்டுக்கொண்டு எடுத்துண்ணும் கொடுமையை என்னென்பது! ஆகவே, புலால் உண்ணாமையை விரதமாகக் கொள்ள வேண்டும் என்பது தெளிவு.

சிவமயம்

## அநுபந்தம் 16

# செங்கல்பட்டுக்கு அருகில் சிவன்கோவில்

செங்கல்பட்டிலிருந்து ஏழுமைல் தொலைவில் திருவானைக்கோவில் என்றொரு சிற்றூர் உள்ளது; அங்கு ஒரு புராதனமான சிவன் கோவில் இருக்கிறது; பரமனின் திருநாமம் திருவாலீஸ்வரர். புராதன ஸ்ரீமத் இராமாயண இதிகாசத்தில் தோன்றும் பிரசித்த வாலியால் பூஜிக்கப்பட்ட சிறப்புடைமைபற்றி இத்தலத்து எம்பிரானுக்கு இப்பெயர் ஏற்பட்டது என்பர்.

எம்பிராட்டி பாண்மொழி அம்மையோடு திருவாலீஸ்வரர் அகஸ்திய முனிவருக்கு அருள் புரிந்த இடம் இது என்று மற்றொரு வரலாறும் வழங்குகிறது.

இக்கோவிலின் கர்ப்பகிரஹம் யானையின் பின்புறம் போன்ற உருவில் அமைந்துள்ளது. சந்நிதி மேற்கு நோக்கி விளங்கு கின்றது. பாண்மொழியம்மைக்குத் தனிக்கோவில் இருக்கிறது.

இத்தலத்தில் உள்ள சோமாஸ்கந்தர், ஸ்ரீவிநாயகர், வள்ளி தேவசேனு ஸமேத ஸ்ரீமுருகர், சிவகாமிவல்லி ஸமேத நடராஜப் பெருமான், மாணிக்கவாசகர், சங்கிலி பரவை நாச்சியார்களோடு சுந்தரமூர்த்தி நாயனுர் ஆகியோருடைய பஞ்சலோக விக்ரஹங்கள் அபூர்வமானவை.

கர்ப்பக்ரஹ உட்சுவர்களில் ஸ்ரீவிநாயகர், ஸ்ரீதக்ஷிணுமூர்த்தி, திருமால், ப்ரஹ்மா, துர்க்காதேவி ஆகியோருடைய உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

இவ்வாலயத்துத் தூலங்கள், கொடுங்கைகள், சிற்பங்கள் ஆகியவற்றை ஊன்றிப் பார்க்கும்போது திருப்பணி சோழர்கள் காலத்தியது என்று தோன்றுகிறது. கர்ப்பக்ரஹ உட்சுவர்களில் உள்ள சிலாசாசனங்கள் அப்பிரதேசத்தை ஆண்ட மன்னர்களைப் பற்றித் தெளிவாகக் கூறுகின்றன. பெரும்பாலான சாசனங்கள் சோழர்களையும் பாண்டியர்களையும் பற்றியே கூறுகின்றன. முக்கியமாகச் சுந்தர பாண்டியர் பெயர் காணப்படுகிறது. கோனேரி மெய்கொண்டான் என்றொரு பாண்டியன் பெயர் புதுமையாய் இருக்கிறது. ஆராய்ச்சிக்கு ஒரு தூண்டுகோல், இப்பாண்டியனைப்பற்றி வேறு எவ்விடத்தும் கூறப்படவில்லை.

இக்கல்வெட்டுகளில் இக்கோவிலுக்கு விடப்பட்ட இறையிலி நிலங்கள், பசுக்கள், நிபந்தங்கள் ஆகியவை தெளிவாகக் காணப் படுகின்றன.

**[குறிப்பு :—சென்னையையும், அதைப்போன்ற நகரங்களிலும் வாழும் சிவ பக்தர்கள், விடுமுறை தினங்களில், அருகாமையில் உள்ள சிவ க்ஷேத்ரங்கள் சென்று தரிசனம் செய்துவர, ஹேது வாகவும் — மாதிரிக்காகவும் — இக்கட்டுரையை இங்கு ஆஸ்திகப் பெருமக்கட்கு ஸமர்ப்பிக்கிறோம். — லிப்கோ பதிப்பகத்தார்]**

சிவமயம்

# அனுபந்தம் 17

# தஞ்சை மாவட்டத்தில் சந்தன வனம்

## (தேரழுந்தூர்)

ஒரே தெருவில் இரு கோடிகளிலும் இரண்டு பெரிய கோவில்கள் ஒரேமாதிரியாக இருக்கும் அதிசயம் சந்தன வனத்தில் (தேரழுந்தூரில்) உண்டு. ஒன்று சிவபெருமான் வீற்றிருக்கும் திருத்தளி; மற்றது ஆமருவியப்பன் திருக்கோவில்.

**சந்தன வனம்** என்பது மாயூரத்திற்கு அருகில் உள்ள தேரழுந்தூரையே குறிக்கும். ஞானசம்பந்தப்பெருமான் இத்திருநகருக்கு எழுந்தருளியபோது எது திருமால் இடங்கொண்ட கோவில் எது சங்கரன் குடிகொண்ட கோவில் என்று புரியாமல் திகைக்க, சாலையின் அருகே கோயில் கொண்டிருந்த சாலை விநாயகர் "அதோ ஈசுவரன் கோயில்" என கிழக்குத்திசையைச் சுட்டிக்காட்டினர். அன்றுமுதல் சாலை விநாயகர் ஞானசம்பந்த விநாயகர் ஆனர்.

ஒருசமயம் சிவபிரானும் திருமாலும் பார்வதியை நடுவராக வைத்துக்கொண்டு சொக்கட்டான் ஆடினர் என்றும், இடையில் ஈசுவரன் செய்தது குற்றம் எனச் சுட்டிய தேவியைச் சினந்து சிவபிரான் பசுவாகும்படிச் சபித்தார் எனவும், மலைமகள் நிலைக்கு இரங்கிய மகாவிஷ்ணு பார்வதிதேவி தானும் மாட்டிடையராய்ச் சென்று பல தலங்கள் தரிசித்தபின் இத்தலத்தில் ஈசுவரன் கருணையால் தேவிக்குச் சாபம் நீங்கிற்று எனவும், தேவி முன்னிலும் பதின்மடங்கு அழகுடன் பொலிந்தமையின் சௌந்தரநாயகி என்னும் திருநாமம் பெற்றனள் ஆகவும் கூறுவர். பார்வதியைப் பிரிந்த பரமேச்வரன் சந்தனாரண்யம் அடைந்து வேதியர்களுக்கு வேதம் பயிலுவித்தபடியால் இத்தலத்துச் சிவபிரான் திருநாமம் வேதபுரீஸ்வரர் என்பதாம். அவர்கள் சொக்கட்டான் ஆடிய மண்டபம், 'சொக்கட்டான் மண்டபம்' என்னும் பெயரோடு இன்றும் உள்ளது.

இவ்வாலயத்தில் பலவிடங்களில் சோழர் பாண்டியர் தர்ம கைங்கர்ய சிலாசாஸனங்கள் ஏராளமாகக் காணலாம்.

ஒருசமயம் அரச சேவகர்கள் கற்கசன் என்னும் திருடனைக் கசையால் அடித்து அரசனிடம் இழுத்துச் சென்றனர். அன்று சோமவாரம் வேதபுரீஸ்வரர் கோவிலின் புறத்தே செல்லும்போது பக்தர்கள் ஹரஹர என்று மெய்ம்மறந்து கோஷித்த கோஷம்

அத்திருடன் காதில் விழுந்தது. அவன் மனம் அதில் லயித்து அவ்விடத்திலேயே மயங்கி விழுந்துவிட்டான். கோபம் கொண்ட சேவகர்கள் அவனை மேலும் நையப்புடைக்க அவன் அவ்விடத்திலேயே இறந்துவிட்டான். அவன் உயிரை எடுத்துக்கொண்டு போக வந்த எமபடர்களை சிவதூதர்கள் தடுத்து 'மரிக்கும்போது வேதபுரீசனைத் தியானித்த இவன் சிவலோகமே செல்லுதற் குரியன்' எனக் கூறி திருக்கயிலாயத்திற்கு அழைத்துச் சென்றனர் என்றும் கூறப்படுகிறது. இதனால் இவ்வூரில் கொண்டாடப்படும் சோமவார விரதம் மிக்க பலனுள்ளது.

ஒரு காலத்தில் ஊர்த்துவ ரதன் என்னும் ஓர் அரசன் பரந்து விரிந்து கிடந்த தன் சாம்ராஜ்யத்தில் வானத்தேரேறிச் சென்று அரசியல் அலுவல்களைக் கவனித்து வந்தான். ஒருசமயம் வானத் தேர் இவ்வூர் வழியே பறக்கையில் அதன் நிழல் வேதபுரீசுவரர் ஆலயத்தின்மீது விழ அதனால் கோபங்கொண்ட கருடாழ்வார் சாயக்ருஷ்ணன் என்னும் மந்திர வலிமையால் அத்தேரை அந்தேரின் நிழலால் பற்றியிழுத்துப் பாதலத்தில் அழுந்தும்படிச் செய்தார். இதனாலேயே இவ்வூருக்குத் தேர்அழுந்தூர் என்ற பெயர் உண்டாயிற்று.

ஒவ்வொரு ஆண்டும் மாசி மாதம் புனர்வசு நக்ஷத்திரத்தில் இத்தலத்தில் சிவபெருமானும் இவ்வூர் ஸ்ரீஆமருவிப்பெருமாள் ஸ்ரீ ராமவதார திருக்கோலத்திலும் எதிரெதிராக அமர்ந்து சைவமும் வைஷ்ணவமும் ஒன்று என்று ஆராதிக்கப்பெற்று காட்சியளிக்கும் வைபவம் கண்டு களித்துக் கருதற்பாலது.

சிவசிவ என்றே தெளிகிலர் ஊமர்
சிவசிவ வாயுவும் தேர்ந்துள் அடங்கச்
சிவசிவ வாய தெளிவினுள் ளார்கள்
சிவசிவ வாகும் திருஅரு ளாமே.

சிவாய நமவெனச் சித்தம் ஒடுக்கி
அவாய மறவே அடிமைய தாக்கிச்
சிவாய சிவசிவ என்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க ஆனந்த மாமே.

— திருமூலர் திருமந்திரம்

உ

சிவமயம்

# அனுபந்தம் 18

# நந்திதேவர் சிவதீட்சை பெற்றவர்



**மது மூர்த்தி**

*உபாஸனை செய்வதில் நந்திதேவரை மிஞ்சியவர் முக்காலத்திலும் இல்லை. கலியுகத்தில் அவரையும் தெய்வமாக வழிபடுகிறார்கள்.*

புராண இதிகாசங்களை எவ்வளவு புரட்டினாலும் பக்தர்கள் இரண்டுவகை என்பது நமக்குத் தெரியவரும். மோட்ச சித்தியையும் உலக க்ஷேமத்தையும் நாடித் தவம் செய்பவர் ஒரு வகையார். இவர்களைத் தலைசிறந்த பக்தர்கள் என்று இன்று உலகம் கொண்டாடுகிறது.

தம்முடைய விருப்பங்கள் நிறைவேறவும் பகைவரை வெற்றி கொள்ளவும் அதீத சக்திகளைப் பெறவும் கடவுளை வேண்டித் தவம் செய்பவர் இரண்டாம் வகையார். இவர்களது பக்தி இரண்டாந்தரமானதே.

பக்தர்களுள் மூன்றாம் வகை இல்லை.

இரண்டுவகைப் பக்தர் கூட்டத்துள் முதல்தரத்தைச் சேர்ந்த தலைசிறந்த பக்தர் நந்திதேவர். பரமேசுவரனைக் காண விரும்பித்

தவம் செய்தார். பரமன் பிரசன்னமாகி, "வரம் கேள்" என்ற போது, எனக்கு எப்பொழுதும் உன் தியானம் மறக்காமல் இருக்க வேண்டும் என்ற ஒரே வரத்தைக் கேட்டுப் பெற்ருர். இத்தகைய நந்திதேவர் சிறந்த பக்தர் என்பதைச் சொல்லவேண்டுமா?

சிவத்தியானமே சம்சாரக் கடலைத் தாண்டத்தக்க சாதனம் என்று திரிகரண சுத்தியாக அண்டிய நந்திதேவரை மெச்சி, பரமேசுவரன் அவரைத் தம் வாகனமாகவும் கைலாயத்தின் துவாரபாலகராகவும் எல்லாவற்றுக்கும் மேலாகத் திருக்குமாரராகவும் ஏற்றுக் கொண்டார்.

கைலாய மலைக்கே நந்தி ஓர் அலங்காரச் சின்னம் ஆகிவிட்டார். சிவம்-சக்தி இருவர் முன்னிலையில் நந்தி ஒரு பரமாணுவாக இருக்கிருர். முக்கண்ணனுடைய தீவிரமான பார்வைக்கு எதிரில் நிற்க நந்திதேவரைத் தவிர வேறு யாராலும் முடியாது — நந்திதேவரைப்போல் இப்படி உயர்ந்த நிலைபெற்ற பக்தர் முக்காலத்திலும் இல்லை.

இது நடந்தது சத்திய யுகத்தில். இந்தக் கலிகாலத்தில் சிவபெருமாளுேடு நந்திதேவரும் தெய்வமாகி மக்கள் வழிபட நிற்கிருர்.

சிவாலயம் இல்லாத கிராமம் இல்லை. நந்தி இல்லாத சிவாலயம் இல்லை. பக்தர் சிவபெருமானுடன் நந்தியையும் வணங்கித் தங்கள் தங்கள் பக்திப் பிரபத்திகளை வெளியிட்டுக் கொள்ளுகிருர்கள்.

ரிஷப வடிவில் தரிஸனம் கொடுக்கும் நந்தியை நாம் சங்கராந்தியின்போது பூஜிக்கிருேம். ரிஷபம் மனிதனுக்குப் பஞ்சபிராணன்போல் ஆருவது உயிராகவும் மதிப்புப் பெற்றுவிட்டது.

'எப்பொழுதும் மனிதர்களுக்குச் செய்யும் சேவையே அரனுடைய சேவை' என்று இன்று மனிதர்களுக்குச் சேவை செய்து பிறவிக்கடலைத் தாண்ட வழி வகுத்துக்கொண்ட பசவண்ணு, அந்தக்காலத்துச் சிவபக்தராகிய சுயநலம் அற்ற நந்தியின் மாற்றுருவந்தான். காலமும் இடமும் மாறினுலும் நல்ல எண்ணத்தையும் லட்சியத்தையும் மாற்றிக்கொள்ளாத நெஞ்சுறுதி பெற்றவர் சிவதீட்சாபரரான நந்திதேவர்.

— "மஞ்சரி", அக்டோபர் 1968



சிவமயம்

# அனுபந்தம் 19

# மாதங்களில் சிறந்தது மார்கழி

மாரி கழிந்து பனி பொங்கும் மாதம் மார்கழி மாதம். அம்மாதத்தில் ஒரு நாள் அம்பலத்தில் ஆடும் ஐயனைப் பணிந்து போற்ற அப்பைய தீக்ஷிதர் போந்தார். அன்று திருவாதிரைத் திருநாள்; கனகசபேசனுக்குச் சந்தனபிஷேகம் செய்தனர்; குடம் குடமாய்ச் சந்தனம் கரைத்துச் சடாமகுடத்தின்மீது அபிஷேகம் செய்வதைக் கண்டார் தீக்ஷிதர். கதிரவன் வெளிப்படுமுன்னே புனித நீராடி உடலெல்லாம் பனித்து நின்ற அவர் எம் ஐயனைக் கண்டு மன முருகி "ஐயனே, நின் தலையில் கங்கையைக் கொண்டிருக்கிறாய்; சந்திரனைச் சூடிக்கொண்டிருக்கிறாய்; உடல் முழுதும் குளிர்ச்சி மிக்க நாகாபரணம் அணிந்திருக்கிறாய்; உலகெலாம் பனிபெய்து குளிரால் நடுங்கி வாடுகிறது; இவ்வளவிருந்தும் மேலும் நினக்குக் குளிர்ச்சி தேவையோ? குடம் குடமாய்க் கொட்டும் சந்தனபிஷேகத்தை ஏற்றுப் புன்முறுவல் பூத்து நடமுத்திரை காட்டுகின்றாய்! ஆம், தேவைதான்; காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்சரியம் என்னும் தாபங்கள் என் மனத்தில் ஏராளமாக இருக்கின்றனவே! அவைகளைச் சமனப்படுத்த கங்கையாலோ சந்திரனாலோ இப்பனியாலோ, பாம்பாலோ இயலுமா? இந்தச் சந்தனபிஷேகத்தால்தான் இயலுமா? அத்தகைய கொடிய தாபத்தையுடைய நான் இங்கு வந்திருக்கிறேன். யான் நின்னெதிரில் நிற்கும்போது உனக்கு இவ்வளவும் ஒருசேர வேண்டும்; இதற்கு மேலும் குளிர்ச்சி தரத்தக்க பொருள்கள் இருப்பின் அவையும் வேண்டும்" என்னும் கருத்துப் பொதிந்த சுலோகம் ஒன்றைப் பாடினார். இவ்வளவு சிறந்த சுலோகம் தோன்றுவதற்கே மார்கழி மாதம் காரணமாய் இருந்தது எனின், மாதங்களுக்குள்ளே மார்கழி சிறந்தது என்பதில் ஐயம் யாது? 'மாதங்களில் நான் மார்கழியாவேன்' என்று கண்ணன் கீதையில் கூறியது மார்கழியின் சிறப்பை நோக்கியே.

நமக்கு ஓராண்டு என்பது தேவர்களுக்கு ஒரு நாள் ஆகும். கதிரவன் தென்றிசைப் பயணம் கொண்டு செல்லும் திங்கள் ஆறும் இரவாம்; மற்றைத் திங்கள் ஆறும் பகலாம். அங்ஙனமாயின் தை மாதம் பகல் தொடங்குகிறது எனலாம். எனவே, மார்கழி விடியற்காலை நேரமாகும். மானிடர்களுக்கு விடியற்காலை என்பது மிகவும் சிறந்த பொழுது. அவ்வேலையில் மனம் அமைதியுற்றிருக்கும். தெய்வ வணக்கம், கல்விப் பெருக்கம் ஆகியவைகளுக்கு ஏற்ற நேரம் அதுவே. இமைப்பில்லாத் தேவராயினும்

விடியற்காலை அவர்களுக்கும் உகந்ததே. ஆகவேதான் மார்கழியில் தெய்வ வழிபாடு சிறந்து விளங்குகிறது.

சோழ வளநாட்டை அணி செய்யும் அரசர்கள் இருவர். ஒருவர் நடராஜர்; மற்றவர் ரங்கராஜர். இருவருமே பொன்ன ரங்கத்தைப் பொது இடமாகக் கொண்டவர்கள். பொன் அரங்கத்தில் ஆடுபவன் நடராஜன்; பொன்னி அரங்கத்தில் தூங்குபவன் ரங்க ராஜன். இருவருமே மார்கழி மாதத்தில் தங்களுக்கென்று சிறந்த விழாக் கொள்கின்றனர். திருவாதிரையும் வைகுண்ட ஏகாதசியும் அவைகள்.

தங்களுக்குச் சிறந்த கணவன் வாய்க்கவேண்டும் எனக்கருதும் கன்னிப்பெண்கள் இம்மாதத்தில்தான் பாவை நோன்பு நோற்றுக் கண்ணனையும் முக்கண்ணனையும் வழிபடுவார்கள். அவ்வாறே முற்றுந் துறந்த பெரியோர்களும் வேத விழுப்பொருளாகிக் கண்ணுக் கினியனாய் நிற்கும் பரஞ்சோதியிடத்துப் பாசம் வைத்து உள்ளம் நெக்குநெக்குருகிப் பாடி வழிபடுவார்கள்.

இத்தகு சிறப்பு வாய்ந்த மாதத்தை யாரோ பீடை மாதம் என்றுரே! இது பீடை மாதமும் இல்லை; சூன்ய மாதமும் இல்லை. உள்ளத்துக்கு உறுதியும் உடலுக்கு வலிமையும் அளித்து ஆன்ம நிலையில் முன்னேற ஒவ்வொரு மார்கழியும் ஒவ்வொரு படியாகும்.



**PRAYER TO LORD SIVA**

O Lord Siva! Adorations always unto You Who, for the sake of protecting Markandeya, humiliated Yama; the brilliance of Whose cheeks outstrips the rays of the moon and to Whom people desiring happiness here and hereafter, wealth, etc. pray; and Who is the embodiment of auspiciousness and bestows it.

— *Patanjali Maharishi*

— *Bhavan's Journal, 26—2—1967.*

அச்சிட்டோர்: கலேகா பிரிண்டர்ஸ், 5, புஜங்க ராவ் தெரு, சென்னை-15

